# THE MADRAS ESTATES LAND ACT

(TAMIL)

(AS AMENDED BY ACTS OF 1934 AND 1935).

(*with Commentaries & Case Law.*)



BY

M. S. PARTHASARATHI IYENGAR B. A., B. L.

EDITOR, *The Tamil All India Law Journal*

TRIVELLORE.

THE TAMIL ALL INDIA LAW JOURNAL OFFICE,

TRIVELLORE.



[Rs. 2-8-0.] 1935.

சென்னை

# எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்ட்.

(வியாக்கியானமும் ஹைகோர்ட்டு தீர்ப்புகளும் அடங்கியது.)

(1934-1935, வருஷ திருத்த சட்டங்களுடன் கூடியது)

அகில இந்தியா லா ஜர்னல் பத்திரிகாசிரியர்

M. S. பார்த்தசாரதி அய்யங்கார் B. A., B. L.

இயற்றியது.

அகில இந்தியா லா ஜர்னல் ஆபீஸ்,

திருவள்ளூர்.

(செங்கல்பட்டு ஜில்லா.)



1935.

விலை ரூ. 2-8-0]

# முகவுரை.

நமது தமிழ் நாட்டில் ஜமீன்களும் மிட்டாக்களும் சுரோத்திரியங்களும் பல உள்ளன. அவைகளின் நிலத்துக்குடையவர்களுக்கும் ரயத்துகளுக்கும் உள்ள பாத்தியா பாத்தியதைகளை நிர்ணயித்து 1908-ம் வருஷத்தில் 'எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்ட்' என்னும் பூஸ்திதிகளைக்குறித்த சட்டமானது நிறைவேறியது. அவ்வருஷம் முதல் நாளது வரையிலும் மேற்படி சட்டத்தின்கீழ் பல கேஸ்கள் கிளம்பி அவைகளினால் மேற்படி சட்டத்தில் உள்ள குறைவுகள் விளங்கின. அக்குறைவுகளை நீக்கி இன்னும் சௌகரியம் செய்வதற்கு 1934-ம் வருஷத்தில் சென்னை கவர்ன்மெண்டார் ஒரு திருத்த சட்டத்தை நிறை வேற்றினர். இத்திருத்த சட்டத்தினால் ரயத்துகளுக்குள்ள குறைவுகள் பூரணமாக நிவர்த்திபாகவில்லையென்றும் ஜமீன்தார்களுக்கும் சௌகரியம் ஏற்படவில்லையென்றும் குறை கூறப்பட்டது. ஆயினும் சட்டம் நிறைவேறி அமுலில் உள்ளதால் அதைப்பற்றி நன்கு அறிவது நலமல்லவா ?

இதுதான் இப்புஸ்தகம் வெளிவருவதற்கு காரணமாகும். இதில் வெறும் சட்டமும் அதனுடைய திருத்தமும் மாத்திரம் அல்லாமல் அவைகளைப்பற்றிய குறிப்புகளும் ஹைகோர்ட்டினுடைய தீர்மானங்களும் அடங்கியுள்ளன. ஆனதால் ஜமீன்களிலும் மிட்டாக்களிலும் உள்ள உபயதாரத்தினருக்கும் இது நல்ல துணையாகும் என்று நம்புகிறேன். சட்ட பாகமானது கவர்ன்மெண்டாருடைய மொழி பெயர்ப்பு.

தமிழ் நாட்டில் உள்ள தமிழ் வெளியீடுகளில் சட்ட வகையில் உள்ள புஸ்தகங்களோ வெகுக்குறைவு. இன்னும் ஆங்கில புஸ்தக

களில் உள்ள முறைப்படி பதிப்பிட்டிருக்கும் இப்புஸ்தகத்தைப் போன்ற புஸ்தகமே இதுவரை வெளிவந்ததில்லையென்றே நினைக்கிறேன். இதுவே ஓர் நூதன முயற்சியாதலால் இதில் ஏதேனும் குற்றக்குறைகள் இருப்பினும் அதை பொருட்படுத்தாது மதிப்புள்ளதை கிரகித்து முயற்சி பயனுறுமாறு ஆதரிக்க வேண்டுகிறேன்.

1934-ம் வருஷத்தில் சட்டமாக நடந்தேறி 1935-ம் வருஷம் மார்ச்சு மாதம் சென்னை கவர்னரால் அங்கீகரிக்கப்பட்ட இனாம்தார் சட்டமும் இதில் அடங்கியுள்ளது.

இதில் உள்ள குறைகளைப்பற்றி நேயர்கள் தெரிவிக்கும் பக்ஷத்தில் மிகுந்த வந்தனமுண்டு. மறு பதிப்பில் அவைகளை கவனிக்கிறேன்.

அகில இந்தியா லா
ஜர்னல் ஆபிஸ்
திருவள்ளூர்,
5—7—1935.

M. S. பார்த்தசாரதி அய்யங்கார்.

# சென்னை எஸ்டேட்ஸ் லாண்ட் ஆக்ட்.

## விஷய சூசிகை.

பொருளடக்கம்.

## 1-ம் அத்தியாயம்.

### பீடிகா விதிகள்.

## 2-ம் அத்தியாயம்.

### பொதுவான பாத்தியதைகள்.

## 3-ம் அத்தியாயம்.

ரயத்துகள் செலுத்தத்தக்க குத்தகை விகிதங்களுக்குச் சம்பந்தப்பட்ட பொதுவான நிபந்தனைகள்.

## 4-ம் அத்தியாயம்.

### பட்டாவும் முச்சிலிக்காவும்.

## 5-ம் அத்தியாயம்.

### குத்தகைத் தொகையை செலுத்துவதும் குத்தகைத் தொகை பாக்கியும்.

## 7-ம் அத்தியாயம்.

### அதிகப்படியாய்ச் செலுத்தப்பட்ட தொகைகளை வசூல் செய்வது.

பிரிவு. விஷயம். பக்கம்.

## 8-ம் அத்தியாயம்.

### நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான கட்டுவேலைகள்.

## 9-ம் அத்தியாயம்.

### கைப்பற்று நிலங்களையும் பூஸ்திதிகளையும் உட்பிரிவினை செய்வதும் ட்ரான்ஸ்பர் பண்ணுவதும்.



## 10-ம் அத்தியாயம்.

### ராஜிநாமாகொடுப்பதும் (நிலத்தைவிட்டு) அப்புறப்படுத்துவதும் (இஜெக்ட்மெண்டும்.)

## 11-ம் அத்தியாயம்.

### ஸர்வே செய்வதும், உரிமைதஸ்தவேஜு ஏற்படுத்துவதும், குத்தகைத்தொகைகளைப் பைசல் செய்வதும்.

## 12-ம் அத்தியாயம்.

### நிலத்துக்குடையவரின் சொந்த நிலம்.



## 13-ம் அத்தியாயம்.

### கட்டிடங் கட்டுவதற்காகவும் வேறே காரியங்களுக்காகவும் நிலத்துக்குடையவர் நிலமெடுத்துக் கொள்வது.

## 14-வது அத்தியாயம்.

### ஒப்பந்தம்.



## 15-ம் அத்தியாயம்.

### அதிகாரமும் நடவடிக்கையும்.

## 16-வது அத்தியாயம்,

### கால நிர்ணயம்.



## 17-வது அத்தியாயம்.

### உடன்சேர்க்கையானது.

#### தண்டனை.

## குறிப்புகளின் விளக்கம்.

இந்த புஸ்தகத்தில் உள்ள சுமார் 240 பிரிவுகளில் முக்கியமானவற்றிற்கு அர்த்த விளக்கமும் ஹைகோர்ட்டு தீர்மானங்களின் சாராம்சமும் 'குறிப்புகள்' என்னும் தலைமையின் கீழ் எடுத்து எழுதப்பட்டுள்ளன. இவைகளை எவ்வாறு அறிவது என்பதை இந்த தலையங்கத்தின் கீழ் விளக்குவோம்.

யாதொரு குறிப்பிட்ட கேஸில் ஒரு கேள்வி கிளம்புமானல் அது சட்டசம்பந்தமான கேள்வியாயிருந்தால் அதற்கு ஹைகோர்ட்டு வரையிலும் அப்பீல் உண்டு. அந்த அப்பீலில் பலான கேள்வி பலான பிரிவின் கீழ் கிளம்புவதாகும் என்றும் அதற்கு அந்தப் பிரிவின் அர்த்தத்தையும் பிரயோகத்தையும் கவனித்து இம்மாதிரியாக தீர்மானிக்க வேண்டும் என்று ஹைகோர்ட்டு ஜட்ஜுகள் தீர்மானிப்பார்கள். அந்த தீர்மானங்களை லா "ரிப்போர்ட்டு" செய்பவர்கள் தங்கள் "ரிப்போர்டு" களில் பிரசுரம் செய்வார்கள். இந்த "ரிப்போர்டுகள்" தான் அவைகளுக்குப்பிறகுவரும் கேள்விகளுக்கு பிரமாணமாகும். அவைகளை இங்கிலீஷில் Precedents என்று சொல்லுவார்கள். உதாரணமாக யாதொரு நில ஜப்தி விஷயமாய் ஒரு ரெவினியு கோர்ட்டில் ஒரு கேள்வி கிளம்புமானல் டி தீர்மானப் பிரமாணங்களில் ஏதாவது அதே கேள்விக்குச் சம்பந்தப்பட்டிருந்தால் அதை எடுத்துக்காட்டி பலான கேஸில் பலான மாதிரியாக தீர்மானிக்கப்பட்டிருக்கிறது என்று எடுத்துச் சொல்லுவதற்கு சௌகரியம் ஏற்படும். இந்தத் தீர்மானப் பிரமாணங்கள Authorities எனப்படும்

இந்த புஸ்தகத்தில் இத்தகைய தீர்மானங்களின் சாராம்சங்களையேதான் தக்க பிரிவின் கீழ் எடுத்து விவரிக்கப்பட்டுள்ளது. எந்த பிரிவின் கீழ் 60 M. L. J, 35 L. W. என்று கேஸுகள் உள்ளனவோ அவையெல்லாம் ஹைகோர்ட்டு தீர்மானங்களாகும். அந்த தீர்மானத்தை பூரா

வும் எடுத்து எழுதுவது சாத்தியமற்றதாதலால் அதன் சாரத்தைமாத்திரம் எடுத்துக்கூறி அந்த கேஸ் பலான புஸ்தகத்தில் பலான பக்கத்தில் உள்ளது என்பதற்கு அறிகுறியாக எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது.

M. L. J. என்பது சென்னையிலிருந்து வெளிவரும் ஒரு சட்டப்பத்திரிகை. அது ஆங்கிலத்தில் உள்ளது. பிரபல வக்கீல்கள் ஒன்று சேர்ந்து சென்னை ஹைக்கோர்ட்டு தீர்மானங்களை அதில் பிரசுரம் செய்து வருகின்றனர். அந்த பத்திரிகை ஒரு வருஷத்திற்கு இரண்டு வால்யூம்களாக வெளியிடப்பட்டு வருகிறது. இப்பொழுது நடந்து வரும் வால்யூம் 68-வது வால்யூம். யாதொரு கேஸ் 31 M. L. J. 168 என்று சொல்வோமானால் அந்த கேஸ் M. L. J. என்னும் பத்திரிகையின் 31-வது வால்யூம் என்னும் புஸ்தகத்தில் 198-வது பக்கத்தில் காணப்படும் என்று அர்த்தம். அதே விதமாக பத்திரிகைகளுக்கு முன்னால் உள்ள எண்ணானது அந்த பத்திரிகை பலான வருஷத்தியது அல்லது பலான வால்யூம் என்பதைக் குறிப்பதாகும். M. L. J. என்பது குறுகிய பெயர். அதன் பூரண பெயர் Madras Law Journal. (மதறாஸ் லா ஜர்னல்.)

L. W. என்பதும் சென்னையிலிருந்து வெளிவரும் ஒரு சட்டப் பத்திரிகை. இதுவும் பல பிரபல வக்கீல்களால் நடத்தப்பட்டு வருகிறது. ஸ்ரீமான் V. C. சேஷாச்சாரியார் என்பவர் அதற்கு முக்கிய ஆசிரியராக இருந்து வருகிறார். இந்த பத்திரிகையும் இப்பொழுது 41-வது வால்யூமை அடைந்து விட்டது. இதிலும் ஹைக்கோர்ட்டின் தீர்மானங்கள் அவ்வப்பொழுது ரிப்போர்ட் செய்யப்படுகின்றன. நாம் 21 L. W. 42 என்று சொன்னோமானால் அது Law Weekly (லா வீக்லி) என்னும் பத்திரிகையின் 21-வது வால்யூமில் 42-வது பக்கத்தில் உள்ள கேஸ் என்று அர்த்தமாகும்.

M. W. N. என்பதும் சென்னையிலிருந்து வெளிவரும் ஒரு சட்டப்பத்திரிகை. இந்தப் பத்திரிகை பலான

வால்யூம் என்று தொடாமல் ஒவ்வொரு வருஷத்திற்கென்று ஒரு வால்யூமாக வெளியிடப்படுகிறது. 1930 M. W. N என்றால் 1930 வருஷத்தில் வெளியிடப்பட்ட Madras Weekly Notes (மதராஸ் வீக்லி நோட்ஸ்) என்னும் பத்திரிகை என அர்த்தமாகும்.

A. I. R. என்பது நாகப்பூரிலிருந்து வெளிவரும் ஒரு மாதாந்திரசட்டப்பத்திரிகை இந்த பத்திரிகையில் ஒவ்வொரு ஹைக்கோர்ட்டுக்கும் தனித்தனி பாகமாக இருந்து வருகிறது இது வால்யூம்களாகத் தொடாமல் வருஷங்களின் முறையில் கணக்கிடப்பட்டுள்ளது. உதாரணமாக 1932 A. I. R. என்றால் 1932-ம் வருஷத்தில் பிரசுரமான (All India Reporter (ஆல் இந்தியா ரிப்போர்ட்டர்) என்று அர்த்தமாகும். நமது புஸ்தகத்தில் உதாரணமாக பல இடங் A. I. R. 1929 Mad. 504 என்று வருவதைக்காணலாம். அதன் அர்த்தம் என்னவென்றால் 1929-ம் வருஷத்தில் பிரசுரமான ஆல் இந்தியா ரிப்போர்ட்டர் என்னும் பத்திரிகையில் சென்னை ஹைக்கோர்ட்டு கேஸுகள் அடங்கிய வால்யூமில் 504 வது பக்கம் என்பது.

I. C. என்பது இந்தியன் கேஸஸ் என்னும் ஒரு ஆங்கில சட்டப்பத்திரிகை. அது லாஹுர் என்னும் ஊரிலிருந்து வெளியாவது. அது ஒரு வருஷத்திற்கு சுமார் 7 அல்லது 8 வால்யூம்களாக பிரசுரமாய்க்கொண்டு வருகிறது. இப்பொழுது 150-வது வால்யூம் நடந்து வருகிறது. 140 I. C. என்றால் இந்தியன் கேஸஸ் என்னும் பத்திரிகையின் 140-வது வால்யூம் என்றர்த்தம்.

மேலே கூறப்பட்ட பத்திரிகைகள் பிரைவேட் நபர்களால் ஹைக்கோர்ட்டினுடைய அனுமதியின்பேரில் ஹைக்கோர்ட்டு தீர்மானங்களை பிரசுரம் செய்து வரும் பத்திரிகைகளாகும். இவை தவிர ஒவ்வொரு ஹைக்கோர்ட்டுக்கும் கவர்ன்மெண்டாரே ரிப்போர்ட்டுகளை பிரசுரம் செய்து வருகின்றனர். அவைகள் Indian Law Reports என்று வெளிவருகின்றன. சென்னை ஹைக்கோர்ட்டு தீர்மானங்

களையும் அவர்கள் பிரசுரம் செய்து வருகின்றனர். அவைகளை உதாரணமாக I. L. R. 43 Mad. 586 என்று சொல்வது வழக்கம். ஆனால் சுருக்க வகையாக சொல்லுமிடத்து I. L. R. என்னும் பதங்களை விட்டு விட்டு பலான வால்யூம் பலான ஹைக்கோர்ட்டு என்பதை மாத்திரம் குறிக்கும்படியாக அந்த எண்ணையும் ஹைக்கோர்ட்டு பெயரையும் சொல்வதுண்டு.

மேலே சொல்லப்பட்ட பத்திரிகைகளை தவிர இதர பத்திரிகைகளும் பல உள்ளன. ஆனால் நமது சட்டம் சென்னை மாகாணத்தைமட்டும் சார்ந்ததால் மேற்படி பத்திரிகைகளிலேயே நமது ஹைக்கோர்ட்டு தீர்மானங்கள் அடங்கிவிடுகின்றன.

இதுவரை ஆங்கில பத்திரிகைகளைப்பற்றி சொல்லிவந்தோம். தமிழிலேயே ஒரு சட்டப்பத்திரிகை நடந்து வருகிறது. அதற்கு அகில இந்தியா லா ஜர்னல் பத்திரிகை என்று பெயர். அது திருவள்ளூரிலிருந்து வெளிவரும் ஒரு பத்திரிகை. அது 1929-ம் வருஷம் முதல் தொடங்கி வருகிறது 1935-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 7-வது வால்யூம் ஆரம்பம். இப்பத்திரிகையில் சென்னை எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டைப்பற்றின கேஸுகள் பல வந்திருக்கின்றன. அவைகளின் சாராம்சமும் இப்புஸ்தகத்தில் காணப்பட்டிருக்கிறது. யாதொரு தீர்மானம் எந்தவால்யூமில் காணப்படுமோ அதையும் எழுதப்பட்டிருக்கிறது. அகில இந்தியா லா ஜர்னலைப் பற்றியும் அவைகளின் பழைய வால்யூம்களைப் பற்றியும் இப்புஸ்தகத்தில் உள்ள பிரசுரத்தைப்பார்க்கவும்.

இம்மாதிரியாக பல ரிப்போர்ட்டுகளில் உள்ள கேஸுகளை பொறுக்கியெடுத்து இப்புஸ்தகத்தில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. சுமார் 200 கேஸுகளின் சாராம்சமானது இப்புஸ்தகத்தில் காணப்படும். அந்தந்த கேஸின் பூரண விவரம் தேவையானல் அந்தந்த ரிப்போர்ட்டின் வால்யூமில் உள்ள கேஸுகளைப் பார்க்கவேண்டும்.

# பொருளடக்கம்.

## போது.

சென்னை எஸ்டேட்ஸ் லாண்ட் ஆக்ட் என்னும் பூஸ்திதிகளைப்பற்றிய சட்டமானது 1908-ம் வருஷத்தில் 1வது சட்டமாக முதலில் சட்ட சபையால் நடந்தேறியது. அது நடந்தேறுவதற்குமுன் தமது காரண அறிக்கையில் கவர்ன்மெண்டார் பின்வருமாறு தெரிவித்துள்ளனர் :—

"இந்த மசோதாவினுடைய நோக்கம் என்னவென்றால், நிலத்துக்குடையவர்கள் எனச் சொல்லப்படுபவர்கள் தங்கள் பாயக்காரிகளிடமிருந்து "ரெண்ட்" டை வசூல் செய்யும் நடவடிக்கை முறையை நிர்ணயித்துள்ள 1865-ம் வருஷத்தில் VII வது சட்டமாகிய சென்னை மாகாணத்து சட்டத்தை திருத்தவேண்டுமென்பது. அந்த சட்டத்தினுடைய குற்றக்குறைகள் இன்னதென்று வெகுநாள் முன்னமேயே அறியப்பட்டது. இந்த மசோதாவின் நோக்கங்களில் ஒன்று அவைகளை தீர்க்கவேண்டுமென்பது. ஆனால் அந்த சட்டமானது வெறும் நடவடிக்கை முறையை மாத்திரம் விவரித்திருப்பதால் இந்த மசோதாவின் இரண்டாவது நோக்கம் என்னவென்றால், முறையே நிலத்துக்குடையவர்கள் அவர்களுடைய பாயக்காரிகளாகிய ரயத்துகள் இவர்களின் உரிமைகளையும் ஸ்திரப்படுத்தவேண்டுமென்பது. இந்த உரிமை இதுவரையிலும் சட்ட பூர்வமாக ஸ்திரமாக ஏற்படுத்தப் படவில்லை, ஆகையால் இந்தக் குறையைத் தீர்ப்பதானது இந்த மசோதாவின் முக்கிய நோக்கங்களில் ஒன்றாகும்.

ரயத்துகளினுடைய உரிமைகள், பொதுவாக 1822-ம் வருஷத்திய IV வது ரெகுலேஷனால் காப்பாற்றி வைக்கப்பட்டபோதிலும் சட்ட சபையாரால் விவரமாக அவைகள் நிர்ணயிக்கப்படாததை முன்னிட்டு அந்த உரிமைகள் அழிந்து போகும் சந்தர்ப்பத்தில் உள்ளன"

பழைமை தொட்டு ரயத்துகளுக்கு அதாவது நிலத்தைப்பயிரிடுபவர்களுக்கு எப்பொழுதும் அனுபவபாத்தியதையுண்டு. அதாவது அவர்கள் கிரமமாகச் செலுத்த வேண்டியதை சரியாக செலுத்திவரும் காலமளவும் அவர்களை நிலத்தை விட்டு அப்புறப்படுத்துவதற்கில்லை. ரயத்துவாரி பூமிகளில் இதே மாதிரியான பாத்தியதைகள் அனுசரிக்கப் பட்டுவருகையில் ஜமீன்தாரி இடங்களில் மாத்திரம் அதை வித்தியாசப்படுத்துவதற்கு யாதொரு ஹேதுவும் இல்லை. ஆதியில் ஜமீன்தார்கள் பழைய நவாபுகளாலும் அரசர்களாலும் பிறகு ஈஸ்ட் இந்தியா கம்பெனியினாலும் சில பிரதேசங்களில் கிஸ்தியை வசூல் செய்து அனுபவிக்கும் பாத்தியதைகளைப் பெற்றவர்கள். அவர்களுக்கு நிலத்தில் சொந்த பாத்தியதை இருக்கவேண்டிய பிரமேயமே இல்லை. இது விஷயத்தை சட்ட ரூபமாக ஸ்திரப்படுத்தி இன்னும் ரயத்துகளுக்கும் ஜமீன்தார்கள் அல்லது நிலஸ்வான்தாரர்களுக்கும் இருக்கக்கூடிய இதர சம்பந்தங்களையும் ஸ்திரப்படுத்துவதற்கு சட்டம் ஏற்படுத்தப்பட்டது.

நிலஸ்வான்தாரருக்கும் ரயத்துக்கும் உள்ள உரிமைகளை நிர்ணயிக்குங்கால் இதர விஷயங்களும் ஏற்படுகின்றன. அதாவது ரயத்து செலுத்த வேண்டிய கிஸ்தியை அதிகப்படுத்துவது அல்லது குறைப்பது, அல்லது அது தான்னிய வகையாயிருந்தால் பணமாக்குவது முதலியன. அவைகளைப்

பற்றியும் ஸ்திரமான ஏற்பாடு செய்யவேண்டியதாயிருந்தது. ஜமீனில் உள்ள நீர்ப்பாசன வசதிகளையும் அவைகளை ரிபேர் முதலியவை செய்வதும்நிர்ணயிப்பதும் அவசியமாயிருந்தது. நிலத்தை அளப்பதும் உரிமை தஸ்தாவேஜுகளை ஏற்படுத்துவதும் அவசியமாயிருந்தது. இவைகளனைத்தையும்திரட்டி 1908-ம் வருஷத்திய 1-வது சட்டத்தில் பல நிபந்தனைகளை ஏற்படுத்தினர்.

1934-ம் வருஷத்திய முதல் திருத்தம்.

1908-ம் வருஷம் முதல் 1931 வருஷம் வரையில் எஸ்டேட்ஸ் லாண்ட் ஆக்டின் நிர்வாகத்தில் பலகுறைகள் தோன்றின. அவைகளைத்தீர்ப்பதற்காக சென்னை கவர்ன்மென்டாரே 1931-ம் வருஷத்தில் ஒரு மசோதாவை கொண்டு வந்தனர். அதன் காரண அறிக்கையில் பின்வருமாறு கூறியுள்ளனர் :—

'நிலத்துக்குடையவர்கள், ரயத்துகள் ஆகிய இவர்களுக்குள் ஏற்பட்டிருக்கும் உரிமைகளை வரையறுத்து, இந்த ராஜதானியில் முதன் முதல் செய்யப்பட்ட சட்ட திட்டமாகிய பூஸ்திதிகளிலுள்ள நிலத்தைப்பற்றிய சென்னை 1908-ம் வருஷத்து ஆக்ட் வழங்கத்தொடங்கிய பிறகு ஒரு வருஷத்துக்குள் அதில் சில குறைகள் இருப்பதாகத் தெரிய வந்தது. ஆகவே, (சென்னை 1909-ம் வருஷத்து 4-வது ஆக்டாகிய) திருத்துவதற்கான ஆக்ட் ஒன்று ஜாரி செய்யப்பட்டது. அதிலிருந்து, முதல் தடவையாய் முயற்சி செய்யும் போதே தவிர்க்க முடியாத வேறே குறைகளும் கஷ்டங்களும் இருப்பதாக ஹைக்கோர்ட்டாரின் அநேக தீர்ப்புகள் மூலமாகவும், ரெவினியூ போர்டாரின் அனேக தீர்ப்புகள் இதர ஆதாரங்களின் மூலமாகவும் எடுத்துக்காட்டப்பட்டது. 1913-ம் வருஷத்திலேயே கவர்ன்மெண்டார் மேற்

படி ஆக்டைத் திருத்துவதற்காக சட்ட நிரூபண சபையில் ஒரு மசோதா ஆக்டைக் கொண்டு வந்தார்கள். மேலும் 1914-ம் வருஷத்திலே, மேற்படி ஆக்டில் செய்யவேண்டிய திருத்தங்களை பிரேரேபித்து நான்கு இதர மசோதா ஆக்டு கள் தனி நபர்களால் கொண்டுவரப்பட்டன. இது விஷ யமாய் விசாரணைகள் நடத்தத்தொடங்கப்பட்டு, அதில் அக்கரையுள்ள சகல நபர்களும் கலந்தாலோசிக்கப்பட்டார் கள். ஆனால், மேற்படி ஆக்டுகள் சட்டமாக ஜாரி செய்யப் படுவதற்கு முன் மகா யுத்தம் குறுக்கிட்டது. ஆகையால் அவைகளைக் குறித்துப் பின்னும் ஆலோசனை செய்வதை அந்த யுத்தம் முடிகிற வரையில் தள்ளிப்போட வேண்டிய தாயிருந்தது. அந்த யுத்தம் முடிந்த பிறகு மேற்படி விஷ யம் மறுபடியும் ஆலோசனைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது. அது முதற்கொண்டு கவர்ன்மெண்டார் அதைக்குறித்து இடைவிடாமல் ஆலோசித்துக்கொண்டே வந்திருக்கிறார்கள். 1922-ம் வருஷத்திலும் மறுபடியும் 1924-ம் வருஷத்திலும் ஷை ஆக்டில் அவசியமாய்ச் செய்ய வேண்டிய திருத்தங் களைக் குறித்து ஆலோசனை செய்வதற்காக சம்பந்தப்பட்ட சகல நபர்களுடைய பிரதிநிதிகளும் அடங்கிய பெரிய கமிட்டிகள் ஏற்படுத்தப்பட்டன. மேற்படி கமிட்டிகளில் இரண்டாவது கமிட்டியைச் சேர்ந்த சப் கமிட்டியாரால் தயாரிக்கப்பட்ட ஒரு மசோதா ஆக்டானது 1928-ம் வரு ஷத்தில் கவர்ன்மெண்டாரிடம் வந்து சேர்ந்தது. இப்போ தைய மசோதா ஆக்ட் அனேகமாய் இதை ஆதாரமாகக் கொண்டு தயாரிக்கப்பட்டிருக்கிறது. செய்யப்பட்டிருக்கும் திருத்தங்களில் மிகவும் முக்கியமான திருத்தங்களின் நோக் கத்தைக் குறித்து அடியிற் கண்ட பகுதிகளைப் பற்றிய குறிப்புகளில் விவரித்துச் சொல்லியிருக்கிறது"

இனும்தார் சட்டம்.

இந்த திருத்த சட்டமானது 1934-ம் வருஷம் மார்ச்சு மாதத்தில் நடந்தேறியது. ஆனல் இனும் கிராமங்களைப் பற்றியும் சில திருத்தங்களை ஷை சட்டத்திலேயே நுழைத்தனர். அது விஷயமாய் பல சர்ச்சைகள் நடந்து பிறகு இனும்களைப்பற்றி தனியான ஒரு திருத்த சட்டம் கொண்டுவரப் படவேண்டுமென்றும் அதன் விஷயமாய் பின்னும் தீர ஆலோசனை செய்த பிறகுதான் திருத்தங்கள் செய்யப்பட வேண்டுமென்று சென்னை கவர்னர் அவர்கள் அபிப்பிராயப் பட்டதின் பேரில் ஷை இனும் கிராமங்களைப் பற்றிய அம்சங்கள் நீங்கலாக மிகுதியுள்ள அம்சங்களை மாத்திரம் சட்டமாக்கினர். பிறகு இனும் கிராமங்களையும் எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டின் கீழ் பூஸ்திதி என்று கவனிக்கப்படுவதற்காக தனியாக ஒரு திருத்த சட்டத்தைக் கொண்டுவந்து லெஜிஸ்லேடிவ் கௌன்ஸிலில் நிறைவேற்றினர். இது சம்பந்தமாக இனும்தார்களுக்கு உள்ள உரிமைகள் மிகவும் பாதிக்கப்பட்டதாகவும் அவர்கள் கிரமமாயும் சட்ட சம்மதமாயும் சம்பாதித்த உரிமைகள் இந்த சட்டத்தினல் தாக்கப்பட்டனவென்றும் அவர்கள் குடிவாரம் மேல்வாரம் ஆகிய இரு பாத்தியதைகளையும் பெற்றிருக்கையில் அவர்களுக்குள்ள குடிவார பாத்தியதையை இந்த சட்டமானது போக்கிவிட்டது என்றும் கிளர்ச்சியானது நடந்து வருகிறது. இது விஷயமாய் கடைசியாக கிடைத்த செய்தியின் பிரகாரம் கனம் வைசிராய் அவர்கள் இனும்தார்களின் சார்பாக ஒரு தூது கோஷ்டியை பேட்டிகாணுவதற்காக சம்மதித்துள்ளனர்.

ஷை இனும்தார் சட்டமாகிய 1934-ம் வருஷத்து எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டின் இரண்டாவது திருத்தமானது

இனும்தார்களுடைய உரிமைகளை அடியோடே குறைத்து விடுகிறதா அல்லவா என்பதைப்பற்றின பிரச்னை பெரியதாகிக் கொண்டு வருகிறது. கவர்ன்மெண்டார் சார்பில் அம்மாதிரி யாதொன்றுமில்லை யென்றும், இனும்தார்கள் வாஸ்தவத்தில் இரண்டு வாரங்களுக்கும் சொந்தக்காரராயிருந்தால் அவர்கள் தங்கள் உரிமைகளை ஸ்தாபித்துக்கொள்வதற்கு போதுமான வசதிகள் உள்ளனவென்று கூறுகின்றனர்.

இது விஷயமாய் சமீபத்தில் பிரபல பிரிவிகௌன்ஸில் பாரிஸ்டரான ஸர் லெஸ்லி, டி. குருய்தர் என்பவர் பின்வருமாறு தனது அபிப்பிராயத்தைத் தெரிவித்திருக்கிறார் :—

"இனும்தார் என்னும் நபர் ஒரு தானம் அல்லது ஈகையைப் பெற்ற நபராவர். ஒரு நபருக்கு ஒரு கிராமத்திலிருந்து கவர்ன்மெண்டாருக்கு அடிக்கடி செலுத்தப்படக் கூடிய வரும்படி (ரெவின்யு) தொகை ஈகையாக அல்லது தானமாக கொடுக்கப்பட்டிருக்குமானல் அதை வரையறை செய்து அது செல்லத்தக்கினதுதானு என்பதை நிர்ணயிப்பதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. அது செல்லத்தக்கினதாகும் என்று கண்டறியப்பட்டால் அந்த ஈகையானது கவர்ன்மெண்டாருடைய அங்கீகாரத்தை பெற்று வந்தது. அப்படிப்பட்ட ரெவின்யு தொகை மாத்திரம் ஈகையாக கொடுக்கப்படுவதும் எந்த நிலங்களிலிருந்து ரெவின்யு கிடைக்கிறதோ அந்த நிலங்களின் சொத்துரிமையும் வெவ்வேறானதாகும் என்பது ஸ்பஷ்டமாக விளங்கும். நிலத்தை சொந்தமாக வைத்துக்கொண்டு கவர்ன்மெண்டுக்கு ரெவின்யு அல்லது கிஸ்தி செலுத்தும் நபர் ஒருவர். மற்றொருவர் கவர்ன்மெண்டினிடமிருந்து அந்த ரெவின்யு அல்லது கிஸ்தியை பெறும் பாத்தியதையை அடைந்தவர். ஒவ்வோர் சமயங்களில் இவ்விரண்டு உரிமைகளையும் ஒரே நபர் பெற்றி

ருக்கக்கூடும். ஆனால் இது எப்போதோ ஒரு சமயத்தில் இருக்கக்கூடியதேயொழிய மற்றபடி இது ஒரு முக்கியமானதல்ல. ஆகையால் நாம் இந்த விஷயத்தைப் பற்றி கவனிக்கையில் இதை அதிகமாக பொருட்படுத்த வேண்டியதில்லை.

இந்த சந்தர்ப்பத்தில் "குடிவாரம்" "மேல்வாரம்" என்னும் பதங்கள் உபயோகப்பட்டு வருவதால் சட்ட பூர்வமான பாத்தியதைகள் அல்லது உரிமை என்னவென்பதை நிர்ணயிப்பது எனக்கு எப்பொழுதும் கடினமாகவே இருந்து வருகிறது. "குடிவாரம்" என்பதில் நிலத்தை பிரத்தியக்ஷமாக சுவாதீனம் பெற்றிருப்பதும் அதை அனுபவிப்பதுமான உரிமை அடங்குமென்றும் அப்படிப்பட்ட உரிமையானது அந்த நிலத்துக்குரிய ரெண்ட் அல்லது கிஸ்தியானது செலுத்தப்படுவதற்குட்பட்டு வம்ச பரம்பரையாக வரத்தக்கதும் ஒருவர் பேரிலிருந்து மற்றொருவருக்கு ட்ரான்ஸ்பர் செய்யப்படத்தக்கதுமாகும் என்றும் நாம் சொல்வோமானால் அது வாஸ்தவமான நிலைமையைக் காட்டுவதாகும் என்று நினைக்கிறேன். கவர்ன்மெண்டானது சில நிலங்களின் ரெவின்யு அல்லது வரும்படியை தானமாக அல்லது ஈகையாககொடுத்த காலத்து அவர்கள் அந்த நிலங்களை சுவாதீனம் பெற்றிருந்தனர். அல்லது அந்த நிலமானது காம்பு நிலமாக இருந்திருக்கலாம். ஆகையால் இரண்டு விதத்திலும் கவர்ன்மெண்டானது ரெவின்யு மாத்திரமல்லாமல் நிலத்தையும் கூட கொடுக்கும்படியான நிலைமையில் இருந்தனர். நிலங்களை ஈகையாகப்பெற்றவரும் அந்த ஈகையினால் நிலத்தை பிரத்தியக்ஷமாக சுவாதீனம் பெற்று ஆண்டு அனுபவிப்பதற்கான உரிமையை அடைந்திருந்தனர்.

மற்றொரு கேஸ் என்னவென்றால், அந்த ரெவின்யு அல்லது வரும்படியை ஈகையாகப் பெற்றவர் அப்படி ஈகை

யைப் பெற்ற காலத்தில், தாமே நிலத்தை, அதாவது எந்த நிலத்தின் வரும்படியானது அவருக்கு தானமாக கொடுக்கப்பட்டதோ அதை தாமே சுவாதீனம் பெற்றிருந்த கேஸாகும். இவ்விரண்டு சந்தர்ப்பங்களிலும் ஈனாமைப் பெற்ற நபரானவர் இனாம்தார் எனப்படுவார். அவர் 'குடிவாரம்' என்று சொல்லப்பட்ட உரிமைக்கும் பாத்தியதையுடையவராக இருப்பார்.

இம்மாதிரியாக உள்ள இனாம்தாரின் உரிமையானது 1908-ம் வருஷத்திய 1-வது சட்டத்தின் 3 (d) பிரிவில் ஸ்பஷ்டமாக அங்கீகாரமாயுள்ளது. இன்னும் இனாம்தார்களுக்கும் அவர்களுடைய ரயத்துக்களுக்கும் ஷை சட்டம் நடைமுறைவதற்கு முன்னும் பின்னும் நடந்த வழக்குகளில் பிரிவி கௌன்ஸில் கோர்ட்டினால் ஸ்திரப்படுத்தப்பட்டுள்ளது.

(நிலம் சுவாதீன விஷயமாக) ருசு பாரம் எவருடையதென்பதும் அதற்கு எம்மாதிரியான சாக்ஷியம் தேவையென்பதும் அனுவசியமாக கேள்வியாகும். அந்த நிலத்தை சாஸ்வதமாக சுவாதீனம் பெற்று அனுபவிக்கக்கூடிய உரிமையானது இனாம்தாருடையது என்று ஒரு காம் ஸ்தாபிக்கப்பட்ட பிறகு ரயத்தானவர் தனக்கு இனாம்தார் எவ்வளவு கொடுக்கிறாரோ அதை விட அதிகமான உரிமையைப் பெறுவதற்கில்லை.

1934-ம் வருஷத்திய எஸ்டேட்ஸ் லாண்ட் ஆக்ட் இரண்டாவது திருத்த சட்டமானது, ஒரு இனாம் கிராமத்திலுள்ள ஒவ்வொரு ரயத்துக்கும் நிலத்தை சாஸ்வதமாக சுவாதீனம் பெற்று பயிர் செய்யவும் அது பாரம்பரையாக சேரும்படிக்கும் அதைப் பராதீனம் செய்யும்படிக்குமான ஒரு உரி

மையைக் கொடுக்கிறது. இனும்தாரரிடம் இருக்கும் இந்த உரிமையை அது பரிமுதல் செய்து தற்காலம் நிலத்தை பயிர் செய்யும் ரயத்துக்கு கொடுத்துவிட்டு, இனும்தார் இனி கவர்ன்மென்ட் உத்தியோகஸ்தரால் ஏற்படுத்தப்படும் நியாய மான தோர் ரென்டை பெறுவதற்கு மாத்திரம் அவருடைய உரிமையை வரையறுத்துவிடுகிறது.

புதிய மசோதாவின் சட்ட பூர்வமான பிரயோகத்தில் இனும்தாரருடைய சொந்த உரிமைகளும் சொத்து பாத்தியதைகளும் பரிமுதல் செய்யவில்லையென்று கூறுவது வீண் சமாதானமாகும். இந்த மசோதாவானது வருவதற்கு முன் இனும்தாரருக்கு இந்த உரிமைகள் இருந்தன. இப்பொழுது அவருக்கு அவைகள் கிடையாது.

இம்மாதிரி பரிமுதல் செய்வதற்கான காரணங்களைப் பற்றி நான் சில வார்த்தைகளைச் சொல்லுகிறேன். இந்தியா முழுவதும் ரயத்துகளை நிலத்துக்குடையவர்களுடைய தீவிரச் செயல்களிலிருந்து காப்பாற்றுவதற்காக அநேக சட்டங்கள் செய்யப்பட்டிருப்பது வாஸ்தவம். இவைகள் நிலத்தை எப்பொழுதும் சுவாதீனம்பெற்று வந்திருக்கும் ரயத்துகளுக்கும் நிலத்தை பிரத்தியக்ஷமாக சுவாதீனம் பெறுமல் உள்ள ஜமீன்தார்களுக்கும்தான் சாதாரணமாக அன்வயிக்கும்.

இனும்தார்கள் விஷயத்தில், அவர்கள் குடிவாரத்தை பெற்றிருந்தால், நிலத்தை பிரத்தியக்ஷமாக சுவாதீனம் பெற்றிருக்கும் உரிமையையும் உடையவர்கள். அவர்கள் கொஞ்ச நிலங்களையாவது அல்லது எல்லா நிலங்களையுமாவது சாகுபடி செய்வதற்கு விட்டிருந்தால்; ரயத்துவாரி இடங்களில்

உள்ள ரயத்துகள் எப்படி தங்கள் நிலங்களை குத்தகைக்கு விடுகிறார்களோ அதே நிலைமையில் உள்ளவர்களாக இருக்கிறார்கள். இனும்தார்கள் பெற்றிருக்கும் நிலங்கள் சராசரியில் 19 ஏகராக்களாயிருக்கின்றன. கோயில்கள் அல்லது ஸ்தாபனங்கள் தவிர, ஒரே நபர் தனியாக பெற்றுள்ள யாதொரு இனும் கிராமமும் கிடையாது. ஒவ்வொரு இனும்தாரருக்கும் சொல்ப ரயத்துகளேயுள்ளனர். அவர்களை சரியாக நடத்தாவிட்டால் அவர்கள் பயிர் செய்ய மறுத்து விடுவார்கள். ஒரு ஜமீன்தார் தனது ஆயிரக்கணக்கான ரயத்துகளின்மீது பெரியதோர் அதிகாரத்தையும் செலுத்தமுடியும். இந்த மசோதாவானது சரியாக யோசனை செய்யாமலே நுழைக்கப்பட்டதாக தெரிகிறது. ஜமீன்தார்களையும் இனும்தார்களையும் ஒரேமாதிரியாக கவனிப்பதற்கு யாதொரு காரணம் இருப்பதாக தெரியவில்லை. அவர்களுடைய அந்தஸ்தும் வெவ்வேறானது. இந்த சட்டத்தினால் அவர்கள் வெவ்வேறு விதமாக பாதிக்கப்படுகிறார்கள். ஜமீன்தார்கள் தங்கள் ஜமீனிலுள்ள எல்லா நிலங்களில் குடிவாரத்தைப்பெற்றிருக்கவில்லை. அவர்கள் எப்பொழுதாவது பெற்றிருந்ததும் கிடையாது. இந்த மசோதா என்னவோ தங்கள் இனும் கிராமத்தில் அத்தகைய உரிமையைப்பெற்றிராத இனும்தார்களுக்கு மாத்திரம் பிரயோகமாகும் என்று சொல்லப்படுகிறது.

"இனும்தாருடைய பிரைவேட்" நிலங்களைச் சேர்ந்தவரையிலும் சில கடுரமான கஷ்டங்களை நிவர்த்திப்பதற்கு ஏற்பாடு உள்ளதாக சொல்லப்படுகிறது. இந்த நிபந்தனைகள் பெங்கால் டெனன்ஸி ஆக்ட் என்னும் சட்டத்திலிருந்து பெயர்த்து எழுதப்பட்டது. ஒரு வங்காள தேசத்து ஜமீன்தாருக்கும் சென்னை மாகாணத்து இனும்தாருக்கும்

உள்ள வித்தியாசத்தை அடியோடே கவனியாமலே இம்மாதிரி செய்யப்பட்டிருக்கிறது.

இந்த சந்தர்ப்பங்களில் இனும்தாருக்கு தனது குடிவார உரிமையை ருசு செய்வது மிகவும் கஷ்டமானதாகும். அவர் அப்படி ருசு செய்தபோதிலும் அவர் அந்த நிலத்தை தன்னுடைய ஸ்வாதீனத்தில் வைத்திராமல் வேறெ எவருக்காவது பயிர் செய்வதற்கு விட்டால் அந்த உரிமையானது போய்விடுகிறது.

இந்த கேஸுகளின் குடிவார உரிமையானது கோர்ட்டுகளின் தீர்ப்பு துவாரா ஸ்தாபிக்கப்பட்டிருக்கையில் இந்த சட்டத்தினால் ஏற்படுவதென்னவென்றால் அந்த தீர்ப்புகளை ரத்து செய்வதாகும். ஏனென்றால் இனும்தாருக்கு ஆத்தகைய உரிமைகள் எப்பொழுதுமே இருந்தது கிடையாது என்று சொல்லப்படுகிறது. அப்படி அவர் பெற்றுக் கொண்ட போதிலும் அவர் அவைகளை பெற்றிருப்பதற்கில்லை.

மொத்தத்தில் இனும்தார்கள் சென்னை கவர்ன்மெண்டினால் கடுமையே நடத்தப்பட்டதாக நினைக்கிறேன''

இனும் கிராமங்களின் விஷயமாய் ஏற்பட்ட திருத்தங்கள்.

இனி நாம் இந்த சட்டத்தில் எந்தந்த பாகமானது இனும் கிராமங்களைப்பற்றியும் அவைகளின் விஷயமாக இனும்தார் உரிமைகளை ஸ்தாபித்துக் கொள்வதைப்பற்றியும் கூறுகின்றன என்பதைக் கவனிப்போம்.

3—வது பிரிவில் (2) குறிப்பிட்ட பகுதியில் (d) என்று அடையாளமிட்ட பகுதியானது பூரணமாக திருத்தியமைக்கப்பட்டது. அதில் இனும் கிராமக்களும் எஸ்டேட் என்

னும் தலைமையின் கீழ் வருவதாகும் என்று சட்டமாக்கப் பட்டது.

3-வது பிரிவில் (10) குறிப்பிட்ட உட்பிரிவில் சொந்த நிலம் என்பதன் அர்த்த விளக்கமானது மாற்றப்பட்டு இனும் கிராமங்களின் விஷயத்தில் இனும்தாரரே அதைப் பயிரிட்டுக்கொண்டுவந்திருக்க வேண்டும் என்பதை விசிதமாக தெரிவிக்கப்பட்டது.

புதிய 23-வது பிரிவின் பிரகாரம் (99-வது பக்கம்) இனும் கிராமம் ஒரு எஸ்டேட் என்று அனுமான பூர்வ யாக கவனிக்கப்படும் என்றும் அதை மறுதளிப்பதாயிருந்தால் எவர் அப்படி மறுதளிக்க வேண்டுமென்கிறாரோ அவரே தான் ருசு செய்யவேண்டும் என்றும் ஏற்படுத்தப்பட்டது.

இனும் கிராமங்களிலும் ரயத்துகளுக்கு ரிகார்ட் ஆப் ரைட்ஸ் என்னும் உரிமை தஸ்தாவேஜு ஏற்படுத்துவதற்காக 185-A பிரிவு புதியதாக ஏற்படுத்தப்பட்டது. (314-வது பக்கம் பார்க்கவும்.)

இன்னும் 185 B பிரிவினால் இனும் கிராமங்கள் உள்ள நிலங்களைப்பற்றி பொதுவாக அவை இனும்தாரரின் சொந்த நிலமல்லவென்றே அனுமானம் என்றும் இனும்தாரரே குறிப்பிட்ட ஒரு நிலம் தன்னுடைய சொந்த நிலமென்று ருசு செய்ய வேண்டும் என்றும் சட்டம் ஏற்படுத்தப்பட்டது.

இன்னும் சில பிரிவுகளில் இதற்கு அனுகுணமாக இதர அம்சங்களும் திருத்தப்பட்டன.

## எஸ்டேட்ஸ் லாண்ட் ஆக்டின் அமைப்பு.

எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டானது 17 அத்தியாயங்கள் அடங்கியது. 1-ம் அத்தியாயத்தில் அர்த்த விளக்கங்கள்

காணப்படுகின்றன. அதாவது இந்த சட்டத்தில் உபயோகப்படுத்தப்பட்டிருக்கும் பதங்களுக்கு என்ன அர்த்தம் என்பதானது இந்த அத்தியாயத்தில் விளக்கப்பட்டிருக்கிறது 'நிலத்துக்குடையவர்.' என்னும் பதத்தின் அர்த்தமானது 55-வது பக்கத்தில் உள்ளது. அதற்கு ஒரு பூஸ்திதி அல்லது அதன் பாகத்தின் சொந்தக்காரர் என்றும் அதிலே சொந்தக்காரரிடத்திலிருந்தாவது அவருக்கு முந்தி பாத்தியதை யடைந்தவரிடத்திலிருந்தாவது யாதொரு ட்ரான்ஸ்பர் பெற்றிருந்ததை யனுசரித்தாகிலும்............ அந்த பூஸ்திதி முழுவதின் அல்லது அதன யாதொரு பாகத்தின் குத்தகைத் தொகைகளை வசூல் செய்யச் சுதந்தரமுடையவர் என்பதும் அடங்கும் என்று விளக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் இதிலிருந்து நிலத்துக்குடையவர் என்னும் பதத்திற்கு நிலத்தின் சொந்தக்காரர் அல்லது நிலத்தின் யஜமான் என்று அர்த்தம் ஏற்படாது. இந்த பதத்திற்கு இங்கிலீஷில் Land Holder என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதன் பத அர்த்தம் நிலத்தைப்பெற்றிருப்பவர் என்பது. அதாவது நிலத்தின் கிஸ்தியை வசூல் செய்யும் உரிமையைப்பெற்றிருப்பவர். இவர் ஸ்வயத்தி நிலங்களை எக்காலத்திலும் தனது சொந்த நிலமாக்கிக் கொள்ள முடியாது. சாதாரணமாக இந்த நிலத்துக்குடையவர்கள் ஜமீன்தார் அல்லது சுரோத்திரியதார் அல்லது மிட்டாதார் அல்லது ஜாகிர்தார் என வழங்கப்பட்டு வருகின்றனர்.

இரண்டாவது அத்தியாயமானது பொதுவான பாத்தியதைகளைப்பற்றி கூறுகிறது.. சமுதாய நிலங்கள், ஒரு கிராமத்தில் உள்ள கைப்பற்று நிலங்களில் இருக்கும் மரங்கள், அவைகளை அனுபவிக்கும் உரிமை, சொந்த நிலங்களில் தரவு வெட்டுவது, நிலங்களை சீர்திருத்தம் செய்வது, அதற்

குள்ள உரிமை, சமுதாய நிலங்களை பொதுவான காரியங்களுக்கு கட்டாயமாய் எடுத்துக் கொள்வது, ஆகிய இவைகளைப்பற்றி இந்த அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இப் புஸ்தகத்தில் 71 முதல் 100 வரையிலுமுள்ள பக்கங்களில் இது காணப்படும்.

மூன்றாவது அத்தியாயம் குத்தகை விதங்களை குறைப்பது அதிகப்படுத்துவது மாற்றுவது ஆகிய இவைகளைப் பற்றின நிபந்தனைகளை அடங்கியது. "குத்தகை" என்னும் பதம் இங்கிலீஷில் "Rent" என்னும் பதத்தின் மொழிபெயர்ப்பாகும். அதன் அர்த்தமானது 61-வது பக்கத்திலும் அதன் பின்னால் விவரிக்கப்பட்டிருக்கும் கேஸுகளிலும் விளக்கப்பட்டிருக்கிறது. தயவாரி நிலங்களில் உள்ள கிஸ்தியைப் போலவேதான் குத்தகைத் தொகை செலுத்தப்படவேண்டும். ஆனால் குத்தகைத் தொகையானது ஒரு ஜமீன்தாருக்கும் அவருடைய ரயத்துக்கும் ஏற்படும் பிரைவேட் காண்ட்ராக்டைப் பொருத்தினதாகும்.

4-வது அத்தியாயம் பட்டா முச்சலிக்கா பரிவர்த்தனையைப்பற்றியது. 5-ம் அத்தியாயமானது குத்தகைப் பாக்கி என்பது எப்பொழுது ஏற்படும் என்பதும் அது மாறுலானால் அதை பகிர்ந்து கொடுக்கும்படி கலெக்டரிடம் விண்ணப்பம் செய்யவேண்டுமென்பதைப்பற்றியும் கூறுகிறது.

6-வது அத்தியாயம் தான் இந்த சட்டத்தில் உள்ள அத்தியாயங்களில் பெரியதோர் அத்தியாயமாகும். இதில் தான் குத்தகைத் தொகை பாக்கியாவதன் பேரில் அதை வசூல் செய்வதற்குரியநிபந்தனைகளையுடைய பிரிவுகள் உள்ளன. இந்தப் பிரிவுகளில் பல 1934-ம் வருஷத்திய திருத்

தத்தினால் மாற்றப்பட்டன. இதன் விவரத்தை பின்னால் கவனிப்போம்

7-வது அத்தியாயமானது அதிகப்படியாக செலுத்தின தொகைகளை வாப்படுத்துவதைப்பற்றின நிபந்தனைப் பற்றி கூறுகிறது.

8-ம் அத்தியாயமானது நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான கட்டுவேலைகளைப்பற்றி கூறுகிறது இந்த அத்தியாயத்தில் உள்ள பிரிவுகள் பலவும் 1934-ம் வருஷத்தினால் முற்றிலும் மாற்றியமைக்கப்பட்டன.

9-வது அத்தியாயம் கைப்பற்று நிலங்களை ஒருவரிடமிருந்து மற்றொருவருக்கு ட்ரான்ஸ்பர் செய்யப்படும்போது அனுசரிக்க வேண்டிய விதிகளைப்பற்றி கூறுகிறது. ட்ரான்ஸ்பரானது நிலத்துக்குடையவரால் அங்கீகரிக்கப்படாவிட்டால் நேரும் விபரீதங்கள் என்ன என்பதைப்பற்றி 261 முதல் 272 வரையிலுமுள்ள பக்கங்களில் பார்க்கவும்.

10-வது அத்தியாயமானது ரயத்தி நிலங்களில் அக்கிரமமாய் பிரவேசிக்கும் நபர்களை அப்புறப்படுத்துவதற்கான நிபந்தனைகளைப்பற்றி கூறுகிறது.

11-வது அத்தியாயம் மிகவும் முக்கியமானதோர் அத்தியாயமாகும். இந்த அத்தியாயத்தில் ஒரு ஜமீன் கிராமத்திலுள்ள நிலங்களை சர்வே செய்வதைப்பற்றியும் ரிகார்ட் ஆப்ரைட்ஸ் என்னும் உரிமை தஸ்தாவேஜுகள் ஏற்படுத்துவதைப்பற்றியும் கூறப்பட்டிருக்கிறது. இதிலும் பல அம்சங்கள் மாற்றப்பட்டன.

ஜமீன்களில் அல்லது பூஸ்திதிகளில் நிலத்துக்குடையவரின் சொந்த நிலத்தைப்பற்றிய ரிகார்டுகளை ஏற்படுத்துவதைப்பற்றி 12-ம் அத்தியாயத்தில் கூறப்பட்டிருக்கிறது.

13-ம் அத்தியாயத்தில் நிலஸ்வான்தாரர் அதாவது ஜமீன்தாரர் கட்டிடம் கட்டுவதற்காக நிலத்தை கட்டாயமாக பரிக்கிரமிப்பதைப்பற்றி கூறுகிறது

15-வது அத்தியாயம் ரெவின்யு கோர்ட்டுகளில் தொடரப்படும் வியாஜ்ஜியங்களைப்பற்றி கூறுகிறது. அத்தகைய வியாஜ்ஜியங்களில் ஸிவில் புரோஸிஜர் கோட் என்னும் விவஹார முறைமைப்பற்றிய சட்டமானது அனுசரிக்கப்படவேண்டுமென்றும் ரெவின்யு கோர்ட்டுகளில் செய்யப்படும் டிக்கிரிகளை ட்ரான்ஸ்பர் செய்வதற்கான விதிகளைப்பற்றியும் அந்த அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இன்னும் ரெவின்யு அதிகாரிகளின் விசாரணை அதிகாரத்தைப்பற்றியும் எந்தெந்த இடங்களில் வியாஜ்ஜியம் தொடரப்படவேண்டும் என்பதைப்பற்றியும் சொல்லப்பட்டிருக்கிறது.

17-வது அத்தியாயம் கடைசி அத்தியாயமாகும் இதில் ஜப்தி செய்யப்பட்ட மாருலை சட்ட விரோதமாய் அகற்றிக் கொண்டு போகுபவர்களுக்கு தண்டனை உண்டென்றும், எஸ்டேட் ஸ்லாண்டு ஆக்டின் கீழ் அதை அனுசரித்து செய்யப்படும் தாவா அல்லது நடவடிக்கைகளில் ஏதாவது நஷ்டம் நேரிட்டால் அதற்காக டாமேஜ் பெறுவதற்காக தாவா செய்யலாம் என்றும் கூறப்பட்டுள்ளது. இந்த அத்தியாயத்தில் 214-வது பிரிவில் ஜமீன்தார்கள் தமது பவர் பெற்ற ஏஜெண்டுகளின் மூலமாக நடவடிக்கைகளை நடத்தலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த சட்டத்தில் A B என்று இரண்டு ஷெடியூல்கள் உள்ளன. அந்த ஷெட்யூல்களை அடிக்கடி கவனிக்கவேண்டி வரும். A ஷெட்யூல் தாவாக்களைப்பற்றினது தாவா செய்ய வேண்டிய கோர்ட்டு, அதன் ஆரம்பகாலம், கால

நிர்ணயம் இவைகளைப்பற்றி கூறப்பட்டிருக்கிறது, B ஷெட்யூலில் விண்ணப்பங்களைப்பற்றி கூறப்பட்டிருக்கிறது. தாவாக்களுக்கு ஸ்டாம்பு டேியானது ஒவ்வொரு தாவாவின் தொகை சுபாவம் இவைகளைப் பொருந்தினது. தொகையை வரப்படுத்துவதாயிருந்தால் ரூ. 100-க்கு 11-3-0 வீதம் ஸ்டாம்பாகும். விண்ணப்பங்களுக்கு 0-12-0 ஸ்டாம்பே போதுமானது. விண்ணப்பங்களுக்கும் தாவாக்கும் என்ன வித்தியாசம் என்பதை 114-வது பக்கத்தில் காண்க.

## 1934-ம் வருஷத்திய திருத்தத்தினல் ஏற்பட்ட முக்கிய திருத்தங்கள்.

1934-ம் வருஷம் எஸ்டேட்ஸ் லாண்ட் ஆக்டானது திருத்தப்பட்டது என்று கண்டிருக்கிறோம். அந்த திருத்தமானது ஒரு திருத்த சட்ட ரூபமாய்க் கொண்டு வரப்பட்டது. ஷை திருத்தத்தில் பெரும்பாலான திருத்தங்கள் எஸ்டேட்ஸ்லாண்டு ஆக்டின் பத அமைப்புகளை திருத்தி அர்த்தம் தெளிவாய் விளக்கும்படி செய்ததாகும். ஆனல் சட்ட பாகத்திலும் சில மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன. அவைகளில் முக்கியமானவற்றை அடியில் கவனிப்போம்.

இனம் கிராமங்களின் விஷயமாய் ஏற்பட்ட திருத்தங்கள் 1934-ம் வருஷத்திய இரண்டாவது திருத்த சட்டத்தினல் ஏற்பட்டது. அதைப்பற்றி ஏற்கெனவே கவனித்தாய் விட்டது. இனி முதல் திருத்த சட்டத்தினல் ஏற்பட்ட முக்கிய மாறுதல்களைக் கவனிப்போம்.

(1) அர்த்த விளக்கத்தில் 11-வது பாராவில் ரயத்து என்னும் பதற்கு சேர்ந்தப்போல் 12 வருஷங்களாக ரயத்தி

நிலத்தை சுவாதீனம் பெற்றிருப்பவரும் ரயத்து எனக்கரு தப்படுவார் என்று ஒரு அம்சம் சேர்க்கப்பட்டது. அதே பிரிவில் 16–வது பாராவில் ரயத்தி நிலத்தில் ஏரிஉள்வாய் நீர்ப்பாசன வாய்க்கால்கள் அடங்காது என்று ஸ்பஷ்ட மாக விளக்கப்பட்டது.

(2) 12-வது பிரிவில் ரயத்தி நிலங்களில் உள்ள மரங் களைப்பற்றி சில மாறுதல்கள் செய்யப்பட்டது. அதாவது 1908–ம் வருஷத்திற்கு முன்னேயுள்ள மரங்களைப்பற்றின வரையிலும் அவைகளின் பூரணபாத்தியதை ரயத்துக்கு கொடுக்கப்பட்டது. அப்படி யாதொரு மரமானது ஆசா ரப்படியாவது மற்றப்படியாவது ஜமீன்தாருக்கு சொந்த மாயிருந்தால் கலெக்டரிடம் மனு செய்து தக்கபடி தொகை கட்டி அதை பெறலாம்.

(3) சமுதாயமான நிலங்களை ஒரு காரியத்திலிருந்து மற்றொரு காரியத்துக்காக மாற்றுவதற்கு டிஸ்டிரிக்ட் கலெக் டருக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டது. அந்த அதிகாரத் தை, அவர், ஒரு நிலத்துக்குடையவராவது அல்லது ரயத் தாவது அல்லது அக்குடைய வேறே ஒரு நபராவது மனு செய்வதன் பேரில் செலுத்தவேண்டும். புதிய 20, 20–A. 20–B. பிரிவுகளைப்பார்க்கவும்.

(4) 30, 38, 40 பிரிவுகள் முறைபே ரெண்டு தொகை அதிகப்படுத்துவதைப்பற்றியும் குறைப்பதைப்பற்றியும் தான்னியமாயிருப்பதை பணமாக்குவதைப்பற்றியும் கூறும் பிரிவுகளாகும். இவைகளை பொட்டி கோர்ட்டில் பரிஹாரம் தேடவேண்டுமானல் பழைய சட்டப் பிரகாரம் ஒரு தாவா செய்யவேண்டுமென்றிருந்தது. அதாவது Suit செய்ய வேண்டுமென்றிருந்தது. அந்த தாவாவுக்கு மதிப்பு பிரகா

ரம் கோர்ட்டில் ஸ்டாம்பு கட்டி வியாஜ்ஜியம் செய்ய வேண்டியிருந்தது. இப்பொழுது ஷை பிரிவுகளின் கீழ் கோரப்படும் பரிஹாரங்களைப் பெறுவதற்கு விண்ணப்பங்கள் செய்தாலே போதுமானது என்று புதியதாக ஏற்படுத்தப்பட்டது. அவைகளுக்கு "Applications" என்று பெயர். இத்தகைய விண்ணப்பங்களுக்கு 0-12-0 ஸ்டாம்பு ஒட்டினாலே போதுமானது. இது உபயதாரர்களுக்கும் செய்யப்பட்ட ஒரு சௌகரியமாகும்.

(5) 50-வது பிரிவில் ஒரு புதிய அம்சமானது சேர்க்கப்பட்டது. அதாவது ஒரு ரயத்து ஒரே கிராமத்தில் தன்னுடைய ஸ்வாதீனத்தில் வைத்திருக்கும் எல்லா நிலங்களுக்கும் ஒரு தனி பட்டா பெறும்படி கேட்க அவருக்கு உரிமையுண்டு என்று சட்டம் ஏற்படுத்தப்பட்டது. ஒரே பட்டாவாக வைத்திருப்பதில் ரயத்துக்கு பல வித சௌகரியங்கள் உண்டு.

(6) 54-வது பிரிவில் பட்டா டெண்டர் செய்வதற்காக மார்க்கங்கள் அதிகப்படுத்தப்பட்டிருக்கின்றன. கிராமச்சாவடியில் அதை ஒட்டலாம் என்று புதியதாக நிபந்தனை ஏற்படுத்தப்பட்டது. இன்னும் நேராகவாவது கலெக்டர் துவாராவது தபால் மூலமாக அனுப்பவேண்டும்.

(7) 65-வது பிரிவின் கீழ் ஒரு நிலஸ்வான்தாரர் சரியான ரசீது கொடுக்காவிட்டால் அதற்கு டாமேஜாக தொகை பெறுவதற்கு பழைய சட்டப் பிரகாரம் தாவா செய்ய வேண்டியிருந்தது. புதிய திருத்தத்தினால் அதற்காக ஒரு விண்ணப்பம் தாக்கல் செய்தாலே போதுமானது என்று ஏற்படுத்தப்பட்டது.

(8) செலுத்தப்பட வேண்டிய குத்தகையானது தானியமாக இருந்தால் அது நிலத்துக்குடையவருடைய நெல் களஞ்சியம் கிராமத்திலிருந்து 10 மைல்களுக்குள் இருக்கும் பக்ஷத்தில் அங்கேயே ரயத்து அதைக்கொண்டு சேர்க்க வேண்டும். பழையசட்டப் பிரகாரம் ரயத்தேதான் அப்படி கொண்டு போவதற்கான சிலவை பரித்துக் கொள்ள வேண்டியிருந்தது. இப்பொழுது புதிய திருத்த சட்டப் பிரகாரம் அந்த இடமானது கிராமத்திலிருந்து மூன்று மைல்களுக்கு மேற்பட்டிருந்தால் அப்படி அகற்றிக் கொண்டு போகும் சிலவை நிலத்துக்குடையவர் அல்லது ஜமீன்தார் பரித்துக் கொள்ள வேண்டும் என்றும் ஏற்படுத்தப்பட்டது.

(9) ஒரு நிலத்தின் மாமூலை தொகம் (தோராய மதிப்பு) போட்டு பங்கிடுவதில் கலெக்டருடைய உத்தரவின் பேரில் யாதொரு அப்பீலும் இராமலிருந்தது. இப்பொழுது 1934-ம் வருஷத்திய திருத்த சட்டப் பிரகாரம் 75-வது பிரிவின் (8)-வது உட்பிரிவின் (b) வாக்கியத்தில் கண்டிருக்கும் சந்தர்ப்பங்களில் கலெக்டருடைய உத்திரவின் பேரில் டிஸ்டிரிக்ட் கோர்ட்டுக்கு அப்பீல் உண்டு என்று சட்டம் ஏற்படுத்தப்பட்டது.

(10) ஜங்கமசொத்தை ஜப்தி செய்வதாயிருந்தால் குறைந்த பக்ஷம் 15 நாளைக்கு முன்னாடியாவது பட்டா முச்சலிக்கா பரிவர்த்தனை செய்யப்பட்டிருக்க வேண்டும் அல்லது பட்டா டெண்டர் செய்யப்பட்டிருக்க வேண்டும் என்று புதியதாக ஏற்படுத்தப்பட்டது.

(11) பழைய பட்டாவில் கண்ட தொகையை விட அதிகமானதோர் தொகைக்காக ஜங்கம சொத்தாவது அல்லது ஸ்தாவர சொத்தாவது ஜப்தி செய்யப்பட்டு நடவடிக்

தை நடந்து கொண்டிருந்தால் பழைய பட்டாவில் அடங்கிய தொகையானது செலுத்தப்படுவதன் பேரில் மொத்த நடவடிக்கையும் ரத்தாகிவிடும் என்றும் அதிக தொகைக்கு நிலத்துக்குடையவர் தாவா செய்துதான் பரிஹாரம் பெற வேண்டும் என்றும் புதியதாக 77 C. பிரிவில் ஏற்படுத்தப் பட்டது.

(12) 77 E. பிரிவில், புதியதாக நிலத்துக்குடையவர் யாதொரு குத்தகை பாக்கிக்காக வியாஜ்ஜியம் தொடர்ந்து டிக்கிரி பெற்றிருந்தால் அப்படிப்பட்ட பாக்கிக்காக அசையும் பொருளை ஜப்தி பண்ணுவதற்காவது அதற்காக 111-முதல் 131 வரையிலுமுள்ள பிரிவுகளின்படி கைப்பற்று நிலத்தை விற்பனைக்கு கொண்டுவருவதற்காவது அவருக்கு எவ்வித உரிமையும் கிடையாதென்றும் டிக்கிரி பிறப்பிக்கப்படுவதற்கு முன் அப்படிப்பட்ட பாக்கிக்காக கைப்பற்று நிலத்தை விற்பதற்காக சகல நடவடிக்கைகளையும் நிறுத்தி விட்டு, அவைகளை தொடர்ந்து நடத்திக்கொண்டு போகக் கூடாதென்று சட்டம் ஏற்படுத்தப்பட்டது.

(13) 91-வது பிரிவில் ஸிவில் கோர்ட்டில் யாதொரு சொத்தின் பாத்தியதையைப்பற்றி ஸ்தாபித்துக்கொள்வதற்கான காலதவணையே இராமலிருந்தது. புதிய திருத்தத்தினால் உத்திரவின் தேதி முதல் ஒரு வருஷம் என்று அதை நிர்ணயம் செய்தனர்.

(14) ஜங்கம சொத்து ஏலம் போடப்பட்டதில் ஏலத்தில் எடுத்தவர் தொகை செலுத்தத்தவறினதின் பேரில் மறு ஏலம் நடந்து அதில் ஏதாவது தொகை குறைந்தால் அம்மாதிரி குறைவுபட்ட தொகையை ஏலம் எடுத்தவரிடமிருந்து பெறுவதற்கு பழைய சட்டப்பிரகாரம் கலெக்டர் முன்பாக தாவா செய்ய வேண்டியிருந்தது. இப்பொழுது

புதிய திருத்தத்தின் பிரகாரம் ஜப்தி செய்தவராவது பாக்கிதாரராவது கலெக்டரிடம் விண்ணப்பம் செய்வதின் பேரில் கலெக்டர் சர்ட்டிபிகேட் கொடுத்தாலே போதுமானது. அது வே ஒரு டிக்கிரி போலாகும்.

(15) 112-வது பிரிவின் கீழ் ஏல கோட்டிஸ் அனுப்படுவதில் தபால் மூலமாகவும் பாக்கிதாரருக்கு நோடீஸ் அனுப்பப்பட வேண்டும் என்று புதியதாக ஏற்படுத்தப்பட்டது.

(16) 112-வது பிரிவின்கீழ் ஜப்தி பேரில் ஆக்ஷேபித்து தாவா செய்வதாயிருந்தால் பழைய சட்டம் அல்லது தீர்மானங்களின் பிரகாரம் பட்டாதார் அல்லது பாக்கிதாரர் தவிர வேறே ஒருவரும் தாவா செய்வதற்கில்லை யென்றிருந்தது. இப்பொழுது புதிய (2) உட்பிரிவினுல் கைப்பற்று நிலத்திலாவது அதன் பாகத்திலாவது சுதந்தர முள்ளவராயிருந்து அதன் விற்பனையினுல் பாதிக்கப்படும் யாதொரு நபர் விற்பனை செய்வதற்குரிய பாத்தியதையை ஆட்சேபித்து (1) குறிப்பிட்ட உட்பிரிவில் நிஷ்கரிஷை செய்யப்பட்ட கால அளவுக்குள் கலெக்டர் முன்பாக வியாஜ்ஜியம் தொடரலாம் என்று ஏற்படுத்தப்பட்டது.

(17) ஸ்தாவர சொத்துக்கள் ஏலம் போடப்பட்டு ஏலத்தில் எடுத்த நபரானவர் தொகை செலுத்த தவறிவிட்டதின் பேரில் மறு ஏலத்தினுல் நேர்ந்த நஷ்டத்தை அவரிடமிருந்து வரப்பெற வேண்டுமானுல் பழைய சட்டப் பிரகாரம் தாவா செய்ய வேண்டியிருக்கையில் புதிய திருத்தப் பிரகாரம் அதற்காக விண்ணப்பம் செய்து ஒரு சர்ட்டிபிகேட் பெற்றுலே போதுமானது.

(18) ரென்ட் பாக்கிக்காக செய்யப்பட்ட ஏலத்தை ரத்து செய்வதற்கு ஏலம் நடந்தது முதல் 30 நாள் தவணை

புண்டு என்று பழைய சட்டப் பிரகாரம் இருந்தது. அதை 124-வது பிரிவில் உள்ள திருத்தத்தினுல் 45 தினங்களாக் கிறார்கள்.

(19) 135, 136 பிரிவுகளில் சட்டப்படிக்கு செலுத் தப்படத்தக்க குத்தகைத் தொகையுடன் கூட வேறே எந்த தொகையையாவது வாங்குவதும் பெற்றுக்கொள்வதும் பிசகு என்று ஏற்படுத்தப்பட்டது.

(20) புதிய 8-வது அத்தியாயம் முழுவதும் திருத்தி யமைக்கப்பட்டதாகும். நீர்ப்பாசன வேலைகளை பெரிய வேலைகள் என்றும் சிறிய வேலைகள் என்றும் பிரிப்பது கலெக்டருடைய கடைமையாகி விட்டது. ஆயக்கட்டை நிர்ணயம் செய்வதும் அவருடைய கடமையாகும்.

(21) ரயத்துகள் நீர்ப்பாசன கட்டுவேலைகளை ரிபேர் செய்வதற்காக எடுத்துக் கொள்ளும் நடவடிக்கைகள் மிக வும் சுலபமாக்கப்பட்டன. 138-வது பிரிவைப்பார்க்கவும்.

(22) 145-வது பிரிவில் சொத்து மாறுதலின் பேரில் அதை அங்கீகாரம் செய்வதற்கான நிபந்தனைகள் மிகவும் விஸ்தாரமாக விவரிக்கப்பட்டுள்ளன.

(23) 163-A. பிரிவின் கீழ் அனுமதியில்லாமல் ரயத்தி நிலத்தை அனுபோகம் செய்து வருபவர்களை அப்புறப் படுத்துவதற்கான தாவா செய்வதற்கு கால நிர்ணயம் 12 வருஷம் என்று நிர்ணயிக்கப்பட்டது.

(24) ஒரு கிராமம் சர்வே செய்யப்பட்டதானுல் அதன் ப்ளான் நில ரிஜிஸ்டர் புல அளவுகள் இவைகளைப்பற்றின ரிகார்டுகளின் நகல் கிராம கர்ணத்தினிடம் இருக்க வேண் டும் என்றும் அவைகளை எல்லா ரயத்துகளும் பார்வையிட லாம் என்றும் சட்டமேற்படுத்தப்பட்டது.

(25) கட்டிடங்கள் கட்டுவதற்கும் இதர காரியங்களுக்கு யாதொரு கைப்பற்று நிலமானது அவசியம் என்று ஒரு நிலஸ்வான்தாரர் அல்லது ஜமீன்தார் ஸ்தாபித்துக் கொள்ள வேண்டுமானால் பழைய சட்டப் பிரகாரம் ஸிவில் கோர்ட்டில் விண்ணப்பம் செய்ய வேண்டியிருந்தது. இப்பொழுது புதிய திருத்தத்தின் பிரகாரம் யாதொரு நிலம் கட்டிடம் முதலிய காரியங்களுக்கு தேவையென்று டிஸ்டிரிக்ட் கலெக்டரே தான் விண்ணப்பத்தின் பேரில் தீர்மானிக்கலாம். அதைப்பற்றி மறுபடியும் ஸிவில் கோர்ட்டில் வியாஜ்ஜிய மாடுவதற்கில்லை. 186-வது பிரிவையும் அதன் கீழ் உள்ள குறிப்புகளையும் பார்க்கவும்.

(26) 189-வது பிரிவில் பொதுவாக ஸிவில் கோர்ட்டானது தனது அதிகாரத்துக்குட்பட்ட வியாஜ்ஜியங்களில் செய்யும் தீர்ப்பானது ரெவின்யு கோர்ட்டை கட்டுப்படுத்தும் என்று விசிதமாக ஏற்படுத்தப்பட்டது

(27) 190-வது பிரிவில் 15, 40 இந்தப் பிரிவுகளின் கீழ் செய்யப்பட்ட உத்திரவுகளைப்போல் 25-வது பிரிவு 22-வது பிரிவு 42 (2) பிரிவு இந்தப் பிரிவுகளின் கீழ் செய்படும் உத்திரவுகளுக்கும் இரண்டாவது அப்பீல் உண்டு என்று ஏற்படுத்தப்பட்டது.

(28) 192-வது பிரிவில் பொதுவாக எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டின் கீழ் நடக்கும் தாவாக்களுக்கு ஸிவில் புரோஸீஜர் கோட் என்னும் சட்டம் பிரயோகமாகும் என்று ஏற்படுத்தப்பட்டது.

இன்னும் அந்தப் பிரிவானது மிகவும் விரிவாக்கப்பட்டு ரெவின்யு வியாஜ்ஜியங்களில் நடக்க வேண்டிய விவகார முறையானது விளக்கப்பட்டது.

---

சென்னை

# எஸ்டேட்ஸ் லாண்ட் ஆக்ட்.

## 1935-ம் வருஷ திருத்தங்களுடன் கூடியது.

[இனும்தார் சட்டமும் அடங்கியது.]

---

AN ACT TO DECLARE AND AMEND THE LAW RELATING TO THE HOLDING OF LAND IN ESTATES IN THE PRESIDENCY OF MADRAS.

சென்னப்பட்டணம் ப்ரெஸிடென்ஸியிலிருக்கும் பூஸ்திதிகளிலுள்ள நிலத்தை வைத்துக் கொண்டிருப்பதற்குச் சம்பந்தப்பட்ட சட்ட திட்டத்தைத்திருத்திப் பிரசித்தஞ் செய்வதற்கான ஆக்ட்.

பீடிகை.

சென்னப்பட்டணம் ப்ரெஸிடென்ஸியிலிருக்கும் பூஸ்திதிகளிலுள்ள நிலத்தை வைத்துக்கொண்டிருப்பதற்குச் சம்பந்தப்பட்ட சட்டதிட்டத்தைத் திருத்திப் பிரசித்தஞ் செய்வது யுக்தமாயிருக்கிறபடியால், இதனால் விதிக்கப்படுகிறதென்னவென்றால் :—

### 1-ம் அத்தியாயம்.

### பீடிகா விதிகள்.

சுருக்கமான பெயர்.

**1.** இந்த ஆக்டை, பூஸ்திதிகளிலுள்ள நிலத்தைப் பற்றிய சென்னப்பட்டணம் 1908-ம் வருஷத்து ஆக்ட் என்று சொல்லலாம்.

வழக்கத்தொடங்குவது.

இது 1908-ம் வருஷம் ஜூலை மீ முதல் தேதி செலாவணி யாகத் தொடங்கவேண்டும்:

வியாபிக்குமிடம்.

மேலும், இது—இராஜதானிப்பட்டணமும், மலபார் டிஸ்ட்ரிக்டும், நீலகிரி டிஸ்ட்ரிக்டிலே தென்கிழக்கு வைனாட் என்று சொல்லப்படும் பாகமும் நீங்கலாக, சென்னப்பட்டணம் ப்ரெஸிடென்ஸி முழுமைக்கும் வியாபிக்கும்.

ரத்து.

**2.** 1865-ம் வருஷத்திய சென்னப்பட்டணத்து 8-வது ஆக்டும், 1871-ம் வருஷத்திய சென்னப்பட்டணத்து 2-வது ஆக்டும், 1890-ம் வருஷத்திய சென்னப்பட்டணத்து 3-வது ஆக்ட், 7-வது பிரிவும் இதனால் ரத்து செய்யப்படுகின்றன.

அர்த்தம்.

**3.** 'இந்த ஆக்டிலே, சங்கதியினாலாவது முன்பின் தொடர்ச்சியினாலாவது விரோதமொன்றுமில்லாவிட்டால்,

"விவசாயம்."

(1) "விவசாயம்" என்பதன் இலக்கண வேறுபாடுகளும் அதே இனமான சொற்றொடர்களுமுட்பட, அதிலே தோட்டம் வைத்துப் பயிர் செய்வதும் அடங்கும்.

கலெக்டர்.

(1-A) 'கலெக்டர்' என்பது ரெவினியு டிவிஷன் ஆபீஸரென்று அர்த்தமாகும்; மேலும், அதில் இந்த ஆக்டின்படி கலெக்டருக்குரிய அலுவல்களில் எதையாகிலும் செய்யும்படியாக பெயரைக் குறிப்பிட்டோ உத்தியோகத்தை

அனுசரித்தோ பிரதேச கவர்ன்மென்டாரால் நியமிக்கப்படும் யாதொரு நபரென்பதும் அடங்கும்;

### பூஸ்திதி.

(2) "பூஸ்திதி" என்பது—

(a) நிலையாக பைசலேற்பாடு செய்யப்பட்ட யாதொரு பூஸ்திதியென்றாவது அங்காமியாகப் பைசலேற்பாடு செய்யப்பட்ட யாதொரு ஜமீன்தாரியென்றாவது அர்த்தமாகும்;

(b) நிலையாகப் பைசலேற்பாடு செய்யப்பட்ட அந்த பூஸ்திதியைச் சேர்ந்ததாகவோ அங்காமியாகப் பைசலேற்பாடு செய்யப்பட்ட அந்த ஜமீன்தாரிடைச் சேர்ந்ததாகவோ கலெக்டராபீஸில் பிரத்தியேகமாய் ரெஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கிற யாதொரு பாகமென்று அர்த்தமாகும்;

(c) பைசலாகாத யாதொரு பாளையம் அல்லது ஜாகிர் என்று அர்த்தமாகும்;

### குறிப்புகள்.

ஜாகீர் என்பது என்ன?

ராமலிங்க முதலி vs. ராமசாமி அய்யர் 1929 A. I. R. Mad. 29 என்னும் கேஸில் ஜாகீர் என்பது என்ன என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது அது ஒரு இனும் அல்ல. இனும என்பது ஒரு கிராமத்தின் அல்லது அதன் பாகத்தின் ரெவின்யூ அல்லது வருமானத்தை அடியோடே தள்ளிவிட்டதின் பேரில் இனும்தார் அதை பூர்ணமாக அனுபவித்துக்கொண்டு வரும் நிலமாகும். ஜாகீர் என்பது யாதொரு கிராமத்தினுடைய வருமானத்தை ஜமீன்தார் அல்லது அரசன் மற்றொருவருக்கு கொடுத்து விடுவது. அப்படி பெற்றவர் தனது ஜீவிய பரியந்தமாவது அல்லது சில தலைமுறைகளுக்காவது அனுபவிப்பவராவர். அது கவர்ன்மெண்ட் ஊழியத்திற்காகவோ அல்

லது சன்மானமாகவோ கொடுக்கப்பட்ட ரிவின்யூ தொகையாகும். ஆனால் எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டில் அது சாஸ்வதமாக வைசலேற் பட்ட ஒரு ஜமீனைப்போலவே கருதப்பட்டு அந்த அர்த்தத்தில் உப யோகிக்கப்பட்டிருக்கிறது.

(d) யாதொரு கிராமம் இனமாகக் கொடுக்கப் பட்ட பிறகு—

(i) அதை இனமாகப் பெற்றவர்களுக்குள்ளாவது, அதை இனமாகப் பெற்றவர் அல்லது பெற்றவர் களிடமிருந்து உரிமை வழியாய் பாத்தியதை யடையும் நபர்களுக்குள்ளாவது அது பாகப்பிரி வினையாயிருந்த போதிலும் பாதகமில்லாமலே, அல்லது

(ii) அந்த கிராமத்தின் ஒரு பாகத்தை கவர்ன்மெண்டார் மீண்டும் எடுத்துக்கொண்டிருந்தபோதிலும் பாதக மில்லாமலே,

இனமாக ப்ரிடிஷ் கவர்ன்மெண்டாரால் கொடுக்கப் பட்ட அல்லது ஊர்ஜிதம் செய்யப்பட்ட அல் லது அங்கீகரிக்கப்பட்ட யாதொரு இனம் கிராம மென்று அர்த்தமாகும்

விவரணம்.—யாதொரு இனம் கிராமத்தின் ஒரு பாகத்தை கவர்ன்மெண்டார் மீண்டும் எடுத்துக்கொண்டிருந்து இன மாக மறுபடியும் கொடுத்திருந்தால், அந்த பாகமானது அந்தப்படி மறுபடியும் கொடுக்கப்பட்ட தேதியிலிருந்து இந்த உட்பகுதியின் காரியங்களுக்காக, இனம் கிராமத் தின் பாகமாயிருப்பதாகக் கருதப்படும்;

(e) மேலே (a), (b), (c) அடையாளமிட்ட பகுதி களிற்கண்ட பூஸ்திதிகளில் யாதொன்றைச் சேர்ந்த ஒன்று

அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட கிராமங்களடங்கியதாய், சாசுவதமான கீழ்க்குத்தகையாகக் கைப்பற்றிலிருக்கும் யாதொரு பாகமென்று அர்த்தமாகும்.

கைப்பற்றும் நிலம்.

(3) "கைப்பற்று நிலம்" என்பது - ஒரே ஒரு கிராமத்தில் ஒரே ஒரு பட்டாவின்படியாவது ஒப்பந்தத்தின்படியாவது கைப்பற்றிலிருந்துவரும் நிலத்துண்டு அல்லது துண்டுகளென்று அர்த்தமாகும்.

ஆனால், நிலத்துக்குடையவரும் ரயத்தும் எழுத்து மூலமாய்ச் சம்மதிக்கிற பட்சத்திலே, மேலே அர்த்தங்கூறப்பட்டபடிக்குள்ள ஒரு கைப்பற்று நிலத்தைச் சேர்ந்த யாதொரு பாகத்தைப் பிரத்தியேகமான கைப்பற்று நிலமாகப் பாவிக்கவேண்டும்.

சீர்திருத்தம்.

(4) "சீர்திருத்தம்" என்பது ரயத்தின் கைப்பற்று நிலத்துக்குச் சம்பந்தமாய் உபயோகப்படும்போது, அந்த கைப்பற்று நிலத்தின் மதிப்பை விசேஷமாய் அதிகப்படுத்துவதும், அதற்குத்தகுதியுடையதாயும் அதன் லட்சணத்துக்குப் பொருத்தமுடையதாயுமிருப்பதும், கைப்பற்று நிலத்தின் மேலே செய்யப்படாமற்போனபோதிலும் நேரே அதனுடைய பிரயோசனத்துக்காகச் செய்யப்பட்டோ அல்லது செய்தான பிறகு நேரே அதற்குப் பிரயோசனப்படும் படியாய் ஏற்படுத்தப்பட்டோ இருப்பதுமாகிய யாதொரு வேலையென்று அர்த்தமாகும்; அல்லாமலும், மேலே சொன்ன நிபந்தனைகளுக்குட்பட்டு அதிலே,—

(a) விவசாய சம்பந்தமான காரியங்களுக்காகத் தண்ணீரைச் சேர்த்துவைப்பதற்காகவோ சர்ப்பரா செய்

வதற்காகவோ பங்கிடு செய்வதற்காகவோ வேண்டிய ஏரிகளையும் கிணறுகளையும், தண்ணீர்க்கால்வாய்களையும், இதர கட்டுவேலைகளையும் ஏற்படுத்துவதும்,

(b) நிலத்திலிருந்து தண்ணீரை வடிப்பதற்கான, அல்லது வெள்ளத்தினின்றோ நிலம் தண்ணீரினால் கரைந்துபோவது அல்லது தண்ணீரினால் நேரிடக்கூடிய இதர நஷ்டத்தினின்றோ நிலத்தைப் பாதுகாப்பதற்கான கட்டுவேலைகளை ஏற்படுத்துவதும்,

(c) நிலத்தைக் கரம்புதிருத்துவது - பரிஷ்கரிப்பது-நிலத்துக்கு அடைப்படைத்துவைப்பது சமமாக்குவது அல்லது வரம்பு ஏற்படுத்துவதும், நீர்ப்பாய்ச்சலுக்காக நிலத்தைத்தயார் செய்வதும்,

(d) கைப்பற்று நிலத்தைச் சௌகரியப்படும்படியாகவாவது பிரயோசனப்படும்படியாகவாவது உபயோகித்து வருவதற்காகிலும் அனுபோகத்தில் வைத்திருப்பதற்காகிலும் வேண்டியபடி, அந்தக்கைப்பற்று நிலத்தின்மேலோ அல்லது கிராமநத்தம் தவிர வேறே இடத்திலே அந்த நிலத்துக்கு மிகவும் சமீபத்திலோ கட்டிடங்கட்டுவதும், ரயத்துக்காகவும் அவருடைய குடும்பத்துக்காகவும் வேலைக்காரர்களுக்காகவும் குடியிருப்பு வீடுகளைக் கட்டுவதும்,

(e) மேலேகண்ட வேலைகளில் யாதொன்றைப் புதுப்பிப்பது அல்லது மீண்டும் ஏற்படுத்துவதும் அல்லது அதில் திருத்தங்கள் செய்வதும் அல்லது அதைப் பெரிதாக்குவதும்,

(f) பழச்செடிகளையும் பழத்தோட்டங்களையும் வைத்துப் பயிராக்குவதும் அடங்கும்; ஆனால், அதிலே-நிலத்துக்குடையவருடைய வேறே யாதொரு நிலத்தைப் பிரதிகூலமாய்ப் பாதிக்கிற யாதொரு வேலையானது நிலத்துக்குடையவருடைய எழுத்து மூலமான சம்மதத்தோடு செய்யப்பட்டிருந்தாலன்றி மற்றப்படி, அடங்காது

குறிப்புகள்.

சீர்திருத்தம் என்பதில் ஒரு ஏரி அல்லது குளத்தை ரிபேர் செய்வது அடங்காது என்றும் அதனால் கைப்பற்று நிலத்திற்கு அதிக மதிப்பு ஏற்படாது என்றும் 6 Mad. 311 என்றும் கேஸில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. அதே மாதிரியாக ஒரு தென்னந்தோப்புக்கு ஜலம் இறைப்பதற்காக சிறிய குழிகள் வெட்டுவதும் ஒரு சீர்திருத்தமாகாது என்றும் சீர்திருத்தத்தினால் ஒரு நிலத்தின் மதிப்பு அதிகமாகவேணும் என்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 51 M. L. J. 880. இன்னும் 13, 15 முதல் 18 முதலிய பிரிவுகளின் குறிப்புகளைப் பார்க்க. தென்னமரங்களை நடுவதும் ஒரு சீர்திருத்தமாகாது என்று ஷை 51 M. L. J. 880 என்னும் கேஸில் தீர்மானிக்கப்பட்டது.

'நிலத்துக்குடையவர்'.

(5) "நிலத்துக்குடையவர்" என்பது - ஒரு பூஸ்திதிக்கு அல்லது அதன் பாகத்துக்குச் சொந்தக்காரரென்று அர்த்தமாவது மாத்திரமேயல்லாமல், அதிலே சொந்தக்காரரிடத்திலிருந்தாவது அவருக்கு முந்தி பாத்தியதையடைந்தவரிடத்திலிருந்தாவது யாதொரு ட்ரான்ஸ்பர் பெற்றிருப்பதை யனுசரித்தாகிலும், தகுந்த அதிகாரமுள்ள யாதொரு கோர்ட்டாருடைய எந்த உத்தரவை யனுசரித்தாகிலும், சட்டத்திலுள்ள யாதொரு நிபந்தனையை யனுசரித்தாகிலும்,

அந்த பூஸ்திதி முழுவதின் அல்லது அதன் யாதொரு பாகத்தின் குத்தகைத் தொகைகளை வசூல் செய்யச்சுதந்தரமுள்ள யாதொரு நபரென்பதும் அடங்கும்.

இரண்டு அல்லது பல நபர்களில் இந்த ஆக்டிற்கண்ட சகல காரியங்களுக்குமாகவாவது அவைகளில் எதற்காகவாவது நிலத்துக்குடையவர் யார் என்பது விஷயமாகவாகிலும், கூட்டாகவுள்ள இரண்டு அல்லது பல நிலத்துக்குடையவர்களில் யார் அப்படிப்பட்ட நிலத்துக்குடையவராகப் பிரவர்த்திக்கவும் அமுல் நடத்தப்படவும் பாத்தியதையுடையவராவாரென்பதன் விஷயமாகவாகிலும் விவாதம் நேரிட்டால், அப்படிப்பட்ட காரியங்களுக்காக நிலத்துக்குடையவராயிருப்பதாக எண்ணப்படவேண்டிய நபர் - தகுந்த அதிகாரமுள்ள யாதொரு ஸிவில் கோர்ட்டாருடைய யாதொரு டிக்ரி அல்லது உத்தரவுக்குட்பட்டு, கலெக்டரானவர் இது விஷயமாய்ப் பிரதேச கவர்ன்மெண்டாரால் ஏற்படுத்தப்படும் விதிகளின்படி யாரை அப்படிப்பட்ட நிலத்துக்குடையவராய் அங்கீகரிக்கக்கூடுமோ அல்லது நியமிக்கக்கூடுமோ அந்த நபராகும்.

## குறிப்புகள்.

நிலத்துக்குடையவர் என்பதற்கு நிலஸ்வாந்தாரர் என்று சொல்வதுமுண்டு. இந்த உட்பிரிவானது பொதுவாக உள்ளது. ஆனால் இதன் கீழ் எவரெவர்கள் நிலத்துக்குடையவர் என்பதன் விஷயமாக பல வியாஜ்ஜியங்கள் கிளம்பின. அவைகளின் சாராம்சம் அடியில் காணப்பட்டிருக்கிறது.

(1) ஒரு ஜமீன் அல்லது ஆஸ்தியை எழுத்து மூலமாக பாராதீனம் பெற்றவர் நிலத்துக்குடையவர் 27 M. L. J. 490.

(2) ஒரு பூஸ்திதியை சுவாதீன அடமானம் கொண்டவர் நிலத்துக்குடையவராவார். 1 L. W. 1004.

(3) ஒரு பூஸ்திதியை இஜாரா பெற்றவர்களும் நிலத்துக் குடையவர்கள் தான் 1930 Mad. 61. அவரிடமிருந்து உள்குத்தகை பெற்றவரும் அப்படியே 1 B. R. 39.

(4) கோர்ட்டினால் நியமிக்கப்பட்ட ஒரு ரிஸீவர் நிலத்துக் குடையவர் தான் 39 M. L. J. 711. அதே மாதிரியாக தான் அபி ஷிபல் ரிஸீவரும்.

(5) ஒரு ஜமீனில் பாத்தியதை உள்ளவர்கள் யாவரும் ஒன்று சேர்ந்து நியமித்திருக்கும் மானேஜரும் ஒரு நிலத்துக்குடைய வராக கருதப்படுவார் 10 கல்கத்தா வீக்லி நோட்ஸ் 437.

(6) நிலத்தில் வருஷாந்திர மேல் வாரத்தில் ஒரு பாக த்தை சாஸ்வதமாக விக்கிரயம் பெற்றவரும் நிலத்துக்குடையவர் 38 Mad 1155.

(7) ஒரு ஜமீன்தார் பர்மனெண்ட் செட்டில் மெண்டுக்குப் பிறகு சாஸ்வத கட்டுபடியாக ஒரு கிராமத்தினுடைய பாகத்தில இரண்டு வாரங்களையும் ஒருவருக்கு கொடுத்து விட்டிருந்தால் அப் படி அதை இனமாக பெற்றவரும் நிலதத்துக்குடையவர் தான் 43 M. L. J. 229.

இந்த உட்பிரிவில் "பராதீனம்" என்பதில், ஒரு பாகத்தி னுடைய ரெண்ட்டை வசூல் செய்யும் பாத்தியதை மாத்திரம் பரா தீனமாக செய்யப்படுவது அடங்காது என்று 1925 A.I.R. Madras 1146 என்னும் கேஸில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. அதாவது, பராதீனம் செய்யப்பட்டது ஆஸ்தியின் மொத்த உரிமையாக இருக்க வேண்டும்.

(6) (விட்டுவிடப்பட்டது).

(7) (விட்டுவிடப்பட்டது).

"செலுத்த" முதலியவை.

(8) "செலுத்த," "செலுத்தத்தக்க," "செலுத்து தல்" என்பவை - குத்தகைத்தொகை சம்பந்தமாய் உப யோகப்படும் போது, அவைகளிலே - "ஒப்பித்துவிட,"

"ஒப்பித்துவிடத்தக்க," "ஒப்பித்துவிடுதல்" என்பவை களும் அடங்கும்.

"நிர்ணயிக்கப்பட்ட".

(9) "நிர்ணயிக்கப்பட்ட" என்பது-ஸர்க்கார் கெஜெட்டிலே விளம்பர மூலமாகப் பிரதேச கவர்ன்மெண்டாரால் அப்போதைக்கப்போது நிர்ணயிக்கப்பட்ட என்று அர்த்தமாகும்.

(10) 'சொந்த (ப்ரைவேட்) நிலம்' என்பது—

(a) (2) அடையாளமிட்ட பகுதியைச் சேர்ந்த (a) (b), (c), அல்லது (e) அடையாளமிட்ட உட்பகுதிகளின் தாற்பரியப்படியுள்ள யாதொரு பூஸ்திதியின் விஷயத்திலே, நிலத்துக்குடையவரைச் சேர்ந்ததாய் கம்பத்தம் - காஸ் - ஸீர் அல்லது பண்ணை என்பது போன்ற எந்தப் பெயராகிலும் வழங்குகிற டொமெய்ன்) நிலத்துக்குடையவரின் சொந்த அனுபவத்திலுள்ள நிலம் அல்லது (ஹோம் பார்ம்) வீட்டைச் சேர்ந்த விவசாய நிலம் என்று அர்த்தமாகும்; மேலும் அதில், நிலத்துக்குடையவரின் சொந்த கால்நடைகளைக் கொண்டோ வாடகைக்கு அமர்த்திக்கொண்டகால்நடைகளைக்கொண்டோ அவராலேயேயாவது அவருடைய சொந்த வேலைக்காரர்களாலாவது கூலியாள்களாலாவது இந்த ஆக்ட் வழங்கத் தொடங்குவதற்கு அடுத்துமுந்திய பன்னிரண்டு வருஷ காலத்துக்குத் தொடர்ச்சியாய்ச் சொந்த நிலமாக சாகுபடி செய்யப்பட்டுவந்திருப்பதாய் எண்பிக்கப்படும் சகல நிலமென்பதும் அடங்கும்; அல்லாமலும்,

(b) (2) குறிப்பிட்ட பகுதியைச் சேர்ந்த (d) அடையாளமிட்ட உட்பகுதியின் தாத்பரியப்படியுள்ள யாதொரு பூஸ்திதியின் விஷயத்திலே,—

(i) நிலத்துக்குடையவரைச் சேர்ந்ததாய், கம்பத்தம் - காஸ் - ஸீர் - அல்லது பண்ணை என்பது போன்ற எந்தப் பெயராகிலும் வழங்குகிற (டொமெய்ன்) நிலத்துக்குடையவரின் சொந்த அநுபவத்திலுள்ள நிலம் அல்லது (ஹோம் பார்ம்) வீட்டைச் சேர்ந்த விவசாய நிலம் என்று அர்த்தமாகும்; அல்லது,

(ii) நிலத்துக்குடையவரின் சொந்த கால்நடைகளைக் கொண்டோ வாடகைக்கு அமர்த்திக்கொண்ட கால்நடைகளைக்கொண்டோ அவராலேயாவது அவருடைய சொந்த வேலைக்காரர்களாலாவது கூலியாள்களாலாவது 1908-ம் வருஷம் ஜூலை 1-ந் தேதிக்கு அடுத்து முந்திய பன்னிரண்டு வருஷ காலத்துக்குத் தொடர்ச்சியாய் சொந்த நிலமாக சாகுபடி செய்யப்பட்டுவந்திருப்பதாய் ஸ்தாபிக்கப்படும் நிலமென்று அர்த்தமாகும்; ஆனால், அந்தக் காலத்திலிருந்து நிலத்துக்குடையவர் குடிவார பாத்தியதையைத் தம்மிடத்திலேயே வைத்துக்கொண்டிருக்கவேண்டியது மல்லாமல், அந்த நிலத்தை ரயத்து நிலமாக மாற்றியிருக்கவுங் கூடாது; அல்லது,

(iii) நிலத்துக்குடையவரின் சொந்த கால்நடைகளைக் கொண்டோ வாடகைக்கு அமர்த்திக்கொண்ட கால்நடைகளைக்கொண்டோ, அவராலேயாவது அவருடைய சொந்த வேலைக்காரர்களாலாவது

கூலியாள்களாலாவது 1933-ம் வருஷம் நவம்பர்மீ முதல் தேதிக்கு அடுத்து முந்திய பன்னிரண்டு வருஷ காலத்துக்குத் தொடர்ச்சியாய் சாகுபடி செய்யப்பட்டு வந்திருப்பதாய் எண்பிக்கப்படும் நிலமென்று அர்த்தமாகும்; ஆனால், அந்தக் காலத்திலிருந்து நிலத்துக்குடையவர் குடிவார பாத்தியதையைத் தம்மிடத்திலேயே வைத்துக் கொண்டிருக்கவேண்டியது மல்லாமல், ஷை நிலத்தை ரயத்தி நிலமாக மாற்றியிருக்கவும் கூடாது; அல்லது,

(iv) எந்த நிலத்திலுள்ள குடிவார பாத்தியதை முழுவதையும் நிலத்துக்குடையவர், மேல்வார பாத்தியதையைச் சொந்தமாக வைத்திராமல் குடிவார பாத்தியதையைச் சொந்தமாகவுடைய நபரிடமிருந்து பெறுமான ஐவேஜுக்காக 1933-ம் வருஷம் நவம்பர்மீ முதல் தேதிக்குமுன் அடைந்திருக்கிறாரோ அந்த நிலமென்று அர்த்தமாகும்; ஆனால், அந்தக் காலத்திலிருந்து நிலத்துக்குடையவர் குடிவார பாத்தியதையைத் தம்மிடத்திலேயே வைத்துக்கொண்டிருக்கவேண்டியது மல்லாமல், ஷை நிலத்தை ரயத்தி நிலமாக மாற்றியிருக்கவும் கூடாது; மேலும், குத்தகைத்தொகை பாக்கிக்காக நடத்தப்படும் யாதொரு விற்பனையில் குடிவார பாத்தியதை அடையப்பட்டிருக்கும் விஷயத்திலே, நிலத்துக்குடையவரின் சொந்த கால்நடைகளைக்கொண்டோ வாடகைக்கு அமர்த்திக் கொண்ட கால்நடைகளைக்கொண்டோ அவராலேயாவது அவருடைய சொந்த வேலைக்காரர்களாலா

வது கூலியாள்களாலாவது ஷெடி நிலத்தை அடைந்த பிறகும் பூஸ்திதிகளிலுள்ள நிலத்தைப்பற்றிய சென்னப்பட்டணம் 1934-ம் வருஷத்து (இரண்டாவது திருத்த) ஆக்ட் வழங்கத்தொடங்குவதற்கு முன்பும் பன்னிரண்டு வருஷ காலத்துக்குத் தொடர்ச்சியாய் ஷெடி நிலம் சாகுபடி செய்யப்பட்டு வந்திருப்பதாய் எண்பிக்கப்பட்டாலன்றி, மற்றப்படி ஷெடி நிலம் சொந்த நிலமாகக் கருதப்படமாட்டாது.

குறிப்புகள்.

இந்த உட்பிரிவானது 1935-ம் வருஷத்தில் நடந்தேறின இனம்தார் சட்டத்தினல் திருத்தி அமைக்கப்பட்டிருக்கிறது. இதன் தாத்பரியம் என்னவென்றால் இனம்தார்களில் பலர் தமது சொந்த பணத்தினல் இனம் கிராமங்களில் குடிவார பாத்தியதையும் மேல்வார பாத்தியதையையும் பெற்றிருக்கிறபடியால் அவைகளை ருசு செய்து சொந்தமென்று ஸ்தாபித்துக்கொள்வதற்கு இடந்தருவதாகும். நிலம் அனுபவ விஷயமாய் மிகவும் ஸ்பஷ்டமான அம்சங்கள் காணப்பட்டிருக்கின்றன.

'குத்தகைத் தொகை.'

**(11)** 'குத்தகைத் தொகை' என்பது — நிலத்தை விவசாய காரியத்தின் நிமித்தம் உபயோகித்துக்கொள்வதற்காவாவது அனுபோகத்தில் வைத்துக்கொண்டிருப்பதற்காவது யாதொரு ரயத்து நிலத்துக்குடையவருக்குப் பணமாகவோ தானிய ரூபமாகவோ அல்லது இரண்டுமாகவோ சட்டப்படி செலுத்தத்தக்கது எதுவாயிருந்த போதிலும் அதுவென்று அர்த்தமாகும்; மேலும், அதில் நிலச்சாகுபடிக்காக நிலத்துக்குடையவரால் சர்ப்பரா செய்யப்படும் அல்லது அவருடைய அனுமதியின்றி எடுத்துக்கொள்ளப்படும் ஜலத்தின் நிமித்தம் ஏற்பட்டுள்ள வரியானது அந்த நிலத்தை

உபயோகித்துக்கொள்வதற்காகவோ அனுபோகத்தில் வைத்துக்கொள்வதற்காகவோ ஏற்பட்டுள்ள வரியோடு ஒன்றாய்ச் சேர்க்கப்படாதிருக்கிற விஷயத்திலே, மேலேகண்டபடி சர்ப்பரா செய்யப்பட்ட அல்லது எடுத்துக்கொள்ளப்பட்ட ஜலத்துக்காக சட்டப்படி செலுத்தத்தக்கது எதுவாயிருந்தபோதிலும் அதுவும் அடங்கும்.

5-வது, 27-வது, 28-வது பிரிவுகள், 50 முதல் 72 வரையிலுள்ள பிரிவுகள், 77 முதல் 131 வரையிலுள்ள பிரிவுகள், 135-வது, 136-வது பிரிவுகள், 145 முதல் 148 வரையிலுள்ள பிரிவுகள், 165-வது, 210-வது 211-வது பிரிவுகள் ஆகிய இந்தப் பிரிவுகளின் காரியங்களுக்காகவும் ஷெட்யூலின் காரியத்துக்காகவும் குத்தகைத் தொகை என்பதிலே,—

(a) சட்டப்படியாவது சட்டத்தைப்போல் செளகரியமாய்க்கொண்டிருக்கும் மாமூல்படியாவது சேரவேண்டியதாயிருக்கும் குத்தகைத் தொகையுடன்கூட ஒரு ரயத்து ரயத்து என்னும் முறைமையில் நிலத்துக்குடையவருக்குச் சட்டப்படி செலுத்தத்தக்க யாதொரு பிரதேச வரி, ஸெஸ் (இறை), கட்டணம் அல்லது தொகை என்பதும், குத்தகைத் தொகையாயிருந்தால் எப்படியோ அப்படியே அந்தந்த காலத்தில் செளவணியாய்க்கொண்டிருக்கும் யாதொரு சட்டதிட்டப்படி வசூலிக்கத்தக்க பணம் என்பதும்,

(b) (கால்நடைகளை) மேய்ப்பதற்காகச் செலுத்தும் கட்டணம், பாசி குத்தகைத் தொகை ஆகிய இவைகள் காரணமாக யாதொரு ரயத்து ரயத்து என்னும் முறைமையில் நிலத்துக்குடையவருக்குச் சட்டப்படி செலுத்தத்தக்க தொகைகள் என்பதுங்கூட

அடங்கும்;

## குறிப்புகள்.

ஸ்வாமிபோகம் என்பதும் ரெண்ட்டாகும். ஒரு ஸெஸ் என்று சொல்லப்பட முடியாது 39 M. L. J. 139.

இந்த உட்பிரிவில் ரெண்ட் என்பது என்ன என்று விவரிக்கப் பட்டிருக்கிறது. இது 1934-ம் வருஷத்திய 8-வது சட்டத்தினல் திருத்தி அமைக்கப்பட்டு "ஒரு ரயத்தினல்" என்னும் பதங்களும் 'சட்டப்பிரகாரம்' என்னும் பதங்களும் நுழைக்கப்பட்டன. நிலத்துக் குடையவருடைய உத்திரவில்லாமல் நீர்ப்பாய்ச்சிக்கொண்டபோதிலும் அதற்கு ரெண்ட் உண்டு என்று தெளிவாக்கப்பட்டது.

சில தொகைகள் இந்த சட்டத்தின் கீழ் ரெண்ட் என்று கவனிக் கப்படாதென்று தீர்மானங்கள் ஏற்பட்டுள்ளன. ரெண்ட் தொகைகள் ஒரு ரிவின்யூ கோர்ட்டு மூலமாக அல்லாமல் மற்றபடி வசூலிக்கப் படுவதற்கில்லை. ரெண்ட் அல்லாத தொகைகள் சிவில் கோர்ட்டு களில் தான் வசூலிக்கப்படவேண்டும்.

அடியில் கண்ட தொகைகள் ரெண்ட் தொகைகள் அல்ல வென்று தீர்மானங்கள் உள்ளன.

மரவரி அதாவது மரப்பட்டாவுக்காக செலுத்தப்பட்ட வரி ரெண்ட் அல்லவென்று 1 L. W. 81 என்னும் கேஸில் தீர்மான மாகியுள்ளது. மேய்ச்சக்காலில் மாடுகள் மேய்வதற்காக வசூலிக்கப் படும் தொகை ரெண்ட் அல்ல. 38 Mad. 738. ஜோடியும் ரெண்ட் அல்ல. 11 L. W. 523. ஜமீன்தார் குத்தகைக்கு நிலம் விட்டதில் அவருக்கு சேரவேண்டிய பாக்கி ரெண்டாகாது. 13 W. R. 307. வீடுகட்டிக்கொள்வதற்காக ஜமீன்தாரிடமிருந்து நிலம் பெற்று அதற்கு பிரதிபலனுக தொகை கொடுக்கவேண்டியிருந்தால் அது ரெண்ட டாகாது 59 M. L. J. 74. ஒரு இனும்தார் செலுத்தவேண்டிய கட்டுபடி பாக்கியானது ரெண்ட் என்று கருதப்படாது 1911 M. W. N. 233. ஜமீன் நிலங்களில் வீடுகட்டுவதற்காக ஏற்பாடு செய்து கொண்ட நபர்கள் 'ரயத்து'களாகமாட்டார்கள். அவர்கள் ஏதாவது பணம் செலுத்தவேண்டியிருந்தால் அதுவும் ரெண்ட்டாகாது. அந்த நடவடிக்கைகளைப்பற்றி ஏதாவது தகரார் ஏற்படும்பக்ஷத்தில் அவை

களை தீர்த்துக்கொள்வதற்கு ஸிவில் கோர்ட்டுகளே சரியான ஸ்தலமாகும் 59 M. L. J. 74.

இந்தப் பிரிவில் ஸெஸ் (இறை) தொகை என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஸெஸ் என்பது நிலத்துக்காக உள்ள ரெண்ட் அல்லாமல் நிலத்துக்குடையவர் செய்யும் நன்மைகளில் சிலவற்றிற்காக வசூலிக்கக்கூடிய தொகையாகும். சாதாரணமாய் இது ஒரு ரூபாய்க்கு இவ்வளவு தொகை என்று வசூலிக்கப்பட்டுவரும். இந்த செஸ் தொகை மாத்திரம் வசூலிப்பதற்காக செய்யும் தாவா ஒரு ரெண்ட் தாவா எனப்படும். ஸெஸ் தொகைகள் நியாயமாய் வசூலிக்கக்கூடியதாக இருக்கவேண்டும். அது பல வருஷங்களாக செலுத்தப்பட்டுவந்தது என்பதினலேயே நியாயமானதாகவும் சட்ட சம்மதமானதாகவும் ஏற்பட்டுவிடாது. எதற்காக அது வசூலிக்கப்பட்டு வருகிறதோ அதன் காரணமும் இருந்து கொண்டே இருக்கவேண்டும். பொதுவில் யாதொரு செஸ் பல வருஷங்களாக செலுத்தப்பட்டுவந்தது என்பதினல் அதைச் செலுத்துவதாக ஒரு காண்ட்ராக்ட் இருந்தது என்று அனுமானிக்கக்கூடும் 42 Mad. 703, 42 Mad. 197. இந்த இரண்டு கேஸுகளும் இதைப்பற்றி கூறுகின்றன.

கங்காணம் என்பது வாரஏற்பாடு உள்ள இடங்களில் காவல் கூலி எனப்படும். அது ஒரு நியாயமான செஸ் ஆகும் என்று 40 Mad. 650 என்னும் கேஸில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. ஆனல் ஒரு கைப்பற்று நிலத்தின் விஷயத்தில் பில்மக்தாவாக கிஷ்கர்தைதயான குத்தகை நெல் இவ்வளவு என்று ஏற்பட்டிருக்கும் பக்ஷத்தில் கங்காணம் வசூலிப்பதற்கில்லை என்று ஷை கேஸிலேயே தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

கோர்ட்டுகளில் அங்கீகாரமான செஸ்ஸுகள் (இறைகள்).

ஏரிகள் சரியான ஸ்திதியில் இருப்பதற்காக குளவெட்டு என்னும் ஒரு வரியும் குடிவாரம் உரை, மேல் வாரம் உரை, களமேட்டுக்காக குத்தகை கிராம ஊழியர்கள் வேலைக்காரர்கள் இவர்களுக்காக ஸ்வதந்திரம் என்னும் வரி, இத்தகைய வரிகள் வசூல் செய்வதற்கு இடம் கொடுக்கப்பட்டிருக்கின்றன 17 Mad. 73. 23 Mad. 571. 27 Mad. 332 இவைகளை பார்க்கவும்.

42 Mad 702 என்னும் கேஸில் சுதந்திரம் வாமடை என்னும் ஒரு வரியும் கைக்கோல்கட்டு என்னும் ஒரு வரியும் ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கின்றன.

39 Mad. 84 என்னும் கேஸில் சாதல்வாரி (அதாவது பேபர் ரீது வகையார செலவு)யும் ரசும் (அதாவது கர்ணங்களுக்கு சம்பளம்)மும் அங்கீகரிக்கப்பட்டுள்ளன.

சமுதாயம் நிலங்களுக்காக கங்காணம் அல்லது குளமெட்டு இறைகள் கொடுக்கவேண்டிய கட்டாயம் கிடையாது 29 M. L. J. 46.

அங்கீகரிக்கப்படாத செஸ்ஸுகள்.

அடியில் கண்ட செஸ் தீர்வைகள் கோர்ட்டுகளால் அங்கீகரிக்கப்படவில்லை.

திருப்பணியும் ஈஸ்வரன் கோவில் மஹிமையும் விதிக்கப்படுவதற்கில்லை யென்று 42 Mad. 197 என்னும் கேஸிலும் 42 Mad. 702 என்னும் கேஸிலும் தீர்மானமாயுள்ளது.

சித்து நோட்டம் (அதாவது செலுத்தப்படும் நாணயங்களை பரிசீலனை செய்வது - இதும் அங்கீகரிக்கப்படவில்லை 25 M. L. J. 205.

கிராம பிச்சை - இதுவும் கோர்ட்டில் அங்கீகரிக்கப்படவில்லை 30 I. C. 166

கட்டளை ஊசி, சொகசோவி, அய்யனார் திருப்பணி இவைகளுக்காக விதிக்கப்பட்ட செஸ்ஸுகளும் அங்கீகரிக்கப்படவில்லை. 42 Mad. 197.

புரோஹித செஸ்ஸும் அவ்வாறே-18 M. L. J. கேஸுகளின் குறிப்புகளைப் பார்க்க.

அநேக கேஸுகளில் பஞ்சை நிலங்களில் ஒரு ரயத்து தன் சொந்த செலவில் கிணறுகள் முதலியவைகளை வெட்டி அதனால் நீர்ப்பாய்ச்சிக்கொள்ளும் பக்ஷத்தில் அதற்கு நஞ்சை தீர்வை விதிப்பதற்கில்லை யென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. இது விஷயம் பின்னால் உள்ள பிரிவுகளில் கவனிக்கப்படும்.

'ரெவினியு புலம்.'

(12) "ரெவினியு புலம்" என்பது – நிஷ்கரிஷையான குத்தகைத்தொகை செலுத்தத்தக்கதாயிருக்கிற, அல்லது விவாதம் நேரிடும் விஷயத்திலே ரெவினியு புலமென்று கலெக்டரால் நிர்ணயிக்கப்படக்கூடிய யாதொரு நிலத்துண்டென்றாவது புலமென்றாவது ஸர்வே புலமென்றாவது அர்த்தமாகும்.

(13) (விட்டுவிடப்பட்டது.)

'ரெவினியு வருஷம்.

(14) "ரெவினியு வருஷம்" என்பது-ஜூன்மீ 30உ யோடு முடிவாகிற வருஷமென்று அர்த்தமாகும்.

'ரயத்து'.

(15) "ரயத்து" என்பது – ஒரு பூஸ்திதியிலுள்ள ரயத்து நிலத்துக்குச் சட்டப்படி செலுத்தவேண்டிய குத்தகைத் தொகையை நிலத்துக்குடையவருக்குச் செலுத்துவதாகத் திட்ட மேற்படுத்திக்கொண்டு அந்த நிலத்தை விவசாய காரியத்துக்காக வைத்துக்கொண்டிருக்கிற நபரென்று அர்த்தமாகும்.

விவரணம்.—தொடர்ச்சியாய் பன்னிரண்டு வருஷ காலத்திற்கு ரயத்தி நிலத்தை அனுபோகத்தில் வைத்திருந்த யாதொரு நபர் இந்த ஆக்டின் சகல காரியங்களுக்காகவும் ரயத்து என்று கருதப்படுவார்.

'குறிப்புகள்.

இந்த உட்பிரிவின் விவரணமானது 1934-ம் வருஷத்திய 8-வது சட்டத்தினால் புதிபதாக அமைக்கப்பட்டது. 12 வருஷங்கள்

என்பதில் ஒரு ரயத்து நிலத்தை தற்காலத்தில் சுவாதீனம் பெற்றிருப்பவரும் அவருடைய முன்னோர்களும் அனுபவித்து வந்ததும் அடங்கும் என்று அர்த்தம் கொள்ளப்பட்டிருக்கிறது.

சில நபர்கள் ரயத்துகள் என்று கவனிக்கப்படமுடியாதென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. அவர்கள் பின்வருமாறுள்ளனர்.

மேய்ச்சக்காலாக ஒரு நிலத்தை வைத்துக்கொண்டிருக்கும் நபரிடமிருந்து கீழ் குத்தகை பெற்றவர் ஒரு ரயத்து அல்ல. 38 Mad. 738.

ஒரு ஜமீன்தாரருக்கு நிஷ்களிவையான ஒரு தொகை குயிட்ரெண்டாக செலுத்திவரும் ஒரு கருமில்லா இனம்தார் ஒரு ரயத்து அல்ல 24 M. L. J. 376. அதே மாதிரியாகவே ஒரு ரயத்தின் கீழ்க் குத்தகை பெற்றவர்.

யாதொரு ரயத்தி நிலத்தை வருஷாந்தர குடிக்கூலி ஏற்பாட்டின் பேரில் வீடுகட்டுவதற்காக உபயோகப்படுத்திக்கொண்டுவரும் ஒரு நபர் ரயத்து அல்லவென்று 53 Mad. 367 என்னும் கேஸில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

"ரயத்தி நிலம்."

(16) "ரயத்தி நிலம்" என்பது—யாதொரு பூஸ்திதியில் சொந்த நிலமல்லாத பயிரிடத்தக்க வேறே நிலமென்று அர்த்தமாகும்; ஆனால் அதிலே,—

(a) ஏரியின் அடித்தரை நிலங்களும் கரைகளும் ஜல வருவாய்கால்கள் கழிவு தண்ணீர்க்கால்கள் மிகுதி தண்ணீர்பாயும் கால்கள் அல்லது நீர்ப்பாய்ச்சல் கால்கள் ஆகிய இவைகளின் அடித்தரை நிலங்களும் கரைகளும்,

(b) கிராமத்தாருடைய பொதுவான உபயோகத்திற்காக யாதொரு பூஸ்திதியில் பிரத்தியேகமாய் விடப்பட்டிருக்கும் களத்துமேடுகளும் கால்நடைக்கொட்டில்களும் கிராம நத்தங்களும் இதர நிலங்களும்,

(c) இந்த ஆக்ட் ஜாரி செய்யப்பட்டதற்கு முன் கொடுக்கப்பட்டதாயிருந்தால் குத்தகைத்தொகை இல்லாமலோ அனுகூலமான குத்தகைத்தொகை வீதங்களின்படியோ, அல்லது ஷை தேதிக்குப் பிறகு கொடுக்கப்பட்டதாயிருந்தால் குத்தகைத்தொகை இல்லாமலோ ஊழியக்காணியாட்சி ஷரத்துபடி நிலங்கள் கொடுக்கப்பட்டிருந்து ஷை காணியாட்சி இருந்துகொண்டே இருக்கிறவரையில் அப்படிப் பட்ட நிலங்களும்;

அடங்கமாட்டா.

குறிப்புகள்.

இந்த உட்பிரிவில் (a) என்றும் பாகமானது 1934-ம் வருஷத்திய திருத்த சட்டமாகிய 8-வது சட்டத்தினால் திருத்தியமைக்கப்பட்டது.

ரயத்து நிலம் என்பதானது சாதாரண முறையில் பயிர் செய்யப்படுவதற்கு லாயக்காயிருக்கவேண்டும். ஆடு மாடுகள் மேய்வதற்கு மாத்திரம் லாயக்கான நிலமானது ரயத்து நிலமல்ல 31 M. L. J. 211.

ஜமீன் கிராமங்களில் பயிருக்கு லாயக்கான நிலஙகள் எல்லாம் ரயத்து நிலங்கள் என்றே சட்ட பூர்வமான அனுமானம் உண்டு என்று 35 I. C. 121 என்னும் கேஸில் தீர்மானமாகியுள்ளது.

ஒரு ரயத்து நிலமானது அகாலது பயிர் செய்வதற்கு லாயக்காயுள்ள நிலமானது சில வருஷங்களாக சாகுபடி செய்யப்படவில்லை என்னும் காரணத்தினாலேயே அது ரயத்து நிலமல்ல வென்று சொல்ல முடியாது 39 M. L. J. 277.

பிதாபுரம் சமஸ்தானத்தில் சேர்ந்த நிலமாயிருந்த சில பூமிகள் ஒரு நபருக்கு ஜமீன்தாரரால் ஜீவனும்சமாக கொடுக்கப்பட்டிருந்தது. அது சாகுபடி செய்யப்பட்டு வந்து 1913-ம் வருஷத்தில் ரிக்கார்டு ஆப் ரைட்ஸ், என்னும் பாத்தியதைகளை குறிக்கும் தஸ்தாவேஜு

ஏற்பட்ட காலத்தில் ரயத்து நிலம் என்று எழுதப்பட்டிருந்தது. பிறகு அதிலிருந்து கட்டிடமும் தரையோடு தரையாய் இடிக்கப்பட்டு அந்த இடத்திலும் சாகுபடி செய்யப்பட்டு வந்தது. இந்த சந்தர்ப்பத்தில் அது ஒரு ரயத்து நிலமா அல்லவா என்ற கேள்வி வந்ததில் ரயத்தி நிலம்தானென்று தீர்மானித்தனர் 1933 A.I.R. Mad 432.

"பயிரிடத்தக்க" என்றால் என்ன ?

இதன் அர்த்தம் எப்படியென்றால் வாலாயமாய் இடைவிடாமல் பயிரிடக்கூடிய என்றர்த்தம். ஏதோ ஒரு சமயத்தில் பயிரிடுவதற்கு லாயக்காக இருந்ததே போதுமானதாகாது. 31 M. L. J. 211 என்னும் கேஸில் இம்மாதிரி கூறப்பட்டிருக்கிறது.

யாதொரு நிலத்தின் விஷயமாய் "ஜெராயத்" என்னும் பதம் உபயோகப்பட்டு வருவதினாலேயே அது ரயத்தி நிலம் என்று அர்த்தமாகாது 31 M. L. J. 214.

சில ஜமீன்களில் ஏரியின் அடித்தரைகளில பயிர் செய்யப்படுவதுண்டு. சாதாரணமாய் ஏரி நிறைந்திருக்கும் காலங்களில் அந்த அடித்தரையானது ஜலத்தில் முழ்கியிருந்து பிறகு வற்றிப்போகும் காலத்தில் அதில் பயிர் ஏற்றுவதுண்டு. அத்தகைய நிலங்கள் நிலத்துக்குடையவர் அதாவது ஜமீன்தார் ஒரு ரயத்துக்கு கொடுத்த போதிலும் அவை ரயத்தி நிலமாகாது-யாதொரு நிலம் ரயதது நிலமென்றும் அதுவே ஏரியின் அடிகரை யென்றும் சொல்லப்பட முடியாது 39 L. W. 334.

ஊழியத்திற்காக பெற்று பயிரிடப்பட்டு வரும் நிலம் அந்த ஊழியமானது நடந்து வரும் வரையிலும் ரயத்தி நிலமல்ல. 30 I.C. 416. ஆனால் ரயதது நிலமானது குறிப்பிட்ட ஊழியத்திற்காக யாதொரு நபருக்கு சௌகரியமான குத்தகை ஏற்பாட்டின் பேரில் கொடுக்கப்பட்டிருந்தால் ஊழியம் நின்ற பிறகு அது ரயத்தி நிலமாகவே போய்விடும் 41 Mad. 554.

"கையெழுத்து செய்யப்பட்ட".

(17) "கையெழுத்து செய்யப்பட்ட" என்பதிலே — கையெழுத்து செய்ததாகப் பொருள்படுகிற நபரின் பெயர் முத்திரை போடப்பட்ட என்பதும் அடங்கும்.

"தாசில்தார்".

(18) "தாசில்தார்" என்பதிலே டெப்யுடி தாசில் தாரென்பதும் அடங்கும்.

"கிராமம்".

(19) "கிராமம்" என்பது – ஒரு பூஸ்திதியிலுள்ளதாகவாகிலும் அந்த பூஸ்திதியாகவாகிலும் இருக்கிற யாதொரு பிரதேச விஸ்தீர்ணமானது ரெவினியு கணக்குகளில் ஒரு கிராமமாகப் பெயரிடப்பட்டு, அதற்காக ரெவினியு கணக்குகள் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட சர்னங்களினுல் பிரத்தியேகமாய் வைத்தாதரிக்கப்பட்டு வந்தாலும், இந்த ஆக்டின் காரியங்களுக்காக ஒரு கிராமமென்று பிரதேச கவர்ன்மெண்டாரால் இப்போது அங்கிகரிக்கப்பட்டாவது ஷை காரியங்களுக்காக இனிமேல் ஒரு கிராமமென்று அவர்களால் நிர்ணயிக்கப்படுவதாகவாவதிருந்தாலும், அப்படிப் பட்ட பிரதேச விஸ்தீர்ணமென்று அர்த்தமாகும்; மேலும், ஷை "கிராமம்" என்பதிலே–அதனுடன் சேர்க்கப்படக் கூடிய யாதொரு மஜரா அல்லது மஜராக்கள் என்பதும் அடங்கும்.

---

## 2-ம் அத்தியாயம்.

### பொதுவான பாத்தியதைகள்.

இந்த அத்தியாயமானது பொதுவாக நிலத்துக்குடையவர்களுக்கும் ரயத்துகளுக்கும் உள்ள உரிமைகளைப்பற்றி கூறுகிறது—இதில் 4 முதல் 23 வரையிலுமுள்ள பிரிவுகள் அடங்கியுள்ளன. சமுதாயமான நிலங்களைப்பற்றி அவைகளை நிஷ்கரிஷை செய்வதும் அவைகளை பரிக்கிரிமிப்பதும் அவைகளிலிருந்து நபர்களை அப்புறப்படுத்துவதற்கும் டிஸ்டிரிக்ட் கலெக்டருக்கு 20, 20-A, 20-B பிரிவுகளினுல்

திகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த பிரிவுகள் புதியதாக நுழைக்கப்பட்ட பிரிவுகளாகும். இவைகளில் டிஸ்டிரிக்ட் கலெக்டர்கள் இன்னமாதிரி நடந்து கொள்ளவேண்டும் என்பது குறிக்கப்பட்டுள்ளது.

குத்தகைத்தொகையை வசூல் செய்ய நிலத்துக்குடையவருக்குள்ள அதிகாரம்.

**4** இந்த ஆக்ட்டிற்கண்ட நிபந்தனைகளுக்குட்பட்டு, நிலத்துக்குடையவர் - ரயத்தின் அனுபோகத்திலிருக்கும் சகல ரயத்தி நிலத்தின் விஷயமாகவும் குத்தகைத்தொகையை வசூல் செய்ய பாத்தியதையுள்ளவராவார்.

குறிப்புகள்.

"இந்த சட்டத்தின் நிபந்தனைகளுக்குட்பட்டு" என்பதற்கு 27, 28 பிரிவுகளில் கண்ட அம்சங்களுக்கும் இன்னும் இதர அம்சங்களுக்கும் உட்பட்டு என்று அர்த்தமாகும். இந்தப் பிரிவில் ரயத்தி நிலம் என்று சொல்லப்பட்டிருப்பதினால் இதில் ஊழிய நிலம் அடங்காது 51 M. L. J. 394.

"ரயத்தினுடைய அனுபோகத்திலிருக்கும் சகல ரயத்தி நிலத்தின் விஷயமாக" என்று உள்ளதினாலேயே ஜமீன்தாருக்கும் ரயத்துக்கும் வேறே விதமாக ஏற்பாடு செய்யப்படக்கூடாது என்பதில்லை. இருவரும் ஒரு ஏற்பாடு அல்லது பட்டா முச்சலிக்கை மூலமாக வாஸ்தவத்தில் சாகுபடியாகும் நிலத்திற்கு மாத்திரம் தான் தீர்வை கொடுக்கப்படவேண்டும் என்று ஒப்புக்கொள்ளலாம். 22 I. C. 834. இன்னும இந்தப்பிரிவானது ஒரு கிராமத்தில் கரம்பாக போடப்பட்ட நிலங்களுக்கு ஜமீன்தார் ரெண்ட் வசூல் செய்வது வழக்கமில்லை யென்றும் அது தான் கிராம ஏற்பாடு என்றும் சொல்லி ருசு செய்துக்கொள்வதை தடை செய்யவில்லையென்றும் 30 I. C 679 என்னும் கேஸில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

ராமநாதபுரம் ராஜா vs பெருமாள் மூப்பன் மற்றவர்களும் 36 L. W. 795 என்னும் கேஸில் அடியில் கண்டபடி தீர்மானிக்கப் பட்டிருக்கிறது,

ஒரு ரெண்ட் தாவாவில் ரயத்துகள் தங்களுடைய நடத்தையா லல்லாமல் மற்றப்படி தங்களை மீறியே நிலங்கள் கரம்பாக விடப் பட்டால் அதற்கு ரெண்ட் செலுத்த வேண்டிய வழக்கமிலைடயாது என்று கூறும் பக்ஷத்தில் அதை அவர்களே தான் ருசு செய்து கோர்ட்டுக்கு திருப்திகரமாக அம்மாதிரி வழக்கமுண்டென்று நிரு பணம் செய்யவேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது.

சாகுபடியான விஸ்தீரணத்துக்கு மாத்திரம் தான் ரெண்ட் செலுத்தப்படுமென்றும் ஒரு வழக்கம் அல்லது ஆசாரமானது சட்ட விரோதம் அல்ல 26 M L. J 575.

ஒரு நிலத்திற்காக ரெண்ட் செலுத்தும் ஒரு ரயத்தானவர் அதே நிலத்தில் உள்ள மரங்களுக்காக அவைகளிலிருந்து தனியாக ஒரு நன்மை பெற்றாலொழிய அவைகளுக்காக வரிவிதிப்பது நியாயமல்ல 2 L. W. 145.

வேறே யாதொரு ஏற்பாடு அல்லது ஆசாரம் இராமலிருக்கும் வரையிலும் தன் கைப்பற்றில் உள்ள நிலத்தை ரயத்தானவர் பயிர் செய்யாவிட்டாலும் அல்லது அதை சாகுபடிக்கல்லாமல் வேறே ஒரு காரியத்திற்கு உபயோகப்படுத்தினாலும் அவர் ரெண்ட் செலுத்தியே யாகவேணும் 25 M. L. J. 50.

கரம்பாக விடப்பட்ட நிலத்திற்காக ரெண்ட் வசூல் செய்வது கிடையாதென்று யாதொரு ஆசாரவழக்கம் இருக்கும் பக்ஷத்தில் அது 27-வது பிரிவின் கீழ் ஒரு நிபந்தனையென்று கருதப்பட்டே இப்பிரிவை அர்த்தங்கொள்ளவேண்டும். 59 M. L. J. 289.

கிராம நத்தங்களில் பழச்செடிகள் (அதாவது பலிதம் கிடைக்கும்படியான செடிகள்) இருந்து அவைகளை ஒரு ரயத்து அனுபவித்துக்கொண்டிருந்த போதிலும் அதற்காக ரெண்ட் கேட்க நியாயமில்லை, ஏனென்றால் அது ரயத்தி நிலமல்ல 29 Mad. 81.

கரம்பு நிலங்களுக்கு ரெண்ட் கிடையாதென்று உள்ள ஜமீன்களில் ஜமீன்தார் கரம்பு போடப்பட்ட நிலங்களை இதரர்களுக்கு தர்க்காஸ்தாக கொடுத்து விட்டு அதன் பேரில் வரி வசூல் செய்யக் கூடாது 22 I C. 572.

தன்னுடைய சோம்பேரித்தனத்தினால் அல்லது அஜாக்கிறதை யினால் சாகுபடி செய்யாத நிலங்களுக்கும் ரயத்தானவர் வரி செலுத் தக்கடமைப்பட்டவராவர் 41 M.. L..J. 455. இன்னும் நஞ்சை சாகு படிக்கு போதுமான ஜலம் இருந்து புஞ்சை பயிர் செய்த போதி லும் நஞ்சைப் பயிருக்கு எவ்வளவு உயர்ந்த தீர்வையுண்டோ அதை ரயத்தானவர் செலுத்தக்கடமைப்பட்டவராவர்.

ஒரு பட்டாதார் தன்னுடைய நிலத்தை மற்றொருவருக்கு பரா தீனம் செய்திருக்கும் பக்ஷத்தில் அந்த நபருக்கும் ஜமீன்தாரருக்கும் நேரிடையாக யாதொரு கான்ட்ராக்ட் இராமல் போனாலும் ஜமீன் தார் பராதீனம் பெற்றவர் பேரில் ரெண்ட்டுக்காக தாவா செய்யலாம். 1929 M. W. N. 141.

குத்தகைத்தொகையானது கைப்பற்று நிலத்தின் மேலும் அதன் மாசூலின் மேலும் ஏற்படும் முதல் செலவாகுமென்பது.

**5.** (1) ரயத்தி நிலத்தின் குத்தகைத்தொகையானது அதன் விஷயமாய் பாக்கியாகும் யாதொரு வட்டி சகிதமாக கைப்பற்று நிலத்தின் மேலும் கைப்பற்று நிலத்தின் மாசூ லின்மேலும் அல்லது அதன் யாதொரு பாகத்தின் மேலும் ஏற்படும் முதல் செலவாகும்; ஆனால், மாசூல் அறுவடையா யிருந்தால், அது ரயத்தின் வசத்திலோ ஸ்வாதீனத்திலோ இருக்கவேண்டும்; அல்லது, புலத்திலோ அல்லது வீடு அதைச்சேர்ந்த வளவு ஆகிய இவைகளுக்குள்ளோ கைப் பற்று நிலத்தின்மேலாவது களத்துமேடு அல்லது (தானியம்) போர் அடிப்பதற்கான இடத்தின்மேலாவது இது போன்ற இடத்தின் மேலாவது சேர்த்துவைக்கப்பட்டிருக்கவேண்டும்.

(2) இந்தப்பிரிவிலுள்ளதெதனாலும் கவர்ன்மென்டா ருடைய எந்த பாத்தியதைக்கும் பாதகமுண்டாவதாக எண் ணக்கூடாது.

## குறிப்புகள்.

இந்தப்பிரிவில் "ஏற்படும் முதற்செலவாகும்" என்றுள்ளதின் அர்த்தமென்னவென்பது கவனிக்கத்தக்கதாகும். ஒரு நிலத்துக் குடையவர் அதாவது ஜமீன்தாரருக்கு அப்படி இப்பிரிவு பிரகாரம் முதற்பொறுப்பு கேட்குங்காலத்தில் பூஸ்திதியில் பாத்தியதை இருந்தால் தான் அவ்வாறு கேட்கலாம். அவர் தன்னுடைய ஜமீனை விற்று விட்டிருந்தாலும் அல்லது வேறுவிதமாக அதை பராதீனம் செய்திருந்தாலும் அப்படி கேட்பதற்கில்லை. 29 M. L. J. 505. அப்படி அவர் விற்றுவிட்டிருந்தால் ரெண்டுக்காக தாவா செய்து அதன் பேரில் சிவில் புரோஸீஜர் கோட் ஆர்டர் 34 ரூ. 14-ன் கீழ் பொறுப்பு கேட்கவேண்டும் 39 M. L. J. 30.

இந்தப் பிரிவின் கீழ் உள்ள முதல் செலவு அல்லது முதல பொறுப்பானது டிரான்ஸ்பர் ஆப் பிராபர்ட்டி ஆக்ட் 100-வது பிரிவின் கீழ் உள்ள உரிமையை யொத்ததாயிராவிட்டாலும் பணமாக செலுத்தவேண்டிய ரெண்ட் விஷயத்திலாவது அம்மாதிரியாக ஒரு சார்ஜ் கொண்டாடலாம் என்று 43 Mad. 786 என்னும் கேஸில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

ரெண்டுக்காக முதற் செலவு அல்லது பொறுப்பு என்பதானது, ரெண்ட் பாக்கிக்காக ரெவின்யூ கோர்ட்டில் டிக்கிரி பெற்றிருந்து அதைச்செலாவணியாக்குவதில மாத்திரம கேட்கப்படலாமேயொழிய ரெண்டுக்காக பாண்டு முதலியவை ஏற்படுத்துக்கொண்டு அந்த பாண்டை சிவில் கோர்ட்டில் தாக்கல் செய்து டிக்கிரி பெற்றிருக்கும் சந்தர்ப்பங்களில் இந்த பிரிவானது பிரயோகமாது 43 Mad. 786.

இந்த பிரிவில் உள்ள முதற் செலவானது நிலத்துக்குடையவருடைய சௌகரியத்துக்காக அவர் ரெண்டை வசூல் செய்வதற்கு சௌகரியமாக ஏற்பட்டதே யொழிய வேறல்ல. ஒரு கைப்பற்று நிலத்தை சொந்தமாக பெற்றுள்ள இரண்டு ரயத்துகளில் ஒருவர் மொத்த ரெண்டையும் செலுத்திவிட்டு பாதிபாகத்திற்காக சகபாகஸ்தர் பேரில் பரிஹாரம் தேடுகையில் தாம் செலுத்தினது ரெண்ட் தவிர வேறொன்றுமில்லையானதால் தனது டிக்கிரிக்காக

அதே நிலத்தில் விளையும் மாசூல் தனக்கு முதற்பொறுப்பாக இருக்க வேண்டும் என்று கேட்பதற்கில்லை. அவருடைய தாவாவுக்கு இந்த பிரிவு பிரயோகமாகாது 49 M. L. J. 517.

*ரயத்தி நிலத்தில் அனுபோக பாத்தியதை.*

**6.** (1) இந்த ஆக்டில் கண்ட நிபந்தனைகளுக்குட் பட்டு, ஒரு நிலத்துக்குடையவரின் பூஸ்திதியிலுள்ள ரயத்தி நிலத்தை இப்போது தம் சுவாதீனத்தில் வைத்துக்கொண் டிருக்கும் அல்லது சுவாதீனத்தில் வைத்துக்கொண்டிருக்க அந்த நிலத்துக்குடையவரால் இனிமேல் அனுமதி கொடுக் கப்பெறும் ஒவ்வொரு ரயத்தும் தம்முடைய கைப்பற்று நிலத்தில் சாசுவதமான அனுபோக பாத்தியதை உடையவ ராவார்.

விவரணம் (1).—இந்த உட்பிரிவின் காரியத்துக்காக, 'இப்போது தம் சுவாதீனத்தின் வைத்துக்கொண்டிருக்கும் ஒவ்வொரு ரயத்தும்' என்னும் சொற்றொடரில், யாதொரு நபர் ரயத்தாக நிலத்தைக் கைப்பற்றில் வைத்துக்கொண்டி ருந்து இந்த ஆக்ட் வழங்கத்தொடங்கும்போது அந்த நிலத்தைத் தம் சுவாதீனத்திலேயே வைத்துக்கொண்டிருந் தால், அப்படிப்பட்ட ஒவ்வொரு நபரென்பதும் அடங்கும்.

விவரணம் (2).—பூஸ்திதிகளிலுள்ள நிலத்தைப்பற் றிய சென்னப்பட்டணம 1934-ம் வருஷத்து (இரண்டாவது திருத்த) ஆக்ட் வழங்கத் தொடங்குவதற்குமுன் பூஸ்திதி யாயிராமலிருந்தபோதிலும், அந்த ஆக்டை அனுசரித்து பூஸ்திதியாய்விட்டிருப்பதாய், 3-வது பிரிவைச்சேர்ந்த (2) குறிப்பிட்ட பகுதியில்கண்ட (d) அடையாளமிட்ட உட் பகுதியின் தாற்பரியப்படியுள்ள யாதொரு இனும் கிராமத் தின் விஷயத்திலாவது, யாதொரு இனும் கிராமத்திலுள்ள எந்த நிலம் அந்த ஆக்ட் வழங்கத் தொடங்குவதற்குமுன்

யாதொரு பூஸ்திதியின் பாகமாயிருப்பது நின்றுபோய்விட்டதோ அப்படிப்பட்ட யாதொரு நிலத்தின் விஷயத்திலாவது, இந்த உட்பிரிவிலும் (1) குறிப்பிட்ட விவரணத்திலும் வரும் 'இப்போது', 'இந்த ஆக்ட் வழங்கத் தொடங்கும்போது' என்னும் சொற்றொடர்களுக்கு, 1933-ம் வருஷ நவம்பர்மீ முதல் தேதியைக் குறிப்பிடுவதாக அர்த்தம் பண்ணவேண்டும்; மேலும், இந்த உட்பிரிவில் வரும் 'இனிமேல்' என்னும் சொற்றொடருக்கு, 1933-ம் வருஷ நவம்பர்மீ முதல்தேதிக்குப் பிற்பட்டுள்ள கால அளவைக் குறிப்பிடுவதாக அர்த்தம் பண்ணவேண்டும்.

விவரணம் (3).—ரயத்தி நிலத்தை அனுமதியில்லாமல் அனுபவித்து வரும் யாதொரு நபரிடத்திலிருந்து 163-வது பிரிவின்படி செலுத்தப்படும் யாதொரு தொகையைப் பெற்றுக்கொள்ளுகிற அல்லது வசூலிக்கிற ஒவ்வொரு நிலத்துக்குடையவரும் டிஷ தொகையையாவது பல தொகைகளாகச் செலுத்தப்பட்டிருந்தால் முதலில் செலுத்தப்பட்ட தொகையையாவது பெற்றுக்கொண்ட அல்லது வசூலித்த தேதியிலிருந்து இரண்டு வருஷத்துக்குள்ளாக அந்த நிலத்துக்குடையவர் அப்படிப்பட்ட நபரை நிலத்தை விட்டு அப்புறப்படுத்துவதற்காக அவர்மேல் யாதொரு ஸிவில் கோர்ட்டில் வியாஜ்ஜியம் தாக்கல் செய்தாலன்றி மற்றப்படி, மேலே கண்ட பிரகாரம் பெற்றுக்கொள்ளும் அல்லது வசூலிக்கும் காரணத்தினால் அந்த நபருக்கு (நிலத்தைச்) சுவாதீனத்தில் வைத்துக்கொண்டிருக்க அனுமதி கொடுத்திருப்பதாகக் கருதப்படுவார்.

(2) காம்பு நிலத்தில் கால்நடைகளை மேய்ப்பதற்காக ஒப்பந்தப்படி அனுமதி பெற்றிருப்பதனாலும், தோட்டம் அல்லது தோப்பு உண்டாக்குவதற்காகவென்று அல்லது

காட்டு உற்பத்திக்காகவென்று நிலத்துக்குடையவரால் நல்ல எண்ணத்துடன் விட்டுவைக்கப்பட்டிருக்கும் நிலத்தில் விவசாயு சம்பந்தமான பயிர் வைத்துச் சிறிது காலத்துக்குச் சாகுபடி செய்வதற்காக ஒப்பந்தப்படி அனுமதி பெற்றிருப்பதனுலுமே, அந்தப்படி அனுமதி பெற்றிருக்கும் நபருக்கு சாசுவதமான அனுபோக பாத்தியதை உண்டாய்விடமாட்டாது; மேலும், மேலே கண்டபடி குத்தகைக்கு விட்டிருக்கும் அல்லது சிறிது காலத்துக்குச்சாகுபடி செய்திருக்கும் காரணத்தினுலேயே ஷை நிலம் ரயத்தி நிலமாய்விடமாட்டாது.

(3) யாதொரு நிலத்துக்குடையவர் 186-வது பிரிவின்படி நிலங்களை அடைந்திருந்தால், இவர் கலெக்டரின் அனுமதியை முன்னதாக எழுத்து மூலமாய்ப் பெற்று, மொத்தத்தில் மூன்று வருஷத்துக்கு மேற்படாத ஒரு கால அளவுக்கு அப்படிப்பட்ட நிலங்களை விவசாய சம்பந்தமான காரியங்களுக்காகச் சிறிது காலத்துக்குக் குத்தகைக்கு விடலாம்; ஆனுல், அந்தப்படி குத்தகைக்கு விடுவதனுல் பாயக்காரிக்கு சாசுவதமான அனுபோக பாத்தியதை எதுவும் ஏற்படமாட்டாது.

(4) யாதொரு நிலத்துக்குடையவர் தம்முடைய சொந்த வேலைக்காரர்களைக் கொண்டாவது கூலியாட்களைக் கொண்டாவது காம்பு நிலத்தைத் திருத்தியிருந்தால், அவர் அந்தப்படி திருத்தின பிறகு முதல் தடவை சாகுபடி செய்த தேதியிலிருந்து முப்பது வருஷ காலம் வரையில் ஷை நில விஷயமாக சாசுவதமான அனுபோக பாத்தியதை அடையக்கூடாதென்று எழுத்து மூலமான ஒப்பந்த மூலமாய் யாதொரு நபரைத் தடுக்கலாம்.

(5) இஜாராதாரராகவோ குத்தகைத்தொகை வாங்கும் குத்தகைத்தாரராகவோ நிலத்தைக் கைப்பற்றில் வைத்துக் கொண்டிருக்கும் யாதொரு நபர் - அந்தப்படி கைப்பற்றில் வைத்துக்கொண்டிருக்கும்போது, இஜாரா அல்லது குத்தகையில் சேர்ந்த யாதொரு நிலத்தில் பரம்பரை பாத்தியதை மூலமாகவாகிலும் மரண சாஸன (உயில்) மூலமாகவாகிலும் அல்லாமல் மற்றப்படி அனுபோக பாத்தியதை அடையக் கூடாது.

(6) இந்த ஆக்டில் என்ன சொல்லியிருந்த போதிலும் பாதகமில்லாமலே, நிலத்துக்குடையவருக்கும் (2), (3) அல்லது (4) குறிப்பிட்ட உட்பிரிவின்படி (நிலத்தைச்) சுவாதீனத்தில் வைத்துக்கொண்டிருக்க அனுமதி கொடுக்கப்பெற்றிருக்கும் நபருக்குமுள்ள சம்பந்தமானது - அந்த உட்பிரிவுகளில் குறிப்பிட்டிருக்கும் கால அளவிலும் காரியங்களுக்காகவும், இருதாரத்தாருக்கும் ஏற்பட்டுள்ள ஒப்பந்தத்தினால் ஒழுங்கு படுத்தப்படும்.

குறிப்புகள்.

இந்தப் பிரிவானது 1934-ம் வருஷத்திய திருத்த சட்டத்தினால் முற்றிலும் திருத்தியமைக்கப்பட்டது.

இதில் (3)-வது உட்பிரிவானது 1934-ம் வருஷத்திய 8 வது சட்டத்தினால் ஏற்படுத்தப்பட்டது.

ரயத்து நிலத்துக்குடையவராகவோ இஜாரா
தாரராகவோ குத்தகைத்தொகை வாங்கும்
குத்தகைதாரராகவோ ஏற்படுவது.

**6-A.** நிலத்தில் அனுபோக பாத்தியதை உடையவராயிருக்கும் யாதொரு நபர் பிற்பாடு நிலத்துக்குடையவராக அந்த நிலத்தில் சுதந்தரமுள்ளவராகும் காரணத்தினாலாகி

லும் பிற்பாடு இஜாராதாரராகவோ குத்தகைச்சீட்டின் கீழ் வாங்கும் குத்தகைதாரராகவோ அந்த நிலத்தைக் கைப்பற்றில் வைத்துக்கொண்டிருக்கும் காரணத்தினாலாகிலும் ஷெ பாத்தியதையை இழக்கமாட்டார்.

சுரங்கமறுப்பதற்கான பாத்தியதைகளைத்தாமே
வைத்துக்கொள்வது.

**7.** ரயத்திநிலத்தை ஸ்வாதீனத்தில் வைத்துக்கொண்டிருக்க யாதொரு நிலத்துக்குடையவர் எந்த நபருக்காவது அனுமதி கொடுக்கும்போது, சுரங்கமறுப்பதற்கான பாத்தியதைகளைத் தாமே வைத்துக்கொள்ள அந்த நிலத்துக்குடையவருக்கிருக்கிற எவ்வித சுதந்திரத்துக்கும் இந்த ஆக்டிலுள்ளதெதனாலும் பாதகமுண்டாகமாட்டாது.

அனுபோக பாத்தியதை மற்ற பாத்தியதைகளோடு
சேர்ந்துபோவது.

"**8.** (1) இந்த ஆக்ட் வழங்கத்தொடங்குவதற்கு முன்பாவது வழங்கத்தொடங்கின பிறகாவது யாதொரு ரயத்தி நிலத்திலுள்ள அனுபோக பாத்தியதையானது நிலத்துக்குடையவரிடத்தில் சங்கிரமிக்கும் போதெல்லாம், அவர் ஷெ நிலத்தை நிலத்துக்குடையவராக வைத்திருக்கவேண்டியதேயல்லாமல், ஒரு ரயத்தாக அதை வைத்துக்கொண்டிருக்க அவருக்கு பாத்தியதை இல்லை; ஆனால், யாதொரு மூன்றாம் நபருடைய பாத்தியதைகளுக்கு இந்த உட்பிரிவிலுள்ளதெதனாலும் பிரதிகூலமாய் பாதகமுண்டாகமாட்டாது:

(2) இந்த ஆக்ட் வழங்கத்தொடங்குவதற்கு முன்பாவது வழங்கத்தொடங்கின பிறகாவது யாதொரு ரயத்தி நிலத்திலுள்ள அனுபோக பாத்தியதையானது யாதொரு கூட்டு நிலத்துக்குடையவரிடத்தில் சங்கிரமிக்கும்போதெல்லாம்,

அவர் தம்முடைய கூட்டு நிலத்துக்குடையவர்களுக்குக் குத்தகைத்தொகையில் அப்போதைக்கப்போது செலுத்தத்தக்கதாயிருக்கும் பாகங்களை அவர்களுக்குச் செலுத்துவதற்குட்பட்டு அந்த நிலத்தைக் கைப்பற்றில் வைத்துக்கொண்டிருக்க அவருக்கு பாத்தியதை உண்டு; மேலும், அந்த கூட்டு நிலத்துக்குடையவர் ஷேடி நிலத்தை மூன்றும் நபருக்குக் குத்தகைக்கு விட்டால், அந்த மூன்றும் நபர் ஷேடி நிலத்தின் விஷயமாய் ரயத்தாயிருப்பதாக எண்ணப்படுவார்.

(3) (1),(2) குறிப்பிட்ட உட்பிரிவுகளின்படி அனுபோக பாத்தியதையானது மற்ற பாத்தியதைகளோடு சேர்ந்து போய்விடுகிற பட்சத்திலே, மேலேகண்டபடி சேர்ந்துபோவதனால் ரயத்தி நிலமானது சொந்த நிலமாக மாறிவிடமாட்டாது.

(4) இந்த ஆக்டை ஜாரி செய்தபிறகு கைப்பற்று நிலத்தில் ரயத்துக்குள்ள பாத்தியதையானது பரம்பரை பாத்தியதை மூலமாக நிலத்துக்குடையவருக்கு வந்திருக்கிற பட்சத்தில், இந்த ஆக்டில் என்ன சொல்லியிருந்த போதிலும் பாதகமில்லாமலே நிலத்துக்குடையவர் - தாம் பாத்தியதை அடைந்த தேதிமுதல் பன்னிரண்டு வருஷகாலத்துக்கு, தாமும் யாதொரு நபரும் சம்மதிக்கக்கூடிய ஷரத்துகளின்படி அப்படிப்பட்ட நிலத்தை அந்த நபர் சுவாதீனத்தில் வைத்துக்கொண்டிருப்பதற்கு அனுமதி கொடுப்பதற்கான சுதந்தரம் உடையவராவார்.

(5) 3-வது பிரிவைச் சேர்ந்த (2) குறிப்பிட்ட பகுதியில் கண்ட (d) அடையாளமிட்ட உட்பகுதியின் தாற்பரியப்படியுள்ள யாதொரு பூஸ்திதியில் இருக்கும் எந்த நிலத்திலாகிலும் பாயக்காரிக்கு அனுபோக பாத்தியதை இல்லை

யென்று ஸ்தாபித்து, தகுந்த அதிகாரமுள்ள யாதொரு ஸிவில் கோர்ட்டார் பிறப்பிக்கும் முடிவான டிக்கிரி அல்லது உத்தரவை அந்த நிலத்தின் விஷயமாய் 1933-ம் ௵ நவம்பர் ௴ முதல் தேதிக்கு முன் நிலத்துக்குடையவர் பெற்றிருந்தாலும், பூஸ்திதிகளிலுள்ள நிலத்தைப்பற்றிய சென்னப்பட்டணம் 1934-ம் ௵த்து (இரண்டாவது திருத்த) ஆக்ட் வழக்கத்தொடங்குவதற்குமுன் எந்த பாயக்காரியும் அப்படிப்பட்ட நிலத்தில் யாதொரு அனுபோக பாத்தியதையை அடையாதிருந்தாலும், நிலத்துக்குடையவர் - ஷை நிலமானது இந்த ஆக்டின் தாற்பரியப்படி சொந்த நிலமாயிராத பட்சத்திலே, இந்த ஆக்டில் என்ன சொல்லியிருந்த போதிலும் பாதகமில்லாமலே, பூஸ்திதிகளிலுள்ள நிலத்தைப்பற்றிய சென்னப்பட்டணம் 1934-ம் ௵த்து (இரண்டாவது திருத்த) ஆக்ட் வழங்கத்தொடங்கும் தேதியிலிருந்து பன்னிரண்டு வருஷ காலத்துக்குத் தாமும் யாதொரு நபரும் சம்மதிக்கக்கூடிய ஷரத்துகளின்படி ஷை நிலத்தை அந்த நபர் சுவாதீனத்தில் வைத்துக்கொண்டிருக்க அனுமதி கொடுப்பதற்குச் சுதந்திரமுடையவராவார்: ஆனால் நிலத்துக்குடையவரும் பாயக்காரியும் செய்துகொண்டு, பூஸ்திதிகளிலுள்ள நிலத்தைப்பற்றிய சென்னப்பட்டணம் 1934-ம் ௵த்து (இரண்டாவது திருத்த) ஆக்ட் வழங்கத் தொடங்கும்போது செலாவணியாய்க்கொண்டிருக்கும் யாதொரு ஒப்பந்தம் சட்ட சம்மதமாயிருப்பதற்கு இந்த உட்பிரிவில் கண்டதெதனாலும் பாதகம் உண்டாவதாகக் கருதப்படமாட்டாது.

*ரயத்தை (நிலத்தை விட்டு) அப்புறப்படுத்த நிலத்துக்குடையவருக்குள்ள பாத்தியதை.*

**9.** இந்த ஆக்டிற்கண்ட நிபந்தனைகளின்படிக்கன்றி மற்றப்படி ரயத்தை அவருடைய கைப்பற்று நிலத்திலிருந்

தாவது அதன் யாதொரு பாகத்திலிருந்தாவது அப்புறப் படுத்த எந்த நிலத்துக்குடையவரும் நிலத்துக்குடையவரென் னும் முறைமையிலே பாத்தியதையுள்ளவராகமாட்டார்.

அனுபோக பாத்தியதை வமிச பரம்பரையாய் வரத்தக்க தென்பதும் ஒருவர் பேரிலிருந்து மற்றொருவர் பேருக்கு ட்ரான்ஸ்பராகத்தக்கதென்பதும்.

**10.** (1) சகல அனுபோக பாத்தியதைகளும் வமிச பரம்பரையாய் வரத்தக்கவைகளாக இருக்கவேண்டும்; மேலும் அவைகள் - விற்பனை மூலமாகவோ தானமாகவோ அல்லது வேறே விதமாகவோ ஒருவர் பேரிலிருந்து மற்றொருவர் பேருக்கு ட்ரான்ஸ்பர் செய்யப்படத்தக்கவைகளாயுமிருக்க வேண்டும்.

(2) யாதொரு ரயத்தானவர் மரணசாஸனம் எழுதி வைக்காமலும், கவர்ன்மென்டாரைத்தவிர வேறே யாதொரு வாரிசுமில்லாமலும் இறந்துபோகிற பட்சத்திலே, அவரு டைய அனுபோக பாத்தியதையானது அற்றுப்போகும்; ஆனால், எந்த நிலத்தின் விஷயத்திலே அவருக்கு அப்படிப் பட்ட அனுபோக பாத்தியதை இருந்ததோ அந்த நிலமானது ரயத்தி நிலமாயிராமற்போகாது.

நிலத்தை ரயத்து உபயோகித்துக்கொள்ளுவது.

**11** நிலத்தின் மதிப்பை முக்கியமான அம்சங் களில் குறைக்காதபடிக்காவது விவசாய சம்பந்தமான காரி யங்களுக்கு அதை தகுதியற்றதாகச் செய்துவிடாதபடிக்கா வது எவ்விதமாகவேனும் ரயத்து தம்முடைய கைப்பற்றி லுள்ள நிலத்தை உபயோகித்துக்கொள்ளலாம்.

குறிப்புகள்.

23 M. L. J. 52 என்னும் கேஸில் ஒரு ரயத்தி நிலத்தில்

தோல்கிடங்கு வைப்பதாக வழக்கம் உண்டு என்று ருசுவானதில அப்படிச்செய்வதினால் நிலத்தின் மதிப்பு குறைந்து போய்விடுமாயி னும் அது சட்டவிரோதமல்லவென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

*கைப்பற்று நிலத்திலுள்ள மரங்கள் விஷயமாய்*
*ரயத்துக்குள்ள பாத்தியதை.*

**12.** (1) மாமூல்படியாவது இந்த ஆக்ட் ஜாரியாவ தற்கு முன் ரயத்து எழுதிக்கொடுத்த ஒப்பந்தத்தின்படியா வது நிலத்துக்குடையவருக்கு மாத்திரமே இருக்கும் எவ்வித பாத்தியதைகளுக்கும் உட்பட்டு, இப்போது தம்முடைய் கைப்பற்று நிலத்திலுள்ள சகல மரங்களையும் உபயோகித்துக் கொள்ளவோ அவைகளின் பலனை அனுபவிக்கவோ அவை களை வெட்டி விடவோ கொண்டுபோய் விடவோ மற்றப்படி அவைகளை ஒருவகை செய்யவோ ஒவ்வொரு ரயத்துக்கும் பாத்தியதை உண்டு; மேலும், இந்த ஆக்ட் ஜாரியான பிறகு ரயத்தால் வைத்துப் பயிர் செய்யக்கூடிய அல்லது கைப் பற்று நிலத்தில் இயற்கையாகவே பயிராகக்கூடிய மரங்களின் விஷயத்தில், இதற்கு விரோதமாய் யாதொரு ஒப்பந்தமாகி லும் மாமூலாகிலும் ஏற்பட்டிருந்தும் பாதகமில்லாமலே அவைகளை உபயோகித்துக்கொள்ளவோ அவைகளின் பலனை அனுபவிக்கவோ அவைகளை வெட்டிவிடவோ கொண்டு போய்விடவோ மற்றப்படி ஒருவகை செய்யவோ அவருக்கு பாத்தியதை உண்டு.

(2) இதுவிஷயமாய் கலெக்டருக்கு விண்ணப்பம் செய்து கொள்வதன்மேல் அவர் நிஷ்கரிஷை செய்யக்கூடிய பிரதி பலனை நிலத்துக்குடையவருக்குச் செலுத்தி, யாதொரு ரயத்தானவர் - இந்த ஆக்ட் ஜாரியாவதற்குமுன் தம்முடைய கைப்பற்று நிலத்திலுள்ள எவையேனும் மரங்கள் விஷய

மாய், மாமூல்படியாவது மேலேகண்டபடி எழுதிக்கொடுக்கப்பட்ட ஒப்பந்தத்தின்படியாவது நிலத்துக்குடையவருக்கு மாத்திரமே இருக்கும் பாத்தியதைகளை அடையலாம் :

ஆனால், இந்த உட்பிரிவில் கண்டதெதனாலும், யாதொரு மூன்றும் நபருக்குள்ள பாத்தியதைகள் பாதிக்கப்படுவதாகவோ, நிலத்துக்குடையவர் யாதொரு மூன்றும் நபருக்குக் கொடுத்த மரப்பட்டாவில் சேர்க்கப்பட்டிருக்கும் எவையேனும் மரங்கள் விஷயமாய் நிலத்துக்குடையவருக்குள்ள பாத்தியதைகளை நிர்ப்பந்தமாய் அடைய யாதொரு ரயத்துக்குப் பாத்தியதை ஏற்படுவதாகவோ கருதப்படமாட்டாது.

## குறிப்புகள்.

இந்தப்பிரிவானது 1934-ம் வருஷத்திய திருத்த சட்டமாகிய 8-வது சட்டத்தினால் முற்றிலும் மாற்றி அமைக்கப்பட்டது. இதனால் ஏற்பட்ட முக்கிய மாறுதல் என்னவென்றால், ஒரு ரயத்தானவர் தனக்கு பாத்தியப்பட்ட செடிகளை வெட்டி தழைக்காக உபயோகிப்பது மாத்திரமல்லாமல் அதை தன்னிஷ்டப்பிரகாரம் விற்கவும் இதரர்களுக்கு கொடுக்கவும் பூரணபாத்தியதை ஏற்பட்டுள்ளது. இன்னும் 1908-ம் வருஷத்திற்கு முந்தி உள்ள மரங்களில் பாத்தியதைகளைப் பெறவும் வழி ஏற்பட்டிருக்கிறது.

இந்தப் பிரிவானது பொதுவாக ஒரு ரயத்துக்குள்ள பாத்தியதையை ஸ்தாபிக்கிறதே யொழிய புதிய ஒரு உரிமையை கொடுக்கவில்லை என்று 1916-ம் வருஷத்தில் 36 I-C 202 என்னும் கேஸில் தீர்மானிக்கப்பட்டது. ஆனால் இப்பொழுது (2)-வது உட்பிரிவினால் ஒரு புதிய பாத்தியதையானது ஏற்பட்டது விசிதமாகும்.

ஆனால் செடிகள் அல்லது மரங்கள் தனியான ஒரு ஏற்பாட்டின் பேரில் அனுபவிக்கப்பட்டுவரும் பக்ஷத்தில் இப்பிரிவானது அதற்குப் பிரயோகப்படாது.

ராமநாதபுரம் ஜமீன்தாரியில் ரயத்துகள் ஜமீன்தாரரின் உத்திரவில்லாமல் கைப்பற்று நிலங்களில் உள்ள பனைமரங்களை வெட்

டிக்கொண்டு போகும் பக்ஷத்தில் அவர்கள் ஜமீன்தாரருக்கு நஷ்ட ஈடு கட்டிக்கொடுக்க வேண்டும் என்று யாதொரு ஆசாரம் அல்லது வழக்கம் கிடையாது.. 60 I. C. 90.

*நிலத்துக்குடையவரானவர், ரயத்து மரங்களை அனுபவித்து வருவதற்கு உரிமையுள்ளவரல்லவென்று கூறும் பக்ஷத்தில் அவரே தான் அம்மாதிரி ருசு செய்யவேண்டும்* 22 Cal. 742.

*சீர்திருத்தஞ்செய்ய அனுபோக ரயத்துக்குள்ள பாத்தியதை.*

**13.** (1) யாதொரு ரயத்தாவது நிலத்துக்குடையவராவது ரயத்தாகவோ நிலத்துக்குடையவராகவோ - தாமே செய்ய இஷ்டமுடையவராயிருக்கிறாரென்னும் காரணத்தினாலன்றி மற்றப்படி, கைப்பற்று நிலத்தின்விஷயமாகச் சீர்திருத்தம் செய்யவொட்டாமல் ஒருவர் மற்றொருவரைத் தடுக்கச் சுதந்தரமுள்ளவராகார்.

(2) ரயத்தும் நிலத்துக்குடையவரும் ஒரே சீர்திருத்தத்தைச் செய்ய இஷ்டமுடையவராயிருந்து, அதனால் அதே நிலத்துக்குடையவருக்குக் கீழிருக்கிற வேறொரு ரயத்தைச் சேர்ந்த கைப்பற்றுநிலத்துக்குப் பாதகமுண்டாகாமலிருக்கிற பட்சத்திலே, அந்த சீர்திருத்தத்தைச்செய்ய ரயத்தே முந்திய பாத்தியதையுள்ளவராவார்; வேறொரு ரயத்தைச் சேர்ந்த கைப்பற்று நிலத்துக்குப் பாதகமுண்டாகிற விஷயத்திலே நிலத்துக்குடையவரே முந்திய பாத்தியதையுள்ளவராவார்.

(3) இதற்கு மாறாக யாதொரு மாமூலாவது ஒப்பந்தமாவது ஏற்பட்டிருந்த போதிலும் பாதகமில்லாமலே, ரயத்து தமமுடைய செலவில் சீர்திருத்தம் செய்துக்கொண்ட காரணத்தினால், அப்படிப்பட்ட சீர்திருத்தம் செய்யப்பட்

டதன் பலனை சாகுபடியான மாசூல் எவ்வளவாயினும் அதிகரித்திருந்தால் அப்படி அதிகரித்தது நிமித்தமாகவோ சாகுபடி செய்யப்பட்ட பயிரின் தன்மையில் மாறுதல் ஏதாகிலும் உண்டாயிருந்தால் அப்படிப்பட்ட மாறுதல் நிமித்தமாகவோ (முன் செலுத்திவந்த விதத்தைக்காட்டிலும்) அதிகமான விதப்படி குத்தகைத்தொகை செலுத்துவதற்கு அந்த ரயத்து உட்பட்டவராகமாட்டார்.

## குறிப்புகள்.

இப்பிரிவில் உள்ள "சீர்திருத்தம்" என்னும் பதத்தில் சாசுவதமான சீர்திருத்த மாத்திரமல்லாமல் தாத்காலிகமாக கைப்பற்று நிலத்தின் மதிப்பை அதிகப்படுத்தும்படியான சீர்திருத்தமும் அடங்கும் 50 I. C. 892.

ஒரு பட்டாநிலத்தில் (புஞ்சை நிலத்தில்) ஒரு ரயத்தானவர் நிலத்துக்குடையவருடைய உதவியே இல்லாமல் தன்னுடைய சொந்த பணத்தைக் கொண்டு கிணறு வெட்டி ஜலம் பாய்ச்சிக் கொள்ளும் பக்ஷத்தில் அந்த நிலத்தில் நஞ்சைப்பயிர் ஏற்றின போதிலும் நிலத்துக்குடையவர் புஞ்சை தீர்வைபேதான் வாங்க வேண்டும். கிணறு தோண்டப்பட்ட நிலத்திற்கும் அவர் ரெண்ட் வாங்கலாமே யொழிய மற்றப்படி ரெண்டை அதிகமாக்குவதற்கில்லை. 64 M. L. J. 18. அகில இந்தியா லா ஜர்னல் 4-வது வால்யூம் 375-வது பக்கம்.

நிலத்துக்குடையவருடைய அனுமதியில்லாமல்புறம் போக்கு நிலத்திலாவது அல்லது வேறே நிலத்திலாவது கிணறு வெட்டுவது இந்தப் பிரிவின் கீழ் ஒரு சீர்திருத்தமாகாது 44 I. C. 641.

சொந்த நிலத்தில் சொந்த கிணறுகளைக்கொண்டு இரண்டாவது போகம் சாகுபடி செய்யும் பக்ஷத்திலாவது அல்லது உயர்ந்த பயிரைச் செய்யும் பக்ஷத்திலாவது நிலத்துக்குடையவர் அதிக ரெண்ட் கேட்பதற்கில்லை. 28 M. L. J. 301.

வாரம் வசூலிக்கும் இடங்களில் நிலத்துக் குடையவருக்கு எல்லாமாசூல்களிலும் பாகம் உண்டு. சில குறிப்பிட்ட மாசூலில் அவருக்கு பாகம் கிடையாது என்று ஸ்பஷ்டமாக ஒரு ஏற்பாடு அல்லது காண்ட்ருக்ட் இருந்தாலொழிய நிலத்துக்குடையவர் எல்லா மாசூலில் பாகம் கேட்டதினாலேயே அவர் அதிக ரெண்ட் கேட்பதாக எண்ணப்படாது. 45 M. L. J. 199. இந்த கேஸில் அமானி என்பதற்கு வாரம் என்று அர்த்தமாகுமென்று தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

இந்தப் பிரிவில் உள்ள மாறுதல்களினால் ரயத்துகள் தங்கள் நிலங்களில் தங்கள் சொந்த பணத்தைக்கொண்டு செய்யும் சீர்திருத்தங்களினால் நிலத்தின் மதிப்பு உயர்ந்த போதிலும் நிலத்துக்குடையவர் அதிக ரெண்ட் கேட்பதற்கில்லையென்பதை பாஷாப்பிரயோகத்தினால் ஸ்பஷ்டமாக்கப்பட்டது. 3-வது உட்பிரிவில் ரயத்தானவர் தம்முடைய" செலவில் மாத்திரமே" என்று இருந்ததில் " மாத்திரமே" என்னும் பதமானது எடுத்து விடப்பட்டது. ஹைக்கோர்ட்டுகள் பல கேஸுகளில் ரயதுகள் சீர்திருத்தம் செய்வதில் நிலத்துக்குடையவர் சொற்ப சகாயம் செய்திருந்த போதிலும் இந்தப்பிரிவின் கீழ் அவர்கள் நன்மையடைவதற்கில்லையென்று தீர்மானித்திருந்தனர். அதைப்போக்கி ரயத்துகள் தங்களுடைய சீர்திருத்தங்களின் விஷயமாய் பூரண நன்மையடைய வேண்டுமென்று கருதி அப் பதத்தை எடுத்து விட்டார்கள்.

**14.** விட்டு விடப்பட்டது,

சீர்திருத்தத்தின் சம்பந்தமாக உண்டாகிற விவாதங்களைப் பைசல் செய்யக் கலெக்டருக்குள்ள அதிகாரம்.

**15.** (a) சீர்திருத்தைச் செய்வதற்கான பாத்தியதையின விஷயத்திலோ,

(b) குறித்த ஒரு வேலை சீர்திருத்தமா அல்லது சீர்திருத்தமாகுமா என்பதன் விஷயத்திலோ,

ஒரு ரயத்துக்கும் நிலத்துக்குடையவருக்கும் விவாதம் நேரிடுகிற பட்சத்திலே, உபயகட்சிக்காரர்களில் ஒருவர் விண்ணப்பஞ் செய்து கொள்வதன்மேல் கலெக்டரானவர் அந்த விவாத விஷயத்தைக் குறித்துத் தீர்மானம் செய்யலாம்.

*நிலத்துக்குடையவர் செய்யும் சீர்திருத்தங்களை ரெஜிஸ்டர் செய்துவைப்பது.*

**16.** (1) யாதொரு நிலத்துக்குடையவர்-தாம் சட்டப்படி செய்திருக்கிற அல்லது தம்முடைய செலவில் சட்டப்படி செய்யப்பட்டிருக்கிற சீர்திருத்தத்தையாவது எந்த சீர்திருத்தம் செய்கையில் ஒரு ரயத்துக்குத்தாம் உதவி செய்திருக்கிறாரோ அந்த சீர்திருத்தத்தையாவது ரெஜிஸ்டர் செய்து வைக்கும்படி கலெக்டருக்கு விண்ணப்பம் செய்துக் கொள்ளலாம்.

(2) மேற்படி விண்ணப்பமானது - பிரதேச கவர்ன்மெண்டார் விதி மூலமாக எந்த நமூனைப்படி அது இருக்க வேண்டுமென்று கட்டளையிடுகிறார்களோ அந்த நமூனைப்படியிருக்கவேண்டியதுமல்லாமல், அதில் என்ன சங்கதி அடங்கியிருக்கவேண்டுமென்று கட்டளையிடுகிறார்களோ அந்த சங்கதி அடங்கியுமிருக்கவேண்டும்; மேலும், அது - அவ்வவ்விடத்தில் விசாரணை செய்வதன் மூலமாகவோ அல்லது வேறே விதமாகவோ பிரதேச கவர்ன்மெண்டார் எந்த விதமாய்ச் சரிபார்க்கவேண்டுமென்று கட்டளையிடுகிறார்களோ அந்த விதமாய்ச் சரிபார்க்கப்பட்டுமிருக்கவேண்டும்.

(3) கலெக்டரானவர் வேலை முடிந்த தேதியிலிருந்து பன்னிரண்டுமாத காலத்துக்குள்ளாக அது செய்து கொள்ளப்படாமலிருந்தால் அதைத் தள்ளிவிடலாம்.

சீர்திருத்தத்தின் விஷயமாய்ச் சாட்சியத்தைஎழுதி வைக்கவேண்டுமென்று விண்ணப்பம் செய்து-கொள்வது.

**17.** (1) ஒரு கைப்பற்று நிலத்தைச்சேர்ந்த ரயத்தாவது யாதொரு நிலத்துக்குடையவராவது ஒரு கைப்பற்று நிலத்தின் விஷயத்திலே இந்த ஆக்ட் ஜாரியானபிறகு செய்யப்பட்ட யாதொரு சீர்திருத்தத்துக்குச் சம்பந்தமான சாட்சியத்தை எழுதிவைக்கவேண்டுமென்று விரும்பினால், அவர் கலெக்டருக்கு விண்ணப்பம் செய்து கொள்ளலாம். அதன்மேல் கலெக்டரானவர் - மேலேகண்ட விண்ணப்பத்துக்கு ஆதாரங்கள் இல்லையென்று நினைத்தாலன்றி மற்றப்படி, காலத்தையும் இடத்தையுங்கண்டு இருதிறத்தாருக்கும் நோடிஸ் கொடுத்து அந்தக்காலத்திலும் இடத்திலும் ஷை சாட்சியத்தை எழுதிவைக்கவேண்டும்; மேலேகண்டபடி ஆதாரங்களில்லையென்று நினைப்பதற்குறிய காரணங்கள் எழுதிவைக்கப்படவேண்டும்.

(2) இந்தப்பிரிவின்படி எந்த விஷயமாவது எழுதிவைக்கப்பட்டிருக்கும்போது, அந்தப்படி எழுதிவைத்திருக்கிற விஷயமானது - நிலத்துக்குடையவருக்கும் ரயத்துக்குமாவது அவர்களுக்குட்பட்டு பாத்தியதை கொண்டாடுகிற எந்த நபர்களுக்குமாவது பிற்காலத்தில் நடக்கும் ஒவ்வொரு விவகாரத்திலும் சாட்சியத்தில் ஏற்றுக் கொள்ளத்தக்கதாகும்.

நிலத்தில் பிரவேசித்து அதை அளக்க நிலத்துக்குடையவருக்குள்ள பாத்தியதை.

**17-A.** ஒவ்வொரு நிலத்துக்குடையவரும் - தாமாகவேயாவது கிரமமாய் அதிகாரம் கொடுக்கப்பெற்ற தம்மு

டைய ஏஜெண்டைக்கொண்டாவது, இந்த ஆக்டில் கண்ட காரியங்களில் எதற்காகவாகிலும் தம்முடைய பூஸ்திதியி லுள்ள யாதொரு நிலத்தில் நியாயமான எல்லாக்காலங்களி லும் பிரவேசிக்கலாம்; மேலும், அவர் அப்படிப்பட்ட யாதொரு காரியத்துக்காக எந்த நிலத்தையும் அளக்கலாம்.

### குறிப்புகள்.

இந்த பிரிவானது ஒரு புதிய பிரிவல்ல. 43-வது பிரிவுதான். அது இவ்விடத்தில் பெயர்த்து எழுதப்பட்டது. 43 வது பிரிவு விட்டுவிடப்பட்டது. இந்தப் பிரிவில் புதியதாக நுழைக்கப்பட்ட பதங்கள் என்னவென்றால் "எல்லா நியாயமான காலங்களிலும்" என்பது.

சாகுபடி பண்ணும்போது சாதாரணமாய்ச் செய்யப்படும் சீர்திருத்தங்கள் விஷயத்திலே நிவாரணை.

**18.** 13, 15-வது பிரிவுகளில் என்னசொல்லி யிருந்த போதிலும் பாதகமில்லாமலே, ரயத்தானவர் - சிறிய காலத்துக்கு இருக்கக்கூடியவைகளாய் கிணறுகளையாவது தண்ணீர்க் கால்வாய்களையாவது கரைகளையாவது ஏற்படுத் திக் கொள்ளவோ நிலத்தை சமப்படுத்திக்கொள்ளவோ அடைப்படைத்துக்கொள்ளவோ, வேறே வேலைகளைச் செய் யவோ அல்லது சாகுபடி பண்ணும்போது சாதாரணமாய்ச் செய்யப்படும் கட்டுவேலைகளில் சொற்ப மாறுதல்கள் செய் யவோ அல்லது அவைகளுக்கு சொற்ப மராமத்துகள் செய் யவோ பாத்தியதையுள்ளவராவர்; 17-வது பிரிவிற்கண்ட நிபந்தனைகள் அப்படிப்பட்ட வேலைக்காகிலும் மராமத்துக்களு க்காகிலும் பிரயோகப்படமாட்டா.

ரயத்துகள் - நிலத்துக்குடையவர்கள் - ஆகிய இவர்களுக்கும் இவர்களுடையபாயக்காரிகளுக்கும்முள்ள சம்பந்தம்.

**19.** இந்த ஆக்டிலே பிரத்தியேகமாய் வேறே வித

மாக நிபந்தனை கண்டிருந்தாலன்றி மற்றப்படி, ஒரு ரயத்துக்கும் அவனைச்சேர்ந்த பாயக்காரிகளுக்கும் அல்லது நிலத்துக்குடையவருக்கும் அவருடைய சொந்த நிலத்தைச் சேர்ந்த பாயக்காரிக்குமுள்ள சம்பந்தத்தைக் குறித்தும், வேறே எந்த நிலச்சொந்தக்காரர்களுக்காகிலுமுள்ள பாத்தியதைகளைக் குறித்தும் இந்த ஆக்டிற்கண்ட நிபந்தனைகளினால் ஒழுங்கேற்படவில்லை.

குறிப்புகள்.

இந்தப் பிரிவானது ஒரு நிலத்துக்குடையவரால் பெறப்பட்டு அவருடைய சுவாதீனத்திலுள்ள ரயத்து நிலங்களுக்கு பிரயோகமாகாது. 26 M. L. J. 373.

ஒரு ரயத்து தனது நிலங்களை தாமே பயிரிடாமல் வேறே பயிர் செய்பவர்களை வைத்துக்கொண்டாலும் அல்லது நிலத்துக்குடையவர் தன் பண்ணை நிலங்களுக்கு சொந்த பாயக்காரிகளை ஏற்படுத்திக் கொண்டாலும் இவர்களுக்குள் ஏற்படக்கூடிய தகரார்களை தீர்ப்பதற்கு இந்த சட்டத்தில் ஒன்றும் கிடையாது என்று இப்பிரிவின் அர்த்தமாகும். அப்படிப்பட்ட தகராறுகளை சிவில் கோர்ட்டுகளில் தீர்த்துக்கொள்ள வேண்டும்.

பிரைவேட் நிலங்களைச் சேர்ந்த வரையிலும் தாவாக்கள் ஸிவில் கோர்ட்டில்தான் செய்யப்படவேண்டும். அதேமாதிரியாக நிலத்தின் அனுபவ பாத்தியதை விஷயமாய் ஒரு ரயத்துக்கும் மற்றொரு ரயத்துக்கும் விவாதம் கிளம்புமானால் அது விஷயமாக சிவில் கோர்ட்டுகளிலே தான் தாவா தொடரப்படவேண்டும்.

நிலம் சமுதாய நிலமா அல்லவா என்பதைக் குறித்தும் அந்த நிலத்தில் மாமூலாக ஏற்பட்டிருக்கும் பாத்தியதைகளைக் குறித்தும் கலெக்டர் தீர்மானிக்கலாமென்பது.

**20.** (1) நிலத்துக்குடையவராவது நிலத்தில் பற்றுள்ள வேறே நபராவது விண்ணப்பம் செய்து கொள்வதன் பேரில், கலெக்டரானவர் - யாதொரு நிலமானது 3-வது பிரிவைச் சேர்ந்த (16) குறிப்பிட்ட பகுதியில் கண்ட (a), (b)

அல்லது (c) அடையாளமிட்ட உட்பகுதியில் கண்ட விவ ரப்படி இருக்கிறதா இல்லையா என்பதைக்குறித்தாகிலும், மேலேகண்ட எந்த விவரப்படியாவதுள்ள யாதொரு நில த்தை உபயோகிப்பது விஷயமாய் இந்த ஆக்ட் வழங்கத் தொடங்கும் காலத்தில் மாமூலாக ஏற்பட்டிருந்த பாத்திய தைகளைக்குறித்தாகிலும் பிரசினை ஏதாகிலும் உண்டானல் அதைத் தீர்மானிக்கலாம்.

(2) அந்த தீர்மானத்தினல் துன்பமடைந்திருக்கும் எந்த நபராகிலும் அந்தத் தீர்மானத்தின் தேதியிலிருந்து ஒருவருஷ காலத்துக்குள், ஷெ நிலத்தின் விஷயமாய்த் தாம் கொண்டாடும் பாத்தியதையை ஸ்தாபித்துக் கொள்வதற்காக ஸிவில் கோர்ட்டில் வியாஜ்ஜியம் தொடரலாம்; ஆனல், அந் தப்படி வியாஜ்ஜியம் ஏதாகிலும் தொடரப்பட்டால் அதில் ஏற்படும் முடிவுக்குட்பட்டு, கலெக்டருடைய தீர்மானம் முடிவானதாகும்.

உபயோகப்படாதிருக்கும் சமுதாய நிலங்களை மாற்ற டிஸ்டிரிக்ட் கலெக்டருக்குள்ள அதிகாரம்.

**20**-A. (1) இது விஷயமாய்ப் பிரதேச கவர்ன்மென் டார் நிர்ணயிக்கக்கூடிய விதிகளுக்குட்பட்டு, டிஸ்டிரிக்ட் கலெக்டரானவர் நிலத்துக்குடையவராவது யாதொரு ரயத் தாவது பற்றுள்ள வேறே யாதொரு நபராவது விண்ணப்பம் செய்துகொள்வதன் மேல்—

(a) 3-வது பிரிவைச் சேர்ந்த (16) குறிப்பிட்ட பகுதி யில் கண்ட (a) (b) அடையாளமிட்ட உட்பகுதிகளில் பிரஸ் தாபிக்கப்பட்டிருக்கும் காரியங்களில் எதற்காகவாயினும் பிரத்தியேகமாய் விடப்பட்டிருக்கும் யாதொரு நிலமாகிலும் யாதொரு நிலத்தின் எந்த பாகமாகிலும் ஆதியில் எந்தக்

காரியத்துக்காக உத்தேசிக்கப்பட்டதோ அந்தக் காரியத்துக்கு இனி வேண்டியதில்லையென்று நிர்ணயிக்கலாம்; மேலும்,

(b) (i) அப்படிப்பட்ட எந்த நிலம் அல்லது பாகத்தின் விஷயமாய் மேலேகண்டபடி நிர்ணயிக்கப்படுகிறதோ அந்த நிலம் அல்லது பாகத்தை குறிப்பிட்ட வேறே யாதொரு சமுதாய காரியத்துக்காக உபயோகிக்கும்படியாகிலும்,

(ii) ஷை நிலமாவது பாகமாவது யாதொரு சமுதாய காரியத்துக்காக வேண்டியிராதபட்சத்திலே, அந்த நிலத்தினுள்ள அனந்தர வாரிசு பாத்தியதையானது சந்நதிலாயினும் ஹக்குச்சிட்டிலாயினும் வேறே தானபத்திரத்திலாயினும் வெளிப்படையாகவோ அல்லது குறிப்பாகவோ கண்டிருக்கும் ஷரத்துகளின்படி கவர்ன்மென்டாரிடத்திலோ நிலத்துக்குடையவரிடத்திலோ சங்கிரமிப்பதற்கேற்ற பிரகாரம் கவர்ன்மென்ட் ரயத்துவாரி நிலமாகவாவது நிலத்துக்குடையவரின் ரயத்தி நிலமாகவாவது அதை மாற்றும்படியாகிலும், எழுத்துமூலமான உத்தரவைக்கொண்டு கட்டளையிடலாம்:

ஆனால், மேலேகண்டபடி நிர்ணயித்து யாதொரு உத்தரவு பிறப்பிப்பதற்கு முன், டிஸ்டிரிக்ட் கலெக்டரானவர் - ஷை நிலத்தையாவது பாகத்தையாவது உபயோகிப்பது விஷயமாய் நிலத்துக்குடையவருக்காகிலும் ரயத்துகளுக்காகிலும் மாமூலாய் ஏற்பட்டிருக்கும் வேறே எவையேனும் பாத்தியதைகளை கிரமமாய்க் கவனிக்கவேண்டும்; மேலும், அவர் - மேலேகண்டபடி நிர்ணயித்துப் பிறப்பித்த உத்தரவு அமுலுக்குக்கொண்டுவரப்பட்டால், ஷை பாத்தியதைகளைச் செலுத்துவதற்காக வேறே விதமாய்ப் போதுமானபடி ஏற்பாடு செய்யப்படுமென்று தெரிந்து திருப்தியடையவேண்டும்:

மேலும், 3-வது பிரிவைச்சேர்ந்த (16) குறிப்பிட்ட பகுதியில் கண்ட (a) அடையாளமிட்ட உட்பகுதியில் குறிப்பிட்டிருக்கும் விவரப்படியுள்ள எந்த நிலத்திலிருக்கும் அவந்தர வாரிசு பாத்தியதையானது சந்நதிலாவது ஹுக்குச் சீட்டிலாவது வேறே தானபத்திரத்திலாவது வெளிப்படையாகவோ குறிப்பாகவோ கண்டிருக்கும் ஷரத்துகளின்படி நிலத்துக்குடையவரிடத்தில் சங்கிரமிக்கிறதோ அப்படிப் பட்ட யாதொரு நிலத்தின் விஷயத்திலே, நிலத்துக்குடையவரின் சம்மதத்துடன் மாத்திரமே (b) குறிப்பிட்ட பகுதியைச் சேர்ந்த (i) அடையாளமிட்ட உட்பகுதியின்படி யாதொரு உத்தரவு பிறப்பிக்கவேண்டும்.

(2) (1) குறிப்பிட்ட உட்பிரிவைச் சேர்ந்த (b) அடையாளமிட்ட பகுதியின்படி டிஸ்டிரிக்ட் கலெக்டரால் எழுத்து மூலமாய்ப் பிறப்பிக்கப்பட்ட உத்தரவில்லாமல், 3-வது பிரிவைச் சேர்ந்த (16) குறிப்பிட்ட பகுதியில் கண்ட (a), (b) அடையாளமிட்ட உட்பகுதிகளில் குறிப்பிட்டிருக்கும் காரியங்களில் எதற்காகவாவது பிரத்தியேகமாய் விடப்பட்டிருக்கும் எந்த நிலத்தையும் வேறே எந்தக் காரியத்துக்காகவும் கொடுக்கவுங்கூடாது உபயோகிக்கவுங்கூடாது. அப்படிப் பட்ட யாதொரு நிலத்தை உபயோகிப்பது விஷயமாய் நிலத்துக்குடையவருக்காவது ரயத்துகளுக்காவது மாமூலாய் ஏற்பட்டிருந்த பாத்தியதைகளுக்கு இந்த உட்பிரிவில் கண்டதெதனாலும் பாதகம் உண்டாகவுமாட்டாது, பாதகம் உண்டாவதாக கருதப்படவுமாட்டாது, அப்படிப்பட்ட பாத்தியதைகள் இல்லாமற்போய்விடவுமாட்டா, அப்படிப்பட்ட பாத்தியதைகள் இல்லாமற்போய்விடுவதாகக் கருதப்படவுமாட்டா.

*சமுதாய காரியத்துக்காக நிலமெடுத்துக்கொள்ள டிஸ்டிரிக்ட் கலெக்டருக்குள்ள அதிகாரம்.*

**20 B.** (1) 3-வது பிரிவைச் சேர்ந்த (16) குறிப்பிட்ட பகுதியில் கண்ட (b) அடையாளமிட்ட உட்பகுதியில் சொல்லியிருக்கும் காரியங்களில் எதற்காகவும் யாதொரு நிலம் பிரத்தியேகமாய் விடப்படவில்லையென்றாகிலும், அந்தப்படி பிரத்தியேகமாய் விடப்பட்ட அல்லது உபயோகிக்கப்பட்ட யாதொரு நிலமானது அந்தக் காரியத்துக்கு போதவில்லையென்றாகிலும் டிஸ்டிரிக்ட் கலெக்டர் தெரிந்து திருப்தியடைந்தால், அவர் - அந்தநிலத்துக்குடையவருக்கும் அதனால் பாதிக்கப்படும் இதர நபர்கள் எவர்களாகிலும் இருந்தால் அவர்களுக்கும் நோடிஸ் கொடுத்த பிறகும் தமக்குத் தகுதியாகத் தோற்றும் விசாரணை செய்த பிறகும், பிரஸ்தாப காரியத்திற்காக வேண்டியிருக்கும் நிலத்தையோ அல்லது அதிகப்படியான நிலத்தையோ நிர்ணயித்து, 1894-ம் வருஷத்து நிலமெடுத்துக்கொள்வதற்கான ஆக்டின்படி அந்த நிலத்தை எடுத்துக்கொள்வதற்காக பிரதேச கவர்ன்மென்டாருக்கு விண்ணப்பம் செய்துகொள்ளலாம். அந்தப்படி விண்ணப்பம் செய்துகொள்ளப்படுவதன்மேல், பிரதேச கவர்ன்மென்டார் - உத்தரவு பிறப்பித்து அதன் மூலமாய், ஷெடி ஆக்டின்படி அந்த நிலத்தை எடுத்துக் கொள்வதற்காக தக்கபடி ஏற்பாடு செய்யும்படி டிஸ்டிரிக்ட் கலெக்டருக்கு கட்டளையிடலாம். அதன்மேல், ஷெடி ஆக்ட் 7-வது பிரிவின்படி பிரதேச கவர்ன்மென்டார் கலெக்டருக்குக் கட்டளையிட்டிருந்தால் எப்படியோ அப்படியே அந்த ஆக்டில் கண்ட

நிபந்தனைகள் பிரயோகப்படும்; மேலும், மேலேகண்டபடி அந்த நிலத்தை எடுத்துக்கொண்ட பிறகு, அது எந்தக் காரியத்துக்காக எடுத்துக்கொள்ளப்படுகிறதோ அந்தக் காரியத்துக்காக அதைப் பிரத்தியேகமாய் விடவேண்டும்.

அந்தப்படி நிலத்தை எடுத்துக்கொள்வதற்குச் சம்பந்தப்பட்ட சகல பட்டுபடிகளும் உட்பட அதற்காகப் பிடிக்கும் செலவை, டிஸ்டிரிக்ட் கலெக்டர் நிஷ்கரிஷை செய்யும் சங்கியாபரிமாணப்படி பிரதேச கவர்ன்மெண்டாரும் பிரஸ்தாப நிலம் எந்த விஸ்தீரணத்தில் இருக்கிறதோ அந்த நிலத்தின் விஷயமாய் விசாரணை அதிகாரம் வகிக்கும் யாதொரு பிரதேச அதிகார சபையார் அல்லது சபையார்களும் நிலத்துக்குடையவரும் அதனால் நன்மையடையும் ரயத்துகள் அல்லது இதர நபர்களும் ஏற்றுக்கொள்ளவேண்டும். யாதொரு பிரதேச அதிகார சபையாராவது நிலத்துக்குடையவராவது ரயத்தாவது வேறெநபராவது ஷை செலவுத் தொகையில் தாங்கள் அல்லதுதாம் செலுத்த வேண்டிய பங்கு எதாகிலும் இருந்தால்அதைச் செலுத்தத் தவறிப்போகிற பட்சத்திலே, டிஸ்டிரிக்ட் கலெக்டரானவர்—

(i) யாதொரு பிரதேச அதிகார சபையாரின் விஷயத்தில், நிர்ணயிக்கப்படக்கூடிய விதமாகவும்,

(ii) யாதொரு நிலத்துக்குடையவர், ரயத்து அல்லது வேறெ நபரின் விஷயத்தில், நிலத்தீர்வை பாக்கியை வசூல் செய்யும் விதமாகவும் அந்தப் பங்கை வசூல் செய்யலாம்.

(2) பிரதேச கவர்ன்மெண்டார் இது விஷயமாய் நிர்ணயிக்கக்கூடிய விதிகளுக்குட்பட்டு, இந்தப்பிரிவின்படி யாதொரு ரயத்து செலுத்தவேண்டியதாயிருக்கும் ஷை செலவுத் தொகையின் பங்கு எதாகிலும் இருந்தால் அது

வும் அதற்கு வருஷம் ஒன்றுக்கு நூற்றுக்கு ஆறு விதம் வட்டியும் சேர்த்து டிஸ்டிரிக்ட் கலெக்டருக்கு யுக்தமாகத் தோற்றுகிற பட்சத்திலே வருஷாந்த வாயிதாக்களாகச் செலுத்தப்படும்படி ஏற்பாடு செய்யலாம்; அந்தப்படி செலுத்தவேண்டிய வாயிதாத் தொகைகளை, அந்தந்த காலத்தில் செலுத்தப்பட்டு வரும் குத்தகைத்தொகைகளை கிரமப்படி கவனித்து நிஷ்கரிஷை செய்யவேண்டும்.

## குறிப்புகள்.

20, 20-A. 20 B. பிரிவுகள் சமுதாய நிலங்களைப்பற்றி கூறுகின்றன. அவைகளை அனுபவிப்பது, எடுத்துக் கொள்வது, இது விஷயமாய் பழைய 20-வது பிரிவில் உள்ள அம்சங்கள் போதாதென்று கவனித்து 20. 20 A. 20 B. பிரிவுகளில் நூதன ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

இந்தப் பிரிவுகளில் "கலெக்டர்" என்னும் பதத்திற்கு ரெவின்யு டிவிஷனல் ஆபிஸர் என்றர்த்தமாகும். அவரிடத்தில் தான் ஒரு மனு மூலமாக இப்பிரிவுகளில் வேண்டிய பரிகாரங்களைத் தேடிக் கொள்ளலாகும்.

ஒரு ஜமீன்தாரருக்கு தனது எஸ்டேட்டில் உள்ள தரிசு நிலங்களிலும் ஏரி புறம்போக்குகளிலும் சொந்த உரிமை உண்டுதான் 51 I. C. 899. ஆனால் அத்தகைய நிலங்களை ரயத்துகள் வாலாயமாக உபயோகப்படுத்துவதை ஜமீன்தார் தடை செய்வதற்கில்லை. 1. I. A. 364.

சென்னை எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்ட் என்னும் சட்டத்தில், நீர்ப்பாய்ச்சலுக்காக உள்ள ஏரிகளுக்கும் சிறிய குளம் அல்லது குட்டை அல்லது ஊரணிகளுக்கும் இவைகளின் அடி நிலத்தின் உள்வாய் விஷயமாக யாதொரு வித்தியாசம் கிடையாது. ஆகையால் இவைகளில் யாவற்றிலும் உள்ள நிலங்களை நிலஸ்வான்தாரர் அந்த சட்டத்தில் 20-வது பிரிவில் சொல்லியிருக்கிற பிரகாரம் விநியோகப்படுத்தலாம்.

ஒரு கிணற்றிலிருந்து ஜலம் எடுத்துக்கொள்வதற்கும் அதில் ஸ்நானம் செய்வதற்கும் உள்ள அனுபவ பாத்தியதையானது அந்தக் குளத்தினருகில் உள்ள ஒரு ஸ்தலத்தின் ஜனங்களால் அடையப்படலாம். ஆனால், அந்த குளமானது அசிரத்தையினாலோ அல்லது வேறே சாதாரண காரணத்தினாலோ 20 வருஷங்களுக்கு மேலாக உபயோகப்படுத்தப்படுவதற்கு அர்கமில்லாமலிருக்கும் பக்ஷத்தில் ஈஸ்மெண்ட்ஸ் ஆக்டின் 44, 47 இந்த பிரிவுகளின்கீழ் அந்தபாத்தியதையானது போய் விடப்பட்டதாக கவனிக்கப்படும். அகில இந்தியா லா ஜர்னல் பத்திரிகை. 2-ம் வால்யம் கேஸுகளின் குறிப்புகள் பக்கம் 104.

ஒரு ஜமீன்தாரி ஏரியின் அடித்தரையில் சில மேலானபாகமானது மழை காலத்தில் சாதாரணமாக மூழ்கியும் மற்ற காலத்தில் பயிர் வழிக்கு உபயோகப்பட்டும் வந்தது. இந்த சந்தர்ப்பங்களில் அப்படி பயிரிடப்பட்ட நிலமானது கைப்பற்று நிலமாக மாறிவிட்டதாக கருதப்படுமா வென்று கேள்வி கிளம்பினதில், அந்த நிலங்கள் அவ்வப்பொழுது ஜமீன்தாரரால் பயிர் வழிக்கு விடப்பட்டதினாலேயே அது ஒரு கைப்பற்று நிலமாக போய் விடாதென்றும் சட்டத்தின் பிரகாரம் ஒரே நிலமானது ஒரு காலத்தில் கைப்பற்று நிலமாகவும் (Ryoti land) மற்றொரு காலத்தில் ஏரியின் அடித்தரையாகவும் இருப்பதற்கில்லையென்றும் தீர்மானிக்கப்பட்டது. அகில இந்தியா லா ஜர்னல் பத்திரிகை 5-வது வால்யம் 410-வது பக்கம்.

சமுதாய நிலங்களை விதிக்கு விரோதமாக அனுபோகத்தில் வைத்திருக்கும் நபர்களை நீக்குவது.

**21.** யாதொரு நபர் 3-வது பிரிவைச்சேர்ந்த (16) குறிப்பிட்ட பகுதியில் கண்ட (a) (b) அடையாளமிட்ட உட்பகுதிகளில் சொல்லப்பட்டிருக்கும் நிலங்களில் எதையாவது அந்த நிலம் எந்தக்காரியத்துக்காகப் பிரத்தியேகமாய் விட்டுவைக்கப்பட்டிருக்கிறதோ அந்தக் காரியம் தவிர வேறே யாதொரு காரியத்துக்காகவாவது பிரதேச கவர்ன்மெண்டாரால் ஏற்படுத்தப்பட்ட விதிகளுக்கு விரோதமாக

வாவது அனுபோகத்தில் வைத்திருந்தால், அவரை அந்தப்படி எதுமுதல் அனுபோகத்தில் வைத்திருந்தாரோ அதிலிருந்து முப்பது வருஷத்துக்குள்ளாக எப்போதாகிலும் 1905-ம் வருஷத்திய சென்னப்பட்டணத்து நிலம் ஆக்கிரமிப்பதைப்பற்றிய ஆக்டில் நிபந்தனை கண்டிருக்கிறவிதமாகக் கலெக்டர் சுருக்கவகையாய் நீக்கலாம்; மேலும், அந்த நிலத்தில் பயிர் செய்திருக்கக்கூடிய யாதொரு மாசூல் அல்லது வேறே விளைபொருளையாவது, அந்த நிலத்தின்மேல் ஏற்படுத்திருக்கக்கூடிய யாதொரு கட்டுக்கோப்பையாவது, அதன் மேல் சேர்த்து வைத்திருக்கக்கூடிய யாதொரு வஸ்துவையாவது, டிஸ்டிரிக்ட் கலெக்டர் எந்த சமுதாய காரியங்களுக்கு உபயோகிக்கவேண்டுமென்று தீர்மானிப்பாரோ அந்த சமுதாய காரியங்களுக்கு உபயோகிக்கவேண்டும்.

*சென்னப்பட்டணத்து நிலம் ஆக்கிரமிப்பதைப் பற்றிய ஆக்டிற்கண்ட நிபந்தனைகளை 20 வது 21-வது பிரிவின்படிககான உத்தரவுகளுக்குப் பிரயோகிப்பது.*

**22.** 1905-ம் வருஷத்திய சென்னப்பட்டணத்து நிலம் ஆக்கிரமிப்பதைப்பற்றிய ஆக்டின் 10 முதல் 14 வரையிலுள்ள பிரிவுகளிற்கண்ட நிபந்தனைகள் இந்த ஆக்டின் 21-வது பிரிவின் படிக்கான உத்திரவுகளுக்கு எவ்வளவு மட்டில் பிரயோகப்படக்கூடுமோ அவ்வளவு மட்டில் பிரயோகப்படவேண்டும்.

*இனும் கிராமங்கள் பூஸ்திதிகளென்று நிச்சயமாய்க்கொள்வது.*

**23.** யாதொரு வியாஜ்ஜியம் அல்லது நடவடிக்கையில், ஒரு இனும் கிராமமாவது இனும் கிராமத்திலிருந்து பிரிக்கப்பட்டிருக்கும் ஒரு பாகமாவது பூஸ்திதிகளிலுள்ள

நிலத்தைப்பற்றிய சென்னப்பட்டணம் 1934-ம் வருஷத்து (இரண்டாவது திருத்த) ஆக்ட் வழங்கத்தொடங்குவதற்கு முன் இருந்தபடியுள்ள இந்த ஆக்டின் தாற்பரியப்படி பூஸ்தியாயிருந்ததா இல்லையா என்று தீர்மானிப்பது அவசியமாய் விட்டிருக்கிற விஷயத்திலே, இதற்கு விரோதமாய் ருசு செய்யப்படுகிறவரையில், அந்த கிராமம் அல்லது அதன் பாகம் பூஸ்தியாயிருந்ததென்று நிச்சயமாய்க் கொள்ளப்படும்.

குறிப்புகள்.

இந்தப் பிரிவானது 1935-ம் வருஷத்திய இரும்தார் சட்டத்தினால் அமைக்கப்பட்டது.

## 3-ம் அத்தியாயம்.

## ரயத்துகள் செலுத்தத்தக்க குத்தகைத்தொகை வீதங்களுக்குச் சம்பந்தப்பட்ட பொதுவான நிபந்தனைகள்.

இந்த அத்தியாயமானது 24 முதல் 49 வரையிலுமுள்ள பிரிவுகளை அடங்கியுள்ளது. இதில் ரயத்துகள் செலுத்தக்கூடிய ரெண்ட் சம்பந்தமான நிபந்தனைகள் அடங்கியுள்ளன. 30, 38, 40 பிரிவுகள் தான் முக்கியமான பிரிவுகளாகும்.

அதிகப்படுத்துவதைப்பற்றி நிர்ப்பந்தம்.

**24.** ஒரு ரயத்து செலுத்தவேண்டிய குத்தகைத் தொகையை இந்த ஆக்டில் நிபந்தனைகண்டிருக்கிறபடிக்கல்லாமல் மற்றப்படி அதிகப்படுத்தக்கூடாது.

குறிப்புகள்.

இந்தப் பிரிவானது ரயத்துகளுக்காக எற்பட்ட பிரிவுகளில் ஒன்றாகும். இது கட்டாயமான ஒரு நிபந்தனையாகும். இந்த ஆக்டின் இதர நிபந்தனைகளை அனுசரியாமல், உதாரணமாய்

30 வது பிரிவின்கீழ் ரெண்டை அதிகப்படுத்துவதற்காக நடவடிக்கையொன்றும் எடுத்துக்கொள்ளாமல் ரென்டை அதிகப்படுத்துவது செல்லத்தக்கினதல்ல. அம்மாதிரி ரயத்தும் நிலத்துக்குடையவரும் சேர்ந்து ஒப்புக்கொண்டபோதிலும் அதாவது ஒரு அக்ரிமென்ட் மூலமாக ஒப்புக்கொண்ட போதிலும் அதை செலாவணியாக்குவதற்கில்லை. 1934 A. I. R. Mad. 454.

ஒரு ஜமீன்தாரரானவர் 30-வது பிரிவின் கீழ் யாதொரு நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளாமல் பட்டா மூச்சிலிக்கை மாறுதல் மூலமாக ரெண்டை உயர்த்தும் பக்ஷத்தில் 112-வது பிரிவின் கீழ் அவர் ஜப்தி நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டபோதிலும் ரயத்தானவர். ஆக்ஷேபித்து அதிகமாகக் கேட்ட ரெண்டு தொகை வரையிலும் ஜப்தி செல்லாது என்று தாவா செய்து வாதிக்கலாம் 63 M. L. J. 575.

தானியவாரி தீர்வையிலிருந்து ரொக்க குத்தகையாகவோ அல்லது ரொக்க தீர்வையாகவோ மாற்றுவதும் ரொக்கதீர்வையிலிருந்து தானியவாரி தீர்வையாகமாற்றுவதும் ரென்ட் அதிகப்படுத்தலாக கருதப்படலாம். 12 L.W 86.

ஒரு ரயத்து கவர்ன்மென்டுக்குச் சொந்தமான ஏரியிலிருந்து தன்னுடைய நிலத்துக்கு ஜலம் எடுத்துக் கொண்டார். அந்த ரயத்து ஜமீன் ரயத்தாகையால் கவர்ன்மென்டானது ஜமீன்தாரரிடம் அந்த ஜலத்திற்காக நீர் இறை (Water Cess) விதித்து தொகையை வாங்கிவிட்டனர். அந்த தொகையை வரப்பெறுவதற்கு ஜமீன்தார் ரயத்தின் பேரில தாவா செய்ததில் அந்த தொகை இப்பிரிவின் கீழ் அதிகதொகையாக கருதப்படுமோ என்று கேள்வி வந்தது. ஹைக்கோர்ட்டார் அவர்கள் இது அப்படிப்பட்ட அதிக தொகையல்லவென்றும் எப்படியிருந்த போதிலும் இது 30-வது பிரிவின் கீழ் வரக்கூடிய ஒரு பரிஹாரம் அல்லவென்றும் தீர்மானித்தனர். துரைசாமி குருக்கள் vs. சுப்பரமணிய குருக்கள் (பூரண பெஞ்சு தீர்மானம். M. L. J. 361.

சேர்மாதேவி தாலூக்காவில் ஒரு இனாம் கிராமத்தில் பழமை தொட்டு ரென்டானது தானிய ரூபமாக கொடுக்கப்பட்டு வந்தது.

பிறகு அதை ரொக்க ரெண்டாக ஒரு கலெக்டர் தயா விஷயமாக மாற்றினார். அதன் பிறகு கொஞ்சபாகம் வரைக்கும் தான்னியமாக மாற்றப்பட்டது. ஏனென்றால் டை இனும் சத்திரத்திற்கு தானியம் வேண்டுமென்று அம்மாதிரி செய்யப்பட்டது. இதே மாதிரியாக 32 வருஷகாலமாக இருந்து வந்தது. அதன் பிறகு நிலத்துக்குடையவர் ரோட்டு செஸ் என்னும் இறைத்தொகை விதித்தார். இது ரென்ட் அதிகப்படுத்தினதாகுமா என்றும் இதற்காக எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டின்படி தாவா செய்யாமல் கொஞ்ச பாகம் வரையிலும் ரென்ட்டை தானியமாக மாற்றினது செல்லாதா என்றும் கேள்வி வந்ததில் ஆதியில் ஏதோ தயா விஷயமாய் செய்ததை ஒரு ஆதாரமாகக் கொண்டு ரயத்துகள் அப்படி சொல்வதற்கில்லையென்றும் ரென்டை மாற்றக்கூடாது என்று யாதொரு ஏற்பாடு அல்லது காண்ட்ராக்ட் கிடையாதென்றும் இந்த சந்தர்ப்பங்களில் ரென்ட் அதிகப்படுத்தப் பட்டதாக ஏற்படாது என்றும் தீர்மானிக்கப்பட்டது. சீனியாப் பிள்ளை vs. சேர்மாதேவி தாலூக்கா போர்டு 33 L. W. 70

ஒரு ஜமீன்தாரியில் ரயத்தும் ஜமீன்தாரும் 1904லிலும் 1905 லிலும் பட்டா முசசில்க்கா மாற்றிக்கொண்டார்கள். அந்தப்பட்டாக் களில் அவை சாஸ்வதமான பட்டாவென்று கண்டிருந்தது. ரயத் தினிட சுவாதீனததில் உள்ள நிலமானது இவ்வளவு என்று தோரா யமாக கணக்கிடப்பட்டு அதன் பேரில் ரெண்ட்டானது நிர்ணயிக்கப் பட்டது. பட்டாவில் ஒரு ஷரத்து இருந்தது. அதாவது, நிலத்தை சரியாக அளந்து பார்க்கும் காலதது விஸ்தீரணமானது ஏறினாலும் குறைந்தாலும் அதற்குத்தக்கபடி ரெண்ட்டை அதிகப்படுத்துவதோ அல்லது குறைப்பதோ இவைகளில் எதையாவது செய்து கொள்ள லாம் என்றும் ஷரத்துகள் இருந்தன. சர்வே காலத்தில் வாஸ்தவ மான விஸ்தீர்ணமானது அதிகமாயிருந்ததாக ஏற்பட்டது. அதன் பேரில் ஜமீன்தார் ரெண்டை அதிகப்படுததி சென்னை எஸ்டேட்ஸ் லாண்ட் ஆக்டின் 77-வது பிரிவின் கீழ் தாவா செய்தார். அதன் பேரில், பிரதிவாதியானவர் ஜமீன்தார் 30-வது பிரிவின் கீழ் ரெண் ட்டை அதிகப்படுத்துவதற்காக தாவா செய்து பரிஹாரம் பெற்ற பிறகுதான் 77-வது பிரிவின் கீழ் ரெண்ட்டுக்காக தாவா செய்ய

வேண்டும் என்று ஆக்ஷேபித்தார். இது விஷயமாக ஜமீன்தார் செய்திருக்கும் தாவாவானது எத்தகையானதென்று கேள்வி வந்ததில் பின்வருமாறு தீர்மானிக்கப்பட்டது.

ஜமீன்தார் செய்திருக்கும் தாவாவானது சென்னை எஸ்டேட்ஸ் லாண்ட் ஆக்டின் 24-வது பிரிவின் அர்த்தக்கொள்கைக்குள் அதிகமான ரெண்டுக்காக செய்யப்பட்ட தாவாவென்று கருதப்படாது. ஆனால் பட்டாவின் ஷரத்து பிரகாரம் சரியான ரெண்டுக்காக செய்யப்பட்ட ஒரு தாவாவாகும். இப்படிப்பட்ட தாவாவைச்செய்வதற்கு சென்னை எஸ்டேட்ஸ் லாண்ட் ஆக்டின் 42-வது பிரிவானது ஒரு தடையாகாது. ஷை 42-வது பிரிவானது விஸ்தீரணத்தில் அதிகமாகும் சொத்தைப்பற்றியே கூறுகிறதொழிய ஒரே கைப்பற்று பூமியில் அளந்ததின் பேரில் அதிக விஸ்தீர்ணம் காணப்படுவதைப்பற்றி கூறவில்லை. அகில இந்தியா லா ஜர்னல் வால்யம் 5 கேஸுகளின் குறிப்புகள் பக்கம் 69.

இந்த ஆக்ட் வழங்கத்தொடங்கின பிறகு ரயத்தி நிலத்தை
ஸ்வாதீனத்தில் வைத்துக்கொண்டிருக்க அனுமதி
பெறுவதன்மேல் செலுத்தத்தக்க குத்தகைத்
தொகை.

**25.** ரயத்தி நிலத்தை ஸ்வாதீனத்தில் வைத்துக்கொண்டிருக்க இந்த ஆக்ட் வழங்கத்தொடங்கின பிறகு பிறகு நிலத்துக்குடையவரால் அனுமதி கொடுக்கப்பட்டிருக்கும் யாதொரு ரயத்து, இந்த ஆக்டில் வேறே விதமாய் நிபந்தனை கண்டிருந்தாலன்றி மற்றபடி அக்கம் பக்கத்தில் ஷை நிலத்துக்குள்ள அனுகூலங்களைப்போன்ற அனுகூலங்களை பொருந்தியுள்ள அதே மாதிரியான நிலங்களுக்குவிதிக்கப்படுகிற விதத்துக்கு அதிகப்படும் ஒரு விகிதத்தின்படியாவது, அப்படிப்பட்ட விகிதத்தைத் தெரிந்துகொள்ளமுடியாத விஷயத்திலே விண்ணப்பம் செய்துக் கொள்ளப்படுவதன்மேல் கலெக்டர் நியாயமானதும் தருமமானதுமென்று தீர்மானிக்

கக்கூடிய விதத்திற்கு அதிகப்படும் ஒரு விதத்தின்படியா வது குத்தகைத்தொகை செலுத்தக்கடமைப்பட்டவராக மாட்டார்.

(நிலத்தை) ஸ்வாதீனத்தில் வைத்துக்கொண்டிருக்க ரயத்துக்கு அனுமதிகொடுக்கும்போது யாதொரு ப்ரிமியம் (மேல்வாசி) பெற்றுக்கொள்வதற்கு இந்த பிரிவிலுள்ளதெத னாலும் நிலத்துக்குடையவருக்குத் தடையுண்டாகமாட் டாது; ஆனால், அந்தப்படி அனுமதி கொடுக்கப்பெற்ற ரயத்து - எவ்வித சந்தர்ப்பமாயிருந்தாலுஞ்சரி, அப்படிப் பட்ட அனுமதி பெறுவதற்காக ப்ரிமியமாகவோ வேறே ஜேவஜாகவோ தாம் ஸ்வாதீனம் பெற்ற பிறகு அந்த நிலத் துக்குடையவருக்கு எதுவும் செலுத்துவதற்குட்பட்டவராக மாட்டார்; அல்லாமலும், அப்படிப்பட்ட யாதொரு ப்ரிமி யம் அல்லது ஜேவஜு விஷயமாகவாவது அதன் யாதொரு பாகத்தின் விஷயமாகவாவது அந்த ரயத்தின் எந்தக்கைப் பற்று நிலத்தையும் எவ்வித பொறுப்புக்காகிலும் உட்படுத் தக்கூடாது.

## குறிப்புகள்.

இந்தப் பிரிவில் 1-வது பாராவில் "இந்த ஆக்டில் வேறே வித மாய் நிபந்தனை கண்டிருந்தாலன்றி பற்றப்படி" என்னும் பதங்கள் 1934-ம் வருஷத்திய திருத்த சட்டத்தினால் ஏற்பட்டன. இதன் காரணம் 6-வது பிரிவின் சில விலக்குகள் இருப்பதுதான்.

தாவா நிலத்தின் மேல்வாரத்தை வாதி பிரதிவாதிகளின் முன் னோர்களுக்கு ஊழியத்திற்காக இனாமாகக் கொடுத்திருந்தார். அது ரயத்தி நிலம். 1914-ம் வருஷத்தில் வாதி தாவா இனாமை ஜமை கட்டிவிட்டார். அது விஷயமாக உபயதரத்தாருக்கும் வியாஜ்ஜியம் நடந்து கடைசியாக சிவில் கோர்ட்டார் 1918-ம் வருஷத்தில் வாதி இனாமை நீக்கி ஜமை கட்டினது சரிதான் என்று தீர்மானித்தார்கள்.

ளாதி 1914-ம் வருஷத்தில் ஜமை கட்டினது முதல் தனக்கு ரெண்ட் சேரும்படி எஸ்டேட்ஸ் லாண்ட் ஆக்டு செக்ஷன் 77 பிரகாரம் தாவா செய்தார். பிரதிவாதிகள், இனும் அமுலில் இருந்தகாலத்தில் யாதொரு ரெண்ட்டும் கொடுபடவில்லை யென்றும், யாதொரு ரெண்ட்டும் இவ்வளவென்று நிச்சயிக்கப்படாததினால், ரெண்ட்டு நிச்சயிக்கப்படும் வரையிலும் ரெண்ட்டுக்காக தாவா செய்வது செல்லாது, என்றும் வாதித்தார்கள்.

ஹைகோர்ட்டார் அவர்கள் எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டில் ரெண்டுக்காக தாவா செய்யப்படுமுன் அது இவ்வளவு என்று நிர்ணயிப்பதற்காக யாதொரு தனிமையான கோட்பாடுகள் கிடையாதென்றும், இம்மாதிரி ரெண்ட்டும் இவ்வளவு வென்று செக்ஷன் 25-ன் கீழாவது 30-ன் கீழாவது 45-ன்கீழாவது நிர்ணயிக்கப்பட்டிராத பக்ஷத்தில் செக்ஷன் 77-ன் கீழ் தாவா செய்யப்பட்டதானால் கோர்ட்டார் இவ்வளவு தொகைதான் சேரவேணுமென்று ஒரு தீர்மானத்திற்கு வரவேண்டும் என்று தீர்மானித்திருக்கிறார்கள்.

இன்னும் தாவா நிலத்தின் ரெண்ட்டை எம்மாதிரி ஏற்படுத்துவது என்னும் அம்சம் கேள்விக்கு வந்ததில், அக்கம் பக்கத்தில தாவா நிலங்களுக்குச் சமானமாக உள்ள நிலங்களுடைய விகிதத்தையறிந்து அதைக்கொண்டு தான ஒருவித ஏற்பாட்டுக்கு வரவேண்டும் என்றும் ஒரு ரயத்துநிலத்தில் புதியதாகசேரும ரயத்து எவ்விதமாக ரெண்டு கொடுக்கும்படி ஏற்படாகுமோ அதே மாதிரி தான் இந்தக் கேஸிலும் மாஜி இனும்காரர்கள் தொகை செலுத்த வேண்டும் என்றும் தீர்மானித்திருக்கிறார்கள்.

முதலில் செக்ஷன் 77-ன் கீழ் ஒரு தாவாவை நடத்தும் கோர்ட்டு தான் செக்ஷன் 25-ன் கீழ் ஒரு ரயத்து அக்கம்பக்கம் நிலங்களில் உள்ள தீர்வைப்போல் செலுத்த வேண்டு மென்பதையும் 45-ன் செக்ஷன் கீழ் நிலத்திற்கு என்ன தீர்வை அல்லது ரெண்ட் உண்டு என்பதையும் தீர்மானித்து உத்தரவு செய்யவேண்டும். இவ்விரண்டையும் கீழ் கோர்ட்டு செய்ய முடியாமற்போ

னால் தான், கலெக்டரிடம் ரெண்டு இவ்வளவென்று நிர்ணயிக்கும்படி ஒரு விண்ணப்பம் செய்யலாம்.

அகில இந்தியா லா ஜர்னல் பத்திரிகை 1-வது வால்யூம் கேசுகளின் குறிப்புகள் பக்கம் 79.

ஒரு எஸ்டேட்டில் நிலஸ்வான்தாரருக்கும் ரயத்துக்கும் பட்டா முச்சிலிக்கா மாற்றிக்கொள்ளப்பட்டு ஆனால், அவைகளில் ரயத்து கவர்ன்மெண்டினுடைய ஜலத்தைக்கொண்டு தன்னுடைய பட்டா நிலத்தில் நெற்பயிர் செய்யும் பக்ஷத்தில் என்ன விதமான ரெண்ட்டு கொடுப்பது என்பதைப்பற்றி யாதொன்றும் காணப்படாமலிருந்து வந்தால் அவர் பட்டா பெற்ற காலம் முதல் அவர் கவர்ன்மெண்டினுடைய ஜலத்தைக்கொண்டு நஞ்சை பயிர் செய்தபோதிலும் தாழ்ந்தரேட் விகிதமே ரெண்ட்டு கொடுத்து வந்திருப்பதாக ஏற்படும் பக்ஷத்தில், நிலஸ்வான்தாரர் அதிக ரேட்விகிதம் ரெண்ட் கொடுக்கப் படவேண்டுமென்று வற்புறுத்துவதற்கில்லை. எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டின் 27, 28 பிரிவுகளின் பிரகாரம் உபயபார்ட்டிகளுக்குள் நடந்திருக்கும் நடத்தையைக் கொண்டே நிலஸ்வான்தாரர் அந்த தாழ்ந்த ரேட்டுக்கு ஒப்புக்கொண்டார் என்பதை அறியலாம். இன்னும் இம்மாதிரியான கேஸுகளில் பட்டாவும் முச்சலிக்காவும் இவைகள் மாத்திரம் தான் சாக்ஷியமாக கவனிக்கப்படவேண்டும் என்று சொல்வதற்கில்லை.

ஆனால் இந்த கேஸில் வேறொரு கேள்வி வந்தது. அதாவது கலெக்டரானவர் சென்னை எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டின் 25-வது பிரிவைக்கொண்டு தனக்கு எப்படி யுக்தமென்று தோன்றினதோ அப்படி சில நிதானங்களைக் கொண்டு ஒரு வித தீர்வையை ஏற்படுத்தலாமா என்னும் கேள்வி வந்தது. ஹைகோர்ட்டார் அவர்கள் இந்த சந்தர்ப்பங்களில், உபயபார்ட்டிகளுக்குள் ஏற்கெனவே பட்டா முச்சலிக்கை இவை மூலமாக வெளிப்படையாகவோ அல்லது மறைவாகவோ ஒரு வித ஏற்பாடு இருப்பதால், மேற்சொன்ன 25-வது பிரிவின் கீழ் கலெக்டர் தமது அதிகாரத்தை பிரயோகிப்பதற்கில்லை யென்று தீர்மானித்திருக்கின்றனர். அகில இந்தியா லா ஜர்னல் பத்திரிகை வால்யூம் 2 கேசுகளின் குறிப்புகள் பக்கம் 103.

கரம்பு நிலத்தை சாகுபடிக்கு லாயக்காக இருக்கும்படி செய்வதை உத்தேசித்து அல்லது கைப்பற்று நிலத்தின்பேரில் சீர்திருத்தம் செய்வதை உத்தேசித்து முதலில் குறைந்த விதமாக நிர்ணயிக்கப்பட்ட குத்தகையை உயர்த்துவது.

**26.** (1) பூஸ்திதியில் உள்ள கரம்பு நிலத்தை திருத்தி சாகுபடிக்கு லாயக்காக செய்வதன் பொருட்டாவது அல்லது கைப்பற்று நிலத்தில் யாதொரு சாஸ்வதமான சீர்திருத்தத்தைச் செய்வதற்காவது அல்லது மரங்களை நடுவதற்காவது அல்லது இந்த ஆக்ட் வழங்கத்தொடங்குவதற்கு முன் யாதொரு ப்ரிமியம் (மேல்வாசி) கடன் அல்லது மதிப்புள்ள பிரதிபலனுக்காக செய்து கொள்ளப்பட்ட ஒரு ஒப்பந்தத்தை யொட்டியாவது, ஒரு ரயத்தானவர், தன்னுடைய நிலத்துக்குடையவருடன் அந்த நிலத்துக்காக அதற்கு முன்னே செலுத்தக்கூடிய சட்ட சம்மதமான விகிதத்தை விட குறைவான ஒரு விகிதமுள்ள குத்தகைத்தொகைக்கு அல்லது அதேமாதிரியான சுபாவமுள்ளதும் அதேமாதிரியான சௌகரியங்கள் உள்ளதுமான அக்கம்பக்கத்திலுள்ள நிலங்களுக்கு செலுத்தத்தக்க விகிதத்தைவிட குறைவான விகிதமுள்ள ஒரு குத்தகைத்தொகைக்கு பட்டா பெற்றுக்கொண்டிருந்தால் அல்லது ஒரு ஏற்பாடு செய்துகொண்டிருந்தால், அப்படிப்பட்ட ரென்ட் அல்லது குத்தகைத்தொகையானது, ரயத்தானவர், எந்த ஷரத்துகளின் பேரிலும் எந்தக்காரியங்களுக்காகவும் அப்படிப்பட்ட குறைவான குத்தகைத்தொகைக்கு விடப்பட்டதோ அவைகளை முக்கியாம்சத்தில் நிறைவேற்றிக்கொண்டுவரும் வரையிலும், காண்ட்ராக்ட் பிரகாரமோ அல்லது ஆசாரப்படியோ எந்தக் கால அளவு வரையிலும் அப்படிப்பட்ட குறைந்த விகிதமானது செலுத்தப்படத்தக்கதோ அந்தக்கால அளவுக்குள் அதிகப்படுத்தப்படக்கூடாது.

(2) அப்படிப்பட்ட குறைந்த விகிதமுள்ள குத்தகைத் தொகையானது செலுத்தப்படத்தக்க கால அளவானது கழிந்த பிறகு அல்லது எந்த ஷரத்துகளின்பேரில் அப்படிப் பட்ட குறைந்த விகிதமானது ஒப்புக்கொள்ளப் பட்டதோ அவைகளும் எந்த காரியங்களுக்காக அப்படிப் பட்ட குறைந்த விகிதமானது ஒப்புக்கொள்ளப்பட்டதோ அவைகளும் முக்கியாம்சத்தில் நிறைவேற்றப்படாவிட்டால் நிலத்துக்குடையவர் பூரண விகிதத்தைப்பெறுவதற்கு பாத்தியதையுடையவராவர்.

(3) (1) குறிப்பிட்ட உட்பிரிவில் நிபந்தனை கண்டிருக்கிறபடிக்கன்றி மற்றப்படி, என்ன குத்தகைத்தொகை வீதப் படி நிலத்துக்குடையவரால் நிலம் கொடுக்கப்பட்டிருக்குமோ அப்படிப்பட்ட வீதமானது அதே நிலத்துக்காவது அக்கம்பக்கத்தில் அதே தன்மையுள்ளதும் அதற்குள்ள அனுகூலங்களைப்போன்ற அனுகூலங்களே பொருந்தியதுமான நிலத்துக்காவது (நிலம்) கொடுக்கப்பட்ட தேதிக்கு முன்னமே ரயத்து சட்டப்படி செலுத்தத்தக்கதாயிருந்த வீதத்தைவிட குறைவாயிருக்கிற பட்சத்திலே, மேலே சொன்ன குத்தகை தொகை வீதமானது நிலத்துக்குடையவரின் வாழ்நாளுக்குப் பிறகு குத்தகைத்தொகைபெற பாத்தியதை யடைந்திருக்கும் நபரைப் பிணைபடுத்தக்கூடியதாகாது.

## குறிப்புகள்.

இந்தப் பிரிவானது யாதொரு நிலத்தின் விஷயமாய் ஒரு ரயத்து ஏற்பாடு செய்து கொண்ட ரேட்டானது அதற்கு விதிக்கப் படக்கூடிய தொகைக்கு குறைவாக உள்ள சந்தர்ப்பங்களில்தான் பிரயோகமாகுமேயொழிய, முதலிலேயே ஒரு தொகைக்கு ஏற்பாடு செய்து கொண்டு பிறகு வரவர சில குறிப்பிட்ட சந்தர்ப்பங்கள் நேர்ந்தபோது ரேன்டானது அதிகமாகக்கூடிய சந்தர்ப்பங்களில் பிரயோகமாகாது 72 I. C. 131. அம்மாதிரி ஏற்பாடு செய்து

கொண்டு பிறகு இந்தப் பிரிவின் பிரகாரம் ரென்டு அதிகப்படுத்தப் படக்கூடாது என்று சொல்வதற்கில்லை.

ஒரு நபர் ராமநாதபுரம் ஜில்லா சூரக்குளம் கிராமத்தில் சில கரம்பு நிலங்களை இஜாரா எடுத்துக் கொண்டார். அந்த இஜாரா கால அளவு 30 வருஷம். அதற்குள் அவர் தன்னிஷ்டப்பிரகாரம் இதரர்களுக்கு கௌல்கள் கொடுத்து அனுபவிக்கலாம். அதன் பிறகு அவர் அந்த நிலங்களுக்கு பாதிவாரம் கொடுக்கவேண்டியிருந்தது. இப்படியிருக்க, அவர் அந்த நிலங்களை பிரதிவாதி பேருக்கு சாஸ்வதமாக குத்தகைக்கு கொடுத்துவிட்டார். அதாவது கால அளவு தன்னுடைய குத்தகை கால அளவுக்கும் மீறியிருந்தது. பிறகு அவர் அதே நிலங்களின் விஷயமாக சாஸ்வத குத்தகை பெற்றுக் கொண்டார். இப்படியிருக்கையில் அவருடைய உரிமைகள் யாவற்றும் கோர்ட்டில் ஏலம் போடப்பட்டு வாதியால் கிரயம் பெறப்பட்டன. ஷை 30 வருஷங்கள் சென்ற பிறகு வாதி பிரதிவாதியை ஷை நிலங்களுக்கு கிரமமாகச் சேரவேண்டிய ரேட்படி ரென்ட் கேட்டார். பிரதிவாதி தனக்கு சாஸ்வத குத்தகை கிடைத்து விட்டதென்றும் அதன் பிரகாரமே தான் தாம் பணம் செலுத்த முடியும் என்றும் மறுக்கவே வாதி தாவா செய்து விட்டார். இந்த சந்தர்ப்பங்களில் மேலே கண்ட 26-வது பிரிவானது பிரதிவாதிக்கு துணை செய்யுமா என்று கேள்வி வந்ததில் இந்தப் பிரிவு பிரயோகமாகாது என்றும் 26-வது பிரிவில் உள்ள மேல்வாசி அல்லது பிரதி பலத்தொகையானது ரென்டைத் தவிர வேறே ஒன்ருக இருக்க வேண்டும் என்றும். இதற்கு முன் அதாவது குத்தகைக்கு முன் அந்த நிலத்தில் யாதொரு வருமானமும் கிடையாதாகையால் ரென்டே அத்தகைய மேல்வாசி அல்லது மதிப்புள்ள பிரதிபலத்தொகையாக கருதப்படவேண்டும் என்று சொல்வது சரியல்லவென்றும் தீர்மானிக்கப்பட்டது. சி. வே. சிதம்பரம் செட்டியார் VS. சொக்கலிங்க நாயகன் 61 M. L. J. 52.

இந்தப் பிரிவில் சொல்லப்பட்டிருப்பதானது 30-வது பிரிவில் சொல்லப்படாதவைகளைப் பொருந்தினதாகும். ஆகையால் இவ்விரண்டு பிரிவுகளுக்கும் யாதொரு சம்பந்தமும் கிடையாது. விடப்பட்ட

நிலங்கள் பூர்வம் பஞ்சர் நிலங்களாக இருந்து மேய்வதற்காக ரெண்ட் கேட்கப்பட்டால் அந்த ரெண்ட் இந்தப் பிரிவின் கீழாவது அல்லது 30-வது பிரிவின் கீழாவது ஒரு ரெண்ட் என்று கவனிக்கப்படாது. நிலமும் ரயத்தி நிலமல்ல. ஆகையால் அப்படி ரெண்ட் கேட்பதற்காக இப்பிரிவின் கீழாவது அல்லது 30-வது பிரிவின் கீழாவது ஆக்ஷேபனை சொல்வதற்கிடமில்லை. ராமண்ணா vs. அப்பாராவ் A. I. R. 1929 Mad. 75.

கைப்பற்று நிலத்தின் திட்டங்களைக்குறித்தும் குத்தகைத் தொகையின் அளவைக்குறித்தும் இன்னப்படி கொள்ளவேண்டுமென்பது.

**27.** ரயத்தால் செலுத்தப்படத்தக்க குத்தகைத் தொகையைக் குறித்தாவது யாதொரு ரெவினியு வருஷத்தில் எந்த திட்டங்களின்படி அவர் (நிலத்தைக்) கைப்பற்றில் வைத்திருக்கிறாரோ அந்த திட்டங்களைக் குறித்தாவது விவாதம் நேரிடுகிற பட்சத்திலே, அவர் - இதற்குமாறாக ஏதாகிலும் ருஜூ செய்யப்படுகிறவரையிலே, அடுத்து மூந்திய ரெவினியு வருஷத்திலிருந்த விதப்படிக்கும் திட்டங்களுக்குட்பட்டும் (நிலத்தைக்) கைப்பற்றில் வைத்துக்கொண்டிருப்பவராகப் பாவிக்கப்படுவார்.

குறிப்புகள்.

27, 28 இந்தப் பிரிவுகள் 4-வது பிரிவோடு சேர்த்து படித்து அர்த்தம் கொள்ளப்படவேண்டும் என்று 26 M. L. J. 269 என்னும் கேஸில் தீர்மானிக்கப்பட்டது.

குத்தகைத்தொகை விதம் நியாயமானதாகாது என்பதைப்பற்றி இன்னப்படி கொள்ளவேண்டுமென்பது.

**28.** இந்த ஆக்டின்படிக்கான சகல நடவடிக்கைகளிலும் ஒரு ரயத்து அந்தந்த காலத்தில் சட்டப்படி செலுத்தத்தக்க குத்தகைத் தொகையாவது குத்தகைத்தொகை விதமாவது - நியாயமானதல்லவென்றும் தருமமானதல்லவென்றும்

ருஜு செய்யப்படுகிற வரையிலே, நியாயமாயிருப்பதாகவும் தருமமாயிருப்பதாகவும் எண்ணப்படும்.

### குறிப்புகள்.

இந்த பிரிவானது சும்மா ரெண்டுகளைப்பற்றின அனுமானம் இன்னதென்று கூறுகிறதே யொழிய முக்கியமான உரிமைகள் யாதொன்றையும் கொடுக்கவில்லை. இன்னும் யாதொரு ரெண்ட்டானது நியாயமற்றதென்று ருஜு செய்வதற்கு இப்பிரிவு இடங் கொடுக்கும். ஆனல் அப்படி செய்வதில் 30, 38 பிரிவுகளின் கீழ் நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டுமேயொழிய, ஜப்தி முதலிய நடவடிக்கைகளில் எதிர் ஆக்ஷேபனையாக சொல்வதற்கில்லை.

### வாரவீதங்கள் அதிகப்படுக்கப்படுவதற்கு உள்ளாக மாட்டாவென்பது.

**29.** ஒரு ரயத்து தம்முடைய கைப்பற்றிலுள்ள யாதொரு நிலத்துக்காக "வாரத்தின்படி" (அதாவது, நிலத்துடையவருக்கும் ரயத்துக்கும் மாகூலைப் பங்கிடு செய்வதற்காகக் கிராமத்தில் ஏற்பட்டிருக்கிற வீதப்படி) ரொக்கமும் சேர்த்தோ அல்லது சேர்க்காமலோ குத்தகைத்தொகை செலுத்தினலும், மற்றப்படி தானிய ரூபமாகவோ அல்லது மாகூலின் ஒரு பாகத்துக்கு மதிப்பேற்படுத்தப்பட்ட கிரயத்தின் மேலோ குத்தகைத்தொகை செலுத்தினலும், மாகூலுக்குத் தகுந்தபடி வேறுபடுகிற வீதங்களின் பிரகாரம் குத்தகைத்தொகை செலுத்தினலும், சிறிதுமட்டில் மேலே சொன்னவைகளிலே ஒரு வகைப்படியும் சிறிதுமட்டில் வேறொரு அல்லது மற்ற வகைப்படியும் குத்தகைத்தொகை செலுத்தினலும், அந்த குத்தகைத்தொகை அதிகப்படுத்தப்படுவதற்கு உள்ளாகமாட்டாது.

குறிப்புகள்

இந்த பிரிவில், வாரம் ரெண்ட் உள்ள கிராமங்களில் ரெண்டை அதிகப்படுத்துவதற்கில்லையென்று கூறப்பட்டிருக்கிறது. அதாவது அப்படிப்பட்ட கிராமங்களில் 30-வது பிரிவின் கீழ் நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படுவதற்கில்லை யென்று அர்த்தமாகும். ஆனால், வார ஏற்பாடு உள்ள இடங்களில் ரெண்டை குறைப்பதற்கு மனு போடலாமா என்று கேள்வி கிளம்பலாம். அவ்வாறு செய்யலாம என்றே இப்பிரிவில் உள்ள பாஷாப்பிரயோகத்தினாலும் 38-வது பிரிவில் உள்ள பதங்களினாலும் ஏற்படும்.

*வியாஜ்ஜிய மூலமாகக் குத்தகைத்தொகையை அதிகப்படுத்துவது.*

**30.** ஒரு ரயத்து தம்முடைய கைப்பற்றிலுள்ள யாதொரு நிலத்துக்கு ரொக்கமாகக் குத்தகைத்தொகை செலுத்திக்கொண்டிருந்தால், நிலத்துக்குடையவர் அடியிற் கண்ட ஹேதுக்களில் ஒன்று அல்லது பலவற்றின் மேல் அந்த குத்தகைத்தொகையை அதிகப்படுத்தும்படி கலெக்டருக்கு விண்ணப்பம் செய்துகொள்ளலாமேயல்லாமல் வேறே ஹேதுக்களின்மேல் அந்தப்படி விண்ணப்பம் செய்துக்கொள்ளக்கூடாது:—

(i) இப்போதைய குத்தகைத்தொகை செலுத்தப்பட்டு வருகிற காலத்திலே தாலூக்கா அல்லது ஜமீன்தாரி டிவிஷனில் பிரதான உணவு தானியங்களின் பிரதேச சராசரி விலை அதிகரித்திருக்கிறதென்பது;

(a) ஆனால், குத்தகைத்தொகையானது நிஷ்கரிஷை செய்யப்பட்டுள்ள ஒரு விதம் அல்லது விதங்களின் படி சாசுவதமாய்ச் செலுத்தத்தக்கதாயிருந்தால், அது - விலை அதிகரித்திருக்கிறதென்னும ஹேதுவினாலே இந்தப்பகுதியின்படி அதிகப்படுத்தப்படுவதற்குள்ளாகமாட்டாது.

(b) மேலும், இந்தப்பகுதியின்படி அதிகப்படுத்தப் படும்போது, நிலத்துக்காக முன்னமே செலுத்தத் தக்கதாயிருந்த குத்தகைத்தொகையில் ரூபாயொன் றுக்கு இரண்டு அணாவைவிட அதிகமாகக் குத்தகை தொகை உயர்த்தப்படக்கூடாது.

(ii) இப்போதைய குத்தகைத்தொகை செலுத்தப் பட்டுவருகிற காலத்திலே நிலத்துக்குடையவாலோ அவ ருடைய செலவிலோ செய்யப்பட்ட சீர்திருத்தத்தினல் ரயத்து வைத்திருக்கும் நிலத்தின் வளப்பம் விருத்தியடைந் திருக்கிறதென்பது:

(iii) நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான யாதொரு கட்டுவேலை யாவது வேறே சீர்திருத்தமாவது கவர்ன்மெண்டாருடைய செலவில் செய்யப்பட்டிருந்து, நிலத்துக்குடையவர் அது காரணமாக கைப்பற்று நிலத்தின் விஷயத்திலே கவர்ன் மெண்டாருக்கு முன்னிருந்ததைவிட அதிகமாகத் தீர்வை அல்லது (தீர்வை) வீதம் சட்டப்படி செலுத்தவேண்டிய வாாயிருக்கிறாரென்பது;

(iv) ரயத்து வைத்திருக்கும் நிலத்தில் வளப்பமானது நதி ஓட்டத்தினல் விருத்தியடைந்திருக்கிறதென்பது;

விவரணம்.—"நதி ஓட்டம்" என்பதிலே - ஒரு நதி யிலிருந்து நீர்ப்பாய்ச்சிக்கொள்வது முன்னே சாத்தியப் படாமலிருந்த இடத்திலே சாத்தியப்படும்படியாக அந்த நதியின் ஓட்டத்திலுண்டாகும் மாறுதலும் அடங்கும்.

குறிப்புகள்.

இப்பிரிவில் சொல்லப்பட்டிருக்கும் ரென்ட் அதிகப்படுத்தலா னது கொஞ்ச காலத்துக்காகவாயிருந்தாலும் அது ஒரு சாஸ்வத

மானதாக கருதப்படக்கூடியதாகும். தாத்காலமாக உள்ள சந்தர்ப்பங்களுக்கு இது பிரயோகப்படாது. 54 M. L. J. 361. தானிய ரெண்டிலிருந்து ரொக்கமாய் மாற்றும்படி செய்வதும் ரொக்க ரெண்டிலிருந்து தானியமாக மாற்றும்படி செய்வதும் சில சந்தர்ப்பங்களில் அதிகப்படுத்துவதென்று கருதப்படலாம். 59 I C. 258.

ஒரு ரயத்தானவர் தாம் அனுமதியில்லாமல் அனுபவித்த ஜலத்திற்காக ஜமீன்தார் கவர்ன்மெண்டுக்கு தண்டங்கட்டும் பக்ஷத்தில் அதை வரப்படுத்துவதற்கு ஜமீன்தார் செய்யும் தாவா இப்பிரிவின் கீழ் ரெண்ட் அதிகப்படுத்துவதற்காக செய்யும் தாவாவாகாது 54 M. L. J. 361. இன்னும் 26-வது பிரிவின் கீழ் உள்ள குறிப்புகளைப் பார்க்க.

இந்தப் பிரிவில் 1934-ம் வருஷத்திய திருத்த சட்டத்தினால் உண்டான முக்கியமான ஒரு மாறுதல் என்னவென்றால் யாதொரு கைப்பற்று நில விஷயமாய் ரெண்டை அதிகப்படுத்துவதற்காக ஜமீன்தார் இனி தாவா செய்யவேண்டிய அவசியமில்லை. ஒரு மனு தாக்கல் செய்தாலே போதுமானது. விசாரணையானது அதன் பேரில் நடக்கும தாவா செய்வதாயிருந்தால் அதற்கு ஸ்டாம்பு சிலவு அதிகம். மனு மாத்திரம் தாக்கல் செய்வதாயிருந்தால் அதற்காக 0-12-0 ஸ்டாம்பு போதுமானது. இதே மாதிரியாகவே 38-வது பிரிவிலும 40-வது பிரிவிலும் ஒரு மாறுதல் உள்ளது.

இன்னும் 25-வது பிரிவின் கீழ் உள்ள குறிப்புகளைப் பார்க்க.

### விலை அதிகரித்திருக்கிறதென்னும் காரணத்தினாலே குத்தகைத் தொகையை அதிகப்படுத்துவதைபற்றிய விதிகள்.

**31**. 30-வது பிரிவைச்சேர்ந்த (i) குறிப்பிட்ட பகுதியின் பிரகாரம் (குத்தகைத்தொகையை) அதிகப்படுத்தும்படி தாவாசெய்யப்படும்போது—

(a) கலெக்டரானவர் - விண்ணப்பம் செய்துகொள்ளப்பட்டதற்கு அடுத்து முந்திய பத்துவருஷ காலவரையறையின் சராசரி விலையை, விண்ணப்பம் செய்துக்கொள்ளப்பட்ட

தற்கு அடுத்து முந்திய இருபது வருஷத்தோடு முடிகிற பத்துவருஷ காலவரையறையின் சராசரி விலையோடு ஒத்திட்டுப் பார்க்கவேண்டும்;

(b) (a) குறிப்பிட்ட பகுதியிற்கண்ட பத்துவருஷ காலவரையறைகளை எடுத்துப்பார்ப்பது சாத்தியமல்லவென்று கலெக்டருக்குத் தோற்றினால், அவர் தமக்கு யுக்தமாகத்தோற்றுகிறபடி அந்த கால வரையறைகளுக்குப் பதிலாக இன்னும் குறைவாயுள்ள எந்தக் காலவரையறைகளையாவது எடுத்துப்பார்க்கலாம்.

(c) பிரதேச கவர்ன்மெண்டாருடைய உத்திரவின்படி பிரசித்தஞ் செய்யப்பட்ட விலைகளை கலெக்டர் (ஒத்திட்டுப் பார்க்கும்போது) எடுத்துக்கொள்ளவேண்டிய சராசரி விலைகளாகும்; மேலும், இந்த ஆக்ட் ஜாரியான பிற்பாடு யாதொரு வருஷத்துக்காகத் தயார் செய்யப்படும் ஜாபிதாக்களிற் கண்ட விலைகள் சரியானவைகளென்று கலெக்டர் கொள்ளவேண்டும்; அல்லாமலும், இந்த ஆக்ட் ஜாரியாவதற்குமுன்னே யாதொரு வருஷத்திற்காகத் தயார் செய்யப்படும் ஜாபிதாக்களிற்கண்ட விலைகள் சரியானவைகளல்லவென்று ருஜுப்படுத்தப்பட்டாலன்றி மற்றப்படிக்கும் அந்தப்படி ருஜுப்படுத்தப்படுகிற வரையிலும், அந்த விலைகள் சரியானவைகளென்று கலெக்டர் கொள்ளலாம்;

(d) சராசரி விலைகளை ஒத்திட்டுப் பார்ப்பதற்காக எடுத்துக் கொள்ளப்படும் பத்துவருஷ காலவரையறைகளானவை யாதொரு பிரதேச விஸ்தீரணத்தின் விஷயமாகப் பஞ்ச வருஷங்களாயிருக்கின்றனவென்றோ அல்லது பஞ்ச வருஷங்களாயிருந்திருக்கின்றனவென்றோ பிரதேச கவர்ன்மெண்டார் பிரசித்தஞ்செய்யத்தக்க சகல வருஷங்களும் நீங்

களாகப் பத்துவருஷங்கொண்ட காலவரையறைகளாயிருக்க வேண்டும்;

(e) அதிகரிக்கப்பட்டுள்ள குத்தகைத் தொகைக்கும் முந்திய குத்தகைத்தொகைக்குமுள்ள சங்கியாபரிமாணமானது - கடைசி பத்து வருஷ காலவரையறையின் சராசரி விலைக்கும் ஒத்திட்டுப் பார்க்கும் காரியத்துக்காக எடுத்துக் கொண்ட முந்திய பத்துவருஷ காலவரையறையின் சராசரி விலைக்குமுள்ள சங்கியாபரிமாணமாகவே இருக்கவேண்டும்: ஆனால், மேற்கண்ட சங்கியாபரிமாணத்தைக் கணக்கிடுகையிலே - பிந்திய காலவரையறையின் சராசரி விலையானது முந்திய காலவரையறையின் சராசரி விலையைவிட எவ்வளவு அதிகமாயிருக்கிறதோ அதில் அரைப் பங்குக்கு, மேலே சொன்ன பிந்திய காலவரையறையின் சராசரி விலையைக் குறைக்கவேண்டும்.

### நிலத்துக்குடையவர் செய்திருக்கும் சீர்திருத்தத்தின் காரணமாகக் குத்தகைத் தொகையை அதிகப் படுத்துவதைப்பற்றிய விதிகள்.

**32.** (1) 30-வது பிரிவைச்சேர்ந்த (ii) குறிப்பிட்ட பகுதியின் பிரகாரம் (குத்தகைத் தொகையை) அதிகப்படுத்தும்படி தாவா செய்யப்படும்போது—

(a) செய்யப்பட்ட சீர்திருத்தம் இந்த ஆக்டின்படி ரெஜிஸ்டராயிராவிட்டாலும் இந்த ஆக்ட் வழங்கத்தொடங்குவதற்கு முன்னுள்ள பதினைந்து வருஷகாலத்திற்குள்ளாக அந்தச் சீர்திருத்தம் செய்யப்பட்டிராவிட்டாலும், கலெக்டர் (குத்தகைத்தொகையை) அதிகப்படுத்துவதற்கு உத்தரவு கொடுக்கக்கூடாது;

(b) அதிகப்படுத்த வேண்டியது இவ்வளவென்று தீர்மானிக்கையிலே, கலெக்டரானவர்—

(i) நிலத்தின் வளப்பத்திலே சீர்திருத்தத்தினால் ஏற்பட்ட அல்லது வெகுசாய் ஏற்படக்கூடிய அபிவிருத்தியையும்,

(ii) அந்த சீர்திருத்தத்தை செய்வதற்காக பிடித்த செலவையும் அந்த செலவை நிலத்துக்குடையவரும் ரயத்தும் எந்த சங்கியாபரிமாணப்படி ஏற்றுக்கொண்டார்கள் என்பதையும் மேலும்,

(iii) அந்த சீர்திருத்தத்தை பராமரித்து வருவதற்காக,

(a) நிலத்துக்குடையவருக்கும்.

(b) ரயத்துக்கும்

உத்தேசமாய் வருஷ வாரியில் பிடிக்கும் செலவையும்,

(iv) அந்த சீர்திருத்தத்தை உபயோகப்படுத்திக்கொள்வதற்கு வேண்டிய முன்னேற்பாடு செய்வதற்காகவும் சாகுபடி செய்வதற்காகவும் பிடித்த செலவையும்,

(v) தற்காலத்திய குத்தகைத் தொகையையும், இன்னும் அதிக குத்தகைத்தொகையைத் தாங்குவதற்கு அந்த நிலத்துக்குள்ள சக்தியையும்,

கவனிக்க வேண்டும்.

(2) யாதொரு சீர்திருத்தம் செய்வதற்குமுன் நிலத்துக்குடையவர் - கலெக்டருடைய அனுமதியை முன்னதாகப் பெற்றுக்கொண்டு, அப்படிப்பட்ட சீர்திருத்தத்தை அனுசரித்து அதிகப்படியான குத்தகைத் தொகை செலுத்தப்படுவதற்காக ரயத்துடன் ஒப்பந்தம் செய்துகொள்ளலாம். அடி சீர்திருத்தம் செய்யப்படுவதன் மேல், நிலத்துக்குடையவர் அதை ரெஜிஸ்டர் செய்வதற்காக கலெக்டருக்கு வின்

ணப்பம் செய்துகொள்ளவேண்டும்; மேலும், கலெக்டரான வர் - ஜாரிசெய்யப்பட்ட சீர்திருத்தமானது செய்து முடிக்கப் பட்டிருக்கிறதென்று தாம் தெரிந்து திருப்தியடைந்த பிறகு, அதை ரெஜிஸ்டர் செய்வதன்மேலும் ரெஜிஸ்டர் செய்த பிற கும், ஷெடி ஒப்பந்தத்தை நிறைவேற்றும்படி நிலத்துக்குடை யவர் விண்ணப்பம் செய்து கொள்வதன் மேலும், கலெக்ட ரானவர் - உத்தரவு பிறப்பித்து அதன் மூலமாக, ஷெடி ஒப் பந்தத்தில் கண்டிருக்கும் அதிகப்படியான குத்தகைத் தொ கைக்கு மேற்படாமல், (1) குறிப்பிட்ட உட்பிரிவைச் சேர் ந்த (b) அடையாளமிட்ட பகுதியில் சொல்லியிருக்கும் விஷ யங்களைக் கிரமமாய்க் கவனித்து தமக்கு நியாயமென்று தோற்றுகிறபடி (குத்தகைத் தொகையை) அதிகப்படுத்து வதற்கு அனுமதி கொடுக்கலாம்; மேலும்.

(3) அந்த சீர்திருத்தத்தினால் மதிப்பேற்படுத்தப்பட்ட பலன் உண்டாகாமற்போகும் விஷயத்திலாவது உண்டாவது நின்று போகும் விஷயத்திலாவது ரயத்தாகிலும் பாத்தியதை பெற்று அவருக்குப் பின் வருபவராகிலும் விண்ணப்பம் செய்து கொள்வதன்மேல், இந்தப் பிரிவின்படி உத்திரவு செய்யப்பட்ட (குத்தகைத்தொகை) அதிகரிப்பானது கலெக் டரால் புனராலோசனை செய்யப்படுவதற்குள்ளாகும்.

கவர்ன்மெண்டார் செய்திருக்கும் சீர்திருத்தத்தின் காரணமாகக் குத்தகைத்தொகையை அதிகப் படுத்துவதைப்பற்றிய விதிகள்.

**33.** 30-வது பிரிவைச்சேர்ந்த (iii) குறிப்பிட்ட பகுதியின் பிரகாரம் (குத்தகைத் தொகையை) அதிகப் படுத்தும்படி தாவா செய்யப்படும்போது, கவர்ன்மெண்டார் செய்திருக்கிற சீர்திருத்தத்தின் காரணமாக அவர்களுக்கு

நிலத்துக்குடையவர் சட்டப்படி செலுத்தவேண்டியிருக்கிற தொகையிஞல் அல்லது தொகையின் சங்கியாபரிமாணப் படியுள்ள பாகத்திஞல் குத்தகைத் தொகையை அதிகப் படுத்தலாம்.

*நதி ஓட்டத்தின் காரணமாகக் குத்தகைத் தொகையை அதிகப்படுத்துவதைப்பற்றிய விதிகள்.*

**34.** 30-வது பிரிவைச்சேர்ந்த (iv) குறிப்பிட்ட பகுதியின் (பிரகாரம் குத்தகைத்தொகையை) அதிகப்படுத்தும்படி தாவா செய்யப்படும்போது—

(a) அங்காமியாக அல்லது அகஸ்மாத்தாகவே உண்டாயிருக்கிற யாதொரு அதிகரிப்பைக் கலெக்டர் கணக்கில் சேர்க்கக்கூடாது ;

(b) கலெக்டர் தமக்கு நியாயமானதாகவும் தருமமானதாகவும் தோற்றுகிற ஒரு தொகைக்குக் குத்தகைத் தொகையை அதிகப்படுத்தலாம்; ஆஞல் நிலத்தின் மாசூலில் ஏற்பட்ட அதிகரிப்பிலே செலவு போக மிகுதி இருக்கும் பாகத்தின் மதிப்பில் அரைப்பங்குக்கு மேற்பட்டு நிலத்துக் குடையவருக்குப் போகும்படியாகக் குத்தகைத்தொகையை அதிகப்படுத்தக்கூடாது.

குறிப்புகள்.

30, 31, 32, 33, 34 இந்த 5 பிரிவுகளும் ஒன்ருகச் சேர்த்து படிக்கப்பட வேண்டும். 30-வது பிரிவில் ரென்டை உயர்த்த மனு செய்வதற்கு நான்கு விதமான காரணங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. 1-வது காரணத்தைப்பற்றி 31-வது பிரிவிலும் 2-வது காரணத்தைப்பற்றி 32-வது பிரிவிலும் 3-வது காரணத்தைப்பற்றி 33-வது பிரிவிலும் 4-வது காரணத்தைப்பற்றி 34-வது பிரிவிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

32-வது பிரிவானது 1934-ம் வருஷத்திய 8-வது திருத்த சட்டத்திஞல் மிகவும் மாற்றியமைக்கப்பட்டது. இதில் புதிய ரென்ட்

அதிகப்படுத்துவதைப்பற்றி ஜமீன்தார்ரும் ரயத்தும் தங்களுக்குள்ளேயே ஏற்பாடு செய்துகொள்ளலாம் என்று ஏற்படுத்தப்பட்டது. ஆனல் அது கலெக்டரானவர் அங்கீகாரம் செய்யப்பட்ட பிறகுதான் அமுலுக்குவரும். அந்த ஏற்பாடு நியாயமற்றதாயிருந்தால் கலெக்டர் அதை மாற்றலாம். 35-வது பிரிவைப்பார்க்கவும்.

குத்தகைத் தொகையை அதிகப்படுத்துவது நியாயமானதாகவும் தருமமானதாகவும் இருக்கவேண்டுமென்பது.

**35.** 31 முதல் 34 வரையிலுள்ள பிரிவுகளில் என்ன சொல்லியிருந்தபோதிலும் பாதகமில்லாமலே, கலெக்டரானவர் - அந்தந்த விஷயத்தின் சந்தர்ப்பங்களின்படி நியாயமற்றதாகவோ அதருமமானதாகவோ இருக்கிற அல்லது கைப்பற்று நிலம் எந்த கிராமத்திலிருக்கிறதோ அந்த கிராமத்தில் ஏற்பட்டுள்ள வாரத்தை 40-வது பிரிவிற் கண்ட நிபந்தனைகளின்படி பணமாக மாற்றி உண்டாகிற கிரயத்தைக் காட்டிலும் குத்தகைத்தொகை அதிகமாயிருக்கும்படியாகச் செய்யக்கூடிய யாதொரு (குத்தகைத்தொகை) அதிகரிப்புக்கு எப்படிப்பட்ட சந்தர்ப்பத்திலும் உத்திரவு பிறப்பிக்கக்கூடாது.

சிறிது சிறிதாய் (குத்தகைத் தொகையை) அதிகப்படுத்தும்படி உத்தரவு செய்ய அதிகாரம்

**36.** 30-வது பிரிவைச்சேர்ந்த (i), (ii), (iv) குறிப்பிட்ட பகுதிகளின் பிரகாரம் (குத்தகைத்தொகையை) அதிகப்படுத்தும்படி உத்திரவு செய்கிற கலெக்டரானவர் அந்த உத்திரவை உடனே பூர்த்தியாக அமுலுக்குக் கொண்டுவருவதனல் ரயத்துக்குக் கஷ்டம் உண்டாகுமென்று அபிப்பிராயப்படுவாராகில், அவர்-சிறிது சிறிதாக அதிகப்படுத்தவேண்டுமென்று கட்டளையிடலாம். எனவே-எவ்வளவு அதிகப்படுத்தவேண்டுமென்று உத்திரவு செய்திருக்கிறதோ

அவ்வளவுக்கு அதிகப்படுத்தியாகிறவரையிலே, ஐந்து வருஷத்துக்கு மேற்படாமல் எத்தனை வருஷத்துக்காகிலும் சிறிது சிறிதாக வருஷவாரியில் குத்தகைத் தொகையை அதிகப்படுத்தவேண்டுமென்று கட்டளையிடலாம்.

குத்தகைத் தொகையை அதிகப்படுத்தும்படி அல்லது மாற்றும்படி விண்ணப்பங்கள் செய்துகொள்வதற்கான காலவரையறை.

**37.** விலைகளில் ஏற்றம் உண்டான காரணத்தினால் குத்தகைத் தொகையை அதிகப்படுத்துவதற்காக விண்ணப்பம் செய்துக் கொள்வதற்கு அடுத்து முந்திய இருபது வருஷ காலத்துக்குள், விலைகளில் ஏற்றம் அல்லது இறக்கம் உண்டான காரணத்தினால் குத்தகைத் தொகை அதிகப்படுத்தப்பட்டிருந்தாலும், அல்லது குறைக்கப்பட்டிருந்தாலும், அல்லது (பணமாக) மாற்றப்பட்டிருந்தாலும், விலைகளில் ஏற்றம் அல்லது இறக்கம் உண்டான காரணத்தினால் குத்தகைத் தொகையை அதிகப்படுத்துவதற்காக அல்லது குறைப்பதற்காக கொண்டுவரப்பட்ட யாதொரு வியாஜ்ஜியமோ அல்லது செய்துகொள்ளப்பட்ட யாதொரு விண்ணப்பமோ யோக்கியதாம்சங்களை அனுசரித்துத் தள்ளிவிடப்பட்டிருந்தாலும், அப்படிப்பட்ட விண்ணப்பத்தை ஏற்றுக் கொள்ளக்கூடாது:

ஆனால், பைசலாகாமல் இன்னும் நடந்துகொண்டிருக்கும் வியாஜ்ஜியங்களின் விஷயத்தில், இந்தப் பிரிவில் கண்டதெதுவும் 1908-ம் வருஷத்து ஸிவில் ப்ரோஸீஜர் கோட் 23-ம் அதிகாரத்தைச் சேர்ந்த 1-வது விதியில் கண்ட நிபந்தனைகளுக்குப் பாதகம் உண்டாகமாட்டாது.

விபாஜ்ஜிப மூலமாகக் குத்தகைத் தொகையைக் குறைப்பது.

**38.** (1) ஒரு ரயத்து தம்முடைய கைப்பற்றிலுள்ள யாதொரு நிலத்துக்காக ரொக்கமாய்க் குத்தகைத் தொகை செலுத்திக்கொண்டிருந்தால், அவர் அடியிற்கண்ட ஹேதுக்களில் ஒன்று அல்லது பலவற்றின்மேல் தம்முடைய குத்தகைத்தொகையைக் குறைக்கும்படி கலெக்டருக்கு விண்ணப்பம் செய்துகொள்ளலாமேயல்லாமல், வேறே ஹேதுவினால் அந்தப்படி விண்ணப்பம் செய்துகொள்ளக்கூடாது.

(a) திடீரென்றோ அல்லது காலாவர்த்தியிலோ மணல் சேர்ந்துவிட்டதனாலாவது நிஷ்கரிஷையான வேறே காரணத்தினாலாவது கைப்பற்று நிலத்தின் மண்ணானது, ரயத்தினுடைய தவறு காரணமாகவல்லாமல், சாசுவதமாகப் பிடாய்ப் போய்விட்டிருப்பது ;

(b) நீர்ப்பாய்ச்சப்பெறும் நிலத்தின் விஷயத்திலே, அது எந்த நீர்ப்பாய்ச்சல் கட்டுவேலையினின்றும் நீர்ப்பாய்ச்சப் பெறுகிறதோ அந்தக் கட்டுவேலையிலிருந்து நிலையாக (ஜல) சர்ப்பரா நின்றுபோயிருப்பது ;

(c) இப்போதைய குத்தகைத்தொகை செலுத்தப்பட்டு வருகிற காலத்தில் தாலூகா அல்லது ஜமீன்தாரி டிவிஷனிலே பிரதான உணவுத் தானியங்களின் பிரதேச சாரசரி விலைகள் அங்காமியான ஒரு காரணத்தினாலல்லாமல் குறைந்துபோயிருப்பது.

மேலே கண்டபடி விண்ணப்பம் செய்துகொள்ளப்படுவதன்மேல் கலெக்டரானவர் - தமக்கு நியாயமானதாகவும் தருமமானதாகவும் தோற்றுகிற பிரகாரம் குத்தகைத்தொகையைக் குறைக்கும்படி கட்டளையிடலாம். மேலும் (1) குறிப்பிட்ட உட்பிரிவைச்சேர்ந்த (c) அடையாளமிட்ட

பகுதியின்படி குறைக்கும் தொகையை நிர்மானிக்கையில், கலெக்டரானவர் - 31 - வது பிரிவைச்சேர்ந்த (a), (b), (c), (d) குறிப்பிட்ட பகுதிகளிற்கண்ட விஷயங்களைக் கவனிக்க வேண்டும்.

## குறிப்புகள்.

30-வது பிரிவைப் போல் இந்தப் பிரிவிலும் ஒரு முக்கிய மாறுதல் என்னவென்றால், இனி ரென்டை குறைக்கவேண்டுமானால் அதற்காக ஒரு விண்ணப்பம் செய்தாலே போதுமானது. தாவா செய்யவேண்டிய அவசியமில்லை. தாவா செய்வதாயிருந்தால் கோர்ட்டு ஸ்டாம்பு அதிகமாகும். இதுதான் தாவாவுக்கும் விண்ணப்பத்திற்கும் உள்ள வித்தியாசம்.

### குத்தகைத் தொகையைக் குறைக்கும்படி அடுத்தடுத்து விண்ணப்பங்கள் செய்துகொள்வதற்குக் காலவரையறை.

**39.** 38-வது பிரிவைச்சேர்ந்த (1) குறிப்பிட்ட உட்பிரிவில்கண்ட (c) அடையாளமிட்ட பகுதியின்படி கொண்டுவரப்பட்ட யாதொரு வியாஜ்ஜியத்திலாவது செய்துகொள்ளப்பட்ட யாதொரு விண்ணப்பத்தின் மேலாவது, குத்தகைத்தொகையைக் குறைத்தாகிலும், அந்த வியாஜ்ஜியத்தின் அல்லது விண்ணப்பத்தின் யோக்கியதாம்சங்களை அனுசரித்து அந்த வியாஜ்ஜியத்தையோ அல்லது விண்ணப்பத்தையோ தள்ளிவிட்டாகிலும் டிக்ரி அல்லது உத்திரவு பிறப்பிக்கப்பட்டிருந்தால், அப்படிப்பட்ட டிக்ரி அல்லது உத்தரவின் தேதியிலிருந்து இருபது வருஷ காலத்துக்குள்ளாக அதே பகுதியின்படி புதிதாய் விண்ணப்பம் செய்து கொள்ளுகிற பட்சத்திலே அதை ஏற்றுக்கொள்ளக்கூடாது:

ஆனால், பைசலாகாமல் இன்னும் நடந்துக்கொண்டிருக்கும் வியாஜ்ஜியங்களின் விஷயத்திலே, 1908-ம் வருஷத்து ஸிவில் ப்ரோஸீஜர் கோட் 23-ம் அதிகாரத்தைச் சேர்ந்த

1—வது விதியில் கண்ட நிபந்தனைகளுக்கு இந்தப் பிரிவிலுள்ளதெதனாலும் பாதகம் உண்டாகமாட்டாது.

குத்தகைத் தொகையை (பணமாக) மாற்றிக்கொள்வது.

தானியமாகச் செலுத்தத்தக்க குத்தகைத் தொகையை விடாஜ்ஜிய மூலமாய் (பணமாக) மாற்றிக்கொள்வது.

**40.** (1) தானிய ரூபமாகவோ, மாசூலில் ஒரு பாகத்துக்கு மதிப்பு ஏற்படுத்தப்பட்ட கிரமத்தின்மேலோ, மாசூலுக்குத் தக்கபடி வேறுபடுகிற விதங்கள் ரொக்கமாக இருந்தாலுஞ்சரி தானியரூபமாக இருந்தாலுஞ்சரி, அந்த விதங்களின்படிக்கோ சிறிதுமட்டில் இந்த வகைகளில் ஒரு வகையாகவும் சிறிதுமட்டில் வேறொரு வகையாகவுமோ, சிறிதுமட்டில் இந்த வகைகளில் ஒன்று அல்லது பல வகைகளாகவும் சிறிதுமட்டில் ரொக்கமாகவுமோ ஒரு ரயத்து தம்முடைய கைப்பற்றிலிருக்கும் யாதொரு நிலத்துக்குக் குத்தகைத் தொகை செலுத்திவந்தால் அந்த ரயத்தாவது நிலத்துக்குடையவராவது மேற்படி கைப்பற்று நிலத்துக்கு வரும் குத்தகைத் தொகையை திட்டமான ரொக்க குத்தகைத் தொகையாக மாற்றிக்கொடுக்க வேண்டுமென்று கலெக்டருக்கு விண்ணப்பம் செய்து கொள்ளலாம்.

(2) மேலேகண்டபடி விண்ணப்பம் செய்துகொள்ளப்படுவதன்மேல் கலெக்டரானவர் தானிய ரூபமாகவோ மற்றப்படியோ குத்தகைத் தொகையைச் செலுத்துவதற்குப் பர்த்தியாக ரொக்க குத்தகைத் தொகையாகச் செலுத்த வேண்டிய பணத்தை நிர்ணயித்து உத்தரவு பிறப்பிக்கவேண்டும். அந்த உத்திரவின் தேதிக்குப் பிறகு அடுத்த ரெவினியு வருஷ ஆரம்பத்திலிருந்து அந்தப்படி பணமாக மாற்றிகொள்வது செலாவணியாகும்.

(3) மேலே சொன்னபடி நிஷ்கரிஷை செய்கையிலே கலெக்டரானவர் அடியிற்கண்ட விஷயங்கள் ஒவ்வொன்றையும் கிரமமாய்க் கவனிக்கவேண்டும். அந்த விஷயங்களாவை யென்றால்:—

(a) யாதொரு பிரதேச விஸ்தீரணத்தின் விஷயத்திலே பஞ்சவருஷங்களென்றாவது பஞ்சவருஷங்களாக யிருந்திருக்கின்றனவென்றாவது பிரதேச கவர்ன்மெண்டார் பிரசித்தஞ்செய்யத்தக்க வருஷங்கள் நீங்கலாக விண்ணப்பம் செய்துகொள்ளும் தேதிக்கு முந்திய பத்து வருஷ காலத்திலே நிலத்துக்குடையவருக்குப் பாக்கியாகி வாஸ்தவத்தில் சேர்ந்துவந்த குத்தகைத்தொகையின் சராசரிமதிப்பு, அல்லது அந்தக் காலவரையறைக்கு மதிப்பைத் தெரிந்துக் கொள்ள முடியாமலிருந்தால் பஞ்சவருஷங்கள் நீங்கலாக (மேற்படி காலவரையறைக்குக்) குறைவான எவ்வளவு காலத்துக்குச் சாட்சியம் கிடைக்கத்தக்கதாயிருக்குமோ அந்தக் காலத்திலே ஷை குத்தகைத்தொகையின் சராசரி மதிப்பு;

(b) அதே கிராமத்திலாவது அல்லது அப்படிப்பட்ட கிராமங்கள் எவையும் இராவிட்டால் அடுத்த ஒரு தாலுக்காவிலுள்ள கிராமங்களிலாவது அதே தன்மையுள்ளதும் அதற்குள்ள அனுகூலங்களைப்போன்ற அனுகூலங்களை பொருந்தியுள்ளதுமான நிலத்துக்கு ரயத்துகள் ரொக்கமாய்ச் செலுத்தத்தக்க குத்தகைத்தொகை.

(c) கைப்பற்று நிலத்தின் விஷயத்திலே நிலத்துக்குடையவராவது ரயத்தாவது செய்திருக்கிற சீர்திருத்தங்களும், 32-வது பிரிவிற்கண்ட விதிகளும்.

குறிப்புகள்.

இப்பிரிவானது முக்கியமான பிரிவாகும். இந்த பிரிவின் கீழ் அநேக தீர்மானங்கள் உள்ளன.

நமது தென் இந்தியாவில் பல இடங்களில் தானியவாரி ரென்ட் கொடுக்கப்பட்டு வருவதால் அதை சுலபமாக்குவதற்கு இப் பிரிவு துணை செய்யும்.

1934-ம் வருஷத்திய 8-வது சட்டத்தினால் ஏற்பட்ட திருத்தங்களில் இப்பிரிவில் முக்கியமானது என்னவென்றால் தானிய குத்தகையை பணமாக்குவதற்காக கலெக்டரிடம் இனி ஒரு விண்ணப்பம் செய்தாலே போதுமானது. முன் இருந்த சட்டப்பிரகாரம் ஒரு தாவா செய்யவேண்டியது அவசியமாயிருந்தது. இப்பொழுது தாவா என்னும் பதமானது எடுபட்டு விண்ணப்பம் என்னும் பதம் நுழைக்கப்பட்டது.

மற்றொரு மாறுதல் என்னவென்றால் பழைய சட்டப் பிரகாரம் எந்த தேதியில் கோர்ட்டார் டிக்கிரி செய்கிறார்களோ அதற்கு முந்தி பத்து வருஷக் கணக்கு எடுக்க வேண்டியதாயிருந்தது. இப்பொழுது அதைத் தவிர்த்து மனு அல்லது விண்ணப்பம் தாக்கலான தேதிக்கு முன் 10 வருஷங்கள் என்று ஸ்திரமாக ஏற்பட்டு விட்டது.

இந்தப்பிரிவின் கீழ் செய்யப்படும் உத்திரவுகளின் பேரில் டிஸ்டிரிக்ட் கோர்ட்டுக்கு அப்பீல் உண்டு.

இந்தப் பிரிவின் கீழ் செய்யப்படும் விண்ணப்பங்களைக் கவனிக்கையில் ஒரு ரயத்தானவர் தாம் கிரமமாக நிலத்துக்குடையவருக்கு எவ்வளவு கொடுக்கவேண்டுமோ அதைவிட அதிகமாகவே கொடுத்து வருவதாக சொல்லும் பக்ஷத்தில் அதையும் கவனித்து அதன் பேரிலும் தமது தீர்மானத்தைச் செய்யவேண்டும். 35 M L J. 547. இந்தப் பிரிவில் ரயத்துகளுக்கும் நிலத்துக்குடையவர்களுக்கும் கொடுக்கப்பட்ட சுதந்திரமானது ஒரு உரிமையாகும். ஆகையால் ஒருவர் மற்றொருவருடைய இஷ்டத்தை யொட்டி நடக்க வேண்டும் என்பதில்லை. கோர்ட்டாருடைய தீர்மானமே முக்கியமானதாகும் 34 I. C 935.

எந்த சந்தர்ப்பங்களில் குத்தகையை பணமாக்குவதற்கு விண்ணப்பம் கொடுக்கலாமென்பது.

ஒரு கிராமமானது வார ரென்டின்பேரில் நடந்து வந்து கொண்டிருக்கும் பக்ஷத்தில், அந்த வாரதானியமானது கிராமத்தினுடைய அல்லது அதன் சொந்தக்காரர் செய்யவேண்டிய தர்ம காரியங்களுக்காக வேண்டியிருந்தால் இந்தப் பிரிவின்படி பணமாக்கிக் கொடுப்பது நியாயமல்ல. 1. B. R. 34. ஆனால் ஒரு நிலத்துக்குடையவர் தம்முடைய சொந்தகாரியங்களுக்காக தான்ய ரென்ட்டானது அவசியம் தேவையென்று சொல்லி இந்தப் பிரிவின் கீழ் பரிஹாரம் கிடைக்கவொட்டாமல் ஆக்ஷேபிப்பதற்கில்லை. தான்ய ரென்டை ரொக்கமாக மாற்றுவதானது உபய பார்ட்டிகளுக்கும் சௌகரியமாக இருக்குமானால், இன்னும் ரயத்தானவர் தமது இஷ்டப்பிரகாரம் தமக்கு வேண்டிய பயிரை ஏற்றுவதற்கு சௌகரியம் ஏற்படுமானால், ரென்டை ரொக்கமாக்கிவிடுவது நியாயமானதாகும். 34 I. C. 935. தான்யத்தைப்பங்கிடுவதில் அடிக்கடி சச்சரவுகள் ஏற்படும் பக்ஷத்தில் ரென்டை ரொக்கமாக மாற்றிவிடுவதானது நலமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 2 B. R. 75. மற்றொரு கேஸில் நிலத்துக்குடையவருக்கு தான்ய ரென்டானது அவசியம் தேவையாயிருக்கும் பக்ஷத்தில அதையும் கலெக்டரானவர் கவனித்துச் செய்யவேண்டும என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது 2 B. R. 50.

நிலஸ்வான்தாரர் தமக்கு நிச்சயமாக ரென்ட் இன்னது கிடைக்கும் என்பதை அறியாமலிருக்கிறார் என்னும ஒரு காரணத்தைக் கொண்டே இப்பிரிவின் கீழ் பரிஹாரம் தேடுவதற்கில்லை 1 B. R. 4

ஒரு கலெக்டர் இந்தப் பிரிவின் கீழ் ஒரு கேஸில் குத்தகையை ரொக்க ரென்டாக செய்து விடுவது நியாயம் என்று தீர்மானித்தார். அவர் ரென்ட் இவ்வளவுதான் என்று தீர்மானிப்பதற்குள் மாற்றப்பட்டார். அதன் பிறகு வந்த கலெக்டர் ஆதிமுதற்கொண்டு கேஸை தொடங்கி விசாரிக்கலாமா என்று கேள்விவந்ததில் அப்படிச் செய்வதற்கில்லை யென்றும் அவர் மேற்கொண்டு பலானவிகிதப்பிரகாரம் தொகை ஏற்படவேண்டும் என்பதை நிர்ணயம் செய்யவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது 1 B. R. 9.

இந்தப் பிரிவின் கீழ் தொடரப்படும் நடவடிக்கைகளில் கலெக்டரானவர் உபய தரப்பிலும் ஆஜர்ப்படுத்தப்படும் சாக்ஷியத்தை எழுதிக்கொள்ளவேண்டும். பொதுவான கொள்கைகளைக் கொண்டு ரெண்ட் பலானதென்று தீர்மானித்துவிடாமல் பார்ட்டிகளுக்குள் உள்ள நியாயாநியாயம் எப்படி என்பதை தீர ஆலோசனை செய்த பிறகு தான் தீர்மானிக்கவேண்டும் 2 B. R. 10.

தமது முன்பாக ஆஜர்ப்படுத்தப்பட்ட சாக்ஷியத்திலிருந்து ரேட்டை பலானதென்று தீர்மானிக்க முடியவில்லையென்று கூறி மனுவை கலெக்டர் தள்ளுபடி செய்வதற்கில்லை. ஏனென்றால் கலெக்டர் இதர விஷயங்களையும் கவனிக்கவேண்டுமென்று இப்பிரிவிலேயே கூறப்பட்டிருக்கிறது 43 I. C. 63.

இப்பிரிவின் கீழ் கலெக்டரானவர் பணமாக்குவதற்கு உத்திரவு செய்யுங்காலத்தில் ரயத்துக்கும் நிலத்துக்குடையவருக்கும் ஒரு கான்ட்ராக்ட் ஏற்பட்டு அதன் பிரகாரம் ரயத்தானவர் ஒரு குறிப்பிட்ட பயிரை ஏற்றும் பக்ஷத்தில் அதற்காக அதிக ரெண்ட் தரவேண்டும் என்று ஒரு ஷரத்து இருக்குமானால் அது சட்ட சம்மதமானது தான் என்று 12 I. C. 566 என்னும் கேஸில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. அதே கேஸில், கரம்பு நிலத்தில் சாகுபடி செய்வதற்கு லாயக்காயிருந்து ரயத்து சாகுபடி செய்யும் பக்ஷத்தில் அதற்கு தீர்வையுண்டு என்று செய்யப்படும் ஒரு ஏற்பாடும் செலாவணியாகத்தக்கதாகும் என்று தீர்மானிக்கப்பட்டது.

மராமத்து செலவுகள் இப்பிரிவின் கீழ் வரக்கூடிய ரெண்ட் அல்ல. ஆகையால் இவைகளைப்பற்றி கலெக்டரானவர் இந்தப் பிரிவின் கீழ் விசாரிப்பதற்கில்லை. 35 M. L. J. 547.

இந்தப் பிரிவின் கீழ் ரெண்டை ரொக்கமாக்குவதில் மனு தாக்கல் செய்யப்பட்ட தேதிக்கு முந்தின 10 வருஷங்களின் விலைவாசி முதலியவைகளை கலெக்டரானவர் கவனிக்கவேண்டுமென்றுள்ளது. இந்த காலத்திற்குள் ரயத்தானவர் யாதொரு வருஷத்தில் ரொக்கமாக பணம் செலுத்தியிருக்கும் பக்ஷத்தில் அதையும் கோர்ட்டார் கவனிக்கவேண்டும். ஆனால் அதையே ஒரு பெரிய பொருட்டாகவும் கவனித்துவிடக்கூடாது. இம்மாதிரியாக 1929 A. I. R.

Mad. 523 என்னும் கேஸில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. ஒரு கிராமத்தில் சில நபர்கள் இப்பிரிவின் கீழ் பணமாக்கிக்கொள்ள உத்திரவு பெற்றால் இதர ரயத்துகளும் அதே மாதிரியான சௌகரி யம் பெறுவதற்கு உரிமையுள்ளவராவார்கள்.

குத்தகைத் தொகையை (பணமாக) மாற்றின பிறகு 20 வருஷகாலம் வரையில் அதை அதிகப்படுத்தக் கூடா தென்றும குறைககக் கூடாதென்றும நிர்ப்பந்தம்.

**41.** (1) யாதொரு கைப்பற்று நிலத்தின் குத்தகைத் தொகையானது 40-வது பிரிவின்படி (பணமாக) மாற்றப் பட்டிருந்தால், 30-வது பிரிவைச்சேர்ந்த (ii), (iii) குறிப் பிட்ட பகுதிகளிற்கண்ட காரணங்களினாலாவது கைப்பற்று நிலத்தின் விஸ்தீர்ணமானது பிறபாடு மாறியிருக்கிறதென் னும் காரணத்தினாலாவது அல்லாமல் மற்றப்படி, அந்த குத்தகைத் தொகையை இருபது வருஷம் வரையில் அதி கப்படுத்தக்கூடாது; கைப்பற்று நிலத்தின் விஸ்தீர்ணமா னது மாறியிருக்கிறதெனனும் காரணத்தினாலாவது 38-வது பிரிவைச் சேர்ந்த (1) குறிப்பிட்ட உட்பிரிவிலுள்ள, (a) (b) அடையாளமிட்ட பகுதிகளிற் கண்ட காரணத்தினாலாவது அல்லாமல் மற்றப்படி, அந்தக் குத்தகைத் தொகையை இருபது வருஷம் வரையில் குறைக்கவுங்கூடாது.

(2) குத்தகைத்தொகையை (பணமாக) மாற்றினது எந்தத் தேதியிலே செலாவணியாகுமோ அந்தத் தேதி முதல் மேலேகண்ட இருபதுவருஷ காலவரையறையைக் கணக்கிடவேண்டும்.

குறிப்புகள்.

இப்பிரிவில், 30-வது பிரிவின் (ii), (iii), வாக்கியங்களில் உள்ள காரணங்களல்லாமல், அப்படி புதிய ரெண்ட் ஏற்படுத்தப்

பட்டதிலிருந்து 20-வருஷத்திற்குள் ரெண்டை அதிகப்படுத்தக் கூடாதென்றும் 38-வது பிரிவின் (1) உட்பிரிவின் (a) (b) வாக்கியங்களில் சொல்லப்பட்ட காரணங்களல்லாமல் அப்படி புதிய ரெண்ட் ஏற்பட்டதிலிருந்து 20-வருஷங்களுக்குள் ரெண்டை குறைக்கக்கூடாதென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஷை ஷை 30-வது பிரிவின் (ii), (iii) வாக்கியங்களும், 38-வது பிரிவின் (1) உட் பிரிவின் (a), (b) வாக்கியங்களும் பின் வருமாறுள்ளன.

(ii) இப்போதைய குத்தகைத்தொகை செலுத்தப்பட்டு வருகிற காலத்திலே நிலத்துக்குடையவராலோ அவருடைய செலவிலோ செய்யப்பட்ட சீர்திருத்தத்தினால், ரயத்து வைத்திருக்கும் நிலத்தின் வளப்பம் விருத்தியடைந்திருக்கிறதென்பது ;

(iii) நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான யாதொரு கட்டுவேலையாவது வேறே சீர்திருத்தமாவது கவர்ன்மெண்டாருடைய செலவில் செய்யப்பட்டிருந்து, நிலத்துக்குடையவர் அது காரணமாக கைப்பற்று நிலத்தின் விஷயத்திலே கவர்ன்மெண்டாருக்கு முன்னிருந்ததை விட அதிகமாகத் தீர்வை அல்லது (தீர்வை) வீதம் சட்டப்படி செலுத்தவேண்டியவராயிருக்கிறாரென்பது ;

38-வது பிரிவின் 1-உட்பிரிவின் (a), (b) பாகங்கள் பின் வருமாறு.

(a) திடீரென்றோ அல்லது நாளாவர்த்தியிலோ மணல் சேர்ந்துவிட்டதனாலாவது நிஷ்களிவையான வேறே காரணத்தினாலாவது கைப்பற்று நிலத்தின் மண்ணானது, ரயத்தினுடைய தவறு காரணமாகவல்லாமல், சாசுவதமாகப் பிடாய்ப் போய்விட்டிருப்பது ;

(b) நீர்ப்பாய்ச்சப்பெறும் நிலத்தின் விஷயத்திலே, அது எந்த நீர்ப்பாய்ச்சல் கட்டுவேலையினின்றும் நீர்ப்பாய்ச்சப்பெறுகிறதோ அந்தக் கட்டுவேலையிலிருந்து நிலையாக (ஜல) சர்ப்பரா நின்று போயிருப்பது.”

விஸ்தீர்ணத்துக்குத் தகுந்தபடி குத்தகைத் தொகையை மாற்றுவது.

விஸ்தீர்ணத்திலுண்டாகும் மாறுதலை அனுசரித்துக் குத்தகைத் தொகையை மாற்றுவது.

**42.** (1) ஒவ்வொரு ரயத்தும்—

(a) தாம் எதற்காக முந்தி குத்தகைத்தொகை செலுத்தியிருக்கிறாரோ அந்த விஸ்தீரணத்தைவிட அதிகமாயிருப்பதாக ருஜுப்படுத்தப்பட்ட நிலம் முழுவதுக்கும் அதிக குத்தகைத் தொகை செலுத்த உட்பட்டவராவார்; ஆனால், முந்தி கைப்பற்று நிலத்தோடு சேர்ந்திருந்து வெள்ளத்தினாலாவது வேறே காரணத்தினாலாவது இழக்கப்பட்டு அதற்காகக் குத்தகைத்தொகை குறைக்கப்படாமலிருந்த நிலம் அந்தக் கைப்பற்று நிலத்தோடு சேர்ந்திருப்பதினால் மேலே சொன்ன அதிக விஸ்தீர்ணம் ஏற்பட்டிருக்கிறதென்று ருஜுப்படுத்தப்பட்டால், அவர் மேலே கண்ட அதிக குத்தகைத்தொகை செலுத்தவேண்டியவராகமாட்டார்.

(b) தாம் எதற்காக முந்தி குத்தகைத்தொகை செலுத்தியிருக்கிறாரோ அந்த விஸ்தீரணத்தோடு தம்முடைய கைப்பற்று நிலத்தின் விஸ்தீரணத்தை ஒத்திட்டுப் பார்க்கையிலே இதில் குறைவு இருப்பதாக ருஜுப்படுத்தப்பட்டால் அந்தக் குறைவை யனுசரித்து குத்தகைத்தொகை குறைக்கப் பெறுவதற்கு பாத்தியதையுள்ளவராவர்; ஆனால், அடைமண் காரணமாகவாவது வேறே காரணமாகவாவது கைப்பற்று நில விஸ்தீரணத்தோடு சேர்க்கப்பட்டு, அந்தப்படி சேர்க்கப்பட்ட விஸ்தீரணத்தின் விஷயமாகக் குத்தகைத் தொகை அதிகப்படுத்தப்படாமலிருக்கிற யாதொரு நிலம் இல்லாமற்போவதனால் மேலே சொன்ன விஸ்தீர்ணக்குறைவு

ஏற்பட்டிருக்கிறதென்று ருஜூப்படுத்தப்பட்டால், அவர் மேலே கண்டபடி குத்தகைத்தொகை குறைக்கப் பெறுவதற்கு பாத்தியதையுள்ளவராகார்.

(2) விவாதம் நேரிடுகிற விஷயங்களிலே, குத்தகைத்தொகையின் அளவை மாற்றவேண்டுமென்று இது விஷயத்தில் சம்பந்தப்பட்ட நிலத்துக்குடையவராவது மயத்தாவது கலெக்டருக்கு விண்ணப்பஞ் செய்துகொள்வதன்மேல் அந்தக் கலெக்டர் செய்யும் உத்திரவின்படிக்கன்றி மற்றப்படி, இந்தப் பிரிவின் பிரகாரம் குத்தகைத்தொகையின் அளவை மாற்றுவதற்கு அனுமதி கொடுக்கப்படமாட்டாது.

(3) (2) குறிப்பிட்ட உட்பிரிவில் என்ன சொல்லியிருந்தபோதிலும் பாதகமில்லாமலே, விஸ்தீரணத்துக்குத்தக்கபடி எழுத்து மூலமான உடன்படிக்கையினால் குத்தகைத்தொகை நிஷ்கரிஷை செய்யப்பட்டிருந்து அல்லது உத்தேசமாய்க் கொள்ளப்பட்ட யாதொரு விஸ்தீரணத்தை ஆதாரமாகக்கொண்டு எழுத்து மூலமான உடன்படிக்கையினால் குத்தகைத்தொகை நிஷ்கரிஷை செய்யப்பட்டிருந்து, வாஸ்தவமான விஸ்தீரணம் உத்தேசமாய்க் கொள்ளப்பட்ட விஸ்தீரணத்தினின்றும் வித்தியாசப்படுவதாக தெரியவருகிற பட்சத்திலே குத்தகைத் தொகையை மாற்றுவதற்காக டிை உடன்படிக்கையில் நிபந்தனை கண்டிருந்தால், ஒரே பரிமாணத்தில் அளந்து பார்க்கப்பட்ட விஸ்தீரணம் அதிகமாகவோ குறைவாகவோ இருப்பது காரணமாக நிலத்துக்குடையவராவது மயத்தாவது சந்தர்ப்பத்துக்கேற்றபடி குத்தகைத்தொகையை நிர்ப்பந்தமாய் அதிகப்படுத்துவது அல்லது குறைப்பது சட்ட சம்மதமாகும்.

### குறிப்புகள்.

இந்தப் பிரிவில் (3) உட்பிரிவானது 1934-ம் வருஷத்திய 8-வது சட்டமாகிய திருத்த சட்டத்தினல் புதியதாக அமைக்கப் பட்டது. கைப்பற்று நிலத்தின் விஸ்தீரணத்தில் ஏறத்தாழ்வு இருந்து அவை விஷயமாய் நிலஸ்வான்தாரருக்கும் ரயத்துக்கும் கான்ட்ராக்ட் இருக்கும் பக்ஷத்தில் அதை தாவா செய்யாமலே அமுலுக்குக் கொணடுவரலாம். இருவருக்கும் சச்சரவு ஏற்படும்போது தான் கலெக்டர் பிரவர்த்திக்க வேண்டிய அவசியம் நேரிடும்.

இன்னும் 24-வது பிரிவின் கீழ் உள்ள குறிப்புகளை பார்க்க.

**43.** விட்டுவிடப்பட்டது.

### குறிப்புகள்.

இந்தப் பிரிவானது இப்பொழுது 163-வது பிரிவாக மாற்றப் பட்டு அதில் புதிய அம்சங்களும் சேர்க்கப்பட்டிருக்கிறது. அந்தப் பிரிவின் கீழ் உள்ள குறிப்புகளைப் பார்க்க.

*நில விஸ்தீரணத்துக்குத்தக்கபடி தொகையை இன்ன விதமாய் மாற்றவேண்டுமென்று தீர்க்கரிவை செய்வதற்கான விதிகள்.*

**44.** (1) 42-வது பிரிவைச்சேர்ந்த (2) குறிப்பிட்ட உட்பிரிவினபடி விண்ணப்பம் செய்துகொள்ளப்படுவதன் மேலாவது, அந்தப் பிரிவைச்சேர்ந்த (3) குறிப்பிட்ட உட் பிரிவில் நிபந்தனை கண்டிருக்கிற பிரகாரம் குத்தகைத் தொகையை நிர்ப்பந்தமாய் அதிகப்படுத்தும்படி அல்லது குறைக்கும்படி எந்த நடவடிக்கையில் தாவா செய்யப்படு கிறதோ அந்த நடவடிக்கையிலாவது, கலெக்டரானவர்-எந்த விஸ்தீரணத்துக்காக குத்தகைத்தொகை முன்னே செலுத் தப்பட்டிருக்கிறதோ அந்த விஸ்தீரணத்தையும், அந்த குத்தகைத்தொகைபோடுகூட தொகை ஏதாகிலும் சேர்ப்ப தாயிருந்தால் அதையும் அல்லது அந்த குத்தகைத் தொகை

யிலிருந்து தொகை ஏதாகிலும் கழிப்பதாயிருந்தால் அதை யும் நிஷ்கரிஷை செய்யவேண்டும்.

(2) எந்த விஸ்தீர்ணத்துக்காகக் குத்தகைத்தொகை முன்னே செலுத்தியிருக்கிறதோ அந்த விஸ்தீர்ணத்தை நிஷ் கரிஷை செய்கையிலே, கலெக்டரானவர் அடியிற்கண்ட விஷ யங்களில் ஒவ்வொன்றையும் கவனிக்க வேண்டும்:—

(a) இன்னவிதமாக அனுபோகம் ஆதியில் உண் டானதென்பதும் இன்ன திட்டங்களின்படி உண்டானதென் பதும் - திருஷ்டாந்தமாக, குத்தகைத்தொகையானது கைப் பற்று நிலம் முழுமைக்காகவும் ஒன்றாய்ச்சேர்த்து ஏற்படுத் தப்பட்டுள்ள குத்தகைத்தொகையா என்பதும்;

(b) ரயத்து செலுத்தவேண்டிய மொத்த குத்தகைத் தொகை அதிகப்பட்டிருக்கிறதையனுசரித்தோ அல்லது வேறே விதமாகவோ, என்ன காரணத்தைக்கொண்டு ஜாஸ்தி யாய் நிலம் வைத்துக்கொண்டிருக்க அந்த ரயத்துக்கு நிலத் துக்குடையவர் அனுமதி கொடுத்திருக்கக்கூடுமோ அப்படிப் பட்ட யாதொரு காரணமும்;

(c) என்ன காரணத்தைக்கொண்டு ரயத்து நில விஸ் தீர்ணம் குறைந்திருந்தும் அதற்குச்சரியாகத் தாம் கட்ட வேண்டிய குத்தகைத்தொகையில் குறைவில்லாமலே அந்தக் குறைவான நில விஸ்தீர்ணத்தை வைத்துக்கொண்டிருப்ப தற்குச் சம்மதிக்கக்கூடுமோ அப்படிப்பட்ட யாதொரு காரண மும்;

விவரணம்.—ரயத்து ஜாஸ்தியாய் நிலம் வைத்துக் கொண்டிருக்க நிலத்துக்குடையவர் அனுமதி கொடுத்திருக் கிறாரா என்பதையாவது, நில விஸ்தீர்ணம் குறைந்திருந்தும் அந்த குறைவுக்குத் தக்கபடி குத்தகைத்தொகை குறைவில்

லாமலே அந்தக் குறைவான நில விஸ்தீர்ணத்தை வைத்துக் கொண்டிருக்க ரயத்து சம்மதிக்கிறாரா என்பதையாவது தீர்மானிக்கையிலே, கலெக்டரானவர் - குத்தகைத்தொகையைக்குறித்தோ விஸ்தீர்ணத்தைக் குறித்தோ விவாதம் நேரிடாமலே எவ்வளவு காலம் (நிலம்) அனுபோகத்திலிருக்கிறதென்பதைப்பற்றி யோசிக்கலாம்;

மேலும்,

(d) விண்ணப்பம் செய்துகொண்ட காலத்திலே உபயோகிக்கப்பட்ட அல்லது அவ்விடத்தில் உபயோகத்திலிருக்கிற அளவுகோலின் நீளத்தோடு ஒத்திட்டு பார்க்கையில் அனுபோகம் ஆதியில் ஏற்பட்ட காலத்திலே உபயோகிக்கப்பட்ட அல்லது அவ்வவ்விடத்தில் உபயோகத்திலிருந்த அளவுகோலின் நீளமும்.

(3) குத்தகைத்தொகையோடு சேர்க்கவேண்டியதொகை இவ்வளவென்று தீர்மானிக்கையிலே, கலெக்டரானவர்-அந்த கிராமத்திலாவது அடுத்த கிராமங்களிலாவது அதே தன்மையுள்ளவைகளும் அதற்குள்ள அனுகூலங்களைப் போன்ற அனுகூலங்களை பொருந்தியுள்ளவைகளுமான நிலங்களுக்கு ரயத்துகள் செலுத்தத்தக்க விதங்களைக் கவனிக்கவேண்டும்; மேலும், அவர் - பிரஸ்தாப விஷயத்தின் சந்தர்ப்பங்களை யோசிக்கும்போது நியாயமற்றதாகவாகிலும் அதருமமானதாகவாகிலும் இருக்கிற யாதொரு குத்தகைத்தொகையை எந்த சந்தர்ப்பத்திலும் நிஷ்கரிஷை செய்வது கூடாது.

(4) குறித்த யாதொரு நிலம் அதிகமாய்க்கைப்பற்றி யிருந்து வருகிறதென்று நிலத்துக்குடையவராவது ரயத்தாவது எடுத்துக்காட்ட அசக்தராயிருக்கிற பட்சத்திலே, அந்த அதிக விஸ்தீர்ணத்தின் நிமித்தம் சேர்க்கவேண்டிய குத்த

கைத் தொகையை - அப்படிப்பட்ட அதிக விஸ்தீர்ணம் நீங்கலாகக் கைப்பற்றிலிருக்கும் சகல நிலங்களுக்காகவும் செலுத்தப்படும் சராசரி குத்தகைத்தொகை விதப்படி கணக்கிடலாம்.

(5) குறைக்கிற விஷயத்திலே குத்தகைத்தொகையிலிருந்து குறைக்கப்பட்ட தொகையானது - கைப்பற்று நிலத்தின் வருஷாந்தர மொத்த மாசூலில் ஏற்படும் குறைவுக்குத் தக்கபடி இருக்கவேண்டும்; அல்லது ஷெடி மாசூலில் ஏற்படும் குறைவு இவ்வளவென்று திருப்திகரமாய் ருஜுவாகாமற் போகிறபட்சத்திலே, குத்தகைத் தொகையிலிருந்து குறைக்கப்பட்ட ஷெடி தொகையானது - கைப்பற்று நிலத்தின் விஸ்தீர்ணத்திலுள்ள குறைவுக்குத்தக்கபடி இருக்கவேண்டும்.

(6) இந்தப்பிரிவின் பிரகாரம் குத்தகைத்தொகையை அதிகப்படுத்துவதையாவது குறைப்பதையாவது இந்த ஆக்டின் தாற்பரியப்படி குத்தகைத்தொகையை அதிகப்படுத்துவதாகவோ குறைப்பதாகவோ எண்ணக்கூடாது.

**45.** விட்டுவிடப்பட்டது.

**46.** விட்டுவிடப்பட்டது.

**47.** விட்டுவிடப்பட்டது.

**48** விட்டுவிடப்பட்டது.

**49.** விட்டுவிடப்பட்டது.

# 4-ம் அத்தியாயம்.

## பட்டாவும் முச்சிலிக்காவும்.

*இந்த அத்தியாயம் எந்த ரயத்துகளுக்குச் சம்பந்தப்படுகிறதோ அந்த ரயத்துகள்.*

**50.** (1) இந்த அத்தியாயத்தில் கண்ட நிபந்தனைகள் சகல ரயத்துகளுக்கும் பிரயோகப்படும்.

*பட்டா முச்சிலிக்கா பெற்றுக்கொள்ள ரயத்துக்கும் நிலத்துக்குடையவருக்குமுள்ள சுதந்திரம்.*

(2) யாதொரு நடைமுதல் ரெவினியு வருஷத்துக்காகத் தமக்குப் பட்டா கொடுக்கும்படி தம்முடைய நிலத்துக்குடையவரைக்கேட்க ஒவ்வொரு ரயத்துக்கும் சுதந்தரமுண்டு; யாதொரு நடைமுதல் ரெவினியு வருஷத்துக்காகப் பட்டா பெற்றுக்கொண்டு அதற்குப் பர்த்தியாகத் தமக்கு முச்சிலிக்கா கொடுக்கும்படி தம்முடைய ரயத்தைக் கேட்க ஒவ்வொரு நிலத்துக்குடையவருக்கும் சுதந்தரமுண்டு.

(3) ஒரேவொரு கிராமத்தில் தம்முடைய சுவாதீனத்திலுள்ள சகல நிலங்களையும் ஒரேவொரு பட்டாவில் பதிவு செய்யவேண்டுமென்று ரயத்து கேட்டுக்கொள்ளுகிற பட்சத்திலே அந்தப்படியே பதிவுசெய்துக்கொள்ள அவருக்குச் சுதந்தரம் உண்டு.

### குறிப்புகள்.

இந்தப் பிரிவில் (3)-வது உட்பிரிவானது 1934-ம் வருஷத்திய திருத்த சட்டத்தினால் நுழைக்கப்பட்டது. இது ரயத்துகளுக்கு அனுகூலமான ஒரு அம்சமாகும். ஒரே கிராமத்தில் தமக்குள்ள

எல்லா நிலங்களையும் சேர்ந்த ரயத்தானவர் ஒரேபட்டாவில் சேர்த்துகொள்வதினால் ரெண்ட் செலுத்தும்விஷயத்தில் சௌகரியம் ஏற்படும்.

பட்டா முச்சலிக்கா பரிவர்த்தனை செய்துக் கொள்வதினாலேயே யாதொரு நிலத்தின் விஷயமாய் ரயத்துக்கு பாத்தியதை ஏற்பட்டு விடாது. அனுபவ விஷயம்தான் விசிதமாகும் 28 M. L. J. 607.

பட்டாவிலும் முச்சிலிக்காவிலும் காண வேண்டியவைகள்.

**51.** (1) (ஒப்பந்தஞ்செய்து கொள்ளுகிற) நபர்களின் பெயர்களையும் நிலத்தின் அவ்வவ்விடத்திய விவரத்தையும் விஸ்தீரணத்தையும் ரொக்கமாகவோ தானியரூபமாகவோ மாசூலின் ஒரு பங்காகவோ குத்தகைத்தொகை எந்த விதமாக மேடி நிலத்துக்குச் செலுத்தத்தக்கதாயிருக்கிறதோ அதையும் குத்தகைத்தொகை விதத்தையும் அல்லது அதன் அளவையும், கால்நடைகளை மேய்ப்பதற்குறிய கட்டணங்கள் அல்லது பாசிக்குத்தகை தொகைகள் ஆகிய இவைகள் காரணமாக ரயத்து செலுத்தவேண்டியதாயிருக்கும் யாதொரு தொகையும் சட்டத்தின்படியாவது சட்டத்தைப்போல் செலாவணியாய்க்கொண்டிருக்கிற வழக்கத்தின் படியாவது குத்தகைத்தொகையோடுகூட செலுத்தத்தக்க யாதொரு பிரதேச வரி, லெவ் (இறை) அல்லது கட்டணம் அல்லது (சார்ஜ்) செலவுத்தொகையையும் எந்தக்காலவரையறை அல்லது காலவரையறைகளில் அவைகளை செலுத்த வேண்டுமோ அந்த காலவரையறை அல்லது காலவரையறைகளையும், பட்டாதேதியையும் எந்த விசேஷ ஷரத்துகளின்படி மேடி நபர்கள் பிணைப்பட்டிருக்கவேண்டுமென்று உத்தேசிக்கப்படுகிறதோ அப்படிப்பட்ட சகலமான விசேஷ ஷரத்துகளையும் பட்டாவில் காணவேண்டும்; மேலும், மேற்படி பட்-

டாவிலே நிலத்துக்குடையவர் கையெழுத்து பண்ணவேண்டும். முச்சிலிக்காவானது நிலத்துக்குடையவருடைய இஷ்டப்படி பட்டாவின் பிரதியாக இருக்கலாம் அல்லது அந்தப் பட்டாவிற்கண்ட ஷரத்துகளின்படி நடப்பதாகச் செய்து கொள்ளும் வெறும் உடன்படிக்கையாக இருக்கலாம்; மேலும், அந்த முச்சிலிக்காவிலே ரயத்து கையெழுத்து பண்ணவேண்டும்.

(2) யாதொரு ரயத்து சாகுபடி செய்வதைப்பற்றியாவது மாமூல் அறுவடை செய்வதைப்பற்றியாவது நிர்ப்பந்தமாகவோ, குறித்த யாதொரு காலத்திலே யாதொரு ரயத்து தம்முடைய நிலத்தின் ஸ்வாதீனத்தை விட்டுவிடுவதைப்பற்றியோ கண்டிருக்கும் யாதொரு திட்டமானது சட்டசம்மதமில்லாததாய்ப் போவதோடுகூட பிரயோசனமற்றதாயும் போய்விடும்.

குறிப்புகள்.

இந்தப் பிரிவில் 1934-ம் வருஷத்திய திருத்தத்தினுல் "கால் நடை மேய்ப்பதற்குரிய கட்டணங்கள் அல்லது பாசிக்குத்தகை தொகைகள்" என்னும் பதங்கள் சேர்க்கப்பட்டன. இதன் நோக்கம் என்னவென்ருல், பட்டாவில் எல்லாவிதமான வசூலிக்கப்படத்தக்க தொகைகள் அடங்கியிருக்கவேண்டுமென்பது.

ஒரு கிராமத்தில் செட்டில்மெண்ட் நடந்ததின் பேரில் ஏற்கெனவே அமுலில் இருந்த பட்டாவில் உள்ள ஷரத்துகள் முக்கியமான பாகங்களில் மாற்றப்படுமாகில் அவைகளையெல்லாம் கண்டு நிலத்துக்குடையவர் ரயத்துக்கு புதிய பட்டாவை கொடுக்க (டெண்டர் செய்ய) வேண்டும் என்று 56 M. L. J. 81 என்னும் கேஸில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

கிராம கர்ணங்களின் சம்பளத்திற்குப் பதிலாக ருசும் என்னும் ஒரு தொகை வசூலிக்கப்பட்டு வருமானுல் அதையும் கட்டாயமாக பட்டாவில் காண வேண்டும். அந்த தொகையும் ரென்டோடு செலுத்தப்படத்தக்க ஒரு கட்டணமென்று கருதப்படலாம்.

ஒரு பட்டாவில் எந்த நிலத்திற்காக பட்டா கொடுக்கப்படுகிறதோ அதைப்பற்றின விஷயங்கள் மாத்திரம் அடங்கி இருக்க வேண்டியேயொழிய இதர நிலங்களைப்பற்றி அதில் காணக்கூடாது. 7 I. C. 897. அப்படி ஏதாவது கண்டிருந்தாலும் அத்தகைய ஷரத்துகள் செல்லாது. ஆனால் புறம்போக்குகளில் ஏதாவது ஆக்கிரமம் செய்யப்பட்டால் அதற்காக இரட்டிப்பு தீர்வை செலுத்த வேண்டும் என்று ஷரத்து கண்டிருப்பது சட்ட விரோதமானதல்லவென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 7. I. C. 897.

*எவ்வளவு காலத்துக்காகப் பட்டா கொடுத்து முச்சிலிக்கா பெற்றுக்கொள்ளலாமென்பது.*

**52.** (1) ஒரு ரெவினியு வருஷத்துக்காவது பல ரெவினியு வருஷங்களுக்காவது பட்டா கொடுத்து முச்சிலிக்கா பெற்றுக்கொள்ளலாம்; ஆனால் ஒரு ரெவினியு வருஷத்துக்கு மேற்பட்ட ஒரு காலவரையறைக்காக எந்த நிலத்துக்குடையவரும் பட்டா கொடுப்பதாகக் காட்டவும் எந்த ரயத்தும் அதை அங்கீகரிக்கவும் கடமைப்பட்டவராகார்.

(2) (3) குறிப்பிட்ட உட்பிரிவிற்கண்ட நிபந்தனைகளுக்குட்பட்டு, யாதொரு பட்டா அல்லது முச்சிலிக்கா எந்தக் காலவரையறைக்குச் சம்பந்தப்படுகிறதோ அந்தக் காலவரையறை ஆரம்பமான பிறகு பன்னிரண்டுமாத காலத்துக்குள்ளாக அந்தப்பட்டா அல்லது முச்சிலிக்கா கொடுப்பதாகக் காட்டவேண்டும், அந்த முச்சிலிக்கா அல்லது பட்டா கொடுக்கும்படி கேட்கவேண்டும்.

(3) யாதொரு ரெவினியு வருஷத்துக்காக அங்கீகரிக்கப்பட்ட பரிவர்த்தனம் செய்து கொள்ளப்பட்ட அல்லது டிக்ரி செய்யப்பட்ட பட்டாக்களும் முச்சிலிக்காக்களும் எந்த ரெவினியு வருஷத்துக்குப் புதிதாகப் பட்டாக்களும் முச்சிலிக்காக்களும் அங்கீகரிக்கப்படவோ பரிவர்த்தனம்

செய்துகொள்ளப்பட்டோ அல்லது டிக்ரி செய்யப்பட்டோ இருக்கின்றனவோ அந்த ரெவினியு வருஷம் ஆரம்பமாகிற வரையில் செலாவணியாய்க்கொண்டே வரவேண்டும்; ஆனால் யாதொரு பட்டாவாகிலும் முச்சிலிக்காவாகிலும் ஒன்றுக்கு மேற்பட்ட ரெவினியு வருஷங்களுக்குச் செலாவணியாய்க் கொண்டேயிருந்தால், புதிதாக பட்டா அல்லது முச்சிலிக்கா எந்த ரெவினியு வருஷத்தில் கொடுப்பதாகக் காட்டப்படுகிறதோ அங்கீகரிக்கப்படுகிறதோ, பரிவர்த்தனஞ்செய்து கொள்ளப்படுகிறதோ அல்லது டிக்ரி செய்யப்படுகிறதோ அந்த ரெவினியு வருஷத்துக்கு அடுத்து வருகிற ரெவினியு வருஷம் ஆரம்பமாகிறவரையிலே அதே கைப்பற்று நிலத்துக்கு மேற்படி புது பட்டாவாவது முச்சிலிக்காவாவது செலாவணியாகமாட்டாது.

## குறிப்புகள்.

பட்டா முச்சிலிக்கை மாற்றிக்கொள்வதென்பது கைப்பற்று பாத்தியதையுள்ள ரயத்துகளுக்கு மாத்திரம் தான் பிரயோகமாகும். அது இதர நபர்களுக்கு பிரயோகமாகாது. ஆகையால் கைப்பற்று பாத்தியதை பெற்றிராதவர்களுடைய சொத்தை இந்த சட்டத்தின் கீழ் ஜப்தி செய்வது சட்ட சம்மதமானதல்ல.

ஒரு மைனர் இனம்தாரரின் அதாவது சிறிய இனம்தாரரின்கீழ் சில நபர்கள் ஒரு கடப்பா (முச்சிலிக்கை) எழுதிக்கொடுத்து நிலத்தை சுவாதீனம் பெற்றிருந்தனர். அந்த அக்ரிமெண்ட் ரிஜிஸ்டராக வில்லை. இப்படியிருக்க அவர்கள் செலுத்த வேண்டிய பாக்கிக்காக இனம்தார் ஜப்தி செய்தபோது அவர்கள் ஆட்சேபனை செய்தனர். இவர்கள் கைப்பற்று நிலத்தைப்பெற்றிருந்த ரயத்துகள் அல்ல. இப்படியிருக்கையில் அவர்கள் பேரில் இந்த சட்டம் 212-வது பிரிவின் கீழ் கிரிமினல்தாவா தொடரப்பட்டது. அந்த நபர்கள் குற்றவாளிகளாக கருதப்படுவார்களா என்றும் கேள்வி வந்ததில் அவர் குற்றவாளிகள் அல்லவென்றும் ஷை முச்சிலிக்கை ரிஜிஸ்டராகாமலிருந்த

தினுலும் இந்த நபர்கள் கைப்பற்று பாத்தியதை உடையவர்களல்லாத லாலும் இனும்தார் இந்த சட்டத்தின் கீழ் உள்ள வழிகளை கைக்கொள்வதற்கில்லையென்றும் தீர்மானித்தனர். இந்த சந்தர்ப்பத்தில்தான் டை 52-வது பிரிவானது (அதாவது முச்சலிக்கா மாற்றிக்கொள்வதென்பது) கைப்பற்று பாத்தியதை உள்ளநபர்களுக்குத்தான் பிரயோகமாகும் என்று தீர்மானிக்கப்பட்டது. சூரமய்யா vs. சத்ய நாராயணு 35 L. W. 849.

R. பௌல்க்ஸ் vs. கந்தசாமி பிள்ளை மற்றவரும் 63 M. L. J. 949 என்றும் கேஸில் இப்பிரிவின் கீழ் ஒரு பட்டா முச்சிலிக்கை மாற்றப்படுவதின் வேகமென்னவென்று கேள்வி வந்ததில் பின்வருமாறு தீர்மானிக்கப்பட்டது. (இந்த கேஸில் சிவகெங்கை ஜமீன்தாரியில் புலியூர் என்றும் கிராமத்திலிருந்து கிளம்பிய கேஸ்):—

சென்னை எஸ்டேட்ஸ்லாண்டு ஆக்ட் 25. 30. 42. 45. இந்தப் பிரிவுகளிற்சொன்ன சந்தர்ப்பங்களில் ரெண்டு இன்னதென்று தீர்மானிப்பதற்கு கலெக்டருடைய உத்திரவானது தேவையானதாகும். ஆகையால் இவைகளைத்தவிர மற்றப்படி ரெண்டுக்காக செய்யப்பட்டதாவாக்களைச் சேர்ந்த வரையிலும மேலேகண்ட 27, 28 பிரிவுகளில் உள்ள அனுமான வகைப்பிரகாரம மற்றப்படி வேறே விதமான சந்தர்ப்பங்கள் உள்ளனவென்று காட்டப்பட்டாலொழிய பட்டாவில் சொல்லப்பட்ட ரெண்ட்தான் சரியான ரெண்ட் என்று ஏற்படும். அதாவது மேலே சொல்லப்பட்ட பிரிவுகளில் உள்ள சந்தர்ப்பங்களைத் தவிரமற்ற சந்தர்ப்பங்களில் பட்டா கொடுக்காமலே தனக்கு அதிக தொகைசேரவேண்டுமென்று கூறி நிலத்துக்குடையவர் தாவா செய்யலாம். அதற்கு தடையொன்றுமில்லை. அப்படி தாம் பாத்தியதை உடையவர் என்று அவர் ருசு செய்யும பக்ஷத்தில் கோர்ட்டார் அதிக ரெண்டைக் கொடுக்கலாம்.

ஒரு பசலியில் கொடுக்கப்பட்ட பட்டாவானது அடுத்த பசலிக்கும் அமுலில் இருக்கும்.

ஒரு நிலத்துக்குடையவர் பட்டா கொடுத்தப்பிறகு அவ்வருஷ முழுவதிலும் அதே பட்டாவின் ஷரத்துகள்தான் அமுலில் இருக்கும். அவர் வேறு விதமாக பட்டா கொடுக்க வேண்டுமென்கிற

எண்ணத்துடன் தனது ஜமீனை மற்றொருவருக்கு இஜாரா விட்டு அவர் வழியாய் புதிய ஒரு பட்டாவை டென்டர் செய்யும்படி செய்விப்பது முடியாது இஜாராவினால் புதியதாக ஏற்படும் நிலத்துக் குடையவரும் தனது குத்தகைதாரருக்கு எவ்வளவுபாத்தியதை யுண்டோ அதைவிட அதிகமான உரிமைகளைப் பெற்றவராக மாட்டார். சுந்தரமய்யர் VS. குளத்து அய்யர் 1930 A. I. R. Mad. 62.

**53**. விட்டுவிடப்பட்டது.

இன்ன விதமாகப் பட்டா கொடுக்கக்காட்ட வேண்டு மென்பது.

**54** ரயத்தினிடமாவது அவருடைய குடும்பத்தைச சேர்ந்த வயது வந்த யாதொரு புருஷரிடமாவது அந்த ரயத்தினிடமிருந்து அதிகாரம் பெற்றிருக்கும் ஏஜெண்டினிடமாவது பட்டாவின் நகலை ஒப்புவிப்பதன் மூலமாகவேவா அல்லது அப்படி சேர்ப்பிக்க முடியாத பட்சத்திலே கிராமச்சாவடியிலாகிலும் கிராமச்சாவடி எதுவும் இராவிட்டால் அந்த கிராமத்தில் எல்லாருக்கும் நன்றாய் தெரியும்படியான யாதொரு இடத்திலாகிலும் ஒரு நகலையொட்டி ரயத்து கடைசியாக வாசம் செய்திருந்ததாக தெரியவரும் இடத்திலே அவருக்கு ஒரு நகலை தபால மூலமாய் அனுப்புவது மூலமாகவோ ரயத்தினிடத்திலே பட்டா கொடுப்பதாகக் காட்டலாம்; அல்லது யாதொரு பூஸ்திதியின் விஷயமாகவோ பூஸ்திதியைச்சேர்ந்த யாதொரு பாகத்தின் விஷயமாகவோ நிலத்துக் குடையவர் விண்ணப்பம் செய்துகொள்வதன்மேல் கலெக்டர் அனுமதி கொடுக்கிறபட்சத்திலே, கலெக்டர் ஆபிசிலோ பொதுவான அல்லது பிரத்தியேகமான உத்தரவு மூலமாய்ப் பிரதேச கவர்ன்மென்டார் கட்டளையிடுகிற வேறு யாதொரு உத்தியோகஸ்தருடைய ஆபிஸிலோ அந்த பட்டாவைக்

கொண்டுவந்து தாக்கல் செய்யலாம்; அப்படி தாக்கல் செய்யப்பட்டால், கலெக்டர் அல்லது மேலேகண்ட உத்தியோகஸ்தர் மேலே சொல்லியிருக்கிற விதமாய் நிலத்துக் குடையவரின் செலவிலே அந்தப் பட்டாவை ரயத்துக்குச் சேர்ப்பிக்கவேண்டும். மேலும் மேற்படி கலெக்டராவது உத்தியோகஸ்தராவது மேலே கண்டபடி தேதியைக் குறித்து நிலத்துக்குடையவருக்கு தபால் மூலமாய் உடனே சங்கதி தெரிவிக்கவேண்டும்.

குறிப்புகள்.

இந்தப் பிரிவானது 1934-ம் வருஷத்திய திருத்த சட்டத்தினால் திருத்தியமைக்கப்பட்டது. பட்டா கொடுப்பது அல்லது டென்டர் செய்யப்படுவது இவைகளின் விதங்களனைத்தும் இப்பிரிவில் பூரணமாக காணப்பட்டிருக்கிறது.

பட்டா பெறுவதற்காக வியாஜ்ஜியம்.

**55.** கேட்டுக்கொண்ட பிறகு மூன்றுமாத காலம் வரையில், ஒரு நிலத்துக்குடையவர் யாதொரு ரயத்து என்ன ஷரத்துகளின்படி பட்டா பெற்றுக்கொள்ள சுதந்தரமுடையவராயிருக்கிறாரோ அந்த ஷரத்துகளின்படி பட்டா கொடுக்கத்தவறினால் அப்படிப்பட்ட பட்டாவினிமித்தம் அந்த ரயத்து கலெக்டரிடத்தில் வியாஜ்ஜியந்தொடருவது சட்ட சம்மதமாகும்.

குறிப்புகள்

பட்டா என்பது சுவாதீனத்தைக் காட்டக்கூடிய ஒரு அம்சமாகும். ஆகையால் ஒரு ரயத்து யாதொரு நிலத்தை சுவாதீனம் பெற்றிருக்கும் பக்ஷத்தில் அதன் விஷயமாய் பட்டா பெறுவதற்கு அவருக்கு உரிமையுண்டு. 6-வது பிரிவில் கைப்பற்று பாத்தியதைகளைப்பற்றி சொல்லப்பட்டிருக்கிறது. 11-வது பிரிவில் ரயத்தானவர் தமது நிலத்தை உபயோகப்படுத்தக்கூடிய வழி

யைப்பற்றி கூறப்பட்டிருக்கிறது. 12-வது பிரிவில் மரங்களின் அனுபோகத்தைப்பற்றி சொல்லப்பட்டிருக்கிறது. 18-வது பிரிவில் சீர்திருத்தங்களைப்பற்றி கூறப்பட்டுள்ளது. இன்னும் ஒரு ரயத்தானவர் தனது கிராம ஆசாரப் பிரகாரம் பலவித அனுபவ பாத்தியதைகளைப் பெற்றிருக்கக்கூடும். இவைகளனைத்தையும் கண்டு பட்டா பெறுவதற்கு ஒவ்வொரு ரயத்துக்கும் உரிமையுண்டு. இன்ன க்ஷரத்துகளின் பேரில் தமக்கு பட்டாதேவையென்றுகூறி அவ்விதமாகவே பட்டா பெறுவதற்கு கலெக்டரிடம் தாவா செய்யலாம். அப்படிச் செய்வதற்கு முன் ஜமீன்தாரரிடம் மனு செய்து அப்படி செய்தது முதற்கொண்டு மூன்று மாதம் வரையிலும் பட்டா கொடுக்கப்படாமலிருந்தால்தான் தாவா செய்யலாம்.

அப்படி தாவா செய்வதில் ரயத்து நிலம் விஷயமாகதான் தாவா செலாவணியாகும். மற்ற நிலங்களின் விஷயமாய் பட்டா கேட்பதற்கில்லை 32 I. C. 594.

பட்டா கேட்பதற்கு முன் யாதொரு ரயத்துதாமே நேரிடையாக பிரத்தியக்ஷயாக ஸ்வாதீனம் பெற்றிருக்க வேண்டுமென்பது அவசியமில்லை. அவர் நியாயமாயும் சட்ட சம்மதமாயும் அதை பெறுவதற்கு பாத்தியதை உள்ளவராயிருந்தாலே போதுமானது. ரயத்தானவர் இதரர்களுக்கு வாரத்துக்கு விட்டு அவ்விதமாக அனுபோகித்துவந்த போதிலும் பட்டா பெறுவதற்கு உரிமையுள்ளவராவர் 31 M. L. J. 359.

பட்டா பெறுவதற்கு செய்யப்பட்ட தாவாவில் ரயத்தினுடைய பாத்தியதையானது மறுக்கப்பட்டதானால் ரிவின்யூ கோர்ட்டானது அவருக்கு பாத்தியதை உண்டா இல்லையா என்பதைப்பற்றி விசாரித்து தீர்மானிக்க வேண்டும் 60 I. C 316.

எஸ்டேட்ஸ் லாண்ட் ஆக்ட் என்னும் சட்டத்தினுடைய முக்கிய நோக்கம் என்னவென்றால், நிலத்தை கைப்பற்றில் வைத்துக் கொண்டு சுவாதீனம் பெற்றிருக்கும் ரயத்துகளுக்கு சௌகரியம் செய்து அவர்களுடைய ஸ்திதியை உயர்த்த வேண்டுமென்பது. ஆகையால் நடுத்தரமாக இருந்து கைப்பற்ற நிலத்தை இதரர்களுக்கு

கீழ் குத்தகைக்கு விடும் நபர்கள் (Middlemen) பேரில் பட்டா போட்டுக் கொடுப்பது இந்த சட்டத்திற்கு ஏற்றதாகாது. 41 M. L. J. 669.

யாதொரு நிலத்தில் ஒரு ரயத்துக்கு கைப்பற்று பாத்தியதை உண்டா என்னும் பிரச்னையானது ஒரு முக்கியமான பிரச்னை அல்லது கேள்வியாகும் அது அகஸ்மாத்தாக கிளம்பக்கூடிய ஒரு கேள்வி அல்ல. ஆகையால் அத்தகைய தாவாவானது ரெவின்யூ கோர்ட்டிலேயே விசாரணை செய்யப்பட்டு அந்தக்கோர்ட்டிலேயே தீர்மானிக்கப்படவேண்டும். எஸ்டேட்ஸ் லாண்ட் ஆக்டின் 189 வது பிரிவின் பிரகாரம் அத்தகைய தாவா சிவில் கோர்ட்டில் செய்யப் படுவதற்கு நியாயமில்லை.

ஒரு ரெவின்யூ கோர்ட்டில் பட்டா பெறுவதற்கு தாவா செய்து அந்தக் கோர்ட்டு தாவாவை தள்ளுதலை செய்தால் அதன் பேரில் அப்பீல் செய்ய வேண்டுமேயொழிய ஸிவில் கோர்ட்டில் பட்டா பெறுவதற்கு தாவா செய்ய முடியாது. ராஜ ராஜேஸ்வர சேதுபதி vs. முத்துதாயனப்பிள்ளை 55 M. L. J. 379 (ராமநாதபுரம் சமஸ் தானம் கேஸ்)

ஒரு நபர் ஒரு ஜமீன் கிராமத்தில் ஒரு ரிஜிஸ்டர் செய்யப்பட்ட பட்டாதாரரிடமிருந்து சில நிலங்களை பராதீனம் பெற்றார். ஆனால் அவர் பட்டா ட்ரான்ஸ்பர் பெறவில்லை. இதற்கிடையில் நிலத்துக் குடையவரானவர் அந்த நிலங்களின் கிஸ்தி பாக்கிக்காக அவைகளை ஜப்தி செய்து அமுல் நடத்திக் கொண்டுவந்தார். பட்டாவில் எவ்வளவு நிலம் கண்டிருந்ததோ அதைவிட, உள்ள நிலங்கள் வாஸ்தவத்தில் குறைவாகவே இருந்தன. இது விஷயம் யாவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டது. இதை யொட்டி நிலத்தை கிரயம் பெற்றவர் சிவில் கோர்ட்டில் பின் கண்டவாறு தீர்மானம் பெறுவதற்கு தாவா செய்தார். அதாவது நிலத்துக்குடையவரானவர் எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டின் 112-வது பிரிவின் கீழ் எடுத்துக் கொண்டிருந்த ஜப்தி நடவடிக்கைகள் வாஸ்தவத்தில் நிலங்கள் எவ்வளவு விஸ்தீரணம் உள்ளனவோ அவ்வளவு வரையிலும் தான் செல்லத்தக்கன

தாகும் என்று ஒரு ஸ்தாபிதம் பெறுவதற்கும் பட்டாவில் கண்ட மொத்த தொகையையும் வசூல் செய்யாமல் இருக்கும்படி ஒரு தடை உத்திரவு பெறுவதற்கும் தாவா செய்தார். இதற்கு பிரதிவாதியான நிலத்துக்குடையவர், இந்த தாவா சிவில் கோர்ட்டிலேயே செய்யப்படுவதற்கில்லையென்று ஆக்ஷேபம் செய்தார். இதன் விஷயமாக இத்தகைய கேஸானது சிவில் கோர்ட்டில் தாக்கல் செய்யப்படலாமா என்று கேள்வி வந்ததில் பின்வருமாறு தீர்மானிக்கப்பட்டது.

இத்தகைய கேஸுகளில் நாம் அனுசரிக்க வேண்டிய முறை என்னவென்றால். எந்த குறையின் விஷயமாக புகார் சொல்லப்படுகிறதோ அதைப்பற்றி ரிவின்யூ கோர்ட்டில் ஒரு தாவா அல்லது மனுவின் மூலமாக சரியான பரிஹாரம் தேடிக்கொள்வதற்கு வாதிக்கு வசதி இருக்குமானால், வாதி அந்த பரிஹாரத்தையே தான் தேட வேண்டுமே யொழிய ஒரு சிவில் கோர்ட்டில் தாவா தொடரக் கூடாது. இந்த கேஸில் வாதியானவர், தன்னுடைய விக்கிரயமானது அங்கீகரிக்கப்படாவிட்டாலும், தாம் கிரயம் பெற்றவா என்று சொல்லிக் கொண்டே தமக்கு எந்த விதமாக பட்டா பெறுவதற்கு பாத்தியதையுண்டோ அவ்விதமாக பட்டா வேணுமென்று 55-வது பிரிவின் கீழ் தாவா செய்வதற்கு உரிமை பெற்றிருந்தார். அல்லது வாதி 146-வது பிரிவின் கீழ்பட்டாவை தன் பேருக்கு மாற்றவேண்டுமென்று மனு செய்து, அந்த மனுவில் ட்ரான்ஸ்பர் செய்யவேண்டிய நபர் சேராவிட்டால் 146-வது பிரிவின் கீழ் சிவில் கோர்ட்டில் தாவா செய்து, சிவில் கோர்ட்டில் தன் பேருக்கு பட்டா மாற்றப்படவேண்டுமென்று பெற்ற உத்தரவை ரிவின்யு கோர்ட்டில் ஆஜர் செய்திருக்கலாம்.

இந்த நடவடிக்கைகளில் எதையாவது எடுத்துக்கொள்ளாமல் வாதி நேராக ஸிவில் கோர்ட்டுக்கு வந்திருப்பதால 42 M. L. J. 113 என்னும் தீர்மானத்தை யுத்தேசித்தது சிவில் கோர்ட்டில் யாதொரு தாவாவையும் செய்வதற்கில்லை. அகில இந்தியா லா ஜர்னல் பத்திரிகை. 4-வது வால்யம கேஸுகளின் குறிப்புகள் பக்கம் 48.

பட்டாவை அங்கீகரிக்கும்படி கட்டாயப்படுத்துவதற்காக வியாஜ்ஜியம்.

**56.** கொடுக்கக்காட்டின பிறகு ஒருமாத காலம் வரையில் யாதொரு ரயத்து தமக்குக்கொடுப்பதாகக் காட்டப்பட்ட பட்டாவை அங்கீகரிக்கவும் அதற்குப் பரிவர்த்தனமாக ஒரு முச்சிலிக்கா கொடுக்கவும் தவறினால், நிலத்துக்குடையவர் அந்தப்பட்டாவை அங்கீகரிக்கும்படி கட்டாயப்படுத்தும் பொருட்டுக் கலெக்டரிடத்தில் வியாஜ்ஜியம் தொடரலாம்.

குறிப்புகள்.

ஒரு ரயத்து பட்டா டெண்டர் செய்யப்பட்ட நிலங்களுக்கு பட்டாவாக்கிக் கொள்ள மறுத்து விட்ட பிறகு அதே நிலங்கள் தம்முடையது என்று சொல்லி தாவா செய்வதற்கில்லையென்று 28 Mad. 553. என்னும் கேஸில் தீர்மானிக்கப்பட்டது.

ஒரு ரயத்து தன் கைப்பற்று நிலத்தை மற்றொருவருக்கு ட்ரான்ஸ்பர் செய்து விட்டால் அந்த நபரானவர் அவருடைய ஸ்தானத்தில் ரயத்தாகி விடுகிறார். 27 Mad. 401. யாதொரு நிலமானது ஒரு ஊழியத்திற்காக நிலத்துக்குடையவரால் கொடுக்கப்பட்டிருந்தால் அந்த ஊழியம் நின்றுவிட்டவுடன் அல்லது அற்று விட்டவுடன் நிலமானது ரயத்தி நிலமாக போய்விடுகிறது. அத்தகைய நிலத்தின் விஷயமாப் பட்டா பெறும்படி ரயத்தின் பேரில் தாவா செய்வதற்கு நிலத்துக்குடையவருக்கு உரிமையுண்டு 23 L. W. 262.

பட்டாவைக் கொடுக்கும்படியோ அங்கீகரிக்கும்படியோ கட்டாயப்படுத்துவதற்காக கொண்டுவரப்படும் வியாஜ்ஜியங்களைத் தீர்மானிக்கையில் இன்னது செய்யவேண்டுமென்பது.

**57.** 55-வது 56-வது பிரிவுகளின்படி தொடரப்படும் வியாஜ்ஜியங்களைத் தீர்மானிக்கையில், கலெக்டரானவர் இதில் சொல்லியிருக்கிறபடி நடவடிக்கை நடத்தவேண்டும். பிரதிவாதி பட்டாவைக் கொடுக்கவோ அங்கீகரிக்கவோ

கடமைப்பட்டவரல்லவென்று அவர் அபிப்பிராயப்பட்டால், அவர் அந்த வியாஜ்ஜியத்தைத் தள்ளிவிட வேண்டும். பிரதி வாதி பட்டாவைக்கொடுக்கவோ அங்கீகரிக்கவோ கடமைப் பட்டவரென்று அவர் அபிப்பிராயப்பட்டால் அவர் கேட் கப்படுகிற அல்லது கொடுக்கக் காட்டப்படுகிற பட்டா சரியானதுதானவென்று தீர்மானிக்கவேண்டும்; அவர் மேடி பட்டா சரியானதென்று அபிப்பிராயப்படுகிற பட்சத்திலே முச்சிலிக்காவுக்குப் பரிவர்த்தனமாக பட்டா கொடுக்க வேண்டுமென்றாகிலும் பட்டாவை அங்கீகரித்து அதற்குப் பரிவர்த்தனமாக முச்சிலிக்கா கொடுக்கவேண்டுமென்றாகி லும் பிரதிவாதிக்குக் கட்டளையிட்டு டிக்ரி பிறப்பிக்கவேண் டும். கேட்கப்படுகிற அல்லது கொடுக்கக் காட்டப்படுகிற பட்டா சரியானதல்லவென்று கலெக்டர் அபிப்பிராயப்பட் டால் அவர் அந்தப் பட்டாவில் இன்ன ஷரத்துகள் கண்டி ருக்கவேண்டுமென்று தீர்மானிக்கவேண்டியது மல்லாமல் தாம் பிறப்பிக்கும் டிக்கிரியில் அந்த ஷரத்துகளைக் கண்டெழு தவும் வேண்டும். அல்லாமலும் மேற்படி டிக்ரியானது பட் டாவும் முச்சிலிக்காவும் பரிவர்த்தனமாகக் கொடுக்கப்பட்டும் பெற்றுக்கொள்ளப்பட்டும் இருந்தால் எப்படியோ அப்ப டியே செலாவணியாவதுமல்லாமல் பிரயோசனகரமாயும் இருக்கும்.

குறிப்புகள்.

இப்பிரிவானது 1934-ம் வருஷத்திய திருத்த சட்டத்தினால் மாற்றப்பட்டிருக்கிறது. மாறுதலினால் அர்த்தமானது விசதமாக விளங்கும்படி ஏற்பட்டது.

*கர்ணம் பட்டாவிலும் முச்சிலிக்காவிலும் கையெழுத்துபண்ணி அவைகளை ரெஜிஸ்டர் செய்யவேண்டுமென்பது.*

**58.** கைப்பற்று நிலம் எந்தக் கிராமத்திலிருக் கிறதோ அந்தக் கிராமத்தின் கர்ணம்-அந்தக் கைப்பற்று

நிலத்தைப்பற்றிய பட்டாக்களிலும் முச்சிலிக்காக்களிலும் கிரமமாய்க் கையெழுத்து பண்ணவேண்டியதோடுகூட அவைகளை ரெஜிஸ்டர் செய்யவும் வேண்டும்.

---

## 5-ம் அத்தியாயம்.

### குத்தகைத்தொகையை செலுத்துவதும் குத்தகை தொகை பாக்கியும்.

இந்த அத்தியாயத்தில் 59 முதல் 76 வரையிலுமுள்ள பிரிவுகள் அடங்கியுள்ளன. ரெண்டு செலுத்தப்படுவதைப்பற்றியும் எந்தெந்த காலங்களில் அது செலுத்தப்படவேணடும் என்பதைப்பற்றியும் இந்த அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

*தவணைகளாக குத்தகைத் தொகையைச் செலுத்துவது.*

**59.** உடன்படிக்கையின் பிரகாரமோ உடன்படிக்கை இராதபட்சத்திலே உறுதியாய் ஏற்பட்டுள்ள மாமூல் பிரகாரமோ குத்தகைத்தொகை தவணைகளாக செலுத்தத் தக்கதாகும்.

குறிப்புகள்.

பவான காலங்களில் பணம் செலுத்தப்படவேணடும் என்று பட்டாவில் யாதொரு ஷரத்தும் இராமற் போனால் ரெண்டு தொகையானது பசலி ஆகிரில் (முடிவில்) செலுத்தத்தக்கதாகும். ஒரு பசலி கழிந்த பிறகு இரண்டு மாதம் வரையிலும் தவணை கொடுக்கப்பட்டிருக்கும் பக்ஷத்தில் அந்த காலம் முதற் கொண்டேதான் லிமிடேஷன் தவணை ஆரம்பமாகும். 27 M. L. J. 734.

இந்தப் பிரிவில் உள்ள "மாமூல்" என்னும் பதத்திற்கு அர்த்தமென்ன என்பது ராஜாராம் மேத்தா vs. நாராயணசாமி நாயுடு 61 M. L. J. 357 என்னும் கேஸில் கிளம்பினது. அதற்கு சென்னை ஹைகோர்ட்டார் அவர்கள் "மாமூல்" என்பதற்கும் ஆசாரம் அல்லது புராதன வழக்கம் என்பதற்கும் வித்தியாசம் உண்டு என்றும் மாமூல்

என்பது நீடித்த ஒரு கால அளவுக்கு இருக்க வேண்டிய அவசியமில்லையென்றும் ஒரு சிறிது காலமாக வழங்கி வந்தாலே போதுமானது என்றும் இன்னும் மாமூல் என்பது எந்த கிராமத்தில் ஒரு கேள்வி கிளம்பினதோ அந்த கிராம முழுவதுமாக வழங்கி வந்திருக்க வேண்டிய அவசியமில்லையென்றும் எந்த கைப்பற்று நிலத்தின் விஷயத்தில் ஒரு குறிப்பிட்ட கேள்வி கிளம்பினதோ அதில் மாத்திரம் வழங்கி வந்திருந்தால் போதுமானது என்றும் தீர்மானம் செய்தனர்.

ரெண்டுக்காக தாவா செய்வதற்குள்ள லிமிடேஷன் கால தவணையானது கிஸ்தி அல்லது அதன் ஒரு பாகமானது என்றைய தேதியில் பாக்கியாகிறதோ (அதாவது 60-வது பிரிவின் கீழ் பாக்கியென்று ஏற்படுகிறதோ) அது முதல் ஆரம்பமாகும். (அதற்கு 3 வருஷ தவணையுண்டு) 21 Mad. 413.

குத்தகைத்தொகைக்கு பாக்கி.

**60.** எந்தத்தேதியில் குத்தகைத்தொகையின் தவணைத்தொகை செலுத்தவேண்டியதாகிறதோ அந்தத் தேதியில் அது செலுத்தப்படாவிட்டால், அது அடுத்த தேதியிலே குத்தகைத்தொகை பாக்கியாய்விடுகிறது.

குறிப்புகள்.

ஒரு மத்திய நிலத்துக்குடையவருக்காகவும் நிலத்துக்குடையவர் ஒரு பிரதேச இறை (Cess)யைச் செலுத்திவிட்டு அதை மத்திய நிலத்துக்குடையவரிடமிருந்து வரப்பற்றுவதற்கு தாவா செய்வதாயிருந்தால் அந்த தாவா ரென்டை வரப்பற்றுவதற்கான ஒரு தாவாவென்று கருதப்பட முடியாது. அந்த தொகை ரென்ட் அல்ல. 3 L. W. 32.

பாக்கிக்கு வட்டி.

**61.** இந்த ஆக்டில் கண்ட நிபந்தனைகளுக்குட்பட்டு குத்தகைத்தொகை பாக்கி எந்தத்தேதியில் ஏற்பட்டதோ அந்த தேதிமுதல் அது செலுத்தப்படுகிறவரையிலே மாத

"மொன்றுக்கு நூற்றுக்கு வட்டி அரை விழுக்காடு அந்த பாக்கித்தொகைக்குத் தனிவட்டி வாங்கப்படும்."

குறிப்புகள்.

இப்பிரிவானது ஒரு ரயத்தினுல் நேராக செலுத்தப்படவேண்டிய ரெண்ட் அல்லது குத்தகைக்தொகைக்கு மாத்திரம்தான் பிரயோகமாகும். கட்டுபடி பாக்கிகளுக்கு பிரயோகமாகாது. 27 I. C. 937. அதே மாதிரியாக ஒரு அக்கிரஹாரம்தார் அல்லது இனும்தாரரிடமிருந்து வசூலிக்கப்படக்கூடிய ஜோடிக்கும் பிரயோகமாகாது. இதற்கு தீர்மானப் பிரமாணம் 11 Law Weekly 523. லோகல் போர்டுகள் ஆக்டின் கீழ் வசூலிக்கப்படக்கூடிய பிரதேச இறை (Cess) களுக்கும் பிரயோகமாகாது. தீர்மானப் பிரமாணம் 37 Mad. 319. ஆகையால் இவைகளுக்கு வட்டி என்பது சட்ட மூலமான ஒரு உரிமையோடு வசூலிக்க முடியாது. சில இடங்களில் இவைகளுக்கு வட்டி செலுத்தப்படுவது ஆசாரம் என்று கூறுகின்றனர். அதை வாதிகளே அதாவது தாவா செய்பவர்களே கண்டிப்பாக ருசு செய்ய வேண்டும்.

*குத்தகைத் தொகைக்காக ரசீதுபெற ரயத்துக்குள்ள பாத்தியதை.*

**62.** (1) குத்தகைத்தொகை விஷயமாக தொகை செலுத்தும் ஒவ்வொரு ரயத்தும்-தாம் செலுத்தின தொகைக்காக நிலத்துக்குடையவராலாவது குத்தகை தொகையைப் பெற்றுக்கொள்ள அதிகாரம் கொடுக்கப் பெற்றிருக்கும் வேறே நபராலாவது கையெழுத்து செய்யப்பட்டுள்ள எழுத்துமூலமான ரசீது ஒன்றை உடனே பெற்றுக்கொள்ள அர்ஹராவார்.

(2) நிலத்துக்குடையவராவது மேலேகண்டபடி அதிகாரம் கொடுக்கப்பெற்றிருக்கும் வேறே நபராவது அந்த ரசீதுக்கு ஒரு (கௌண்டர்பாய்ல்) எதிரிடைப்பிரதி தயார் செய்து தம்மிடத்தில் வைத்திருக்கவேண்டும்.

*சட்ட சம்மதமான ரசீதில் காணவேண்டியவைகள்.*

**63.** (1) அடியிற்கண்ட விவரங்களிலே தொகை செலுத்தும் காலத்தில் நிலத்துக்குடையவர் குறிப்பிடக்கூடிய விவரங்களை ரசீதில் காணவேண்டும். அந்த விவரங்களாவை யென்றால் :—

(a) தொகை செலுத்துகிறவர், தொகை செலுத்தப் பெறுகிறவர் - ஆகிய இவர்களுடைய பெயர் ;

(b) எந்தக்கிராமத்தில் கைப்பற்றுநிலம் இருக்கிறதோ அந்தக்கிராமத்தின் பெயர் ;

(c) செலுத்தியிருக்கிற தொகை ;

(d) எதற்காகக் குத்தகைத்தொகை செலுத்தியிருக்கிறதோ அந்தக்கைப்பற்று நிலத்தின் விவரம் ;

(e) செலுத்தப்பட்ட தொகை எந்த வருஷத்துக்கும் தவணைக்கும் வரவாக வைத்துக்கொள்ளப்பட்டிருக்கிறதோ அந்த வருஷமும் தவணையும் ;

(f) செலுத்தியிருக்கிற தொகை பூர்த்தியாகச் செலுத்தியிருக்கிற தொகையாக அங்கீகரித்திருக்கிறதா அல்லது சிறிதுமட்டில்தான் செலுத்தியிருக்கிற தொகையாக அங்கீகரித்திருக்கிறதா என்பது :

(g) குத்தகைத்தொகை செலுத்திய தேதி ;

ஆனால், பொதுவாகவோ குறித்த யாதொரு பிரதேச விஸ்தீர்ணத்துக்கோ அல்லது வகுப்பைச்சேர்ந்த விஷயங்களுக்கோ பிரதேச கவர்ன்மெண்டார் - மாற்றப்பட்ட ஒரு நமூனைவை அப்போதைக்கப்போது நிர்ணயிக்கலாம்.

(2) இருக்கவேண்டுமென்று இந்தப்பிரிவில் சொல்லியிருக்கிற விவரங்கள் முக்கிய அம்சங்களில் ஒரு ரசீதில் கண்டிராவிட்டால், ஷை ரசீதை - அது எந்தத்தேதியில் கொடுக்கப்பட்டதோ அந்தத் தேதிவரையில் பாக்கியாயிருக்கிற சகல குத்தகை தொகைகளுக்கும் பூர்த்தியான ஒரு ரசீதாகக் கொள்ளலாம்.

தவணைகளுக்காகச் செலுத்தப்படும் தொகைகளை
வரவுவைத்துக் கொள்வது.

**64.** (1) குத்தகைத் தொகையினிமித்தம் யாதொரு ரயத்து தொகை செலுத்தும்போது அவர் அதை எந்த வருஷத்துக்கும் தவணைக்கும் வரவாக வைத்துக்கொள்ள வேண்டுமென்று விரும்புகிறாரோ அதை நிர்ணயிக்கலாம். செலுத்திய தொகை அந்தப்படியே வரவாகவைத்துக்கொள்ளப்படவேண்டும்.

(2) செலுத்திய தொகையை அந்தப்படி ரயத்து எவ்வித நிர்ணயமும் செய்யாத பட்சத்திலே, காலம் கடந்து போகாமலிருக்கிற யாதொரு பாக்கிக்கு வரவாக வைத்துக் கொள்ள நிலத்துக்குடையவருக்கிஷ்டமிருந்தால் அந்தப்படியே வைத்துக்கொள்ளலாம்.

ரசீது கொடுக்காமலிருப்பதற்காகப் பிரதிபலன்.

**65.** நிலத்துக்குடையவராவது அவர் சார்பிலே குத்தகை தொகையை பெற்றுக்கொள்ளுகிற வேறே நபராவது ரயத்து செலுத்தியிருக்கிற யாதொரு குத்தகைத் தொகைக்காக 62-வது 63-வது பிரிவுகளில் சொல்லியிருக்கிறபடி ஒரு ரசீதை அந்த ரயத்துக்கு ஒப்பிக்கவோ செலுத்தியிருக்கிற குத்தகைத்தொகையை எந்த வருஷத்துக்கும்

தவணைக்கும் வரவாக வைத்துக்கொள்ளவேண்டுமென்று ரயத்து கேட்டுக்கொண்டிருக்கிறனோ அந்த வருஷத்துக்கும் தவணைக்கும் அதை வரவாக வைத்துக்கொள்ளவோ மாட்டேனென்று நியாயமான காரணமில்லாமலே நிராகரித்தால் செலுத்தியிருக்கிற குத்தகைத் தொகையின் அளவு அல்லது மதிப்பின் இரட்டிப்புக்கு அதிகப்படாத பிரதிபலன் தொகையைக் கலெக்டருக்கு இக்காரியத்துக்காக விண்ணப்பம் செய்து கொண்டு அதன் மூலமாக ஷெடி நிலத்துக்குடையவரிடத்திலிருந்து வசூல் செய்ய அந்த ரயத்துக்குச் சுதந்தரமுண்டு.

## குறிப்புகள்.

இந்தப் பிரிவில் 1934-ம் வருஷத்திய திருத்தத்தினால் ஏற்பட்ட ஒரு முக்கிய மாறுதல் என்னவென்றால் முன் இருந்த சட்டப்பிரகாரம் காரணமில்லாமல் ரசீது கொடுக்காததற்காக நஷ்ட ஈடு பெறுவதற்கு தாவா செய்யவேண்டியிருக்கையில் இப்பொழுது ஒரு விண்ணப்பம் செய்தாலே போதுமானதென்று திருத்தப்பட்டது.

## தொகை செலுத்தவேண்டிய இடம்.

**66.** ரயத்து தம்முடைய குத்தகைத் தொகையை டிபாஸிட் செய்ய கட்டிவைக்க இந்த ஆக்டின்படி அனுமதி பெற்றிருக்கிற விஷயங்கள் தவிர மற்ற விஷயங்களிலே, நிலத்துக்குடையவருடைய கிராம ஆபீசிலாவது எந்தக் கிராமத்தில் கைப்பற்று நிலம் இருக்கிறதோ அந்தக் கிராமத்திலிருந்து ஐந்துமைல் தூரத்துக்குள்ளாக இது விஷயமாய் நிலத்துக்குடையவரால் ஏற்படுத்தப்படக்கூடிய வேறே யாதொரு சௌகரியமான இடத்திலாவது தொகை செலுத்த வேண்டும்.

ஆனால், பிரதேச கவர்ன்மெண்டாரால் நிர்ணயிக்கப் படக்கூடிய விதிகளின்படி ரயத்துகள் தாங்கள் செலுத்த

வேண்டிய குத்தகைத்தொகையை நிலத்துக்குடையவருக்குத் தபால் மணி ஆர்டர் மூலமாகச் செலுத்தலாம்.

மேலும் குத்தகைத்தொகை தானியரூபமாகச் செலுத்தக்கதாயிருந்தால் எந்தக் கிராமத்தில் கைப்பற்று நிலமிருக்கிறதோ அந்தக் கிராமத்திலே நிலத்துக்குடையவரின் களஞ்சியத்தண்டையாவது ஷை கிராமத்திலிருந்து பத்து மைல் தூரத்துக்குள்ளாக இது விஷயத்திலே நிலத்துக்குடையவரால் ஏற்படுத்தப்படக்கூடிய வேறே யாதொரு களஞ்சியத்தண்டையாவது அந்த குத்தகைத் தொகையை ஒப்புவிக்கவேண்டும். ஆனால் களத்து மேட்டுக்கும் களஞ்சியத்திற்கும் இடையிலுள்ள தூரமானது மூன்று மைலுக்கு மேற்படுகிற பக்ஷத்திலே களத்துமேட்டிலிருந்து தானியத்தை களஞ்சியத்திற்கு கொண்டுவருவதற்காக பிடிக்கும் செலவை நிலத்துக்குடையவர் ஏற்றுக்கொள்ளவேண்டும்.

குறிப்புகள்

தானிய வாரியாக ரெண்ட் அல்லது குத்தகைத் தொகை செலுத்த வேண்டியதாயிருக்கும் சந்தர்ப்பங்களில் நெற் களஞ்சியமானது தான் அடி நிலத்திலிருந்து மூன்று மைல்களுக்கு மேல் இருக்கும் பக்ஷத்தில் அங்கிருந்து தானியத்தை கொண்டு போகும் செலவு அல்லது சார்ஜை நிலத்துக்குடையவர் பொறுத்துக் கொள்ள வேண்டும் என்று 1934-ம் வருஷ திருத்தத்தினால் ஏற்பட்டது. ஏழை குடியானவர்களுக்கு இது ஒரு நன்மையாகும்.

*குத்தகைத்தொகை பெறுவதற்காக நிலத்துக்குடையவரென்று அங்கீகரிக்கப்பட்டுள்ள அல்லது நியமிக்கப்பட்டுள்ள நபர் ரசீது கொடுப்பதினால் இன்னதுண்டாகுமென்பது.*

**67.** நிலத்துக்குடையவருக்குக் குத்தகைத்தொகை பாக்கியாயிருந்தால் குத்தகைத்தொகைபெறும் காரியத்துக்காக நிலத்துக்குடையவரென்று 3-வது பிரிவைச்சேர்ந்த (5)

குறிப்பிட்ட உட்பிரிவின்படி அங்கீகரிக்கப்பட்டுள்ள அல்லது நியமிக்கப்பட்டுள்ள நபராகிலும் குத்தகை பெற்றுக் கொள்ள அதிகாரம் பெற்றிருக்கும் நபராகிலும் மேலே கண்டபடி பாக்கியாயுள்ள குத்தகைத்தொகை விஷயமாய்ச் செலுத்தப்பட்ட யாதொரு தொகைக்காக ரசீது கொடுத்திருந்தால் அது குத்தகைத்தொகை செலுத்தியதற்குப் போதுமான ரசீதாகும்; மேலும் குத்தகைத்தொகை செலுத்துவதற்குட்பட்டிருக்கிற நபர் மேலேகண்டபடி அங்கீகரிக்கப்பட்டுள்ள அல்லது நியமிக்கப்பட்டுள்ளவர் தாவா செய்யும்போது குத்தகைத்தொகை யாதொரு மூன்றும் நபருக்கு சேரவேண்டியதென்று எதிர்வாதஞ் செய்யச் சுதந்தரமுடையவராகமாட்டார். ஆனால் அந்தப்படி அங்கீகரிக்கப்பட்டுள்ள அல்லது நியமிக்கப்பட்டுள்ள நிலத்துக்குடையவருக்கு விரோதமாக அப்படிப்பட்ட யாதொரு மூன்றும் நபருக்கு இருக்கக்கூடிய எவ்வித பரிகாரத்துக்காவது இந்தப் பிரிவிலுள்ள தெதனுலும் பாதகமுண்டாக மாட்டாது.

குறிப்புகள்.

இப்பிரிவானது குடியானவர்களுக்கு முக்கியமானதோர் பிரிவு. ரெண்டுகளைச் செலுத்துவதில் குடித்தனக்காரர்கள் தாங்கள் செலுத்தும் நபர்கள் அப்படி பெறுவதற்கு அதிகாரம் பெற்றவர்களா அல்லவா என்பதை அறிந்த பிறகே செலுத்த வேண்டும். இந்த சட்டப்பிரகாரம் ரென்டை வசூல் செய்வதற்கு அதிகாரம் பெற்றவர்கள் ரென்ட் கேட்டால் அவர்களிடமிருந்து ரசீது பெற்று ரென்டை செலுத்த வேணடும்.

## குத்தகைத் தொகையை டிபாஸிட் செய்வது (கட்டிவைப்பது).

### குத்தகைத் தொகையை டிபாஸிட் செய்வதற்காக விண்ணப்பம்.

**68.** (1) குத்தகைத் தொகை பாக்கியாயிருந்து பணமாகச் செலுத்தத்தக்கதாயிருக்கும் அடியிற்கண்ட சந்

தர்ப்பங்களில் எதிலாவது, யாதொரு ரயத்து கலெக்டருடைய ஆபீஸில் அப்போது பாக்கியாகிற முழு குத்தகைத் தொகையையும் அதன் மேல் வட்டி ஏதாகிலும் செலுத்தத் தக்கதாயிருந்தால் அந்த வட்டி சகிதமாக டிபாஸிட் செய்வதற்கு அனுமதி வேண்டுமென்று கலெக்டருக்கு எழுத்து மூலமாய் விண்ணப்பம் கொடுத்துக்கொள்ளலாம். மேலே கண்ட சந்தர்ப்பங்களாவை யென்றால்:—

(a) ரயத்து தம்மிடத்திலிருந்து சேரவேண்டியிருக்கிற குத்தகைத் தொகையின் நிமித்தம் பணம் செலுத்திவிடுவதாக காட்டி, நிலத்துக்குடையவர் அதை வாங்கிக் கொள்ள மாட்டேனென்று நிராகரிப்பது அல்லது அதற்காக ரசிது கொடுக்கமாட்டேனென்று நிராகரிப்பது; அல்லது,

(b) குத்தகைத்தொகை கூட்டாக இரண்டு அல்லது பல நபர்களுக்குச் செலுத்தத்தக்கதாயிருந்து பணத்துக்காக அவர்களிடத்திலிருந்து கூட்டாய் ரசிது பெற்றுக்கொள்ள ரயத்து அசக்தராயிருப்பதும், அவர்களுக்காகக் குத்தகைத்தொகையை வாப்பற்றிக்கொள்ள யாரும் அதிகாரம் கொடுக்கப்பெறுமலிருப்பதும்; அல்லது,

(c) குத்தகைத்தொகை வசூல் செய்வதற்கான பாத்தியதையை இரண்டு அல்லது பல நபர்கள் தனித்தனியே கொண்டாடுவது அல்லது பாக்கியாயிருக்கிற குத்தகைத்தொகையை வாப்பற்றிக்கொள்ள யாருக்குச் சுதந்தரமிருக்கிறதென்பதை குறித்து ரயத்து வாஸ்தவத்தில் சந்தேகப்படுவது.

(2) அந்த விண்ணப்பம் என்ன ஆதாரங்களைக்கொண்டு செய்துகொள்ளப்படுகிறதோ அந்த ஆதாரங்களை அதில்

காணவேண்டும்; மேலும் அதில்-செலுத்தியிருக்கும் தொகையை என்ன பாபத்து அல்லது பாபத்துகளுக்கு வரவாக வைத்துக்கொள்ளவேண்டுமோ அவைகளையும்—

(a) குறிப்பிட்ட சந்தர்ப்பத்திலே, டிபாஸிட் தொகையை யாருடைய வரவாக எழுதிவைக்க வேண்டுமோ அந்த நபருடைய பெயரையும்;

(b) குறிப்பிட்ட சந்தர்ப்பத்திலே, குத்தகைத்தொகை யாருக்குச்சேரவேண்டியதாயிருக்கிறதோ அவர்களுடைய பெயர்களையும், அல்லது அவர்களில் எத்தனை நபர்களுடைய பெயர்களை ரயத்து குறிப்பிட்டுச் சொல்லக்கூடியவராயிருக்கிறாரோ அவர்களுடைய பெயர்களையும்,

(c) குறிப்பிட்ட சந்தர்ப்பத்திலே குத்தகைத்தொகை கடைசியாக யாருக்குச் செலுத்தப்பட்டதோ அந்த நபர் அல்லது நபர்களுடைய பெயரையும் அதை இப்போது சுதந்தரித்துக் கேட்கிற நபர் அல்லது நபர்களுடைய பெயரையும்,

காணவேண்டும்.

ரெவின்யு ஆபீஸிலே கட்டின டிபாஸிட்டுக்காகக் கொடுக்கப்பட்ட ரசீது சட்ட சம்மதமாயுள்ள பூர்த்தியான ரசீதாகுமென்பது.

**69.** யாருக்கு ஷை விண்ணப்பம் செய்து கொள்ளப்படுகிறதோ அந்த கலெக்டருக்கு குத்தகைத்தொகையை டிபாஸிட் பண்ண (கட்டிவைக்க) அந்தப் பிரிவின்படி விண்ணப்பதாரருக்குச் சுதந்தரமுண்டென்று அந்த விண்ணப்பத்தை பார்வையிடுவதன்மேல் தோற்றுமாகில் அவர்-அந்தத் தொகையை வரப்பற்றிக்கொண்டு அதற்காக ரசீது கொடுக்க வேண்டும்.

(2) மேலே கண்டபடி டிபாஸிட் செய்யப்பட்டிருக்கிற (கட்டி வைக்கப்பட்டிருக்கிற) குத்தகைத் தொகையானது—

68-வது பிரிவைச்சேர்ந்த (1) அடையாளமிட்ட உட்பிரிவிற்கண்ட (a) குறிப்பிட்ட சந்தர்ப்பத்திலே, டிபாசிட் தொகையை யாருடைய வரவாக எழுதி வைக்கவேண்டுமென்று விண்ணப்பத்தில் கண்டிருக்கிறதோ அந்த நபராலும்,

அதே உட்பிரிவிற்கண்ட (b) குறிப்பிட்ட சந்தர்ப்பத்திலே, யாருக்குக் குத்தகைத்தொகை சேரவேண்டியதாகிறதோ அந்த நபர்களாலும்.

அதே உட்பிரிவிற்கண்ட (c) குறிப்பிட்ட சந்தர்ப்பத்திலே, குத்தகைத்தொகையை வரப்பற்றிக்கொள்ள பாத்தியதையுள்ளவர்களாயிருக்கும் நபர்களாலும்

வரப்பற்றிக் கொள்ளப்பட்டிருந்தால், இந்தப் பிரிவின்படி கொடுக்கப்பட்ட ரசீது என்னவிதமாகவும் செலாவணியாகுமோ அதேவிதமாகவும் அதே அளவுக்கும் அந்த ரசீது மேலேகண்ட குத்தகைத்தொகைக்காகப் பூர்த்தியான ரசீதாய்ச் செலாவணியாகும்.

குத்தகைத் தொகையை டிபாஸிட் செய்திருப்பதைப் பெற்றுக்கொண்டதைக் குறித்துப் பிரசித்தம் செய்வது.

**70.** ஷை டிபாஸிட்டை வரப்பெற்றுக்கொள்ளும் கலெக்டரானவர் - அப்படிப்பட்ட டிபாசிட்டைப்பெற்றுக் கொண்டதைக்குறித்து முக்கியமான சகல விவரங்களும் கண்டெழுதியிருக்கிற ஒரு சூசிகை (ஸ்டேட்மெண்ட்) அடங்கியுள்ள விளம்பரத்தை டிஸ்டிரிக்டில் வழங்கும் சுதேச பாஷையில் எழுதி தம்முடைய ஆபீஸில் யாவருக்கும் தெரி

யும்படியான ஒரு இடத்திலே உடனே ஒட்டிவைக்கும்படிச் செய்யவேண்டும்; மேலும், அவர்—

68-வது பிரிவைச்சேர்ந்த (1) குறிப்பிட்ட உட்பிரிவில் கண்ட (a) அடையாளமிட்ட சந்தர்ப்பத்திலே, டிபாஸிட் தொகையை யாருடைய வரவாக எழுதிவைக்கவேண்டு மென்று டிெ விண்ணப்பத்தில் கண்டிருக்கிறதோ அந்த நபருக்கு டிபாஸிட்டைப் பெற்றுக்கொண்டதைக் குறித்த நோட்டிஸ் ஒன்றைச்சேர்ப்பிக்கும்படிச் செய்யவேண்டும்;

அந்த உட்பிரிவில் கண்ட (b) குறிப்பிட்ட சந்தர்ப்பத்திலே, நிலத்துக்குடையவருடைய கிராம ஆபீஸ் அல்லது வாசஸ்தலத்திலும் எந்த கிராமத்தில் அந்தக்கைப்பற்று நிலம் இருக்கிறதோ அந்த கிராமத்தில் யாவர்க்கும் தெரியும் படியான ஒரு இடத்திலும் டிபாஸிட்டைப் பெற்றுக்கொண் டதைக்குறித்த நோட்டிஸ் ஒன்றை ஒட்டிவைக்கும்படி செய்யவேண்டும்; மேலும்,

அந்த உட்பிரிவில் கண்ட (c) குறிப்பிட்ட சந்தர்ப்பத் திலே, டிபாஸிட் தொகையை யார் சுதந்தரித்துக் கேட்கிறார் என்றாவது பெற்றுக்கொள்ள சுதந்தரமுடையவராயிருக்கிறார் என்றாவது நம்ப கலெக்டருக்கு நியாயம் இருக்கிறதோ அப் படிப்பட்ட ஒவ்வொரு நபருக்கும் மேலேகண்ட மாதிரியான நோடிஸ் ஒன்றைச் சேர்ப்பிக்கும்படிச் செய்யவேண்டும்.

டிபாசிட் தொகையைச் செலுத்திவிடுவது அல்லது வாப்ஸ் பண்ணுவது.

**71.** (1) கலெக்டரானவர் டிபாஸிட் தொகையைப் பெற்றுக்கொள்ளச் சுதந்தரமுள்ளவரென்று தமக்குத்தோற் றுகிற யாதொரு நபருக்கு அந்த தொகையைச் செலுத்த

லாம்; அல்லது, தமக்குத் தகுதியாகத்தோற்றினால், அவர் அவ்விதமான சுதந்தரமுள்ளவர் யாரென்பதைக்குறித்து ஸிவில் கோர்ட்டார் தீர்மானஞ் செய்கிறவரையிலே அந்தத் தொகையை வைத்துவைக்கலாம்; மேலும், 68-வது பிரிவை சேர்ந்த (1) குறிப்பிட்ட உட்பிரிவிலுள்ள (c) அடையாள மிட்ட பகுதியின்படி டிபாஸிட் செய்திருந்து, விவாதம் நடத்தும் கட்சிக்காரர்கள் தொகை செலுத்தும்படி கூட்டாய் விண்ணப்பஞ் செய்துகொண்டிராத பட்சத்திலே, அந்தப் படியே வைத்து வைக்கவேண்டும்.

ஆனால் 70-வது பிரிவில் குறிப்பிட்ட விளம்பரமானது டிபாஸிட் தொகையை பெற்றுக்கொள்ளும் கலெக்டர் ஆபீ ஸில் ஒட்டப்பட்ட தேதியிலிருந்து பதினைந்து தினங்களுக் குள் அதை செலுத்தும்படி உத்திரவு பிறப்பிக்கக்கூடாது.

மேலே கண்டபடி செலுத்தவேண்டிய தொகையில் மணி ஆர்டர் கம்மிஷன் (தாகு) நீங்கலாக மிகுதியுள்ளதைப் பிரதேச கவர்ன்மெண்டாரால் நிர்ணயிக்கப்படும் விதிகளின் படி தபால் மணி ஆர்டர் மூலமாகச் செலுத்தலாம்.

(3) டிபாஸிட் செய்திருக்கிற தேதியிலிருந்து மூன்று வருஷம் கழிவதற்கு முன்னமே இந்தப் பிரிவின்படி தொகை செலுத்தப்படாமலிருந்தால், டிபாஸிட் செய்திருக்கிற நபர் விண்ணப்பம் செய்து கொண்டு, குத்தகைத்தொகை யாரிடத் தில் டிபாஸிட் செய்யப்பட்டதோ அந்த கலெக்டர் கொடுத்த ரசீதைத் திரும்பக் கொடுப்பதன் மேலாகிலும் அவர் டிபா ஸிட் செய்திருக்கிறாரென்பதற்குக் கலெக்டருக்குப் போது மானதாகத் தோற்றுகிற வேறே சாட்சியத்தைக்கொண்டுவரு வதன்மேலாகிலும், டிபாஸிட் செய்திருக்கிற தொகையை டிபாஸிட் செய்திருக்கும் அந்த நபருக்குச் செலுத்தக்கூடா

தென்று சரியான அதிகார வரம்புள்ள ஒரு கோர்ட்டார் யாதொரு உத்தரவும் செய்திராத பட்சத்திலே மீண்டும் அந்த நபரிடத்தில் செலுத்தி விடலாம்.

அப்படிப்பட்ட எந்த டிபாஸிட் தொகையையாகிலும் வரப்பற்றிக்கொள்ள பாத்தியதை அடைந்திருக்கும் யாதொரு நபர் - இந்தப்பிரிவின்படி அது யாரிடத்தில் செலுத்தப்பட்டிருக்கிறதோ அவரிடத்திலிருந்து அதை ஸிவில் கோர்ட்டில் வியாஜ்ஜியம் நடத்தி வசூல் செய்வதற்கு இந்தப் பிரிவிலுள்ளதெதனாலும் தடையுண்டாகமாட்டாது.

வியாஜ்ஜியங்களுக்கு தடை.

**72.** 68 முதல் 71 வரையிலுள்ள பிரிவுகளின்படி டிபாஸிட் சம்பந்தமாய்க் கலெக்டர் நடத்தியிருக்கும் யாதொரு நடவடிக்கை விஷயமாக, ஆலோசனை சபையிலுள்ள இந்தியா ஸ்டேட் ஸெகரெடரி அவர்கள்மேலாவது யாதொரு கவர்ன்மெண்ட் உத்தியோகஸ்தர்மேலாவது எந்த வியாஜ்ஜியமும் கொண்டுவரக்கூடாது, வேறே நடவடிக்கையும் நடத்தக்கூடாது.

மாருலுக்கு மதிப்புப் போடுவதும் அதை பகிர்வதும்.

பயிரின் ஸ்வாதீனத்தைப்பற்றிய சுதந்தரங்களும் பொறுப்புகளும்.

**73.** (1) அறுவடையாகாத பயிருக்கு மதிப்புப் போடுவதன் பேரில் குத்தகைத்தொகை வாங்கிக்கொள்ளப்படுகிற விஷயத்திலே அந்தப் பயிரைத் தாமே ஸ்வாதீனத்தில் வைத்துக்கொள்ள ரயத்துக்குச் சுதந்தரமுண்டு.

(2) மாருலைப் பகிர்ந்து கொள்வதன்மேல் குத்தகைத் தொகை வாங்கிக்கொள்ளப்படுகிற விஷயத்திலே, அந்த

மாசூலைப் பகிர்ந்து கொள்ளுகிறவரையில் மாசூல் முழுவதை யும் தாமே ஸ்வாதீனத்தில் வைத்துக் கொள்ள ரயத்துக்குச் சுதந்தரமுண்டு; ஆனால், அந்த மாசூலைத் தக்ககாலத்தில் கிரம மாய்ப் பகிர்ந்துகொள்ள முடியாதபடி செய்யக்கூடிய ஒரு காலத்திலாவது விதமாகவாவது அதன் யாதொரு பாகத்தை யும் களத்து மேட்டிலிருந்து அப்புறப்படுத்த அந்த ரயத் துக்குச் சுதந்தரமில்லை.

(3) மேலே சொன்ன இரண்டு விஷயங்களில் எதிலா கிலும், நிலத்துக்குடையவர் எவ்விதமாகவேனும பிரவேசிக்க வேண்டியதில்லாமலே, சாகுபடி செய்கையில் எந்தக்காலத் திலே மாசூலை அறுவடைசெய்து சேர்த்து வைக்கவேண்டு மோ அந்தக்காலத்தில் அறுத்துச் சேர்த்து வைக்க ரயத்துக் குச் சுதந்தரமுண்டு. ஆனால், மாசூலை அறுக்கவோ அல்லது சேர்க்கவோ ஆரம்பிப்பதற்குமுன்னமே, ரயத்து - தாம் அப் படி செய்ய உத்தேசித்திருப்பதாய் நிலத்துக்குடையவருக் காகிலும் அதிகாரம் கொடுக்கப்பெற்ற அவருடைய ஏஜென் டுக்காகிலும் நியாயமானபடி தெரிவிக்கவேண்டும்.

(4) பயிர் அல்லது மாசூலுக்குச் சரியான மதிப்பேற் படுத்தவோ அல்லது அதைக் கிரமமாய்ப் பகிர்ந்துகொள்ள வோ முடியாதபடி செய்யக்கூடிய ஒரு காலத்திலாவது வித மாகவாவது அதன் யாதொரு பாகத்தை ரயத்து அறுத்தா லும் அப்புறப்படுத்தினாலும், அந்த மாசூலானது அக்கம் பக்கத்திலுள்ள அதே மாதிரியான நிலத்திலே அந்தக்காலத் தில் விளைந்திருக்கும் அதே தன்மையுள்ள பயிர் பூர்த்தியா யிருந்தால் எவ்வளவிருக்குமோ அவ்வளவு பூர்த்தியாய் இருந் திருப்பதாக எண்ணப்படும்.

## குறிப்புகள்

இந்தப் பிரிவானது மாகுலே சுவாதீனம் பெற்றிருப்பதற்கு ரயத்து அல்லது குடியானவர்களே உரிமையுள்ளவராவர் என்று கூறுகிறது. அறுவடையான பிறகு நிலத்துக்குடையவருக்குச் சேர வேண்டிய தொகையை கொடுத்து விட்டுதான் தன்னுடைய தான்னியத்தை அகற்றிக் கொண்டு போகவேண்டும்.

இந்தப்பிரிவில் இரண்டு விதமான தானியவாரி ரெண்டுகளைப் பற்றிதான் கூறப்பட்டுள்ளது. அதாவது (1) தொகம் போட்டு இவ்வளவு நெல் நிலத்துக்குடையவருக்கு கொடுத்து விட வேண்டுமென்று கூறுவது (2) வாரம். பூமியில் உள்ள விளைவேதான் இவை ரெண்டுக்கும் ஆதாரம். ஒரு ரயத்து தன்னால் கூடிய வரையிலும் அவைகளை காப்பாற்றலாமே யொழிய தம்மையும் மீறி பயிர் அழிந்து போய் விடும் பக்ஷத்தில் அல்லது களவாடப்பட்டு போகும் பக்ஷத்தில் அதற்கு அவரை ஜவாப்தாரராகச் செய்வது நியாயமல்ல. ஒரு சாமான் அல்லது வஸ்துவை ஒருவருக்காக மற்றொருவர் பெற்றிருப்பதை விட அதிக பொறுப்புள்ளவராக அவர் கவனிக்கப்படமாட்டார். 40 Mad. 640—31 M L. J. 168.

ஒரு பூமியின் விளைவில் தனக்கு எவ்வளவு சேரவேண்டியிருக்கும் என்பதை அறிவதற்காக ஒரு நிலத்துக்குடையவர் தனது பட்டாவில் அடியில் கண்டபடி ஷரத்தை கண்டிருந்தார். அதாவது, நிலத்தில் ஒரு பாகத்தை தாமே அறுவடை செய்து பார்ப்பதற்கு உரிமையுண்டு என்பது. இம்மாதிரியாக பட்டாவில் கண்டு பட்டா கொடுப்பது இந்த பிரிவுக்கு அதாவது 73-வது பிரிவின் கொள்கைகளுக்கு முற்றிலும் விரோதயில்லாததாக இருக்குமா என்று கேள்வி வந்ததில் இது மேற்படி பிரிவுக்கு விரோதமானதாகும் என்றும் ஆகையால் அம்மாதிரியான ஒரு கண்டிஷனை பட்டாவில் காணுவதற்கில்லையென்றும் தீர்மானிக்கப்பட்டது. (ராமநாதபுரம் சமஸ்தானம் கேஸ்) ராஜராஜேஸ்வர சேதுபதி vs. மங்களம் மற்றவர்களும் 59 M. L. J. 289.

*மாசூலுக்கு மதிப்பேற்படுத்துப்படியாகவாவது அதை பகிர்ந்து சொடுக்கும்படியாகவாவது அதை நிர்ணயிக்கும்படியாகவாவது கலெக்டருக்கு விண்ணப்பம் பண்ணிக்கொள்வது.*

**74.** பயிருக்கு மதிப்பு போட்டாவது மாசூலைப் பகிர்ந்து கொண்டாவது குத்தகைத் தொகை வாங்கிக்கொள்ளப்படுகிற விஷயத்திலே,—

(a) அங்கப்படி மதிப்பு போடுவதற்கு அல்லது பகிர்ந்து கொள்வதற்குச் சரியான காலத்தில் நிலத்துக்குடையவராவது ரயத்தாவது தாமாகவே அல்லது ஏஜென்ட் மூலமாகவே வரத்தவறினாலும்,

(b) பயிரின் அளவு மதிப்பு ஆகிய இவைகளைக்குறித்தாவது, 73-வது பிரிவைச்சேர்ந்த (4) குறிப்பிட்ட உட்பிரிவின்படி எது பூர்த்தியான பயிராகுமென்பதைக்குறித்தாவது, மாசூலைப் பகிர்ந்து கொள்வதைக் குறித்தாவது விவாதம் நேரிட்டாலும்,

அந்தப்படி பகிர்ந்து கொடுப்பதற்காகவோ அல்லது மதிப்பு போடுவதற்காகவோ அல்லது நிர்ணயிப்பதற்காகவோ ஒரு உத்தியோகஸ்தரை நியமித்தலுப்பவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, உபய கட்சிக்காரர்களில் எவராகிலும் கலெக்டருக்கு விண்ணப்பம் கொடுத்துக்கொள்ளலாம்.

இது விஷயமாய்ச் செய்யப்பட்ட விதிகளிலே பிரதேச கவர்ன்மெண்டாரால் நிர்ணயிக்கப்படக்கூடிய கட்டணத்தை அந்த விண்ணப்பத்தோடு விண்ணப்பதாரர் கட்டவேண்டும்.

குறிப்புகள்.

இந்த பிரிவின் கீழ் எடுத்துக் கொள்ளப்படும் நடவடிக்கைகளில் ரயத்துகள் சும்மா விப்புக்காக நிலத்துக்குடையவருக்கு மேல்வாரம் பெறுவதற்கு உரிமை கிடையாது என்று சொன்னதிலேயே கலெக்டருக்கு உள்ள விசாரணை அதிகாரம் போய்விடாது. கலெக்டர்

நிலஸ்வான்தாரருக்கு எவ்வளவு வரையிலும் உரிமையுண்டு என்பதை விசாரணை செய்தே தீரவேண்டும்.

தொகம் போடுவதற்கு நிலத்துக்குடையவருக்கு உரிமை உண்டு என்பதை கலெக்டர் முன்பாக உறுதியாக ருசு செய்யவேண்டும். அப்படி ருசு செய்யாமற் போனால் அல்லது கலெக்டருக்கு அம்மாதிரி தொகம் போடுவதற்கு நில ஸ்வான்தாரருக்கு உரிமை கிடையாதென்று ஏற்பட்டால் அவர் மனுவை தள்ளுதலை செய்யவேண்டும். அவர் வேறு விதமாக உத்திரவு செய்யும் பக்ஷத்தில் அந்த உத்திரவை ஹைகோர்ட்டார் தங்கள் ரிவிஷன் அதிகார ஹோதாவில் ரத்து செய்து விடலாம். 53 M. L. J. 146.

அப்படிப்பட்ட விண்ணப்பம் செய்து கொள்ளப்படுவதன்மேல் இன்னது செய்யவேண்டுமென்பது.

**75.** (1) அப்படிப்பட்ட விண்ணப்பம் வரப்பெற்றுக்கொள்வதன்மேல், கலெக்டரானவர் - மேலே கண்டபடி குத்தகைத்தொகையை பகிர்ந்து கொடுப்பதற்காகவாவது மதிப்பேற்படுத்துவதற்காகவாவது நிர்ணயிப்பதற்காகவாவது ஒரு உத்தியோகஸ்தரை நியமித்து அனுப்பவேண்டியதுமல்லாமல், விண்ணப்பதாரருக்கும் எதிர்க்கட்சிக்காரருக்கும் நோட்டீஸ் பிறப்பித்து அந்த நோடீஸில் குறிப்பிட்டுள்ள தேதியிலும் மணி நேரத்திலும் இடத்திலும், மாகுலைப்பகிர்ந்து கொடுப்பதில் அல்லது பயிருக்கு மதிப்பு ஏற்படுத்துவதில் அல்லது அதை நிர்ணயிப்பதில் உதவி புரிவதற்கு அஸெஸ்ஸாரா யிருப்பதற்காக (மத்தியஸ்தரா யிருப்பதற்காக), அக்கம் பக்கத்தில் வசிக்கும் ஒரு நபர் சகிதமாக, ஷை உத்தியோகஸ்தருக்கு முன் ஹாஜராகும்படி அவர்களுக்குத் தெரிவிக்கவும் வேண்டும்.

(2) பகிர்ந்து கொடுத்தோ அல்லது மதிப்பு ஏற்படுத்தியோ குத்தகைத்தொகை வாங்கப்படுவதில்லையென்றாவது, குத்தகைத்தொகை எதுவும் செலுத்தவேண்டியதில்லையென

முலகா, எதிர் கட்சிக்காரர் ஆட்சேபனை செய்கிற பட்சத்தில், மேலே கண்டபடி நியமித்தனுப்பப்படும் உத்தியோகஸ்தர் அந்த ஆட்சேபனையை எழுதிவைக்கவேண்டும்; ஆனால், அவர் இதில் பின்னால் நிபந்தனை கண்டிருக்கிறபடி நடவடிக்கை நடத்தவேண்டியதுமல்லாமல், (6) குறிப்பிட்ட உட்பிரிவின்படி தம்முடைய தீர்மானத்தைக் கலெக்டருக்கு அனுப்பும்போது அந்த ஆட்சேபனையை எழுதி அனுப்பவும் வேண்டும்.

(3) (1) குறிப்பிட்ட உட்பிரிவின்படி பிறப்பிக்கப்பட்ட நோடிஸில் நிஷ்கரிஷை செய்யப்பட்ட தேதியிலாவது அதற்கு முன்பாவது விவாத விஷயம் பைசல் செய்யப்பட்டிருக்கிற பட்சத்திலே, ஷை உத்தியோகஸ்தரானவர் இந்தப் பிரிவின்படி பின்னும் நடவடிக்கை எதுவும் நடத்தக்கூடாது.

(4) உபய கட்சிக்காரர்களில் எவராவது (1) அடையாளமிட்ட உட்பிரிவில் குறிப்பிட்டிருக்கும் நோடிஸில் சொல்லியிருக்கிறபடி ஹாஜராகவோ அஸ்ஸெஸ்ஸரை ஹாஜராகும்படிச் செய்யவோ தவறிப்போனால், மேலே கண்டபடி நியமித்து அனுப்பப்படும் உத்தியோகஸ்தர் அந்தக் கட்சிக்காரர் சார்பில் ஒரு அஸ்ஸெஸ்ஸரை நேமகம் செய்யவேண்டும்.

(5) மேலே கண்டபடி நியமித்து அனுப்பப்படும் உத்தியோகஸ்தர் அஸ்ஸெஸ்ஸருடைய அபிப்பிராயங்களை எழுதிவைக்கவேண்டியதுமல்லாமல், தாம் தீர்மானம் கொடுக்கும்போது அந்த அபிப்பிராயங்களைக் கவனிக்கவும் வேண்டும்; ஆனால், அவர் அந்த அபிப்பிராயங்களின்படி நடக்கக்கடமைப்பட்டவராகமாட்டார்.

(6) மாகுலைப் பகிர்ந்துகொள்ளும் விஷயத்தில் கட்சிக்காரர்கள் மேற்படி தீர்மானத்திற்குச் சம்மதிக்கிற பட்சத்

திலே, அந்தப்படியே பகிர்ந்துகொடுத்து விடவேண்டும். அந்தப்படி பகிர்ந்து கொள்வதற்கு கட்சிக்காரர்கள் சம்மதிக்காதபட்சத்திலும், அறுவடையாகாமலிருக்கிற பயிருக்கு மதிப்பு ஏற்படுத்தி குத்தகைத்தொகை செலுத்தத்தக்கதாயிருக்கும் சகல விஷயங்களிலும், அல்லது பூர்த்தியான ஒரு பயிரின் மதிப்பை நிர்ணயிக்கவேண்டியிருக்கிற பட்சத்திலும், மேலே கண்டபடி நியமித்து அனுப்பப்படும் உத்தியோகஸ்தர் அந்த மாசூல் அல்லது பயிரை உத்தேசமாய் மதிப்பிட்டு, செலுத்தத்தக்க குத்தகைத் தொகையை நிர்ணயிக்கவேண்டும். பிறகு அவர் கட்சிக்காரர்களுக்கு நோடிஸ் கொடுத்த பின்பு தம்முடைய தீர்மானத்தைக்கொடுத்து, அதைத்தாம் நடத்திய நடவடிக்கைகளைக்குறித்த ஒரு ரிபோர்ட்டு சகிதமாக கலெக்டருக்கு அனுப்பவேண்டும்.

(7) எந்தத்தேதியில் மேற்படி தீர்மானம் கொடுக்கப்பட்டதோ அந்தத்தேதிக்குப் பிறகு பதினைந்து தினங்களுக்குள்ளாக மேற்படி கட்சிக்காரர்கள் தங்களுக்கு இஷ்டமிருந்தால் ஆட்சேபனைகள் தாக்கல் செய்யலாம்.

(8) (a) கலெக்டர் அந்த ஆட்சேபனைகளையும் (2) குறிப்பிட்ட உட்பிரிவின்படி ஆட்சேபனைகள் ஏவையேனும் எழுதி வைக்கப்பட்டால் அவைகளையும் கேட்டு, இன்னும் விசாரணை ஏதாகிலும் செய்வது அவசியமென்று தமக்குத்தோற்றுகிற பட்சத்திலே அப்படிப்பட்ட விசாரணை செய்த பிறகு மேற்படி ஆட்சேபனைகள் விஷயமாக உத்தரவுகள் பிறப்பிக்கவேண்டும்.

(b) பகிர்ந்து கொடுத்தோ அல்லது மதிப்பு ஏற்படுத்தியோ குத்தகைத்தொகை செலுத்தத்தக்கதல்லவென்றாவது

குத்தகைத்தொகை எதுவும் செலுத்தவேண்டியதில்லையென்றாவது ஆட்சேபனை செய்யப்பட்டு, கலெக்டர் அந்த ஆட்சேபனையை ஆதரிக்கிற பட்சத்திலே, அவர் மேற்படி தீர்மானத்தை ரத்து செய்துவிடவேண்டும்.

(c) மேற்படி ஆட்சேபனை அங்கீகரிக்கப்படாவிட்டாலும் வேறே யாதொரு ஆட்சேபனை செய்யப்பட்டாலும் ஆட்சேபனை எதுவுமே செய்யப்படாவிட்டாலும், கலெக்டரானவர் அஸ்ஸெஸ்ஸர்கள் மேலே கண்டபடி நியமித்து அனுப்பப்படும் உத்தியோகஸ்தருடன் சம்மதிக்கிற விஷயத்தில் தவிர மற்ற விஷயங்களிலே, மேற்படி தீர்மானத்தை ஊர்ஜிதப்படுத்தலாம், அல்லது கட்சிக்காரர்கள் சொல்லிக்கொள்ள வேண்டியதைச் சொல்லிக்கொள்ள அவர்களுக்குச் சமயம் ஏற்படுத்திக்கொடுத்த பிறகு தமக்குத் தகுதியாகத் தோற்றுகிறபடி அந்த தீர்மானத்தை மாற்றலாம்; ஆனால், மேடி அஸ்ஸெஸ்ஸர்களும் உத்தியோகஸ்தரும் ஒத்துப்போகிற விஷயத்திலே, அந்தத் தீர்மானமானது (e) குறிப்பிட்ட பகுதியில் கண்ட நிபந்தனைகளுக்குட்பட்டு முடிவானதாகும்.

(d) குத்தகைத் தொகையையும் செலவு ஏதாகிலும் இருந்தால் அதையும் செலுத்துவது விஷயமாய் கலெக்டர் பிறப்பிக்கும் உத்தரவானது (b) குறிப்பிட்ட பகுதியில் விவரிக்கப்பட்ட தன்மையுள்ள ஆட்சேபனை செய்யப்பட்டிருந்தாலொழிய மற்றப்படி முடிவானதாயிருப்பதுமல்லாமல் குத்தகைத் தொகை பாக்கிக்காக பிறப்பிக்கப்பட்ட டிக்கிரியைப் போல் அது நிறைவேற்றப்படத்தக்கதுமாகும்.

(e) (b) குறிப்பிட்ட பகுதியில் விவரிக்கப்பட்ட தன்மையுள்ள ஆட்சேபனை செய்யப்பட்டிருந்தால் அதன்மேல் கலெக்டர் செய்யும் தீர்மானமானது டிஸ்டிரிக்ட் கோர்ட்

டுக்கு அப்பீல் செய்துகொள்ளப்படுவதற்கு உட்பட்டதாகும். கலெக்டருடைய தீர்மானத்தின் தேதியிலிருந்து முப்பது தினத்திக்குள் டெ அப்பீலைக் கொடுத்துக் கொள்ள வேண்டும்.

(9) இந்தப் பிரிவின்படி நடத்தப்படும் எந்த நடவடிக்கைகளிலாகிலும் மதிப்பு ஏற்படுத்தப்படுகிற வரையிலாவது பகிர்ந்துகொள்ளப்படுகிற வரையிலாவது மாகாலை அப்புறப்படுத்தக்கூடாதென்று கலெக்டர் உத்திரவு மூலமாய்த் தடுக்கலாம்.

குறிப்புகள்.

இந்தப் பிரிவு 1934-ம் வருஷத்திய திருத்த சட்டத்தினால் முற்றிலும் திருத்தி யமைக்கப்பட்டது.

இப்பிரிவின் கீழ் நடக்கும் நடவடிக்கைகள் சுருக்கு வகையான நடவடிக்கைகளாகும். தீர்மானப் பிரமாணம் 32 I. C. 706. A. I. R. 1933 Mad. 231.

இந்தப் பிரிவின் கீழ் நியமிக்கப்படும் ஸ்பெஷல் உத்தியோகஸ்தரானவர் சும்மா அவரவர்களுக்கு சேரவேண்டிய தொகைகளை மாத்திரம் நிர்ணயிக்கலாமே யொழிய பார்ட்டிகளுடைய பாத்தியா பாத்தியதைகளைப்பற்றி கவனிக்க அதிகாரமில்லை. அவர் முன்பாக ஆக்ஷேபனைகள் தாக்கல் செய்யப்பட்டால் அவைகளை சும்மா பதிவு செய்து கொண்டு பிறகு கலெக்டரிடம் அனுப்பவேண்டும். 1 B. R. 43.

இப்பிரிவின் கீழ் நடக்கும் நடவடிக்கைகள் சுருக்கு வழியான நடவடிக்கைகளானதால் அவை ஸிவில் கோர்ட்டினுடைய டிக்கிரி போலும் கவனிக்கப்படுவதற்கில்லை யென்றும் ஒரு தரம் தீர்மானிக்கப்பட்டு பிறகு மறுபடியும் மற்றொரு சமயத்தில் அதே விஷயத்தை எடுத்து விசாரிப்பதற்கு தடை யுண்டாகாது என்றும் அதாவது ரீஸ் ஜூடிகேடா என்னும் நியாயமானது பாதிக்காது எனறும் தீர்மானம் ஏற்பட்டிருக்கிறது. 32 I. C. 706.

இப்பிரிவின்கீழ் மதிப்பிடுவதில் எந்த நிலங்களின் வரும்படியைப் பற்றி நடவடிக்கைகள் நடக்கிறதோ அவைகளுடைய பாத்தியதை களைப்பற்றியும் மத்திய கால வருமானத்தைப்பற்றியும் ஸிவில் கோர்ட்டில் வியாஜ்ஜியம் நடந்து கொண்டிருப்பதினால் தடையொன் றும் ஏற்படாது. மதிப்பிடுவது தனியாக நடந்து கொண்டிருக்கலாம் 37 I. C. 382.

இந்தப் பிரிவின் (7) (8) உட்பிரிவுகளின் கீழ் ஏதாவது மத்தி யஸ்த தீர்மானம் நடக்காதால் அதிலேயே நிலத்துக்குடையவர் ரென்டுக்கு கேட்பதற்குள்ள பரிஹாரமானது அடங்கி விடுகிறது. ஆகையால் அது விஷயமாக அவர் தனியாக தாவா செய்வதற்கில்லை. தீர்மானப் பிரமாணம் 35 I. C. 640.

பிரவேசிப்பதற்கான அதிகாரம்.

**76.** (நியமிக்கப்) அனுப்பப்படுகிற ஷை உத்தியோ கஸ்தர் - மேலே கண்டபடி பகிர்ந்து கொடுக்கும் காரியத்திற் திற்காகவும் மதிப்பேற்படுத்தும் காரியத்திற்காகவும், எந்த நிலத்தின்மேல் மாகூலிருக்கிறதோ அப்படிப்பட்ட யாதொரு நிலத்திலாவது எந்தக் கட்டிடத்தில் மாகூலிருக்கிறதோ அப் படிப்பட்ட யாதொரு கட்டிடத்துக்குள்ளாவது தம்முடைய ஆலெஸவர்கள் சகிதமாகப் பிரவேசிக்கலாம்.

---

## 6-ம் அத்தியாயம்.

### வியாஜ்ஜிய மூலமாகவாவது அகாயும் பொருளையாகிலும் கைப்பற்று நிலத்தையாகிலும் ஜப்திபண்ணிவிற்பனை செய்தாவது குத்தகைத்தொகை வசூல் பண்ணுவது.

எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டில் இந்த அத்தியாயமேதான் மிகவும் முக்கியமான அத்தியாயமாகும். இந்த அத்தியாயத்தில் ரெண்ட் வசூல் செய்வதைப்பற்றி கூறப்பட்டிருக்கிறது. இதில் பல பிரிவு கள் முக்கியமாக 77-வது பிரிவு 79-வது பிரிவு 116-வது பிரிவு

117-வது பிரிவு 123-வது பிரிவு 127-வது பிரிவு இவைகள் முக்கியாம்சத்தில் மாற்றப்பட்டிருக்கின்றன.

இந்த அத்தியாயத்தை இரண்டு பாகங்களாக பிரிக்கலாம். 77 முதல் 110 வரையில் உள்ள பிரிவுகள் ஜங்கம சொத்து (அசையும் பொருள்களை) ஜப்தி செய்து அவைகளை எலத்துக்கு கொண்டு வருவதைப்பற்றியும் 111 முதல் 134-வரையிலுமுள்ள பிரிவுகள் கைப்பற்று நிலத்தை ஜப்தி செய்து எலத்துக்கு கொண்டுவருவதற்குள்ள முறைமைகளைப்பற்றியும் கூறுகின்றன. இந்த அத்தியாயத்தில் உள்ள முக்கிய மாறுதல் என்னவென்றால் 77 E என்னும் ஒரு புதிய பிரிவினால், ஒரு நிலத்துக்குடையவர் ரென்ட் பாக்கிக்காக தாவா செய்து டிக்கிரி பெற்றிருந்தால் அந்த டிக்கிரியை நிறைவேற்றுவதில் ஜங்கம சொத்துக்களை ஜப்தி செய்வதற்கில்லையென்றும கைப்பற்று நிலத்தையும் 112-வது பிரிவின் கீழ் எலத்துக்கு கொண்டுவருவதற்கில்லையென்றும் ஏற்படுத்தப்பட்டது. 77 D. பிரிவின் பிரகாரம் ஒரு நிலத்துக்குடையவர் பாக்கி ஏற்பட்ட 12 மாதங்களுக்குள்ளே ஜப்தி நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளவேண்டும என்று உள்ளது. இவ்விரண்டு பிரிவுகளினாலும் என்ன ஏற்படும என்றால் ஒரு நிலத்துக்குடையவர் தனது பாக்கியை வசூல் செய்யாமல் ஒரு வருஷத்திற்கு மேல் இருந்து விட்டால் இனி வசூல் செய்வது சிரமமாகும என்பது. மற்ற விவரங்களுக்கு அந்தந்த பிரிவின் கீழ் உள்ள குறிப்புகளைப்பார்க்கவும.

குத்தகைத் தொகை பாக்கியை வசூல் செய்யும் வகைகள்.

**77.** இதில் பின்னால் கண்ட நிபந்தனைகளுக்குட்பட்டு, கலெக்டருக்கு முன், வியாஜ்ஜியம் கொண்டுவந்தாவது அசையும்பொருளை ஜப்திபண்ணி விற்பனை செய்தாவது ரயத்தின் கைப்பற்று நிலத்தை விற்பனை செய்தாவது யாதொரு குத்தகைத்தொகை பாக்கியை வசூல்பண்ண நிலத்துக்குடையவருக்குப் பாத்தியதை உண்டு.

விவரணம்:—இந்தப் பிரிவின் காரியத்துக்காக, அசையும் பொருள் என்பதில் விளைந்து கொண்டிருக்கும் பயிர்

என்பதும் பாக்கிதாராருடைய கைப்பற்றிலிருக்கும் நிலத்திலிருந்தாவது மரங்களிலிருந்தாவது கிடைக்கும் மாதூல் என்பதும் அடங்கும்.”

## குறிப்புகள்.

1934-ம் வருஷத்திய திருத்த சட்டத்தினால் பழைய 77-வது பிரிவானது எடுத்துவிடப்பட்டு அதன் ஸ்தானத்தில் புதிய 77, 77-A, 77-B, 77-C, 77-D, 77-E, 77-F என்னும் பிரிவுகள் நுழைக்கப்பட்டன. புதிய பிரிவுகளினால் சில நூதன அம்சங்கள் நுழைக்கப்பட்டுள்ளன. அவைகள் அந்தந்த பிரிவின்கீழ் கவனிக்கப்படும்.

77-வது பிரிவில் பொதுவாக ஜமீன்தார் ரயத்துகளிடமிருந்து வசூலிக்கக்கூடிய முறைகளைப்பற்றி கூறப்பட்டுள்ளது (1) கலெக்டர் முன்பாக தாவா (2) ஜங்கம சொத்து ஜப்தி (3) கைப்பற்று நில ஜப்தி. விளைச்சல் (அதாவது பயிரும) மரங்களின் மாதூலும் ஆகையும பொருளாகும்.

இனி தாவாக்களைப்பற்றி கவனிப்போம்.

77-வது பிரிவின் கீழ் செய்யப்படும் தாவாக்கள் ரெண்டை (அதாவது ரயத்து நிலத்திற்காக செலுத்தவேண்டிய தொகையை) வரப்படுத்துவதற்காக செய்யப்படும் தாவாக்களாகும். சம்பந்தம் நிலங்களுக்காக வரவேண்டிய ரெண்டுக்கு இப்பிரிவின் கீழ் தாவா செய்வதற்கில்லை 37 Mad. 319.

இப்பிரிவின் கீழ் தாவா செய்யப்பட்டதில் ரெண்ட் தொகையைப்பற்றியாவது அல்லது விகிதத்தைப்பற்றியாவது ஏதாவது ஆக்ஷேபம் கிளம்புமானால் அதை அந்த தாவாவிலேயே விசாரணை செய்யவேண்டும். வேறே தனியான தாவா செய்யப்படவேண்டிய அவசியம் கிடையாது. 21 L. W. 42. அம்மாதிரி ரெண்ட் இவ்வளவு என்பதை நிச்சயம் செய்வது கோர்ட்டினுடைய கடமையாகும் 54 M. L. J. 564.

இப்பிரிவில் உள்ள ‘பாக்கி’ என்னும் பதத்தில், ரெண்ட் விஷயமாய் ஏற்படும் வட்டியும் அடங்கும். வட்டிக்காகவும் தனியாக தாவா செய்யப்படலாம் தீர்மான பிரமாணம் 22 M. L. J. 219.

வாரப்பத்து கிராமங்களில் சில காலமாக பட்டாக்களில் ரொக்க ரெண்ட் காணப்பட்டு வந்த போதிலும் வாரமே தான் தமக்குச் சேரவேண்டுமென்று சில ஸ்வான்தாரர் தாவா செய்வதில் தடையென்றுமில்லை. அது சட்ட விரோதமானதல்ல. தீர்மானப்பிரமாணம் 63 M. L. J 949.

ரெண்டுக்காக தாவா செய்வதில் தாவா பூமியில் எவரெவர்கள் ரயத்துகளாக அதாவது கைப்பற்று பாத்தியதை பெற்றவர்களாக இருக்கிறார்களோ அவர்களை மாத்திரம் தான் பிரதிவாதிகளாகச் சேர்க்கவேண்டும். தாவா பூமிகளில் தூராக்கிருதமாக பிரவேசித்து சுவாதீனம் பெற்றிருப்பதாகச் சொல்லப்படும் நபர்களை பார்ட்டிகளாகச் சேர்க்கப்படுவதற்கில்லை. அப்படி சேர்த்து ரெவின்யு கோர்ட்டில் தாவா செய்யப்படுவதற்கில்லை. A. I. R. 1928 Mad. 581.

ஏற்கனவே 3-வது (11)-வது உட்பிரிவின் கீழ் "ரெண்ட்" என்பது என்ன என்று விவரிக்கப்பட்டிருக்கிறது. அதன் கீழ் பல பல ஹைகோர்ட்டு தீர்மானங்களும் கவனிக்கப்பட்டிருக்கின்றன. அந்தப் பிரிவின் கீழ் வரக்கூடிய ரெண்ட் தொகைகளுக்காகத் தான் இப்பிரிவின் கீழ் தாவா செய்யப்படலாமே யொழிய இதர தொகைகளுக்கு இப்பிரிவின் கீழ் தாவா செய்வதற்கில்லை. ஷை பிரிவின் கீழ் உள்ள குறிப்புகளை கவனிக்கவும்.

சமுதாய மேய்ச்சக் கால் நிலங்களை ரயத்துகள் உபயோகப்படுத்திவந்து அதற்காக கட்டணங்கள் கட்டவேண்டியிருந்தால் அவைகளை வசூல்படுத்துவதற்கு ரெவின்யு கோர்ட்டில் தாவா செய்யப்படலாம். தீர்மானப்பிரமாணம் 38 Mad 348. ஒரு நிலத்துக்குடையவர் கைப்பற்று பாத்தியதையை கிரயம் பெற்றிருந்தாலும் அவர் ரெண்டுக்காக தாவா செய்யலாம் 26 M. L. J. 373.

ரயத்து நிலத்தின் பேரில் சாதாரணமாக பாயும் ஜலத்திற்காக தனியாக நீர்க்கூலி விதிப்பதற்கில்லை அதற்காக தாவா செய்வதற்குமில்லை. தீமானப் பிரமாணம் 28 I. C. 449. ஆனால் நிலத்துக்குடையவருடைய சொந்த ஜலத்திலிருந்து சட்ட விரோதமாக நீர்ப

பாய்ச்சிக் கொள்ளும் பக்ஷத்தில் அந்த நீர்க்கூலிக்காக செய்யும் தாவா ரெண்ட் தாவா வென்று கவனிக்கப்படும் 111 I. C. 743.

நிலத்துக்குடையவர் ரெண்டுக்காக ரெவின்யு கோர்ட்டில் தாவா செய்திருந்து பிறகு அவரும் ரயத்துகளும் ஒப்புக்கொண்டு நிலத்துக்குடையவர் ரெண்ட் தாவாவை வாபீஸ் பெறவேண்டியதென்றும் ரயத்துகள் காலதோஷத்தினால் பாதிக்கப்பட்ட தொகைகளையும் கொடுத்துவிட வேண்டியதென்றும் ஏற்படுத்திக்கொண்டால் அந்த ஏற்பாடு ஒரு புதிய அக்கிரிமெண்ட் போலாகும் ஆகையால் அத்தகைய அக்கிரிமெண்டை செலாவணியாக்குவதற்கு அதாவது எல்லா தொகைகளையும் வரப்பெறுவதற்கு ஸிவில் கோர்ட்டில் தாவா செய்யலாம். A. I. R. 1929 Mad. 504.

ரெண்ட் தாவாக்கள் ஸ்மால்காஸ் ஸ்வபாவமான தாவாக்கள் அல்ல. ஆகையால் அவைகளில் ஏற்படும் டிக்கிரிகளின் பேரில் அப்பீல்கள் செய்யலாம் தீர்மானப் பிரமாணம் 40 M. L. J. 466.

அசையும் பொருளை ஜப்திசெய்தாவது கைப்பற்று நிலத்தை விற்பனை செய்தாவது குத்தகைத் பாக்கியை வசூல் செய்வதற்கான திட்டங்கள்.

**77**-A. யாதொரு நிலத்துக்குடையவர் ரயத்துக்குப் பட்டா கொடுத்து அவரிடமிருந்து முச்சிலிக்கா பெற்றிருந்தாலன்றி மற்றப்படிக்காவது, அந்த ரயத்து அங்கிகரிக்கக் கடமைப்பட்டிருக்கும் ஒரு பட்டாவை அவருக்குக் கொடுக்கக் காட்டியிருந்தாலன்றி மற்றப்படிக்காவது, சட்ட சம்மதமான யாதொரு பட்டாவாகிலும் முச்சிலிக்காவாகிலும் செலாவணியாய்க்கொண்டேயிருந்தாலன்றி மற்றப்படிக்காவது, அந்த ரயத்தின் அசையும் பொருளை ஜப்தி பண்ணி விற்பனை செய்தோ அவருடைய கைப்பற்று நிலத்தை விற்பனை செய்தோ குத்தகைத் தொகையை வசூல் செய்வதற்காக அந்த ரயத்தின் மேல் நடவடிக்கை நடத்தநிலத்துக்குடையவருக்கு அதிகாரமில்லை; அசையும்

பொருளை ஜப்திபண்ணி விற்பனைசெய்கிற பட்சத்திலே, அந்தப்படி ஜப்திபண்ணுவதற்குப் பதினைந்து தினங்களுக்குக் குறையாமல் முன்னதாக பட்டா கொடுத்து முச்சிலிக்கா பெற்றிருக்கவேண்டும், அல்லது ரயத்து அங்கீகரிக்கக் கடமைப்பட்டிருக்கும் பட்டா வொன்றை அவருக்குக் கொடுக்கக்காட்டியிருக்கவேண்டும்.

குறிப்புகள்.

இப்பிரிவு பழைய 53-வது பிரிவின் 1-வது உட்பிரிவேயாகும். ஆனால் இப்பிரிவில் கடைசியில் உள்ள வாக்கியமானது 1934-ம் வருஷத்திய திருத்தத்தினால் ஏற்பட்டது. அதாவது ஜங்கம சொத்து ஜப்தி விஷயத்தில் குறைந்த பக்ஷம் 15 நாட்களுக்கு முன்னமேயாவது பட்டா கொடுக்கப்பட்டிருந்தால் தான் அல்லது டெண்டர் செய்யப்பட்டிருந்தால் தான் ஜப்தி செலாவணியாகும் என்பது புதியதாக நுழைக்கப்பட்டது.

சிறிது மட்டில் சரியாயிருக்கும் பட்டா நிறைவேற்றப்படத் தக்கதாயிருப்பது.

**77-B.** யாதொரு நிலத்துக்குடையவர் கொடுப்பதாகக் காட்டியிருக்கும் பட்டாவானது முழுவதும் சரியாயிராமல் போனபோதிலும் சிறிதுமட்டில் சரியாயிருக்கிற பட்சத்திலே, அது சிறிதுமட்டில்தான் சரியாயிருந்தும் பாதகமில்லாமலே அது எவ்வளவு மட்டில் சரியாயிருக்கிறதென்று காணப்படுகிறதோ அவ்வளவு மட்டில் நிறைவேற்றப்படத்தக்கதாகும்.

குறிப்புகள்.

இப்பிரிவு பழைய 53-வது பிரிவின் (2) உட்பிரிவாகும். ஜங்கம ஜப்தியின் விஷயத்தில் ஜப்தியானது பட்டா எவ்வளவு வரையில் செலாவணியாகுமோ அது வரையிலும் சரியானதென்று கவனிக்கப்

படலாம் என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 122 I. C. 526. பட்டாவில் கண்ட தொகைக்கு அதிகமான ஒரு தொகைக்கு ஜப்தி செய்யப்பட்டால் அல்லது முன் ஏற்பாடு பிரகாரம் உள்ள தொகைக்கு அதிகமான ஒரு தொகைக்கு ஜப்தி செய்யப்பட்டால் பழைய் தொகையை கட்டினவுடன் ஜப்தி அற்றுப் போவதாகும். அதன் பேரில் யாதொரு நடவடிக்கையும நடப்பது சரியல்ல. அது விஷயமாய் மேல் நடவடிக்கை நடத்தவும் நிலத்துக்குடையவருக்கு உரிமை கிடையாது. அதிக தொகைக்காக தாவா செய்யதான் வேண்டும்.

*கொடுக்கக் காட்டப்பட்ட பட்டாவில், ஏற்கெனவே செய்து கொண்ட ஏற்பாட்டின்படி சேர வேண்டியதைக் காட்டிலும் அதிகமாய்ச் சேரவேண்டுமென்று தாவா செய்யப்படுகிற பட்சத்திலே நிபந்தனை.*

**77-C.** யாதொரு வெவினியு வருஷத்துக்காகக் கொடுக்கக் காட்டப்பட்ட பட்டாவில் ஏற்கனவே செய்து கொண்டு இப்போது அமுலிலிருந்துவரும் ஏற்பாட்டின்படி பாக்கியாயிருக்கும் தொகையைக் காட்டிலும் அதிகமாக குத்தகைத் தொகை பாக்கியாயிருக்கிறதென்று தாவா செயயப்படுகிற பட்சத்திலே, அசையும் பொருளை ஜப்திபண்ணி விற்பனை செய்தோ கைப்பற்று நிலத்தை விற்பனை செய்தோ குத்தகைத் தொகையை வசூல் செய்வதற்காக நடத்தப்படும் சகல நடவடிக்கைகளையும் அந்தத் தொகை செலுத்தப்படுவதன்மேல் நிறுத்திவிடவேண்டும்; மேலும், அந்த நடவடிக்கைகளைத் தொடர்ந்து நடத்திக்கொண்டு போகக்கூடாது. நிலுவை பாக்கிக்காக செய்யப்படும் தாவாவானது கலெக்டருக்குமுன் வியாஜ்ஜியம் நடத்தி மாத்திரமே நிறைவேற்றப் படத்தக்கதாகும்.

ஆனால், விஸ்தீர்ணத்தில் அதிகரிப்பு ஏற்பட்டிருப்பதினால் அதிகமாய்ச் சேரவேண்டுமென்று தாவா செய்யப்படுகிறபட்டில், 12-வது பிரிவைச் சேர்ந்த (3) அடையாள

பிட்ட உட்பிரிவில் குறிப்பிட்டிருக்கும் விஷயத்துக்கு இந்தப் பிரிவில் கண்டதெதுவும் பிரயோகப்படமாட்டாது.

குறிப்புகள்.

இந்தப் பிரிவு ஓர்புதிய பிரிவாகும்-ரயத்துக்கு மிகவும் அனுகூலமான பிரிவாகும். இது வரையிலும உள்ள சட்டப்பிரகாரம நில ஜப்தி அல்லது ஜங்கம ஜப்தி நடக்கும் பக்ஷத்தில், ஜப்தி தொகை யாழுல் தொகைக்கு அதிகமாயிருந்தால் ஒப்புக்கொள்ளப்பட்ட தொகையை செலுத்திவிட்டு ஜப்தி செல்லாதென்று 112-வது பிரிவின் கீழ் தாவா செய்யவேண்டும் என்றிருந்தது. ஆகையால் அதிக தொகையை ரத்து செய்து கொள்வதற்கு தாவா செய்யாவிட்டால் ஜப்தி நிலைத்துவிடுவதாயிருக்கும். ஆனல் இப்பொழுது இந்தப் பிரிவின்படி ஏற்பட்ட சட்டப்பிரகாரம் முன் பட்டாவில் இல்லாத அதிக தொகையை அல்லது ஏற்கெனவே தாம் பெற்று வந்த தொகையைவிட அதிக தொகை பெறுவதாயிருந்தால் நிலத்துக்குடையவர் தாவா செய்து தான் அதைப் பெறவேண்டும். ரயத்தானவர் தாம் கிரமமாகச் செலுத்தவேண்டிய தொகையை செலுத்தின உடன் ஜப்தி நடவடிக்கைகள் நின்று போய்விடும்.

ஆனல் 42(3) பிரிவில் உள்ள ஏற்பாடுகள் இந்தப் பிரிவினல் பாதிக்கப்படாது. ஷை 42-வது பிரிவின் (3) உட்பிரிவைப்பார்க்கவும்.

ஜப்தி செய்து வசூல் பண்ணக்கூடிய பாக்கி.

**77**-D. 78-வது பிரிவின்படி டிமாண்ட் செய்வதற்கு முன்னதாக பன்னிரண்டுமாத காலத்துக்குள் பாக்கியாக சேர்ந்துவந்திருக்கும் குத்தகைத் தொகை பாக்கியின் விஷயத்திலன்றி மற்ற விஷயங்களில், (அசையும் பொருளை) ஜப்திசெய்ய நிலத்துக்குடையவருக்குப் பாத்தியதை இல்லை.

குறிப்புகள்.

இந்தப் பிரிவானது ஒரு புதிய அம்சத்தை ஏற்படுத்தியுள்ளது. பாக்கி ஏற்பட்ட 12 மாதத்திற்குள் ஜங்கம ஜப்தி செய்தால் தான்

அது செலாவணியாகும். இது ஸ்பஷ்டமாக எடுத்து விளக்கப்பட்டுள்ளது. பாக்கியானது ஒரு வருஷத்திற்கு மேற்பட்டதானல் இனி தாவா செய்யவேண்டிவரும். ஆனல் 77-E பிரிவில் சொல்லப்பட்டிருக்கும் நிபந்தனைகளை கவனிக்குமிடத்து தாவா செய்திருக்கும் சந்தர்ப்பங்களில் அந்த பாக்கிக்காக ஜங்கம சொத்துக்களை ஜப்தி செய்யவும் கூடாது, கைப்பற்று நிலத்தை ஜப்தி செய்யவும் கூடாது என்று இருப்பதனல் தாவா செய்தும் அதிக பலனில்லாமற்போய்விடும். ஆகையால் புதிய திருத்த சட்டத்தின் நோக்கமென்னவென்றால் அந்தந்த வருஷ பாக்கியை அந்தந்த வருஷத்திற்குள்ளேயே வசூல் செய்து விடவேண்டுமென்பது.

குத்தகைத் தொகைக்காக டிக்கிரி பெற்றிருந்தால் ஜப்தி செய்யக்கூடாதென்பது.

**77-E.** நிலத்துக்குடையவர் யாதொரு குத்தகைத் தொகை பாக்கிக்காக வியாஜ்ஜியம் தொடர்ந்து டிக்ரி பெற்றிருந்தால், அப்படிப்பட்ட பாக்கிக்காக அசையும் பொருளை ஜப்தி பண்ணுவதற்காவது, அதற்காக 111 முதல் 131 வரையிலுள்ள பிரிவுகளின்படி கைப்பற்று நிலத்தை விற்பனைக்குக் கொண்டுவருவதற்காவது அவருக்கு எவ்வித உரிமையும் கிடையாது; மேலும், அடி டிக்ரி பிறப்பிக்கப்படுவதற்கு முன் அப்படிப்பட்ட பாக்கிக்காக கைப்பற்று நிலத்தை விற்பதற்கான சகல நடவடிக்கைகளையும் நிறுத்திவிட்டு அவைகளைத் தொடர்ந்து நடத்திக்கொண்டு போகக் கூடாது.

குறிப்புகள்.

இந்தப் பிரிவு புதிய பிரிவாகும்—இந்த பிரிவின் நோக்கம் என்னவென்று ஏற்படும் என்றால், தாவா செய்து டிக்கிரி பெறுவதனல் அதிக பலன் இராததை உத்தேசித்து கூடிய வரையிலும் தாவா செய்யாமலே இருக்கும்படி நிலத்துக்குடையவர்களுக்கு ஒரு எச்சரிக்கை செய்வதாகும்.

ஆனால் சாதாரண ஜப்திக்கும் 111 முதல் 131 வரையிலுமுள்ள பிரிவுகளில் சொல்லியுள்ள ஜப்திக்கும் வித்தியாசமுண்டு. சாதாரண ஜப்திகள் ஏற்கெனவே நிலத்தில் ஏற்பட்டமுள் தகாதாக்களுக்கு உட்பட்டதாகும். 111 முதல் 131 வரையிலுமுள்ள பிரிவுகளில் சொல்லப்பட்டிருக்கும் ஜப்தி இந்த சட்டப்பிரகாரம் முதற் பொறுப்பாக உள்ள ஜப்தியாகும். இப்பிரிவு அத்தகைய நில ஜப்தியானது ரெண்ட் பாக்கிக்காக டிக்கிரி ஏற்பட்டிருக்கும் சந்தர்ப்பங்களில் கைக்கொள்ளப்படக்கூடாது என்னும் நோக்கமுள்ளது. ஆகையால் தான் "அப்படிப்பட்ட பாக்கிக்காக" என்னும் பதங்கள் உள்ளன. இப்பிரிவானது, சாதாரணமாக டிக்கிரியின் பேரில் ஜப்தி செய்வதை தடை செய்யாதென ஏற்படும். ஏனென்றால் அப்படியும் ஜப்தி செய்யக் கூடாதென்று இப்பிரிவின் அர்த்தமாக இருக்குமானால் நிலத்துக்குடையவர்களுக்கு அதிக இடையூறுகள் உள்ளதாக ஏற்படும்.

ஜப்தி செய்வதினின்றும் நிவாரணை செய்யப்பட்ட சாமான்கள்.

**77-F.** அடியிற்கண்ட சாமான்களை குத்தகைத் தொகை பாக்கிக்காக ஜப்தி செய்யக்கூடாது.

(1) பாக்கிதாரர் அணிந்து கொள்வதற்கு அவசியமான உடைகளும் அவருடைய சமையல் பாத்திரங்களும் படுக்கைகளும் படுக்கைச் சாமான்களும், யாதொரு ஸ்திரீ தன்னுடைய தேகத்தில் அணிந்துகொள்ளும் ஆபரணங்களில் மதாசாரப்படி தன்னுடைய தேகத்தினின்றும் பிரிக்க முடியாத ஆபரணங்களும்;

(2) பாக்கிதாரரின் கலப்பைகளும் விவசாயத்துக்கு வேண்டிய இதர உபகரணங்களும் ஏர் உழும் கால்நடைகளும் ரயத்தாவது பயிரிடுபவராவது சேர்த்துவைத்திருக்கும் எருவும், அடுத்த வருஷத்தில் கைப்பற்று நிலத்தில் கிரமமாய்ப் பயிரிடுவதற்கு அவசியமான விதைத் தானியமும்;

இன்னவிதமாய் ஜப்தி செய்யவேண்டுமென்பது.

**78.** (1) ஜப்தி செய்கிறதற்கு முன்பாவது ஜப்தி செய்யும் காலத்திலாவது, நிலத்துக்குடையவாகவாகிலும் கிரமமாய் அதிகாரம் கொடுக்கப்பெற்ற அவருடைய ஏஜெண்டாகவாகிலும் இருக்கக்கூடிய ஜப்திதாரர் - என்ன காரணங்களின்மேல் தொகை டிமாண்ட் செய்யப்படுகிறதோ அந்தக் காரணங்கள் கண்டுள்ள ஒரு கணக்கு சகிதமாய் பாக்கித் தொகை இவ்வளவென்று விவரமாய்க்கண்டு எழுத்து மூலமான ஒரு டிமாண்டைப் பாக்கிதாரருக்குச் சேர்ப்பிக்க வேண்டும்.

(2) ஷை டிமாண்டிலும் கணக்கிலும் ஜப்திதாரர் தேதி போட்டுக் கையெழுத்து பண்ணவேண்டும்; மேலும், அவைகளுக்கு ஒரு பிரதியை - பாக்கிதாரரிடத்திலாவது, அவர் சாதாரணமாய் வாசஞ்செய்யும் இடமானது அந்த ஜப்தி எந்த நிலத்துக்குச் சம்பந்தப்படுகிறதோ அந்த நிலத்துக்குச் சமீபமாயிருந்தால் அந்த இடத்தில் இருக்கும் அவருடைய குடும்பத்தைச்சேர்ந்த வயதுவந்த யாதொரு புருஷரிடத்திலாவது, ஷை நபருடைய அதிகாரங் கொடுக்கப்பெற்ற ஏஜெண்டினிடத்திலாவது ஒப்பித்தோ அல்லது அப்படிச் செய்ய முடியாத பக்ஷத்திலே அந்த கோர்ட்டில் எந்த நிலத்துக்குச் சம்பந்தப்படுகிறதோ அந்த நிலத்தில் யாவர்க்கும் தெரியும்படியான ஒரு பாகத்திலே அதற்கு ஒரு பிரதியை ஒட்டியோ மேலே கண்ட டிமாண்டையும் கணக்கையும் எந்த தேதியில் பாக்கி சேரவேண்டியதாயிருக்கிறதோ அந்தத் தேதி முதல் ஒரு வருஷ காலத்துக்குள்ளாக பாக்கிதாரருக்குச் சேர்ப்பிக்கவேண்டும். அந்த டிமாண்டில் காணவேண்டியவைகள் எவையென்றால் :—

(a) சேரவேண்டியதாயிருக்கிற பாக்கித் தொகையும் அதற்கு வட்டி எதாவதிருந்தால் அதுவும்;

(b) அது எந்தக்கைப்பற்று நிலத்தின் விஷயமாகப் பாக்கியாகிறதோ அந்தக் கைப்பற்று நிலம்;

(c) அது எந்தக் காலவரையறைக்காகப் பாக்கியாகிறதோ அந்தக்காலவரையறை.

குறிப்புகள்.

ஒரு ரயத்துக்கு டிமாண்டை நேரிடையாக ஜாரி செய்ய முடியாமற்போனால் அவருடைய கைப்பற்று நிலத்தண்டை ஒரு முக்கியமான இடத்தில் அதை ஒட்டவேணும். வீட்டண்டை ஒட்டுவது சட்ட சம்மதமானதல்ல. அப்படி ஒட்டுவதானது சட்டத்தை அனுசரித்ததாக ஏற்படாது. 26. I. C. 991.

யாதொரு ஜங்கம சொத்தானது அக்கிரமமாய் ஜப்தி செய்யப்படுமானால் அதற்காக டாமேஜ் அல்லது நஷ்ட ஈடு பெறுவதற்கு ஜப்தியினால் துன்பப்பட்டவருக்கு உரிமையுண்டு. ஆனால், அப்படி நஷ்ட ஈடு பெறுவதற்கான தாவாவுக்கு லிமிடேஷன் எப்பொழுது ஆரம்பமாகும்? 38. Mad. 655 என்னும் சென்னை ஹைகோர்ட்டு தீர்ப்பில் ஜப்தி என்றைய தினம் நடந்ததோ அன்று முதற்கொண்டே லிமிடேஷன் தவணை ஆரம்பமாகும் என்றும் ஜப்தி நடந்த தினம் முதல் 3 மாதத்திற்குள் தாவா செய்யாவிட்டால் தாவா லிமிடேஷன் தோஷத்தினால் பாதிக்கப்பட்டதாகும் என்றும் தீர்மானம் செய்யப்பட்டது.

பொதுவாக நஷ்ட ஈடு முதலியவை பெறுவதற்கான தாவாக்களைப்பற்றி 213-வது பிரிவில் சொல்லப்பட்டிருக்கிறது.

ஜப்தி செய்வது பாக்கிக்குச் சரியாயிருக்கவேண்டுமென்பதும், சொத்தின் ஜாப்தாவைச் சொந்தக்காரருக்குச் சேர்ப்பித்து அதற்கு நகலை விற்பனை நடத்தும உத்தியோகஸ்தருக்கு அனுப்பவேண்டு மென்பதும்.

**79.** (1) மேலேகண்ட டிமாண்டுக்கு உடனே தொகை செலுத்தினாலன்றி மற்றப்படி, ஜப்திதாரர் - வட்டி

சகிதமாய் பாக்கித்தொகைக்கும் ஜப்தி செலவுக்கும் சரியாயிருக்கும்படியாகச் சொத்தை ஜப்தி செய்யலாம்; மேலும், ஷெடி சொத்துக்கு ஒரு ஜாபிதாவையாவது விவரப்பத்திரிகையையாவது உடனே தயார் செய்து அதில் தேதிபோட்டு கையெழுத்துபண்ணி, அதை எழுத்து மூலமாயுள்ள டிமாண்டை எந்த விதமாய்ச் சேர்ப்பிக்க வேண்டுமென்று முந்திய பிரிவில் நிபந்தனை கண்டிருக்கிறதோ அந்த விதமாய் பாக்கிதாரருக்கு ஆலசியம் பண்ணாமல் சேர்ப்பிக்க வேண்டும்; அல்லாமலும், எழுத்து மூலமாயுள்ள டிமாண்டுக்கும கணக்குக்கும் ஒரு நகல் சகிதமாக மேலே கண்ட ஜாபிதா அல்லது விவரப்பத்திரிகைக்கு ஒரு நகலே, பாக்கிதாரருக்கு டிமாண்டைச் சேர்ப்பித்தது முதல் பத்து தினத்துக்குள்ளாக, ஜப்திதாரர் - பாக்கிக்காக ஜப்தி செய்யப்பட்ட சொத்தை விற்க 1839-ம் ௵த்திய சென்னப்பட்டணத்து 7-வது ஆக்டின்படி அதிகாரம் கொடுக்கப்பெற்றும் விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தர் என்று இதில் பின்னால் சொல்லப்பட்டுமுள்ள ஸர்க்கார் உத்தியோகஸ்தருக்கு அனுப்பவேண்டும்.

(2) பாக்கிதாரரல்லாத வேறே யாதொரு நபர் தாம் பிரஸ்தாப சொத்தில் பயிரிடுகிறவரென்றாவது அந்த சொத்துக்குச் சொந்தக்காரரென்றாவது ஜப்திதாரருக்குத் தெரிவிக்கிற பட்சத்திலே, ஜப்தி செய்யப்பட்டிருக்கும் சொத்தில்—

(a) கைப்பற்று நிலத்தில் அறுவடையாகாமலிருக்கும் அல்லது சேகரிக்கப்படாதிருக்கும் யாதொரு மாசூலும் அல்லது பூமியில் விளையும் இதர விளைபொருள்களும்,

(b) கைப்பற்று நிலத்தில் விளைந்திருந்து அறுவடை செய்யப்பட்டும் அல்லது சேகரிக்கப்பட்டும், புலங்களிலாகிலுஞ்சரி விட்டுப்பண்ணையிலாகிலுஞ்சரி தானியத்தை அடித்

தெடுப்பது முதலிய காரியங்களுக்காக கைப்பற்று நிலத்தின் மேலாகிலும் களத்துமேடு அல்லது வேறே இடத்திலாகிலும் சேர்த்து வைக்கப்பட்டும் இருக்கும் யாதொரு மாசூலும் அல்லது பூமியில் விளையும் இதர விளைபொருள்களும், அடங்கியிருக்கும் சகல விஷயங்களிலும், ஷெடியூலுக்கும் சொத்தின் ஜாபிதா அல்லது விவரப்பத்திரிகைக்கும் ஒரு நகலை அந்த நபரிடத்தில் மேலே கண்ட விதமாகவே சேர்ப்பிக்கவாவது வேண்டும் ஒப்புவிக்கவாவது வேண்டும்.

### குறிப்புகள்.

இந்தப்பிரிவில் 2-வது உட்பிரிவானது முழுவதும் மாற்றியமைக்கப்பட்டது.

ஜப்தி செய்கிறவர் பொலீசாருடைய உதவியைப் பெறலாமென்பது.

**80.** ஜப்தி செய்ய அதிகாரம் பெற்றிருக்கும் யாதொரு நபர் - எவ்வித கலகமும் நேரிடாதபடி செய்வதற்கு என்ன சகாயம் அவசியமாயிருக்குமோ அந்த சகாயத்துக்காக அதிசமீபத்திலுள்ள போலீஸ் ஸ்டேஷனுக்கு விண்ணப்பஞ்செய்து கொள்ளலாம்; அப்படிப்பட்ட விண்ணப்பம் யாருக்குச் செய்துக்கொள்ளப்படுகிறதோ அந்த அதிகாரியானவர் மேற்படி காரியத்துக்காக அந்தப்படி ஜப்தி செய்யுங்காலத்திலே ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட போலீஸ் உத்தியோகஸ்தர்கள் வந்திருக்கும்படி அனுப்ப வேண்டும்.

ஜப்தி சொத்து பாக்கிக்கு சரியாயிருக்க வேண்டுமென்பது.

**81.** ஜப்திசொத்து அதிகமாயிருக்கக்கூடாது, ஜப்தி செய்யப்பட்ட சொத்தின் மதிப்பானது வட்டி சகிதமாக

சேரவேண்டியதாயிருக்கிற பாக்கித் தொகைக்கும் ஜப்தி செலவுக்கும் கூடுமான மட்டில் சரியாயிருக்கவேண்டும்.

ஜப்தி செய்யவேண்டிய காலம்.

**82.** சூரியோதயத்துக்குப் பிறகும் சூரியாஸ்தமனத்துக்கு முன்னும் ஜப்திசெய்யவேண்டுமே யொழிய மற்றக் காலங்களில் ஜப்திசெய்யக்கூடாது.

மாகூலை அறுவடை செய்து காப்பாற்றி வருவதற்கான சுதந்திரம்.

**83.** (1) ஜப்தி செய்திருந்தும் பாதகமில்லாமலே, பயிருக்குச் சொந்தக்காரர் அறுவடையாகாமலிருக்கிற பயிரையும் வேறே மாகூலையும் பாதுகாத்துக்கொண்டிருந்து, ஜப்திதாரருக்கு நோடிஸ் கொடுத்த பிறகு அறுவடை செய்து குவித்து வைக்கலாம்.

(2) பயிருக்குச் சொந்தக்காரர் மேல்படி பயிரையாவது மாகூலையாவது பாதுகாத்துக்கொண்டிருக்கவோ அறுவடை செய்யவோ அல்லது குவித்துவைக்கவோ அசட்டை பண்ணுவாராகில், ஜப்திதாரர் சொந்தக்காரருடைய செலவில் அந்தப்படி செய்யலாம்.

(3) ஜப்திபண்ணப்பட்ட சொத்தை ஜப்திதாரரால் இது விஷயமாய் நியமிக்கப்பட்ட யாதொரு நபரின் வசத்திலே வைக்கவேண்டும்; அந்தப்படி நியமிக்கப்பட்ட நபர் மேல்படி சொத்தை சமீபத்திலுள்ள சௌகரியமான ஒரு இடத்திலே சொந்தக்காரருடைய செலவில் சேர்த்து வைக்க வேண்டும்.

ஜப்திபண்ணுகிறவர் இன்ன இடங்களைப் பலாத்காரமாய்த் திறக்கலாமென்பது.

**84.** யாதொரு லாயம், பசுமாட்டுத்தொழுவம், களஞ்சியம், கிடங்கு, வீட்டைச்சார்ந்து வெளியே அருகிலுள்ள அறை, அல்லது வேறே கட்டிடத்தை, ஜப்திபண்ணுகிறவர் பலாத்காரமாய்த் திறப்பது சட்டசம்மதமாகும்; மேலும், அவர்-வெளிக்கதவு திறந்திருக்கிற யாதொரு குடியிருப்பு வீட்டிலும் பிரவேசிக்கலாம்; அல்லாமலும், பாக்கிதாருடையதாசி உள்ளே வைக்கப்பட்டிருக்கிற சொத்தை ஜப்தி செய்யும் காரியத்துக்காக அப்படிப்பட்ட குடியிருப்பு வீட்டிலுள்ள யாதொரு அறையின் கதவை உடைத்துத் திறக்கலாம்; ஆனால் எப்போதும், இதில் பின்னால் நிபந்தனை கண்டிருக்கிறபடிக்கன்றி மற்றப்படி, அந்தக் குடியிருப்பு வீட்டில் ஸ்திரீகள் வாசஞ் செய்வதற்காகிலும் அந்தப்புரமாகவாகிலும் உபயோகப்படும் யாதொரு அறையை மேற்கண்ட ஜப்திதாரர் உடைத்துத் திறப்பதாவது அதில் நுழைவதாவது சட்டசம்மதமாகாது.

போலீஸ் உத்தியோகஸ்தர்முன்பாகக் கதவுகளைப் பலாத்காரமாய்த்திறக்கவும் அந்தப்புரத்தில் நுழையவும் அதிகாரம்.

**85.** வெளிக்கதவு மூடியிருக்கிற யாதொரு குடியிருப்பு வீட்டிற்குள்ளேயாவது ஸ்திரிகளால் உபயோகிக்கப்பட்டுத் தேசவழக்கப்படி அந்தரங்கமாகப் பாவிக்கப்படுகிற யாதொரு அறைக்குள்ளேயாவது பாக்கிதாருடைய சொத்து வைக்கப்பட்டிருக்கிறதென்று நம்ப ஜப்திதாரருக்கு நியாயமிருக்கிற பட்சத்திலே, அந்த ஜப்திதாரர்-அந்தச் சங்கதியை அதிசமீபத்திலுள்ள போலீஸ் ஸ்டேஷன் விசாரணை உத்தியோகஸ்தருக்கு ரிபோர்ட் செய்யவேண்டும். அந்தப்

படி ரிபோர்ட் செய்வதன்மேல், ஷை ஸ்டேஷன் விசாரணை உத்தியோகஸ்தர் அந்த இடத்துக்கு ஒரு போலீஸ் உத்தியோகஸ்தரை அனுப்பவேண்டும்; ஜப்திதாரர் - அந்தக் குடியிருப்பு வீட்டின் வெளிக்கதவையும் ஷை வீட்டிற்குள்ளே அந்தப்புரம் தவிர வேறே யாதொரு அறையின் கதவையும் ஷை பொலீஸ் உத்தியோகஸ்தருக்கு முன்பாக உடைத்துத் திறக்கலாம். அல்லாமலும், அந்தப்புரத்திற்குள்ளே இருக்கும் ஸ்திரிகளை அப்புறப்படுத்துவதற்காகக் கிரமப்படி நோடீஸ் கொடுத்த பிறகும், (அந்த ஸ்திரீகள் தேசவழக்கப்படி பஹிரங்கத்தில் வரக்கூடாத அந்தஸ்துள்ள ஸ்திரீகளாயிருந்தால்) அவர்களைத் தகுதியான விதமாக அப்புறப்படுத்துவதற்கான சாதனங்களை ஏற்படுத்திக்கொடுத்த பிறகும், ஷை ஜப்திதாரர்-அந்தப்புரமாய் உபயோகப்படும் அறைகளிலே ஜப்திதாரருடைய சொத்து ஏதாகிலும் வைத்திருந்தால் அதை ஜப்திபண்ணுவதற்கு மேலேகண்ட பொலீஸ் உத்தியோகஸ்தருக்கு முன்பாக அந்த அறைகளுக்குள் நுழையலாம். அப்படிப்பட்ட சொத்து ஏதாவது காணப்படுகிற பட்சத்திலே, அந்த அறைகளில் முன்னிருந்தவர்கள் மறுபடியும் உள்ளேதாராளமாய் போகும்படி அந்த அறைகளிலிருந்து மேற்படி சொத்தை உடனே எடுத்துவிடவேண்டும்.

ஜப்திசெய்யப்பட்ட கால் நடைகளையாவது சரக்குகளையாவது உபயோகிக்கக்கூடாதென்பது.

**86.** ஜப்திதாரர் - ஜப்தி செய்யப்பட்ட எருது முதலிய கால் நடைகளிடத்திலே வேலை வாங்கவுங்கூடாது, ஜப்திசெய்யப்பட்ட சொத்தை உபயோகிக்கவுங்கூடாது. அவர் கால்நடை முதலிய ஜீவப்பிராணிகளுக்கு வேண்டிய தீனிபோடவேண்டும்; அதற்காகத் பிடிக்கிற செலவை பாக்கிதாரராகிய ரயத்து ஏற்றுக்கொள்ளவேண்டியதோடுங்கூட,

ஜப்தி செலவைப்போல அது வசூல் செய்யப்படத்தக்கது மாகும்.

*டிபாஸிட் செய்வதன் மேலாவது தொகை செலுத்துவதின் மேலாவது ஜாமீன் சவதரித்துக்கொடுப்பதின் மேலாவது ஜப்தி விடுதலை செய்வது.*

**87.** (1) இந்த அத்தியாயத்தின்படி ஜப்தி செய்யப்பட்டிருக்கிற பிறகும் விற்பனைக்காக ஏற்படுத்தப்பட்ட தேதிக்கு முன்பு யாதொரு காலத்திலும், பாக்கிதாரராகிலும் பயிரிடுகிறவராகிலும் சொத்தின் சொந்தக்காரராகிலும்—78-வது பிரிவின்படி எழுத்து மூலமாயுள்ள டிமாண்டில் குறித்திருக்கிற தொகை விஷயமாய் பிறகு ஏற்படும் வட்டி - செலவுகள் ஆகிய இவைகள் சகிதமாக ஷெடி தொகையாயினும் 77-C பிரிவில் குறிப்பிட்டிருக்கும் தொகையாயினும் ஜப்திதாரரிடத்தில் கொடுப்பதாகக்காட்டலாம் அல்லது செலுத்தலாம் அல்லது, ஜப்திதாரருக்குத் திருப்திகரமாய் ஜாமீன் சவதரித்துக்கொடுக்கலாம்; அந்தப்படி செய்வதன் மேல், ஜப்திதாரர் மேலே கண்டபடி கொடுக்கவந்ததையோ அல்லது செலுத்தினதையோ அல்லது ஜாமீனையோ அங்கீகரித்திருப்பதாக எழுதிக்கொடுத்து உடனே ஜப்திவிடுதலை செய்யவேண்டும்.

(2) ஜப்தி பண்ணப்பட்ட சொத்தை விற்பனை செய்வதற்கு முன்னே எப்போதாகிலும், பாக்கிதாரராவது பயிரிடுகிறவராவது ஜப்தி பண்ணப்பட்ட சொத்தின் சொந்தக்காரராவது விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தரிடத்திலே, 78-வது பிரிவின்படி எழுத்து மூலமாயுள்ள டிமாண்டில் குறித்திருக்கிற தொகை விஷயமாய் பிறகு ஏற்படும் வட்டி செலவுகள் - ஆகிய இவைகள் சகிதமாக ஷெடி தொகையாயினும் 77-C பிரிவில் குறிப்பிட்டிருக்கும் தொகையாயினும் செலுத்தினால், விற்பனை நடத்தும் மேற்படி உத்தியோகஸ்தர்

அதற்காக ரசீது கொடுத்து உடனே ஜப்தி விடுதலை செய்ய வேண்டும்.

ஜப்தி செய்யப்பட்டச் சொத்து காணாமற்போனாலும் கெட்டுப்போனாலும் ஜப்திதாரர் உத்திரவாதம் பண்ணவேண்டுமென்பது.

**88.** ஜப்தி செய்யப்பட்ட சொத்தானது - ஜப்திதாரருடைய வசத்திலிருக்கையில், அவர் அதைக்காப்பாற்றி வைப்பதற்கு வேண்டிய நியாயமான முன்னெச்சரிக்கையாயுள்ள ஏற்பாடுகள் செய்யாமையினாலே, திருட்டுப்போனாலும் காணாமற் போனாலும் சேதப்பட்டாலும், அழிந்து போனாலும், நஷ்ட ஈட்டுக்காகச் சொந்தக்காரர் கலெக்டரிடத்தில் ஜப்திதாரர்மேல் வியாஜ்ஜியம் கொண்டுவரலாம்.

ஜப்தி செய்யப்பட்ட சொத்தில் சுதந்தரம் அல்லது பாத்தியதை இருப்பதாக மூன்றாவது மனிதர் தாவா செய்வது.

**89.** ஜப்தியிலிருக்கிற அசையும் பொருள்களில் எதிலாவது தமக்குச் சுதந்திரம் அல்லது பாத்தியதை இருக்கிறதாகத் தாவா செய்கிற மூன்றும் நபர் கலெக்டருக்காகிலும் விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தருக்காகிலும், விற்பனை தேதிக்கு முன்னதாக விண்ணப்பம் செய்துகொள்ளலாம்; அதன்மேல் கலெக்டரானவர் - உடனே விசாரணை செய்யவேண்டும் அல்லது செய்விக்கவேண்டும்; மேலும், தகுந்த காரணமிருப்பதாகத் தோற்றுமாகில், அந்தசொத்தை விற்பனை செய்யாமல் நிறுத்திவைக்கலாம். கலெக்டரானவர் அந்தத்தாவாவைக் குறித்து தமக்குத தகுதியாகத் தோற்றுகிறபடி உத்தரவு பிறப்பிக்கவேண்டும்.

ஜப்தி செய்வதைத் தடுப்பதற்காக மோசமாய்ப் பராதீனஞ் செய்யப்பட்ட அல்லது ஜப்தி செய்த பிறகு பலவந்தமாகவாவது திருட்டுத்தனமாகவாவது அப்புறப்படுத்தப்பட்ட சொத்தை ஒப்பிப்பது.

**90.** ஜப்திதாரர் விண்ணப்பம் செய்துகொண்ட பிறகு,—

(a) பாக்கிக்காக ஜப்தி செய்வதைத் தடுக்கும் பொருட்டு பாக்கிதாரர் அசையும் பொருளை மோசமாகப் பராதீனஞ் செய்திருக்கிறாரென்றாகிலும்,

(b) ஒருமுறை ஜப்தி செய்யப்பட்ட அசையும் பொருளை யாதொரு நபர் பலவந்தமாகவோ அல்லது திருட்டுத்தனமாகவோ எடுத்துக்கொண்டு போயிருக்கிறாரென்றாகிலும்,

கலெக்டருக்குத் திருப்தியாகும்படி ருஜு செய்யப்பட்டால் கலெக்டரானவர் ஜப்திதாரருக்கு ஷெடி பொருளைத் திரும்பவும் கொடுத்துவிடவேண்டுமென்றாயினும் அதன் மதிப்புக் கிரயத்தைச் செலுத்திவிடவேண்டுமென்றாயினும் உத்தரவு பிறப்பிக்கவேண்டும்.

89, 90-வது பிரிவுகளின்படி பிறப்பிக்கப்படும் உத்தரவுகளுக்கு விரோதமாக வியாஜ்ஜியம்.

**91.** 89-வது பிரிவின்படியாவது 90-வது பிரிவின்படியாவது பிறப்பிக்கப்படும் உத்தரவினால் துன்பமடைகிற யாதொரு நபர் விவாதத்திலிருக்கும் சொத்து விஷயமாய்த் தாம் கொண்டாடும் சுதந்தரத்தை ஸ்தாபிப்பதற்காகவும் பிரதிபலனுக்காகவும் மேற்படி உத்தரவின் தேதி முதல் ஒரு வருஷ காலத்துக்குள் ஸிவில் கோர்ட்டில் வியாஜ்ஜியம் கொண்டுவரலாம்.

குறிப்புகள்.

இந்தப் பிரிவில் புதியதாக 1934-ம் வருஷத்தினுல் சொத்து பாத்தியதை ஸ்தாபித்துக்கொள்வதற்காகவும் நஷ்ட ஈடுபெறுவதற்காகவும் மேலே 89. 90-வது பிரிவுகளின் கீழ் செய்யப்பட்ட உத்திரவினுல் பாதிக்கப்பட்ட நபர் செய்யக்கூடிய தாவா ஒரு வருஷத்திற்குள் செய்யப்பட வேண்டுமென்று ஏற்படுத்தப்பட்டது.

விற்பனைக்காக விண்ணப்பம்.

**92.** (1) ஜப்திதாரர் ஜப்தி தேதிமுதல் பதினைந்து தினத்துக்குள்ளாக 79-வது பிரிவில் கண்டிருக்கிற ஜாபிதா அல்லது விவரப்பத்திரிகையில் குறிக்கப்பட்டுள்ள சொத்தை விற்பதற்காக விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தரிடம் விண்ணப்பஞ் செய்துகொள்ள வேண்டும்.

(2) அப்படிப்பட்ட விண்ணப்பம் செய்துகொள்ளப் படாவிட்டால் சொத்தின்மேலுள்ள ஜப்தியானது மேற்கண்ட பதினைந்து தினக்காலவரையறை கழிவதன்மேல் செலாவணியாகாமல் நின்றுபோகும்.

விண்ணப்பத்தில் கண்டிருக்கவேண்டிய விஷயங்கள்.

**93.** மேற்படி விண்ணப்பமானது எழுத்து மூலமாக இருக்கவேண்டும்; மேலும், அதில் அடியிற்கண்ட விவரங்களைக் குறிக்கவேண்டும். அவையாவன:—

(a) பாக்கிதாரரின் பெயரும் இருப்பிடமும் 79-வது பிரிவைச்சேர்ந்த (2) குறிப்பிட்ட உட்பிரிவில் நிபந்தனை கண்டிருக்கிற விஷயத்திலே தாம் பயிரிடுகிறவரென்றுவது சொந்தக்காரரென்றுவது தெரிவிக்கிற நபரின் பெயரும் இருப்பிடமுங்கூட;

(b) சேரவேண்டிய தொகையும்;

(c) ஜப்தி தேதியும் ;

(d) ஜப்தி செய்யப்பட்ட சொத்து எவ்விடத்திலிருக்கிறதோ அந்த இடமும்.

நோட்டீஸ் சேர்ப்பிப்பதற்குக் கட்டணம்.

**94.** விண்ணப்பத்துடன் கூடவே ஜப்திதாரர் நோடிஸ் சேர்ப்பிப்பதற்காக நிர்ணயிக்கப்பட்டிருக்கிற கட்டணத்தையும் விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தரிடம் செலுத்திவிடவேண்டும்.

விண்ணப்பத்தை வரப்பெற்றுக்கொண்டதன்மேல் நடத்த வேண்டிய நடவடிக்கை.

**95.** (1) அப்படிப்பட்ட விண்ணப்பத்தையும் கட்டணத்தையும் வரப்பெற்றுக்கொண்டவுடனே விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தரானவர் மேற்படி - விண்ணப்பத்துக்கும் 79-வது பிரிவில் கண்டிருக்கிற ஜாபிதா அல்லது விவரப்பத்திரிகைக்கும் ஒரு நகலைக் கலெக்டருக்கு அனுப்பி பாக்கிதாரருக்கு ஒரு நோட்டிஸ் சேர்ப்பித்து கேட்கப்படுகிற (டிமாண்ட் செய்யப்படுகிற) தொகையைச் செலுத்திவிடவேண்டுமென்றாயினும் நோட்டிஸ் சேர்ப்பித்த தேதி முதல் 15-தினத்துக்குள்ளே மேற்படி ஜப்தியை ஆட்சேபிப்பதற்காகக் கலெக்டரிடத்தில் வியாஜ்ஜியந் தொடரவேண்டுமென்றாயினும் அவருக்குக் கட்டளையிடவேண்டும்.

(2) 79-வது பிரிவைச்சேர்ந்த (2) குறிப்பிட்ட உட்பிரிவில் நிபந்தனை கண்டிருக்கிற விஷயத்திலே இதே மாதிரியான நோட்டிஸைப் பயிரிட்டவருக்காவது சொந்தக்காரருக்காவது சேர்ப்பிக்கவேண்டும். அவரும் அந்த நோடிஸ் சேர்ப்பிக்கப்பட்ட தேதிமுதல் 15 தினங்களுக்குள் மேற்படி

ஜப்தியை ஆட்சேபிப்பதற்காக கலெக்டரு முன்பாக வியாஜ்ஜியம் தொடரலாம்.

(3) விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தரானவர் சந்தர்ப்பத்திற்கேற்றபடி (1) அல்லது (2) குறிப்பிட்ட உட்பிரிவின் பிரகாரம் நோட்டிஸ் சேர்ப்பித்த தேதிமுதல் 15-தினத்துக்குக்குறையாமலுள்ள ஒரு தேதியை விற்பனைக்காக உத்தரவு மூலமாய் நிஷ்கரிஷை செய்து ஜப்தி செய்யப்பட்ட சொத்து இருக்கிற கிராமத்தில் அதைத் தண்டோரா மூலமாகப் பிரசித்தஞ் செய்விக்கவேண்டும்; மேலும் அவர் தம்முடைய உத்தரவுக்கொரு நகலைக் கிராமத்தில் யாவருக்கும் தெரியும்படியான ஒரு இடத்தில் ஒட்டவேண்டியதுமல்லாமல் அதை பாக்கிதாருக்கும் பயிரிடுகிறவர் அல்லது சொந்தக்காரருக்கும் நேரில் கொடுக்கவேண்டும் அல்லது தபால் மூலமாய் அனுப்பவேண்டும்.

மேலேகண்டபடி பிரசித்தஞ்செய்த தேதிமுதல் அதமம் எழுநாள் கழிந்தபிறகுள்ள ஒரு தேதியை விற்பனை தேதியாக நிஷ்கரிஷை செய்யவேண்டும்.

(4) மேலேகண்ட நோடிஸிலும் பிரகடனத்திலும்—

(a) விற்கப்போகிற சொத்தையும்,

(b) 93-வது பிரிவின்படிக்கான விண்ணப்பத்தில் கண்டிருக்கிற தொகையையும்,

(c) எந்தக் காலத்தில் எந்த இடத்திலே விற்பனை நடத்தப்படுமென்பதையும் விவரமாய்க் காணவேண்டும்.

(5) விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தரானவர் எந்தக் காரணத்தினாலாகிலும் (3) குறிப்பிட்ட உட்பிரிவின்படி நிஷ்கரிஷை செய்யப்பட்ட தேதியன்றைக்கு விற்பனை நடத்

தக்கூடாதவராயிருந்தால் அவர் மேற்படி விற்பனையை உத்தரவு மூலமாய் வேறொரு தினத்துக்குத் தள்ளிவைக்கலாம். (3) குறிப்பிட்ட உட்பிரிவின்படி பிறப்பிக்கப்பட்ட உத்தரவின் விஷயத்தில் எப்படியோ அப்படியே மேற்படி உத்தரவையும் கிராமத்தில் பிரசித்தம் செய்து ஒட்டவேண்டும். அந்த உத்தரவுக்கு நகல் ஒன்றை பாக்கிதாரருக்கும் பயிரிடுகிறவர் அல்லது சொந்தக்காரருக்கும் நேரில் கொடுக்க வேண்டும் அல்லது தபால் மூலமாக அனுப்பவேண்டும்.

இன்னபடிக்கானால் விற்பனை நடத்தலாமென்பது.

**96.** 95-வது பிரிவிற்கண்ட நோட்டிஸ் சேர்ப்பிக்கப்பட்ட தேதிமுதல் பதினைந்து தினங்களுக்குள்ளாக மேலே கண்ட பாக்கிதாரரான ரயத்தாவது பயிரிட்டவராவது சொந்தக்காரராவது மேற்படி ஜப்தியை ரத்து செய்விப்பதற்காகக் கலெக்டரிடம் வியாஜ்ஜியம் தாக்கல் செய்யாவிட்டாலும், அப்படிப்பட்ட வியாஜ்ஜியம் தாக்கல் செய்து அது அவருக்கு விரோதமாகக் கலெக்டரால் தீர்மானிக்கப்பட்டும் 89-வது பிரிவின்படியாகிலும் 103-வது பிரிவின்படியாகிலும் 104-வது பிரிவின்படியாகிலும் விற்பனை நிறுத்திவிடப்படாமலும் அல்லது தள்ளிவைக்கப்படாமலுமிருந்தாலும், விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தரானவர் டிமாண்ட் தொகையும் ஜப்தி செய்ததற்காக உண்டான செலவுகளென்று அவர் நிர்ணயிக்கும்தொகையும் பூர்த்தியாகச் செலுத்தப்பட்டாலன்றி மற்றப்படி, இதில் பின்னால் சொல்லப்பட்டிருக்கிற விதமாக ஷை சொத்தையோ, அந்த சொத்திலே டிமாண்ட் தொகைக்கும் ஜப்தி செலவுகளுக்கும் விற்பனை செலவுகளுக்கும் ஈடு செய்வதற்கு அவசியமாகும் யாதொரு பாகத்தையோ விற்க ஆரம்பிக்கவேண்டும்.

குறிப்புகள்

ஒரு கைப்பற்று நிலத்தை பயிர் செய்பவருடைய சொத்துக்கள் அக்கிரமமாய் ஜப்தி செய்யப்பட்டால் அவர் பேரில் பட்டா இல்லாம லிருந்த போதிலும் அவர் பயிர் செய்தது தமக்குத் தெரியாதென்று நிலத்துக்குடையவர் கூறின போதிலும், அவருக்கு ஜப்தி சட்ட விரோதமானது என்று சொல்லுவதற்காவது அல்லது நஷ்ட ஈடு பெறு வதற்கான தாவா செய்வதற்காவது உள்ள உரிமையானது போய் விடாது. ஒரு ரிஜிஸ்தர் செய்யப்பட்ட ரயத்துக்கு எம்மாதிரியான உரிமை உண்டோ அம்மாதிரியான உரிமைகளைக் கைக்கொள்ளலாம். தீர்மானப்பிரமாணம் 112 I. C. 176-56 M. L. J. 81. ஷை கேஸி லேயே மற்றொரு விஷயமும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. அதா வது ஒரு கைப்பற்று நிலத்தின் பாக்கி விஷயமாய் தவறான ஜப்தி முதலியவை நடந்தால் அந்த நிலத்தைப் பயிர் செய்கிற ஜாயின்ட் குடும்பத்தின் சார்பாக ஒரு அங்கத்தினர் தாவா செய்யலாம்.

விற்பனை நடத்த வேண்டிய இடம்.

**97.** சொத்தானது எவ்விடத்தில் ஜப்தி செய்யப் பட்டதோ அல்லது வைத்துவைக்கப்படுகிறதோ அந்தக் கிராமத்திலாவது, அதற்கு மிகவும் அருகாமையில் ஜனங் கள் விசேஷமாய் வந்து சேரக்கூடிய இடத்தில் ஷை சொத்து வெகுசாய் நல்ல விலைக்கு விற்குமென்று விற்பனை நடத் தும் உத்தியோகஸ்தர் அபிப்பிராயப்படுகிற பட்சத்திலே அவ்விடத்திலாவது, சாதாரணமாய் விற்பனையை நடத்த வேண்டும். எந்த சந்தர்ப்பத்திலாயினும்சரி, விற்பனையை நடத்த வேண்டிய இடத்திலும் காலத்திலும் ஜப்திதாரர் மேல்படி சொத்தைக் கொண்டுவரக் கடமைப்பட்டவராவர்; அதை கொண்டுவருவதற்காகப் பிடிக்கும் செலவை ஜப்தி செய்வதற்குப்பிடித்த செலவில் ஒரு பாகமாகக் கொள்ள வேண்டும்.

அழிந்து போகத்தக்க பொருள்களை விற்பனை செய்வது.

**98.** இந்த அத்தியாயத்தில் என்ன சொல்லியிருந்த போதிலும் பாதகமில்லாமலே, ஜப்திதாரர் - சீக்கிரத்தில் அழிந்து போகும்தன்மையுள்ள விளைபொருள்களை அல்லது மாசூல்களைக் கூடிய சீக்கிரத்தில் விற்றுவிடவேண்டும்; விற்பனையினால் கிடைத்த தொகை விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தரிடத்தில் கட்டி வைக்கப்படவேண்டும்.

இன்னபடிக்கானால் மாசூல்களை விற்பனை செய்யலாமென்பது.

**99.** (1) சேர்த்துவைக்கக்கூடிய லக்ஷணத்தை யுடைய விளைபொருள்கள் அல்லது மாசூல்களை அறுவடை செய்தோ அல்லது குவித்தோ சேர்த்து வைப்பதற்காகச் சித்தப்படுத்துவதற்கு முன்னே, அவைகளை விற்கக் கூடாது.

(2) சேர்த்து வைக்கக்கூடாத லக்ஷணத்தையுடைய மாசூல்களையோ விளைபொருள்களையோ அறுவடைசெய்வதற்கு அல்லது குவிப்பதற்கு முன்னே விற்று விடலாம்; மேலும், கிரயதாரர் தாமாகவேயாகிலும் இந்த விஷயத்துக்காகத் தாம் நியமிக்கும் யாதொரு நபர் மூலமாகவாகிலும் நிலத்தில் பிரவேசிக்கவும், அவைகளைப் பாதுகாத்தலுப்பதற்கோ குவிப்பதற்கோ அவசியமான எல்லாக்காரியங்களையும் செய்யவும் சுதந்திரமுடையவராவார்.

விற்பனை செய்யும் விதம்.

**100.** சொத்தை விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தருக்கு யுக்தமாகத் தோற்றுகிறபடி ஒரு தொகுதியாகவோ பல தொகுதிகளாகவோ செய்து, பகிரங்கமான ஏலத்தில் விற்கவேண்டும்; டிமாண்டும், ஜப்தி விற்பனை இவைகளுக்குண்டான செலவுகளும், மேல்படி சொத்தின் ஒரு

பாகத்தை விற்பதினாலே ஈடுசெய்யப்படும் பட்சத்தில், உடனே மற்ற பாகத்தை ஜப்தியினின்றும் விடுதலைசெய்து விடவேண்டும்.

விற்பனையைத் தள்ளிவைப்பது.

**101.** சொத்தை விற்பனைக்கு விட்டதன்மேல் விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தரின் மதிப்புப்படி அந்த சொத்துக்குச் சரியான விலை வராமற்போகிற பட்சத்திலும், பாக்கிதாரரோ பயிரிட்டவரோ சொத்தின் சொந்தக்காரரோ அல்லது அவர் சார்பில் காரியம் நடத்த அதிகாரம் பெற்றிருக்கும் யாதொரு நபரோ அல்லது ஜப்திதாரரோ மறு நாள் வரையிலாகிலும், விற்பனை நடத்தும் இடத்திலாவது அதற்குச் சமீபத்திலாவது ஒரு சந்தை கூடுகிற பட்சத்திலே மறு சந்தை நாள் வரையிலாகிலும் விற்பனையைத் தள்ளிவைக்கவேண்டுமென்று விண்ணப்பம் செய்து கொள்ளுகிற பட்சத்திலும், சந்தர்ப்பத்துக்கேற்றபடி மறு நாள் வரையிலாயினும் மறு சந்தை நாள் வரையிலாயினும் விற்பனையைத் தள்ளி வைத்திருந்து, அப்போது மேல்படி சொத்துக்கு என்ன விலை வந்தாலும் விற்பனையை முடித்து விடவேண்டும்.

கிரயத்தொகையைச் செலுத்துவது.

**102.** பிரதிதொகுதியின் விலையையும் விற்பனைக் காலத்திலேயாகிலும், அதற்குப் பிற்பாடு எவ்வளவு சீக்கிரமாகச் செலுத்த வேண்டுமென்று விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தர் கட்டளையிடுகிறாரோ அவ்வளவு சீக்கிரமாகவாகிலும், செலுத்திவிடவேண்டும்; அப்படிச் செலுத்தத் தவறும்பட்சத்திலே, சொத்தை மறுபடியும் ஏலத்தில்விட்டு விற்பனைசெய்து, அப்படிப்பட்ட மறுவிற்பனையில் நேரிடக்

கூடிய விலைக்குறைவு ஏதாகிலுமிருந்தால் அதைக்குறித்தும் அப்படிப்பட்ட மறு விற்பனையினாலுண்டான சகலசெலவுக ளைக்குறித்தும் விற்பனை நடத்தும் மேல்படி உத்தியோகஸ்தர் கலெக்டருக்கு தெரிவிக்க வேண்டும்; கலெக்டரானவர் ஜப்திதாரராவது பாக்கிதாரராவது பயிரிட்டவராவது சொந்தக்காரராவது விண்ணப்பம் செய்து கொள்ளுவதன் மேலும், (சொத்தை ஏலத்தில் எடுத்து) கிரயத்தொகை செலுத்தத்தவறிப்போனவருக்கு நோட்டிஸ் கொடுத்து அவ ருக்கு ஆட்சேபனைகள் எவையேனும் இருந்தால் அவைகளை கேட்ட பிறகும், அவரிடமிருந்து வசூலிக்கப்படத்தக்க தொ கையை ஸெர்டிபை செய்யலாம். மேலும மேலேகண்டபடி கலெக்டரால் சர்டிபை செய்யப்பட்ட தொகையானது அதற்காக கலெக்டர் டிக்ரி பிறப்பித்திருந்தால் எப்படியோ அப்படியே ஜப்திதாரராவது பாக்கிதாரராவது பயிரிட்டவ ராவது சொந்தக்காரராவது கேட்டுக்கொள்வதன் பேரில் (சொத்தை ஏலத்தில் எடுத்து) கிரயத் தொகை செலுத்தத் தவறிப்போனவரிடமிருந்து வசூல் செய்யப்படத்தக்கதா கும்.

குறிப்புகள்.

இந்தப் பிரிவில் 1934-ம் வருஷத்திய திருத்தத்தினால் ஏற் பட்டமாறுதல் என்னவென்றால், ஜங்கம சொத்துக்களை ஏலத்தில் எடுத்தவரானவர் பணம் செலுத்தாவிட்டால் மறு ஏலம் போடப் பட்டதில் அவரால் சேர்ந்த நஷ்டத்தை பெறுவதற்கு பழைய சட்டப் பிரகாரம் தாவா செய்யவேண்டிருக்கையில், இப்பொழுது கலெக்ட ரானவர் சர்டிபிகேட் செய்ததின் பேரில் தாவா இல்லாமலே வசூல் செய்யப்படலாம். இது மிகவும் சுருக்கமான தோர் வழி யாகும்.

ஜப்தி செய்வதில் கிரமப்பிசகிருந்தால் அதைத் தெரிவிக்கக் கடமைப்பட்டிருப்பது.

**103.** விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தரானவர் ஜப்திதாரர் இந்த ஆக்டைச் சாக்கிட்டுக்கொண்டு செய்திருக்கக்கூடிய யாதொரு முக்கியமான கிரமப்பிசகை கலெக்டருக்குத் தெரிவிக்கவேண்டும்; அப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் கலெக்டருடைய உத்திரவு கிடைக்கிறவரையிலே அவர் விற்பனையைத் தள்ளிவைக்கலாம்.

ஜப்தி செய்வதில் கிரமப் பிசகிருப்பதனால் உண்டாவது இன்னதென்பது.

**104.** (1) ஜப்திதாரர் 78—வது பிரிவிற்கண்டபடி எழுத்து மூலமான ஒரு டிமாண்டை ரயத்துக்குச் சேர்ப்பிக்கவில்லையென்றாகிலும் 79—வது பிரிவில் சொல்லியிருக்கிற ஜாபிதா அல்லது விவரப் பத்திரிகையைச் சேர்ப்பிக்கத் தவறிவிட்டாரென்றாகிலும் 92—வது பிரிவின்படி ஜப்தியானது அதிகமென்றாகிலும் கலெக்டருக்குத் தெரியவந்தால் அவர் விற்பனை நடத்தும்படி உத்தரவாவது செய்யலாம் விற்பனையைப்பற்றி வேறொரு நோடிஸ் அல்லது பிரகடனத்தைப் பிறப்பிக்கும்படி கட்டளையாவதிடலாம்; இந்தப்படி கட்டளையிடும்போது அவர் மறு விற்பனைக்காகப்பிடிக்கும் செலவை ஜப்திதாரர் வற்றுக்கொள்ள வேண்டுமென்று உத்தரவு செய்யவேண்டும்.

(2) ஜப்தியானது தொந்தரவுண்டாக்குவதற்கென்றே செய்யப்பட்டதென்றாகிலும் காரணமில்லாமற் செய்யப்பட்டதென்றாகிலும் கலெக்டருக்குத் தோற்றினால் ஜப்தி செய்யப்பட்ட சொத்தை மீண்டும் கொடுத்துவிடவேண்டுமென்று அவர் உத்தரவு செய்யவேண்டும்.

கிரயதாரருக்கு ஸெர்டிபிகேட் கொடுக்க வேண்டுமென்பது.

**105.** கிரயத்தொகை பூர்த்தியாய்ச் செலுத்தப் பட்டிருக்கிறபோது விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தர் சொத்தைக் கிரயதாரரிடத்தில் ஒப்பிப்பதோடுங்கூட வாங் கப்பட்ட சொத்தையும் செலுத்தப்பட்ட கிரயத்தையும் விவரமாகக்கண்ட ஒரு ஸெர்டிபிகேட்டில் தாம் கையெழுத் திட்டு அதை அவருக்குக் கொடுக்கவும் வேண்டும்.

விற்றுவந்த பணத்தை ஒருவழை செய்வது.

**106.** (1) இந்த ஆக்டின்படி ஜப்தி செய்யப்பட்ட சொத்தின் ஒவ்வொரு விற்பனையிலும் கிடைத்த பணத்தி லிருந்து விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தர் விற்பனைக்குப் பிடித்த செலவுகளுக்காக ரூபாய்க்கு ஒரு அணுவுக்கு மேற் படாத விதப்படி கழித்துக்கொண்டு அந்தப்படி கழித்த தொகையைத் தாசில்தாரருக்கு அனுப்பவேண்டும்.

(2) பிறகு மேற்படி உத்தியோகஸ்தர் ஜப்தி விஷய மாகவும் 95–வது பிரிவிற்கண்ட விற்பனையைப்பற்றிய நோட்டீஸையும் பிரகடனத்தையும் பிறப்பிப்பது விஷயமாகவும் ஜப்திதாரருக்குப் பிடித்திருக்கும் செலவுகளில், அந்த ஜப்தி தாரரால் சவதரிக்கப்பட்ட செலவுக் கணக்கைப் பரிசோதித் துப் பார்த்தபிறகு எவ்வளவு தொகை கொடுப்பது நியாய மென்று மேற்படி உத்தியோகஸ்தருக்குத் தோற்றுகிறதோ அவ்வளவு தொகையை ஜப்திதாரருக்குக் கொடுத்துவிட வேண்டும்.

(3) எதற்காக ஜப்தி செய்யப்பட்டதோ அந்த தொகையை தொகை செலுத்தும் தேதிவரையில் சேரும்

வட்டி சகிதமாய் தீர்ப்பதற்காக மிகுந்திருக்கும் தொகையை உபயோகப்படுத்தவேண்டும்.

(4) (இன்னும் ஏதாவது) மிகுதி இருந்தால் அதை யாருடைய சொத்து விற்கப்பட்டிருக்கிறதோ அந்த நபரிடத்தில் ஒப்பிக்கவேண்டும். இவர் - விற்றுவந்த பணத்திலிருந்து ஏதாவது பாக்கி தீர்க்கப்பட்டிருந்தால் அதற்காக விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தரிடமிருந்து ஒரு ரசீது பெற்றுக்கொள்ளவேண்டும்.

(5) ஜப்திதாராவது ஜப்தி செய்யப்பட்ட சொத்தின் சொந்தக்காரராவது விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தருடைய தீர்மானத்தைப்பற்றி அதிருப்தியடைந்தால் உபயகட்சிக்காரர்களில் எவராகிலும் கலெக்டருக்கு விண்ணப்பம் செய்துகொள்வதன்மேல் அந்தக் கலெக்டரானவர் சொத்தை ஜப்தி செய்து விற்பனைக்குக் கொண்டுவந்ததற்காக இவ்வளவு தொகை செலவாயிருக்குமென்று நிர்ணயிக்க வேண்டும்.

*விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தராவது (அவருக்குக்) கீழ்ப்பட்டிருப்பவராவது சொத்தை விலைக்குக் கேட்கவுங்கூடாது வாங்கவுங்கூடாதென்று தடுப்பது.*

**107.** இந்த ஆக்டின்படி சொத்தை விற்பனை செய்யும் எந்த உத்தியோகஸ்தரும் அப்படிப்பட்ட உத்தியோகஸ்தரால் வேலையில் வைத்துக்கொள்ளப்பட்டோ அல்லது அவருக்குக் கீழ்ப்பட்டோ இருக்கும் எந்த நபரும் - தாமாகவாகிலும் இதரர்கள் மூலமாகவாகிலும் அப்படிப்பட்ட விற்பனையில் விற்கப்படும் யாதொரு சொத்தை விலைக்குக் கேட்கவுங்கூடாது அந்த சொத்தில் எவ்வித பாத்தியதை அடையவுங்கூடாது அடைய எத்தனிக்கவுங்கூடாது.

பாயக்காரியாவது பயிரிடுகிறவராவது தம்முடைய நிலக்காரருக்குச் செலுத்தியிருக்கிற தொகையைக் குத்தகைத் தொகையிலிருந்து கழித்துக்கொள்ள அந்தப் பாயக்காரி அல்லது பயிரிடுகிறவருக்குள்ள பாத்தியதை.

**108.** (1) தமக்கு அடுத்து மேற்பட்டுள்ள நிலக்காரரல்லாமல் வேறே யாதொரு நபர் ஜப்தி நடவடிக்கைகள் மூலமாக யாதொரு பாயக்காரி அல்லது பயிரிடுகிறவரிடமிருந்து குத்தகைத் தொகை பாக்கியை வசூலித்தால் அந்தப் பாயக்காரி அல்லது பயிரிடுகிறவர் அந்தப்படி வசூலிக்கப்பட்ட தொகையை மேற்படி நிலக்காரருக்குத் தாம் செலுத்தத்தக்க யாதொரு குத்தகைத் தொகையிலிருந்து கழித்துக்கொள்ளச் சுதந்தரமுள்ளவராவார்; அவ்விதமாகவே, இந்த நிலக்காரர் - தாம் பாக்கிதாரராயிராத விஷயத்திலே, தம்முடைய நிலக்காரருக்குத் தாம் செலுத்தத்தக்க யாதொரு குத்தகைத்தொகையிலிருந்து அந்த தொகையைக் கழித்துக்கொள்ளச் சுதந்தரமுள்ளவராவார்; பாக்கிதாரராயிருக்கிற நிலக்காரருக்குக் கீழேயுள்ள ஒவ்வொரு நிலக்காரரும் இந்தப்படியே செய்துகொள்ளச் சுதந்தரமுள்ளவராவார்;

(2) 87-வது பிரிவின்படி தொகைசெலுத்துகிற யாதொரு பாயக்காரி அல்லது பயிரிடுகிறவர் தாம் செலுத்தியிருக்கிற தொகையில் இந்தப்பிரிவின்படி தாம் கழித்துக்கொண்டிராத யாதொரு பாகத்தைப் பாக்கிதாரரிடமிருந்து வசூலிப்பதற்கு ஸிவில் கோர்ட்டிலே வியாஜ்ஜியம் கொண்டுவருவதற்காக அந்தப் பாயக்காரி அல்லது பயிரிடுகிறவருக்குள்ள பாத்தியதைக்கு இந்தப்பிரிவிலுள்ளதெதுவும் பாதகமுண்டாகமாட்டாது.

*நிலத்துக்குடையவர் ஜப்தி செய்வதும் கோர்ட்டார் ஜப்தி செய்வதும் முரண்படுவதும்.*

**109.** 5-வது பிரிவைச்சேர்ந்த (1) குறிப்பிட்ட உட்பிரிவின்படி எந்த மாசூலிலிருந்து (தமக்குச் சேரவேண்டியதை) முதல் கடனைப் பெறுவதற்கு யாதொரு நிலத்துக் குடையவர் பாத்தியதையுள்ளவராயிருக்கிறாரோ அந்தமா சூலை ஜப்தி செய்யும்போது அவருக்குள்ள சுதந்தரமும் ஒரு ஸிவில் கோர்ட்டாரால் செய்யப்பட்ட ஜப்தி மூலமாகப் பாத்தியதை கொண்டாடுகிற நபருக்குள்ள சுதந்தரமும் எவ்விதமாகவேனும் முரண்படும்போது, ஷை நிலத்துக்குடையவருடைய சுதந்தரமே பலமானதாகும்; ஆனால், அப்படிப் பட்ட நிலத்துக்குடையவர் செய்த ஜப்திகாரணமாகக் கலெக்டர் ஷை சொத்தை விற்றால், அப்படி விற்றுக் கிடைத்த பணத்தில் மிகுதியாக நிற்கும்தொகை யாருடைய சொத்து விற்கப்பட்டிருக்கிறதோ அந்த நபருக்கு 106-வது பிரிவின்படி செலுத்தப்படாமல், எந்த கோர்ட்டிலிருந்து ஜப்தி உத்தரவு பிறந்ததோ அந்தக் கோர்ட்டில் டிபாஸிட்டாகக் கட்டி வைக்கப்படும்.

*ஆட்சேபனை செய்து கொண்டே தொகை செலுத்துகிறதாகக் காட்டினால் அதைச் சட்டசம்மதமானதென்று எண்ணவேண்டுமென்பது.*

**110.** நிலத்துக்குடையவரால் தாவா செய்யப்படுகிற குத்தகைத் தொகை பாக்கி ஆட்சேபனை செய்துகொண்டேயானாலும் செலுத்துவதாகக்காட்டினால், அதைச் சட்டசம்மதமானதாகவே கொள்ளவேண்டும்; அப்படி செலுத்துவதாகக் காட்டினதன்மேல், ஜப்திதாரர்-சொத்தை ஜப்தி செய்வதையோ விற்பதையோ நிறுத்திவிடவும் ஜப்தி செய்யப்பட்டிருந்தால் ஜப்தி செய்யப்பட்ட சொத்தை விடுதலை

செய்யவும் கடமைப்பட்டவராவர்; ஆனால், அப்படிக் கொடுப்பதாகக்காட்டுகிற தொகையை பெற்றுக்கொள்ளும் போது, தொகை செலுத்துகிற நபருக்குக் கொடுக்கப்படும் ரசீதில் ஆட்சேபணையோடு தொகை செலுத்தப்பட்டதென்னும் சங்கதியைக் கண்டெழுதவேண்டும்.

ரயத்தின் கைப்பற்று நிலத்தை விற்பது.

கைப்பற்று நிலத்தை விற்பது.

**111.** யாதொரு பாக்கியானது எந்த ரெவினியு வருஷத்தில் பாக்கியாகச் சேர்ந்து வந்திருக்கிறதோ அந்த ரெவினியு வருஷத்துக்குள் செலுத்தப் படாவிட்டால், ஷை பாக்கிக்கும் அதற்குள்ள வட்டிக்கும் விற்பனைக்கு ஏதாவது செலவு பிடித்திருந்தால் அதற்கு ஈடாய் இதில் பின்னால் நிபந்தனை கண்டிருக்கிற விதமாக நிலத்துக்குடையவர் கைப்பற்று நிலத்தையாவது அதன் யாதொரு பாகத்தையாவது விற்பது சட்டசம்மதமாகும்.

குறிப்புகள்.

111 முதல் 131 வரையிலுள்ள பிரிவுகள் ரெண்ட் பாக்கிக்காக கைப்பற்று நிலம் ஏலம் போடப்படுவதைப்பற்றி கூறுகின்றன. சில ஜப்தி நடவடிக்கைகளில் 1934-ம் வருஷத்திய திருத்த சட்டத்தினால் சில மாறுதல்கள் நடந்துள்ளன. அவை அந்தந்த பிரிவின் கீழ் கவனிக்கப்படும்.

இந்தப் பிரிவானது பொதுவாக, நிலத்துக்குடையவருக்கு ரெண்ட் பாக்கிக்காக கைப்பற்று நிலத்தை ஏலத்துக்கு கொண்டு வருவதற்கு உரிமையுண்டு என்று கூறுகிறது. ஆனால் எவரெவர்கள் ஏலத்துக்கொண்டு வருவது, எவர் பேரில் நடவடிக்கைகள் நடத்தப்படுவது என்பது விஷயமாக பல வியவஹாரங்கள் நடந்துள்ளன. அவைகளை அடியில் கண்டவாறு கவனிப்போம்.

'சட்ட சம்மதமான ரயத்து' என்பதன் அர்த்தமென்னவென்றால் கைப்பற்று பாத்தியதை உள்ள ரயத்து என்று அர்த்தமாகும்.

அப்படிப்பட்ட ரயத்துக்கு நோட்டீஸ் கொடுத்த பிறகு தான் கைப்பற்று நிலத்தை எலத்திற்கு கொண்டுவரவேண்டும். அப்படி நோட்டீஸ் கொடுக்காமல் கைப்பற்று நிலத்தை எலத்துக்கு கொண்டு வருவதானது அடியோடே சட்ட சம்மதமாகாது. எலம் செல்லத்தக்கினதல்ல 65 M. L. J. 675.

இந்தப் பிரிவின் கீழும் 112-வது பிரிவின் கீழும் கைக்கொள்ள படக்கூடிய பரிஹாரமானது, நிலத்துக்குடையவர் அந்த ஹோதாவைப் பெற்றிருக்கும் போதும் ரயத்தானவர் கைப்பற்று நிலத்தை பெற்றிருக்கும் போதும் தான் நடக்கவேண்டுமே யொழிய மற்றப்படியல்ல. நிலத்துக்குடையவர் தன்னுடைய ஜமீனை மற்றொருவருக்கு விற்பனை செய்து விட்டிருந்தால் அவர் தனது பாக்கிக்காக இந்தப் பிரிவின்கீழ் பெறக்கூடிய பரிஹாரத்தை கைக்கொள்ள முடியாது. 43 Mad. 786 என்றும் கேஸ் இதற்கு தீர்மானப் பிரமாணம்.

111, 112 பிரிவுகளின் கீழ் எலத்திற்கு உத்திரவிடப்பட்ட சந்தர்ப்பங்களில் அந்த உத்திரவானது செல்லாது என்று சொல்லி ஹைகோர்ட்டில் ரிவிஷன் மனுவை தாக்கல் செய்யலாம். ஹைகோர்ட்டார் அந்த மனுவை விசாரணை செய்ய அதிகாரம் பெற்றவர்கள். இம்மாதிரியாக 49 M. L. J. 540 என்னும் கேஸில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

எலத்திற்கு உத்திரவிடப்பட்ட பிறகு ரயத்தானது அல்லது ரயத்தி நிலத்திற்கு எவ்விதமாகவாவது சம்பந்தப்பட்ட நபராவது தான் பணம் செலுத்தி எலம் நடக்கவொட்டாமல் செய்யலாமே யொழிய அயல் நபர் ஒருவர் யாதொரு சம்பந்தமும் பெறாமல் பணத்தைக்கட்டி எலத்தை நிறுத்துவதற்கு பரிஹாரம் கேட்பதற்கில்லை. 49 M. L. J. 540.

112-வது பிரிவின் கீழ் தாக்கல் செய்யப்பட்ட தாவாக்களை வாதி ஆஜராகாததினால் கலெக்டர் தள்ளுபடை செய்துவிட்டால் அவைகளை மறுபடியும் பைலில் வைத்துக்கொள்ளும்படி மனு செய்வதற்கான காலதவணை 1 மாதமாகும். அதாவது ஒரு மாதத்திற்குள்

மனு செய்யவேண்டும். அகில இந்தியா லா ஜர்னல் பத்திரிகை 1-ம் வால்யூம் கேஸுகளின் குறிப்புகள் பக்கம் 17.

ஏல நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டதில் அயல் நபர் ஒருவர் வந்து நிலம் தன்னுடையது என்றும் அதை ஏலத்துக்குகொண்டு வருவதற்கில்லையென்றும் ஸிவில் புரோஸீஜர் கோட் ஆர்டர் 21 ரூல் 58-ன் கீழ் மனு தாக்கல் செய்யலாம். ஷை விதியானது எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டுக்கும் பிரயோகமாகும். சின்ன வெங்கடராயலு நாயுடு VS பித்தாபுரம் மஹாராஜா அகில இந்தியா லா ஜர்னல் பத்திரிகை 1-ம் வால்யூம் 100 பக்கம்.

111-வது பிரிவின் கீழ் நடந்த ஒரு ஏலமானது அடியோடே செல்லத்தக்கினதல்லவென்று கூறி அதை ரத்து செய்வதற்காக ஸிவில் கோர்ட்டில் தாவா செய்யலாம். ரெவின்யு கோர்ட்டில் அம்மாதிரி தாவா செய்வதற்கில்லை. இம்மாதிரி 1 L. W. 414 என்னும் கேஸில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது

சுப்பா ரெட்டி VS மார்க்க சாஸ்திரியார் A. I. R. 1929 Mad. 517 என்னும் கேஸில் ஒரு ஏலம் பிரசுரமான பிறகு பிரதிவாதி வாதியை நான்கு நாள் வரையிலும் ஏலத்தை நிறுத்தும்படிக்கும் அதற்குள் தாம் மேல் கோர்ட்டிலிருந்து தடை உத்திரவு பெறுவதாகவும் அப்படி பெற்றுவராவிட்டால் ஏலத்தை மறு இஸ்தியார் இல்லாமலே நடத்திவிடலாம் என்றும் கேட்டுக்கொண்டார். அதற்கு வாதி சம்மதித்தார். பிறகு யாதொரு தடை உததிரவும் வாராததினால் ஏலம் நடந்துவிட்டது. ஆனால் பிரதிவாதியினுடைய சட்ட சம்மதமான வார்சுக்கு ஸிவில் புரோஸிஜர் கோட் ஆர்டர் 21 ரூல் 22-ன் கீழ் வார்சு நோட்டீஸ் சேரவில்லை. இந்த ஒரு காரணத்தைக் கொண்டே ஏலம் செல்லாதென்று வாதம் செய்யலாமா என்று கேள்வி வந்ததில் ஸிவில் புரோஸீஜர் கோட் ஆர்டர் 21 ரூல் 22 சம்மரி கேஸுகளுக்கு (அதாவது எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டின் கீழ் உள்ள கேஸுகளுக்கு; பிரயோகமாகாது என்றும் ஆகையால் அந்த ஒரு காரணத்தைக்கொண்டு ஏலம் செல்லாது என்று வாதிக்கமுடியாது என்று தீர்மானம் செய்தனர்.

### விற்பனை செய்ய உத்தேசித்திருப்பதைக் குறித்து நோட்டீஸ்.

**112.** (1) யாதொரு பாக்கி யாருக்குச் சேரவேண்டியதாயிருக்கிறதோ அந்த நிலத்துக்குடையவர் இதற்கடுத்து முந்திய பிரிவின்படி கொடுக்கப்பட்ட அதிகாரங்களை உபயோகப்படுத்திக்கொள்ள உத்தேசிக்கிற பட்சத்திலே, அவர் பாக்கிதாரருக்குக் கலெக்டர் மூலமாக ஒரு எழுத்து மூலமான நோட்டீஸ் சேர்ப்பிக்கவேண்டும்; அந்த நோட்டீஸில் பாக்கிக்காகவும் வட்டிக்காகவும் செலவேதாவதிருந்தால் அதற்காகவும் எவ்வளவுதொகை சேரவேண்டுமென்பதையும் எந்த காலவரையறைக்காக அது சேரவேண்டுமென்பதையும் எந்தக் கைப்பற்று நிலத்தின் சம்பந்தமாக அது சேரவேண்டுமென்பதையும் காணவேண்டியதுமல்லாமல் நோட்டீஸ் சேர்ப்பித்த தேதி முதல் முப்பது தினத்துக்குள்ளாக ஷை பாக்கிதாரர் அந்தத் தொகையைச் செலுத்தாவிட்டாலும் விற்பனை செய்வதற்குரிய பாத்தியதையை ஆட்சேபித்துக் கலெக்டரிடத்தில் வியாஜ்ஜியம் தொடரா விட்டாலும் ஷை நோட்டிஸில் குறிப்பிட்டிருக்கும் மேலே கண்ட கைப்பற்று நிலமாவது அதைச் சேர்ந்த யாதொரு பாகமாவது விற்று விடப்படுமென்று (ஷை நோட்டீஸ் மூலமாக) அவருக்குத் தெரியப்படுத்தவும் வேண்டும். எந்த ரெவின்யு வருஷத்திற்காக மேலே கண்டபடி பாக்கி இருக்கிறதோ அந்த ரெவின்யு வருஷத்தின் முடிவிலிருந்து ஒரு வருஷகாலத்துக்குள்ளாக ஷை நோட்டீஸைக் கலெக்டரிடத்தில் ஒப்புவிக்க வேண்டும்.

ஷை நோட்டீஸைச் சேர்ப்பிப்பதற்கான கட்டணத் தோடுகூட அந்த நோட்டீஸுக்கு நான்கு பிரதிகளைக் கலெக்

டருக்கு அனுப்ப வேண்டும்; கலெக்டரானவர் - எழுத்து மூலமான டிமாண்டை சேர்ப்பிப்பதற்காக 78-வது பிரிவைச் சேர்ந்த (2) குறிப்பிட்ட உட்பிரிவில் நிபந்தனை கண்டிருக்கிற விதமாய் அவைகளை பாக்கிதாரருக்கு சேர்ப்பிக்கும்படி செய்யவேண்டும். மேலும் மேற்படி நோட்டிஸின் நகல் ஒன்றை பாக்கிதாரருக்கு தபால் மூலமாய் அனுப்ப வேண்டும்.

(2) கைப்பற்று நிலத்திலாவது அதன் பாகத்திலாவது சுதந்தரமுள்ளவராயிருந்து, அதன் விற்பனையினால் பாதிக்கப்படும் யாதொரு நபர்-விற்பனை செய்வதற்குரிய பாத்தியதையை ஆட்சேபித்து (1) குறிப்பிட்ட உட்பிரிவில் நிஷ்கரிஷை செய்யப்பட்டிருக்கும் கால அளவுக்குள் கலெக்டருக்கு முன் வியாஜ்ஜியம் தொடரலாம்.

ஒவ்வொரு விஷயத்திலும் ஷை நோட்டீசுக்குப் பிரதிகளை - அந்த நோட்டீஸ் எந்த நிலத்துக்குச் சம்பந்தப்படுகிறதோ அந்த நிலத்தின்மேலும் அந்த நிலம் எந்த கிராமத்திலிருக்கிறதோ அந்தக் கிராமத்திலும் யாவர்க்கும் தெரியும்படியான இடங்களில் ஒட்டிவைக்கவேண்டும்.

குறிப்புகள்.

இந்தப் பிரிவில் 1934-ம வருஷத்திய திருத்தத்தினல் (2)-வது உட் பிரிவு அமைக்கப்பட்டது. ஷை திருத்தத்திற்கு முன் இருந்த சட்டத்தின்கீழ் ஏற்பட்ட தீர்மானங்களின் பிரகாரம் யார் பாக்கிதாரரோ அவர் தவிர வேறே ஒருவரும் ஜப்தி செல்லாதென்று தாவா செய்வதற்கில்லையென்றிருந்தது. இப்பொழுது புதிய உட்பிரிவாகிய (2)-வது உட் பிரிவின் பிரகாரம் ஏலத்தினல் பாதிக்கப்படக்கூடிய எந்த நபராவது ஏலம் நடக்கக்கூடாதென்று தாவா செய்யலாம என்று ஏற்படுத்தப்பட்டது.

நிலத்துக்குடையவர் 112-வது பிரிவின் கீழ் நடவடிக்கைகளை ஆரம்பித்துவிட்டு பிறகு அவைகளை நடத்தும்படிக்கு மற்றவர்களுக்கு

தன்னுடைய பாத்தியதைகளை டிரான்ஸ்பர் செய்யலாம். அவர் தன்னுடைய பாத்தியதையை முதலில் டிரான்ஸ்பர் செய்து விட்டு பிறது இந்தப் பிரிவின் கீழ் எல நடவடிக்கைகள் எடுத்துக்கொள்வதற்கில்லை. நடவடிக்கைகளை தொடங்குவதென்பது கலெக்டருக்கு நோட்டீஸ் அனுப்பினாலே போதுமானது. ரயத்துகளுக்கு நோட்டீஸ் சேர்ந்த பிறகு தான் இந்தப் பிரிவின் கீழ் நடவடிக்கைகள் தொடக்கமாகும் என்பதில்லை.

ஒரு சுரோத்திரியம் அல்லது ஜமீனை பெற்றிருக்கும் ஒரு நிலஸ்வான்தாரானவர் சென்னை எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டின் 112-வது பிரிவின்கீழ் அந்த பிரிவில் சொல்லப்பட்டிருக்கிற பிரகாரம் சரியான காலத்தில் கலெக்டருக்கு அனுப்ப வேண்டிய நோட்டீசுகளை அனுப்பிவிடும் பக்ஷத்தில் அவர் அந்த பிரிவின்கீழ் நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டதாக ஏற்படும். ரயத்துகளுக்கு நோட்டீஸ் நேராக சேர்ந்த பிறகுதான் அந்த நடவடிக்கைகள் தொடங்குவதாக ஏற்படாது.

ஒரு நிலஸ்வான்தாரர் ஒரு சொத்தில் தனக்குள்ள பாத்தியதைகளை மற்றொருவருக்கு மாற்றிவிடுவதாக 31—3—1920-ல் ஒப்பந்தம் செய்து கொண்டார். அதே வருஷத்தில் ஜூன் மாதத்திலும் 15—8—1920-லும் அந்த சொத்து விஷயமாக தனக்கு சேரவேண்டிய ரெண்ட் பாக்கிகளை வசூலிப்பதற்காக 112-வது பிரிவின்கீழ் கலெக்டர் மூலமாக நோட்டீசுகளை அனுப்பச் செய்து நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டார். பிறகு 16—8—1920-ல் அவர் அந்த சொத்துக்களை விற்று விட்டார்.

இந்த சந்தர்ப்பங்களில் நிலசுவான்தாரரானவர் தாம் முதலில் ஆரம்பித்த நடவடிக்கைகளை தொடர்ந்து கொண்டு போவதற்கு உரிமை உள்ளவரா என்ற கேள்விக்குத்தில் அவர் அந்த நடவடிக்கைகளை ஆரம்பிக்கும் காலத்தில் அவைகளை தொடங்குவதற்கு உரிமைகளை பெற்றிருந்ததால் அந்த சொத்துக்களை விற்ற பிறகும் அந்த நடவடிக்கைகளை பூர்த்தி செய்வதற்கு உரிமையுள்ளவராவரென்று தீர்மானிக்கப்பட்டது. மீனாக்ஷி அம்மாள் vs. ரங்கசாமி அய்யர். அகில இந்தியா லா ஜர்னல் 2-ம் வால்யும் 282-வது பக்கம்.

ஒரு ஜமீனை அல்லது பூஸ்திதியை குத்தகைக்கு பெற்றிருப்பவர் தனது குத்தகை கால அளவு கடந்த பிறகு அதற்கு முன் ஏற்பட்ட குத்தகை பாக்கிக்காகவும் கூட இந்தப் பிரிவின் கீழ் ஜப்தி நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள நியாயமில்லையென்று 29 M. L. J. 505 என்னும் கேஸில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

இந்தப் பிரிவின்கீழ் நிலத்துக்குடையவர் நடவடிக்கைகளை எடுத்துக் கொள்வதற்கு முன் பட்டா டெண்டர் செய்திருந்தாலேபோதுமானது. பட்டாவை ரயத்து பெறவேண்டுமென்று தாவா செய்து தீரவேண்டும் என்பது அவசியமில்லை 1926 A. I. R. Mad. 756.

இந்த பிரிவின்கீழ் நடந்துள்ள ஏலங்கள் சரியல்லவென்று கூறி ஸிவில் கோர்ட்டுகளில் தாவாக்கள் செய்யலாமா? எவ்வாறிருந்தால் செய்யமுடியும்? அடியில்கண்ட கேஸுகளினால் இதன் விவரம் தெரியவரும்.

தன்னுடைய நிலத்துக்காக யாதொரு பாக்கியும் இராமலிருக்கையில் தன் நிலம் சட்ட விரோதமாக ஏலம் போடப்பட்டது என்றும் தமக்கு நிலம் திரும்ப கிடைக்கவேண்டும் என்றும் கூறி ரயத்து ஸிவில் கோர்ட்டில் தாவா செய்யலாம். அந்த தாவாவை ஸிவில் கோர்ட்டார் விசாரணை செய்வதற்கு தடையொன்றுமில்லை. 86 I. C. 727. ஏலம் நடப்பதற்கு முன் ரயததுக்கு நோட்டீஸ் தரப்படவேண்டும். அப்படி யாதொரு நோட்டீஸும் கொடுக்கப்படாமல் ஏலம் நடக்கும் பக்ஷத்தில் ஏலம் செல்லுபடியாகாது. அம்மாதிரி பரிஹாரம் வேண்டுமென்று ஸிவில் கோர்ட்டில் தாவா செய்ய நியாயம் உண்டு 43 M. L. J. 264. இன்னும் எவர் பேரில் பட்டா ரிஜிஸ்டராயிருக்கிறதோ அவருக்கு நோட்டீஸ் ஜாரி செய்யாமலே கைப்பற்று நிலததை ஏலத்துக்குக் கொண்டுவருவதும் சட்ட விரோதம். அவரிடமிருந்து கைப்பற்று நிலத்தை கிரயம் பெற்று அப்படி கிரயம் பெற்ற நிலத்துக்காக பட்டா பெற்றிருக்கிறவருககு நோட்டீஸ் சேரவேண்டும். இவர்களுக்கு நோட்டீஸ் இல்லாமல் ஏலம் நடந்திருப்பது செல்லாது என்று கூறி ஸிவில் கோர்ட்டில் தாவா செய்யலாம 1932 M. W. N. 1114.

112-வது பிரிவின் கீழ் ஏலம் போடப்படுவதற்காக கொடுக்கப்படும் நோட்டீஸில் உள்ள நில ஜாப்தாவும் 117-வது பிரிவின் கீழ்

பிறப்பிக்கப்படும் எல இஸ்தியாரில் சொல்லப்பட்டிருக்கும் நில ஜாப்தாவும் ஒன்றாக இருக்கவேண்டும். முதல் நோட்டீஸில் சில நிலங்களை காட்டிவிட்டு பிறகு பிறப்பிக்கப்பட்ட இஸ்தியாரில் அதிக நிலம் காட்டப்பட்டிருந்தால், இன்னும் முதல் நோட்டீஸில் சேராத மாகூலும் பிந்திய இஸ்தியாரில் சேர்க்கப்பட்டிருந்தால் மொத்த எலமே செல்லத்தக்கினதல்ல. இம்மாதிரி கூறி ஸிவில் கோர்ட்டில் தாவா செய்து பரிஹாரம் பெறலாம் 32 I. C 967.

வழக்கமாய் எவ்வளவு குத்தகை பாக்கி (ரென்ட்) சேரவேண்டுமோ அதைவிட அதிகமான தொகைக்கு நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளும் பக்ஷத்தில் பட்டாவில் கண்ட தொகையை செலுத்தின உடனேயே எல்லா நடவடிக்கைகளும் நின்று போய் விடுவதாகும் (77E பிரிவைப்பார்க்க).

ஒரு நிலத்துக்குடையவர் யாதொரு ரயத்து பாக்கியென்று ஒரு தொகை கேட்டு அதற்கு ரயத்தானவர் தன்னிடம் இவ்வளவு நிலம் தான் உண்டு, அதைவிட அதிகமான நிலம் கிடையாது, அதற்குத் தக்கபடி தான் கிஸ்தி அல்லது ரென்ட் செலுத்தப்படவேண்டும் என்று சொல்வாராகில் அத்தகைய பரிஹாரம் பெறுவதற்கு ரெவின்யு கோர்ட்டில் தான் தாவா செய்யவேண்டும். ஸிவில் கோர்ட்டில் தாவா தொடருவதற்கில்லை 1932 M. W. N. 1093.

ஐப்தி பேரில் ஆக்ஷேபம் செய்வதில் ரயத்தானவர் ஒரு வெறும் "மனு" தாக்கல் செய்தாலும் அதை பிராதாக பாவித்து தாவாவை நடத்தலாம் 1925 A. I. R. Mad. 1026.

சர்வே சார்ஜுகளை ரயத்தினிடமிருந்து பெறுவதற்காக செய்யப்படக்கூடிய தாவாவுக்கு சார்ஜு செலுத்தப்பட்ட தேதியிலிருந்து ஒரு வருஷத்தவணையுண்டு 38 M. L J. 377.

112-வது பிரிவின் கீழ் எல நடவடிக்கைகளை ஆக்ஷேபிப்பதாக ரயததுகள் ரெவின்யூ கோர்ட்டில் தாவா செய்வதற்கு ஸ்டாம்பு கிடையாது. ஆனால் அந்த தாவா விஷயமாய் சென்னை ஹைகோர்ட்டுக்கு அப்பீல் செய்யப்படுமானால் அப்பீல் மெமோராண்டத்தில் எவ்வளவு ஸ்டாம்பு ஒட்டப்படவேண்டும் என்ற கேள்வி கிளம்பின தில் வைத்தியலிங்க அய்யாசாமி அய்யர் VS. தஞ்சாவூர் டிஸ்டிரிக்ட் போர்டு பிரஸிடென்டு 57 M. L. J. 510 என்னும் கேஸில் அப்பீலில்

15 ரூபாய் ஸ்டாம்பு ஒட்டினால் போதுமானது என்று தீர்மானிக்கப் பட்டிருக்கிறது.

எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டுபடி ஒரு சம்மரிகேஸ் வாதி அதை நடத்தாததினால் தள்ளுபடியானால், அக்கேஸை மறுபடியும் பைலில் எடுத்துக்கொள்ள மனுபோடுவதற்கு லிமிடேஷன் ஆக்டுபிரகாரம் கேஸ் தள்ளுபடியான தேதியிலிருந்து ஒரு மாதம்தான் தவணை உண்டு. அகில இந்தியா லா ஜர்னல் பத்திரிகை 1-ம் வால்யூம் கேஸுகளின் குறிப்புகள் பக்கம். 7.

ஒரு நபர், ஒரு ஜமீன் கிராமத்தில் ஒரு ரிஜிஸ்டர் செய்யப் பட்ட பட்டாதாரிடமிருந்து சில நிலங்களை பராதீனம் பெற்றார். ஆனால் அவர் பட்டா ட்ரான்ஸ்பர் பெறவில்லை. இதற்கிடையில் நிலத்துக்குடையவரானவர் அந்த நிலங்களின் கிஸ்தி பாக்கிக்காக அவைகளை ஜப்தி செய்து அமுல் நடத்திக் கொண்டுவந்தார். பட்டாவில் எவ்வளவு நிலம் கண்டிருந்ததோ அதைவிட, உள்ள நிலங் கள் வாஸ்தவத்தில் குறைவாகவே இருந்தன. இது விஷயம் யாவ ராலும் ஒப்புக்கொள்ளப்பட்டது. இதையொட்டி நிலத்தை கிரயம் பெற்றவர் சிவில் கோர்ட்டில், பின் கண்டவாறு தீர்மானம் பெறுவதற்கு தாவா செய்தார். அதாவது நிலத்துக்குடையவரான வர் எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டின் 112-வது பிரிவின்கீழ் எடுத்துக் கொண்டிருந்த ஜப்தி நடவடிக்கைகள் வாஸ்தவத்தில் நிலங்கள் எவ் வளவு விஸ்தீரணம் உள்ளனவோ அவ்வளவு வரையிலும் தான் செல் லத்தக்கினதாகும் என்று ஒரு ஸ்தாபிதம் பெறுவதற்கும் பட்டாவில் கண்ட மொத்த தொகையையும் வசூல் செய்யாமல் இருக்கும்படி ஒரு தடை உத்திரவு பெறுவதற்கும் தாவா செய்தார். இதற்கு பிரதி வாதியான நிலத்துக்குடையவர், இந்த தாவா சிவில் கோர்ட்டி லேயே செய்யப்படுவதற்கில்லை யென்று ஆக்ஷேபம் செய்தார். இத்தகைய கேஸானது சிவில் கோர்ட்டில் தாக்கல் செய்யப்பட லாமா என்று கேள்வி வந்ததில் பின்வருமாறு தீர்மானிக்கப்பட் டது.

இத்தகைய கேஸுகளில் நாம் அனுசரிக்க வேண்டிய முறை என்னவென்றால், எந்த குறையின் விஷயமாக புகார் சொல்லப்படு கிறதோ அதைப்பற்றி ரிவின்யூ கோர்ட்டில் ஒரு தாவா அல்லது

மனுவின் மூலமாக சரியான பரிஹாரம் தேடிக்கொள்வதற்கு வாதிக்கு வசதி இருக்குமானல், வாதி அந்த பரிஹாரத்தையே தான் தேட வேண்டுமேயொழிய ஒரு ஸிவில் கோர்ட்டில் தாவா தொடரக் கூடாது. இந்த கேஸில் வாதியானவர், தன்னுடைய விக்கிரயமானது அங்கீகரிக்கப்படாவிட்டாலும், தாம் கிரயம் பெற்றவர் என்று சொல்லிக் கொண்டே தமக்கு எந்த விதமாக பட்டா பெறுவதற்கு பாத்தியதையுண்டோ அவ்விதமாக பட்டா வேணுமென்று 55-வது பிரிவின் கீழ் தாவா செய்வதற்கு உரிமை பெற்றிருந்தார். அல்லது வாதி 146-வது பிரிவின் கீழ் பட்டாவை தன் பேருக்கு மாற்ற வேண்டுமென்று மனு செய்து. அந்த மனுவில் ட்ரான்ஸ்பர் செய்ய வேண்டிய நபர் சேராவிட்டால் 146-வது பிரிவின் கீழ் சிவில் கோர்ட்டில் தாவா செய்து, சிவில் கோர்ட்டில் தன் பேருக்கு பட்டா மாறப்படவேண்டுமென்ற பெற்ற உத்திரவை ரிவின்யு கோர்ட்டில் ஆஜர் செய்திருக்கலாம்.

இந்த நடவடிக்கைகளில் எதையாவது எடுத்துக் கொள்ளாமல் வாதி நேராக ஸிவில் கோர்ட்டுக்கு வந்திருப்பதால் 42 M. L. J. 113 என்னும் தீர்மானத்தை யுத்தேசித்து சிவில் கோர்ட்டில் யாதொரு தாவாவையும் செய்வதற்கில்லை. அகில இந்தியா லா ஜர்னல் பத்திரிகை வால்யம் 4 கேஸுகளின் குறிப்புகள் பக்கம் 48.

சென்னை எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டின் 112-வது பிரிவின் கீழ் ரென்ட் பாக்கிக்காக கைப்பற்று நிலமானது எலம் போடப்படுவதற்குமுன் ரயத்துக்கு நோட்டீஸ் ஜாரி செய்யப்படுவதானது மிகவும் முக்கியமானதாகும். அந்த நோட்டிஸ் இராமற்போனல் விக்கிரயமே பயனற்றதாகப் போய்விடும்.

ஒரு ஜமீனில் ஒரு ரயத்தானவர் செலுத்த வேண்டிய கிஸ்தி பாக்கிக்காக அவருடைய கைப்பற்று நிலமானது எலம் போடப்படுவதற்கு மனு செய்யப்படுவதில், ரயத்துக்கு நோட்டீஸானது அனுப்பப்படாவிட்டால் அல்லது அனுப்பப்படுவதற்கு பிரயத்னப்படாமல் நிலத்தண்டை மாத்திரம் நோட்டீஸானது ஒட்டப்பட்டு இருக்குமானல், சட்டப்பிரகாரம் நோட்டிஸ் சேர்ப்பிக்கப்பட்டதாக கருதப்படாது. நோட்டீஸானது கேஸில் ஜாரியாகாமற் போனல்தான் நிலத்

தின் பேரில் ஒட்டி அம்பாதிரியாக ஜாரியாகப்பட வேண்டும் அகில இந்தியா லா ஜர்னல் 5-வது வால்யூம் 279-வது பக்கம்

சேர்ப்பித்த தேதியை நிலத்துக்குடையவருக்குத் தெரிவிப்பது.

**113.** (நோட்டீஸ்) சேர்ப்பித்த தேதியை நிலத்துக்குடையவருக்குத் தபால் மூலமாக உடனே தெரிவிக்க வேண்டும்.

விற்பனைக்காக விண்ணப்பம்.

**114.** 112-வது பிரிவின்படி அனுப்பப்பட்ட நோடீஸில் குறிப்பிட்டிருக்கும் தொகை செலுத்தப்படாமலும், விற்பனை செய்வதற்குரிய பாத்தியதையை ஆட்சேபித்து டிமாண்ட் நோடீஸ் சேர்ப்பிக்கப்பட்ட தேதியிலிருந்து முப்பது தினங்களுக்குள்ளாக கலெக்டரிடத்தில் வியாஜ்ஜியம் தொடரப்படாமலும் இருந்தால், அல்லது அப்படிப்பட்ட வியாஜ்ஜியம் தொடரப்பட்டிருந்து, பாக்கிதாரராயுள்ள ரயத்து டிமாண்ட் தொகை முழுவதையுமாவது அதில் ஒரு பாகத்தையாவது செலுத்துவதற்கு உள்ளாவாரென்று நிர்ணயிக்கப்பட்டிருந்தால் நிலத்துக்குடையவர் விற்பனைக்காக கலெக்டரிடத்தில் விண்ணப்பம் செய்து கொள்ளலாம்.

குறிப்புகள்.

இந்தப் பிரிவின் பதங்கள் 1934-ம் வருஷத்திய திருத்த சட்டத்தினால் சற்று மாற்றப்பட்டு அர்த்தம் நன்கு விளங்கும்படி செய்யப்பட்டுள்ளது.

இந்தப் பிரிவின் கீழ் பணத்தைச் செலுத்திவிட்டு அந்தத்தொகை அக்கிரமமாக வாங்கப்பட்டது என்று சொல்லி தாவா செய்யவேண்டியானால் பணம் செலுத்தின தேதியிலிருந்து மூன்று மாதத்திற்குள் தாவா தொடலாம் 1931 A. I. R. Mad. 609.

114-வது பிரிவின்படிக்கான விண்ணப்பத்துக்குக் கால நிர்ணயம்.

**115.** (1) யாதொரு வியாஜ்ஜியமும் கொண்டுவரப்பட்டிராத பட்சத்திலே, அப்படிப்பட்ட விண்ணப்பத்தை -

113-வது பிரிவின்படி சேர்ப்பித்த சங்கதியை தெரிவிப்பதற்காகக் கலெக்டர் தபாலனுப்பும் தினத்திலிருந்து நாற்பத்தைந்து தினத்திற்குள்ளாகச் செய்துகொள்ளவேண்டும்.

(2) யாதொரு வியாஜ்ஜியம் கொண்டுவந்திருந்து அது பாக்கிதாரருக்கு விரோதமாகப் பைசல் செய்யப்பட்டிருந்தாலும் வாபஸ் வாங்கிக்கொள்ளப்பட்டிருந்தாலும், அந்தப்படி பைசல் செய்யப்பட்ட தேதியிலிருந்து முப்பது தினத்துக்குள்ளாக அப்படிப்பட்ட விண்ணப்பத்தைச் செய்துகொள்ளவேண்டும்.

*விற்பனையைப்பற்றி விளம்பரம் பிரசித்தம் செய்வதும் விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தரை நியமிப்பதும்.*

**116.** (1) அப்படிப்பட்ட விண்ணப்பம் வரப்பெற்றுக்கொள்வதன்மேல், கலெக்டரானவர்-சம்பந்தப்பட்ட கட்சிக்காரர்களுக்கு நோடிஸ் கொடுக்கவேண்டும்; மேலும் அவர் - வந்திருக்கும்கட்சிக்காரர்கள் சொல்வதைக் கேட்ட பிறகு, எவ்வளவு விஸ்திரணமுள்ள நிலத்தை விற்கவேண்டுமென்பதையும், அந்த நிலத்தைத் தொகுதிகளாக விற்கவேண்டியதாயிருந்தால் அந்தத் தொகுதிகளையும், அந்தத் தொகுதிகளை இன்ன வரிசைக்கிரமப்படி விற்கவேண்டுமென்பதையும், ஒவ்வொரு தொகுதியின் உத்தேச மதிப்பையும் நிர்ணயித்து விற்பனை செய்வதற்கு உத்தரவு செய்து, விற்பனையை நடத்துவதற்கு ஒரு உத்தியோகஸ்தரை நியமித்து விற்பனையைப்பற்றிய பிரசித்த பத்திரிகையை எழுதி, அதற்குப் பிரஸ்தாப தாலூக்காவில் வழங்கும் சுதேச பாஷையிலுள்ள நகல்களைத் தம்முடைய தாலூக்கா ஆபிஸிலும் ஒட்டும்படி கட்டளையிடவேண்டும்:

ஆனால், நிலத்துக்குடையவரின் சம்மதத்தைப் பெற்றுக்கொண்டன்றி மற்றப்படி அப்படிப்பட்ட எந்தத் தொகு

தியும் ஒரு ரெவினியு புலத்துக்குக் குறைவாயிருக்கக் கூடாது.

(2) ஷை பிரசித்த பத்திரிகையில்—

(a) (i) விற்பனை செய்யப்படும் நிலத்தையும்,

(ii) அந்த நிலத்தைத் தொகுதிகளாக விற்கவேண்டிய தாயிருந்தால் அந்தத் தொகுதிகளையும்,

(iii) அந்தத் தொகுதிகளை எந்த வரிசைக்கிரமப்படி விற்கவேண்டுமென்பதையும்,

(iv) ஒவ்வொரு தொகுதியின் உத்தேச மதிப்பையும்,

(v) ஒவ்வொரு தொகுதியின் விஷயமாகவும் செலுத்தப்படத்தக்க குத்தகைத்தொகை அல்லது குத்தகைத்தொகை விதங்களையும்,

(b) 77-C பிரிவில்கண்ட நிபந்தனைகளுக்குட்பட்டு, 112-வது பிரிவின்படி கொடுக்கப்படும் எழுதியுள்ள நோடீஸில் குறிப்பிட்டிருக்கும் தொகையையும், அல்லது விற்பனை செய்வதற்குரிய பாத்தியதையை ஆட்சேபித்து 112-வது பிரிவைச் சேர்ந்த (1) குறிப்பிட்ட உட்பிரிவின்படியாவது (2) குறிப்பிட்ட உட்பிரிவின்படியாவது தொடரப்பட்ட யாதொரு வியாஜ்ஜியத்தில் மேலேகண்ட நோடீஸில் குறிப்பிட்டிருக்கும் தொகையில் ஒரு பாகத்தை மாத்திரமே ரயத்து செலுத்துவதற்கு உட்பட்டவராயிருக்கிறாரென்று கலெக்டர் நிர்ணயித்திருக்கிற விஷயத்திலே அந்த பாகத்தையும், ஒவ்வொரு விஷயத்திலும் செலவுகளையும், விற்பனை செய்வதற்கான உத்திரவின் தேதி வரையில் வட்டி ஏதாகிலும் சேர வேண்டியதாயிருந்தால் அதையும்,

(c) பிரஸ்தாப நிலம் எந்த வில்லங்கத்துக்கு உட்பட்டு விற்பனை செய்யப்படத்தக்கதாய் இருக்கிறதோ அந்த வில்லங்கத்தையும்,

(d) நிலத்தின் தன்மையையும் மதிப்பையும் குறித்து ஒரு முடிவுக்குவர கிரயதாரர் எந்த முக்கியமான சங்கதியைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்று கலெக்டர் கருதுகிறாரோ அப்படிப்பட்ட வேறே ஒவ்வொரு சங்கதியையும் விவரமாய்க் காணவேண்டும்.

குறிப்புகள்.

இந்தப் பிரிவு 1934-ம் வருஷத்திய திருத்த சட்டத்தினால் முற்றிலும் மாற்றியமைக்கப்பட்டது.

ஏல இஸ்திஹாரில் காணவேண்டியதைப்பற்றியும் விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தரைப்பற்றியும் விவரமாக சொல்லப்பட்டிருக்கிறது.

விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தரின் கடமை.

**117.** (1) விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தரானவர் விற்பனை நடத்தும் தேதியையும் காலத்தையும் இடத்தையும் உத்தரவு மூலமாய் நிஷ்கரிஷை செய்து, அந்த உத்தரவுக்குப் பிரஸ்தாப தாலூகாவில் வழங்கும் சுதேச பாஷையிலுள்ள நகல் ஒன்றைத் தாலூகா ஆபிஸில் ஒட்டும்படி கட்டளையிடவேண்டும்; மேலும், ஷெடி உத்தரவு, விற்பனையைப்பற்றி பிரசித்த பத்திரிகை ஆகிய இவைகளிலுள்ள சங்கதிகளை, கைப்பற்று நிலம் எந்த கிராமத்தில் இருக்கிறதோ அந்த கிராமத்தில் தண்டோரா போட்டுப் பிரசித்தப் செய்விக்கவேண்டும். அல்லாமலும், அவர் ஷெடி உத்தரவுக்கும் விற்பனையைப்பற்றிய பிரசித்த பத்திரிகைக்கும் நகல் ஒன்றை, கிராமச்சாவடியிலாவது, கிராமச்சாவடி இல்லாவிட்டால் அந்த கிராமத்தில் எல்லாருக்கும் நன்றாய்த் தெரியும்படியான ஒரு இடத்திலாவது ஒட்டவேண்டியது

மல்லாமல், தமது உத்தரவுக்கும் விற்பனையைப்பற்றிய பிரசித்த பத்திரிகைக்கும் நகல் ஒன்றை பாக்கிதாரருக்கு தபால் மூலமாய் அனுப்பவும் வேண்டும். ஷை உத்தரவுக்கும் பிரசித்த பத்திரிகைக்கும் நகல் ஒன்றை ஜில்லா கெஜெட்டில் பிரசித்தம் செய்யவேண்டும்.

(2) எந்தத் தேதியில் மேலேகண்டபடி தண்டோராப் போட்டுப் பிரசித்தம் செய்யப்பட்டதோ அந்தத்தேதியிலிருந்து குறைந்தது முப்பது தினம் கழிந்த பிறகுள்ள ஒரு தேதியை விற்பனைத் தேதியாக நிஷ்கரிஷை செய்ய வேண்டும்.

(3) விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தரானவர் (1) குறிப்பிட்ட உட்பிரிவின்படி நிஷ்கரிஷை செய்யப்பட்ட தேதியன்றைக்கு எந்தக் காரணத்தினாலாகிலும் விற்பனை நடத்தக்கூடாதவராயிருந்தால், அவர் - அப்போதைக்கப்போது ஷை விற்பனையை உத்தரவு மூலமாய் வேறொரு தினத்துக்குத் தள்ளிவைக்கலாம். (1) குறிப்பிட்ட உட்பிரிவின்படி பிறப்பிக்கப்பட்ட உத்தரவின் விஷயத்தில் எப்படியோ அப்படியே மேல்படி உத்தரவையும் கிராமத்தில் பிரசித்தம் செய்து ஒட்டவேண்டும். மேல்படி உத்தரவுக்கு நகல் ஒன்றை பாக்கிதாரரிடம் நேரில் ஒப்புவிக்கவாவது தபால் மூலமாய் அவருக்கு அனுப்பவாவது வேண்டும்.

குறிப்புகள்.

இந்தப் பிரிவும் 1934-ம் வருஷத்திய திருத்த சட்டத்தினல் முற்றிலும் மாற்றியமைக்கப்பட்டது.

பாக்கியாயிருக்கிற தொகை பூர்த்தியாய்ச் செலுத்தப்படாவிட்டால் விற்பனை.

**118.** விற்பனையைப்பற்றிய பிரசித்த பத்திரிகையில் கண்ட தொகை பூர்த்தியாய்ச் செலுத்தப்படாவிட்டால்

விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தர் - இதில் பின்னால் சொல்லியிருக்கிற விதமாக ஷை சொத்தையோ அந்த சொத்திலே டிமாண்டு தொகைக்கும் விற்பனைச் செலவுகள் முதலிய செலவுகளுக்கும் ஈடுசெய்வதற்கு அவசியமாகும் யாதொரு பாகத்தையோ விற்க ஆரம்பிக்கவேண்டும்.

### விற்பனை நடத்தவேண்டிய இடம்.

**119.** கைப்பற்று நிலம் எந்தக் கிராமத்திலிருக்கிறதோ அந்தக் கிராமத்திலாவது அதற்கு மிகவும் அருகாமையில் ஜனங்கள் விசேஷமாய் வந்து சேரக்கூடிய இடத்தில் ஷை சொத்து வெகுசாய் நல்ல விலைக்கு விற்கலாமென்று விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தர் அபிப்பிராயப்படுகிற பட்சத்திலே அவ்விடத்திலாவது சாதாரணமாய் விற்பனையை நடத்தவேண்டும்.

### விற்பனை செய்யும்விதம்.

**120.** சொத்தை-விற்பனையைப் பற்றிய பிரசித்த பத்திரிகையில் குறிப்பிடப்படக்கூடியபடி ஒரு தொகுதியாகவோ ஒன்றுக்கு மேற்பட்ட தொகுதிகளாகவோ செய்து பகிரங்கமான ஏலத்தில் விற்கவேண்டும்; டிமாண்ட்தொகையும், அது சம்பந்தமான செலவுகளும் விற்பனைக்குண்டான செலவுகளும் ஷை சொத்தின் ஒரு பாகத்தை விற்பதனாலே ஈடு செய்யப்படும் பட்சத்தில் மிகுதியாயுள்ள பாகத்தை விற்பனை செய்வதை உடனே நிறுத்திவிடவேண்டும்.

### குறிப்புகள்.

ஏலத்திற்கு கொண்டு வரப்பட்ட நிலமானது எவ்வளவு குத்தகை பாக்கியோ அதைவிட மிகவும் அதிக மதிப்புள்ளதாக இருந்ததினாலேயே நிலத்துக்குடையவர் மோசமாக நடந்து கொண்டதாக ஏற்படாது 1927 A. I. R Mad. 1141.

கைப்பற்று நிலத்தை ஏலத்தில் கேட்கவும் தமக்குச் சேர வேண்டிய தொகைகளை எதிர்கட்டிக்கொள்ளவும் நிலத்துக்குடையவருக்குள்ள பாத்தியதை.

**120**-A. (1) குத்தகைத் தொகை பாக்கிக்காக யாதொரு ரயத்தின் கைப்பற்று நிலத்தையாகிலும் அதன் பாகத்தையாகிலும் விற்பனைக்குக் கொண்டுவந்திருக்கும் நிலத்துக்குடையவர் அதை ஏலத்தில் கேட்கலாம் அல்லது கிரயத்துக்கு வாங்கலாம்.

(2) நிலத்துக்குடையவர் கிரயத்துக்கு வாங்குகிற பட்சத்திலே, கிரயத்தொகையையும் விற்பனைப் பிரசித்த பத்திரிகையில் கண்டபடி அவருக்குச் சேரவேண்டிய தொகையையும் ஒன்றுக்கொன்று எதிர்கட்டலாம்.

குறிப்புகள்.

பழைய 130-வது பிரிவானது 120-A பிரிவாக பெயர்த்து அமைக்கப்பட்டது. இதில் (2)-வது உட்பிரிவு புதியதாக சேர்க்கப்பட்டது. இதனால் நிலத்துக்குடையவர் நிலத்தை ஏலத்தில் எடுத்து தனது பாக்கிக்கு முஜரா வைத்துக் கொள்ளலாம் என சட்டம் ஏற்படுத்தப்பட்டது.

விற்பனையைத் தள்ளி வைப்பது.

**121.** சொத்தை விற்பனைக்கு விட்டதன்மேல் விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தர் அபிப்பிராயப்படி சரியான விலைவாராமற் போய், பாக்கிதாரராவது அவர் சார்பாகப் பிரவர்த்திக்க அதிகாரம் கொடுக்கப்பெற்றிருக்கிற யாதொருவராவது நிலத்துக்குடையவராவது மறுநாள் வரையிலும் விற்பனையைத் தள்ளிவைக்க வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்துகொண்டால், விற்பனையை அந்தத்தினம் வரையிலும் தள்ளிவைத்து அன்றைக்கு மேற்படி சொத்துக்கு என்ன விலை வந்தாலும் விற்பனையை முடித்துவிடவேண்டும்.

*விற்பனையை நிறுத்தி விடுவது.*

**122.** நிலத்துக்குடையவர் விற்பனைக்காகத் தாம் செய்துகொண்ட விண்ணப்பத்தை வாபஸ் வாங்கிக்கொண்டாலும், (வசூலுக்காகப் பிரிக்கப்பட்ட) தொகுதியின் விற்பனை முடிவாவதற்கு முன்னே, பிரகடனத்தில் கண்ட தொகையும் அது சம்பந்தமாக பிடித்த செலவுகளும் விற்பனைக்குண்டான செலவுகளும் விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தரிடத்தில் கொடுப்பதாகக்காட்டப்பட்டாலும், அந்தத் தொகை கலெக்டரிடத்தில் செலுத்தப்பட்டிருக்கிறதென்பதற்கு மேற்படி உத்தியோகஸ்தருக்குத் திருப்திகரமாக ருஜு காட்டப்பட்டாலும் அப்படிப்பட்ட ஒவ்வொரு விற்பனையையும் நிறுத்திவிடவேண்டும். விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தர் கொடுக்கக்காட்டப்பட்ட தொகையை பெற்றுக்கொண்டு அதை உடனே கலெக்டருக்கு அனுப்பி விடவேண்டும்.

*கிரயத்தொகையைச் செலுத்துவதும் விற்பனையைப்பற்றி அறிக்கையிடுவதும்.*

**123.** (1) ஒவ்வொரு தொகுதியின் விலையையுமாவது நிலத்துக்குடையவர் கிரயகாரராய் இருந்தால், 120-A பிரிவைச் சேர்ந்த (2) குறிப்பிட்ட உட்பிரிவின்படி அவர் எதிர்கட்டிக்கொள்ளும் யாதொரு தொகையை விலையிலிருந்து கழித்துக்கொண்ட பிறகு மீதியாயிருக்கும் தொகையாயினும் 127-வது பிரிவைச் சேர்ந்த (1) குறிப்பிட்ட உட்பிரிவில் கண்ட (b) அடையாளமிட்ட பகுதியின்படி அவரால் செலுத்தப்படத்தக்க தாகாயினும் இவைகளில் எது அதிகமாய் இருக்கிறதோ அதையாவது விற்பனைக் காலத்திலாகிலும் விற்பனைக்குப் பிறகு எவ்வளவு

சீக்கிரத்தில் செலுத்தவேண்டுமென்று விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தர் கட்டளையிடக்கூடுமோ அவ்வளவு சீக்கிரத்திலாகிலும் ஷை உத்தியோகஸ்தரிடத்தில் செலுத்த வேண்டும்.

(2) அந்தப்படி செலுத்தத் தவறிப்போகும் பட்சத்திலே, சொத்தை மறுபடியும் ஏலத்தில் விட்டு விற்பனை செய்யவேண்டும்; அப்படிப்பட்ட மறுவிற்பனையில் விலைக் குறைவு ஏதாகிலும் நேரிடும் பட்சத்தில், அதைக் குறித்தும், அப்படிப்பட்ட மறு விற்பனை சம்பந்தமாய்ச் செலுத்தப்படத்தக்க தரகு உட்பட அந்த மறு விற்பனையினால் உண்டான சகல செலவுகளைக் குறித்தும் விற்பனை நடத்தும் ஷை உத்தியோகஸ்தர் கலெக்டருக்கு ஸெர்டிபை செய்ய வேண்டும்; மேலும், கலெக்டரானவர் நிலத்துக்குடையவராவது பாக்கிதாரராவது விண்ணப்பம் செய்துகொள்வதன்மேலும், (சொத்தை ஏலத்தில் எடுத்து) கிரயத்தொகை செலுத்தத்தவறிப்போனவருக்கு நோடிஸ் கொடுத்து அவருக்கு ஆட்சேபனைகள் ஏதாவதுமிருந்தால் அவைகளைக் கேட்ட பிறகும், அவரிடமிருந்து வசூலிக்கப்படத்தக்க தொகையை ஸெர்டிபை செய்யலாம்; அல்லாமலும் மேலேகண்டபடி கலெக்டரால் ஸெர்டிபை செய்யப்பட்ட தொகையானது - நிலத்துக்குடையவராவது பாக்கிதாரராவது கேட்டுக் கொள்வதன்மேல், அந்தத் தொகைக்காக கலெக்டர் டிக்ரி பிறப்பித்திருந்தால் எப்படியோ அப்படியே (சொத்தை ஏலத்தில் எடுத்து) கிரயத்தொகை செலுத்தத் தவறிப்போனவரிடமிருந்து வசூல் செய்யப்படத்தக்கதாகும்.

(சொத்தை ஏலத்தில் எடுத்து) கிரயத்தொகை செலுத்தத் தவறிப்போனவரிடமிருந்து இந்த உட்பிரிவின்படி

வசூல் செய்யப்பட்ட யாதொரு தொகையானது விற்பனையினால் கிடைத்த தொகையாயிருந்தால் எப்படியோ அப்படியே, அது விஷயத்தில் 127-வது பிரிவின்படி பிரவர்த்திக்க வேண்டும்.

(3) (1) அடையாளமிட்ட உட்பிரிவில் குறிப்பிட்டிருக்கும் தொகை செலுத்தப்பட்டான உடனே, அடுத்துப் பின்வரும் டிஸ்டிரிக்ட் கெஜெட்டின் வெளியீட்டில் விளம்பரம் ஒன்றைப் பிரசுரம் செய்யவேண்டும்; அந்த விளம்பரத்தில்—

(i) விற்பனைத் தேதியைக் குறித்தும்,

(ii) விற்பனை செய்யப்பட்ட நிலங்களைக் குறித்தும்,

(iii) அவை எந்த விலைக்கு விற்கப்பட்டனவோ அந்த விலையைக்குறித்தும்,

(iv) சம்பந்தப்பட்ட கிரயதாரர், பாக்கிதாரர், நிலத்துக்குடையவர் ஆகிய இவர்களின் பெயர்களைக் குறித்தும் விவரங்கள் கண்டிருக்கவேண்டும்.

குறிப்புகள்.

இப்பிரிவானது 1934-ம் வருஷத்திய திருத்தத்தினால் முற்றிலும் மாற்றியமைக்கப்பட்டது. கடைசியில் ஒரு அம்சம் சேர்த்திருப்பது கவனிக்கப்படத்தக்கதாகும். அதாவது ஏலம் நடந்ததைப்பற்றி டிஸ்டிரிக்ட் கெஜட்டில் பிரசுமாகவேண்டுமென்பது. இது விஷயமாய் காலஞ் சென்ற B. முனுசாமி நாயுடு அவர்கள் கொண்டு வந்த பிரேரணை அங்கீகரிக்கப்பட்டு, (3)-வது உட்பிரிவு சட்டமாக ஏற்படுத்தப்பட்டது. இதன் காரணமென்னவென்றால், ஏலமானது ஸ்திரப்படுத்தப்படுவதற்கு முன்னேயாவது நிலத்தில் சம்பந்தப்பட்ட நபர்கள் ஏல விஷயத்தைப்பற்றி அறிந்தால் பணத்தை செலுத்த முன் வருவார்கள் என்பது.

*கிரயத்தொகையைக் கலெக்டருக்கு அனுப்புவதும் விக்கிரய ஸெர்டிபிகேட் கொடுப்பதும்.*

**124.** (1) விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தர் 123-வது பிரிவைச் சேர்ந்த (1) குறிப்பிட்ட உட்பிரிவின்படி பெற்றுக்கொண்டிருக்கும் சகல தொகைகளையும் உடனே கலெக்டருக்கு அனுப்பிவிடவேண்டும்.

(2) 123-வது பிரிவைச் சேர்ந்த (3) குறிப்பிட்ட உட்பிரிவின்படிக்கான விளம்பரத்தில் குறிப்பிட்டிருக்கிறபடியுள்ள விற்பனைத் தேதியிலிருந்து நாற்பத்தைந்து தினங்கள் கழிந்து போவதன்மேல், கலெக்டரானவர் 131-வது பிரிவின்படி விற்பனையை ரத்து செய்யும்படி விண்ணப்பம் ஏதுவும் செய்து கொள்ளப்படாமலிருந்தாலும், அப்படிப்பட்ட விண்ணப்பம் செய்துகொள்ளப்பட்டுத் தள்ளிவிடப்பட்டிருந்தாலும், விற்கப்பட்ட சொத்தையும் கிரயதாரருடைய பெயரையும் விற்பனைத் தேதியையும் எந்த விலைக்கு மேற்படி சொத்து வாங்கப்பட்டதோ அந்த விலையையும் கண்டு ஒரு விக்கிரய ஸெர்டிபிகேட்டைக் கிரயதாரருக்குக் கொடுக்க வேண்டியதுமல்லாமல், விற்கப்பட்ட சொத்தை அவருடைய சுவாதீனப்படுத்தவும் வேண்டும்.

(3) மேலும், கலெக்டரானவர் மேல்படி ஸெர்டிபிகேட்டுக்கு நகல் ஒன்றை, எந்த கிராமத்தில் நிலங்கள் இருக்கின்றனவோ அந்த கிராமத்தின் கிராமச்சாவடியிலாவது, கிராமச்சாவடி ஏதுவும் இராவிட்டால் மேற்படி கிராமத்தில் எல்லார்க்கும் நன்றாய்த் தெரியும்படியான ஒரு இடத்திலாவது ஒட்டும்படி செய்யவேண்டும். மேற்படி ஸெர்டிபிகேட்டுக்கு நகல் ஒன்றை டிஸ்டிரிக்ட் கெஜட்டிலும் பிரசித்தம் செய்யவேண்டும்.

குறிப்புகள்.

இப்பிரிவில் 1934-ம் வருஷத்தில் திருத்தத்தினல் 3-வது உட்பிரிவானது சேர்க்கப்பட்டது. இன்னும் ஏல சர்ட்டிபிகேட் பெறுவதற்கான கால தவணையானது 30 நாளாக இருந்ததிலிருந்து 45 நாளாக மாற்றப்பட்டது. இதன் முக்கியநோக்கம் ஏலத்தினல் பாதிக்கப்பட்ட நபர்கள் வந்து பணத்தைச் செலுத்தி ஏலத்தை ரத்து செய்யலாம் என்பது.

சிக்குச்சிலுகுகள்.

**125.** யாதொரு கைப்பற்று நிலத்துக்காகிலும் அதைச்சேர்ந்த யாதொரு பாகத்துக்காகிலும் சேரவேண்டிய பாக்கிக்காக அந்தக்கைப்பற்று நிலத்தையாவது அதன் பாகத்தையாவது விற்பனை செய்யும்போது, அதை வாங்குகிறவர் விற்பனை தேதிக்கு முன் கைப்பற்று நிலத்தின் விஷயமாய்ச் சேரவேண்டிய குத்தகைத்தொகை பாக்கிக்காயினும் அப்படிப்பட்ட பாக்கியின் மேல் வட்டிக்காயினும் யாதொரு டிக்கிரி பெற்றிருந்தாலும்சரி இராவிட்டாலும் சரி அப்படிப்பட்ட யாதொரு குத்தகைத்தொகையையோ வட்டியையோ செலுத்துவதற்கு உட்படாமல் நிலத்துக்குடையவருடைய ரெஜிஸ்டராயுள்ள எழுத்துமூலமான அனுமதியின்மேல் அதில் ரயத்துக்கு உண்டாக்கியிருக்கிற யாதொரு பாத்தியதை அல்லது சுதந்தரத்துக்குட்பட்டும், இந்த ஆக்ட் ஜாரியாவதற்கு முன்னே உண்டாயிருக்கக்கூடிய ஏதாவது சிக்குச்சிலுகுகளுக்குட்பட்டும் எடுத்துக்கொள்ளவேண்டும்.

குறிப்புகள்

எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டின் கீழ் நடத்தப்படும் ஏலங்களில் கிரயம் பெற்றவர்கள் யாதொரு தகாதாக்களும் இல்லாமலே சொத்தைப் பெறுவார்கள். ஆனல் ஒரு ரெண்ட் கோர்ட்டினுடைய டிக்கிரியானது ஒரு வழியில் கோர்ட்டுக்கு மாற்றப்பட்டு அந்த கோர்ட்டானது சொத்தை ஏலத்துக்குக் கொண்டு வந்தால் இப்பிரிவின் அம

ச்சங்கள் பிரயோகப்படாது. அதாவது ஐப்திக்கு முன் ஏதாவது தகராக்கள் இருந்தால் அவைகளுக்குட்பட்டே கிரயம் பெறுகிறவர்கள் சொத்தை அடைவார்கள் 11 L. W. 466. 51 Mad. 632. என்னும் கேஸையும் பார்க்க.

இப்பொழுது மற்றொரு விஷயமும் ஏற்பட்டுள்ளது. அதாவது ஏலம் போடப்பட்ட நிலத்திற்காக அதற்கு முன் ஏதாவது பாக்கியிருந்தால் அல்லது டிக்ரி ஏற்பட்டிருந்தால் அதற்கு உட்படாமலே கிரயம் பெற்றவர் சொத்தை அனுபவிப்பவராவர் என்று ஒரு அம்சம் சேர்க்கப்பட்டிருக்கிறது.

விற்பனைக்குக் கொண்டுவரவேண்டிய கைப்பற்று நிலத்தின் அளவு.

**126** நிலத்துக்குடையவர் விற்பனைக்குக் கொண்டு வந்திருக்கிற கைப்பற்று நிலத்தின் பாகமானது சேரவேண்டிய பாக்கித் தொகைக்கும் செலவுகளுக்கும் மதிப்பில் கூடிய மட்டில் ஏறக்குறைய சரியாயிருக்கவேண்டும்.

விற்றுவந்த பணத்தை ஒருவகை செய்வதற்கான விதிகள்.

**127.** (1) (a) இந்த ஆக்டின்படி யாதொரு கைப்பற்று நிலத்தையாவது யாதொரு கைப்பற்று நிலத்தின் ஒரு பாகத்தையாவது ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் விற்பனை செய்ததனால் கிடைத்த தொகையிலிருந்து, கலெக்டரானவர் தாகுக்காக ரூபாய் ஒன்றுக்கு ஒரு அணுவுக்கு மேற்படாத வீதப்படி தொகை கழித்துக்கொள்ளவேண்டும்.

(b) நிலத்துக்குடையவர் சொத்தைக் கிரயத்துக்கு வாங்கி தமக்குச் சேரவேண்டிய ஏதேனும் தொகையைக் கிரயத்தொகையோடு எதிர்க்கட்டினால், அவர் (a) அடையாளமிட்ட பகுதியில் குறிப்பிட்டிருக்கிற வீதப்படி தாகுக்காக விதிக்கப்படத்தக்க தொகையைச் செலுத்த வேண்டும்.

(c) காருக்காக கழித்துக் கொள்ளப்பட்ட அல்லது செலுத்தப்பட்ட தொகையானது விற்பனைச் செலவுகள் முதலிய செலவுகளின் பாகமாகும்.

(2) விற்பனையினால் கிடைத்த பணத்தில் மீதி நிற்கும் தொகையை ஒருவகை செய்கையிலே 120–A பிரிவைச்சேர்ந்த (2) குறிப்பிட்ட உட்பிரிவில் கண்ட நிபந்தனைகளுக்குட்பட்டு அடியில் கண்ட விதிகளை அனுசரிக்க வேண்டும். அவைகளென்ன வென்றால்—

(a) கைப்பற்று நிலத்தை விற்பனைக்குக் கொண்டு வந்ததற்காக நிலத்துக்குடையவருக்குப் பிடித்திருக்கும் செலவுகளை அவருக்கு முதலில் கொடுத்துவிட வேண்டும்;

(b) பிறகு, தொகை செலுத்தவேண்டிய தேதிவரையில் பாக்கிக்காகவும் வட்டிக்காகவும் நிலத்துக்குடையவருக்குச் சேரவேண்டியதாயிருக்கும் தொகையை அவருக்குக் கொடுத்துவிட வேண்டும்;

(c) இந்த தொகைகளைக் கொடுத்துவிட்ட பிறகு மிகுதியிருந்தால், 112 வது பிரிவின்படி கொடுக்கப்பட்ட நோட்டீஸின் தேதி முதல் விற்பனை தேதிவரையில் ஷை கைப்பற்று நிலத்தின் விஷயமாகச் சேரவேண்டியதாயிருக்கும் குத்தகைத் தொகை பாக்கியையும் வட்டியையும் மேலே கண்ட மிகுதிப் பணத்திலிருந்து அந்த நிலத்துக்குடையவருக்குக் கொடுத்து விடவேண்டும்; அந்தப்படி செலுத்தப்பட்ட தொகைக்காகப் பாக்கிதாரர் விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தரிடமிருந்து ஒரு ரசீது பெற்றுக்கொள்ள வேண்டும்; இந்தப் பகுதியின்படி யாதொரு தொகையைப் பெறுவதற்காக நிலத்துக்குடையவருக்குள்ள சுதந்தரத்தைப்பற்றி பாக்

கிதாரர் ஆட்சேபித்தால், கலெக்டர் அடி ஆட்சேபணையை ஒரு வியாஜ்ஜியமாக ரெஜிஸ்டர் செய்து அதைத் தீர்மானிக்க ஆரம்பிக்க வேண்டும்;

ஆனால், 124-வது பிரிவைச்சேர்ந்த (2) குறிப்பிட்ட உட்பிரிவின்படி விக்கிரய சர்ட்டிபிகேட் ஒன்று கொடுக்கப்பட்டாகிற வரையிலே (a) (b) (c) குறிப்பிட்ட பகுதிகளின்படி நிலத்துக்குடையவருக்கு எந்தத் தொகையையும் கொடுக்கக்கூடாது.

(d) (c) குறிப்பிட்ட பகுதியிற்கண்ட தொகை செலுத்தின பிறகு மிகுதி (ஏதாவது) இருந்தால் அதை அடியிற் கண்டதற்குமாறாக யாதொரு ஸிவில் கோர்ட்டார் பிறப்பித்திருக்கும் உத்தரவுக்குட்பட்டு, பாக்கிதாரர் விண்ணப்பம் செய்துகொள்வதன்மேல், விற்பனைத் தேதி முதல் மூன்று மாதகாலம் கழிந்த பிறகு அவருக்குக் கொடுத்துவிடவேண்டும்.

குறிப்புகள்.

இந்தப் பிரிவில் 1-வது உட்பிரிவானது 1934-ம் வருஷத்திய திருத்தத்தினால் புதியதாக சேர்க்கப்பட்டது. இப்பொழுது பௌண்டேஜ் என்றும் ஒரு கட்டணம் புதியதாக வசூலிக்கப்படத்தக்கதாகிறது. இதற்கு முன் அந்த அம்சமே இராமலிருந்தது.

கைப்பற்று நிலத்தில் பாத்தியதையுள்ள நபர் பாக்கியாகிற பணத்தை செலுத்துவதன்மேல் அவருக்குள்ள சுதந்தரம்.

**128.** (1) யாதொரு கைப்பற்று நிலத்தையாவது அதன் பாகத்தையாவது விற்பதற்காகப் பிரசித்தஞ் செய்திருந்தா, விற்பனையினால் பாதிக்கப்படக்கூடிய பாத்தியதையை அதில் அடைந்திருக்கிற யாதொரு நபர் விற்பனையைத்

தடுக்கும் பொருட்டு, 122-வது பிரிவின்படி கட்டவேண்டிய தொகையைக் கலெக்டரிடத்திலாகிலும் விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தரிடத்திலாகிலும் செலுத்தினல்,—

(a) அந்தப்படி அவர் செலுத்தியிருக்கிற தொகையை வருஷம் ஒன்றுக்கு நூற்றுக்கு ஆறு விழுக்காடு வட்டி கிடைக்கக்கூடியதாயும் கைப்பற்று நிலத்திலிருந்து செலுத்த வேண்டியதாயுமுள்ள கடனாகக்கொள்ளவேண்டும்; மேலும்,

(b) ஷை கடனானது குத்தகைத்தொகை பாக்கி விஷயமாய் ஏற்படும் செலவும் இந்தப் பிரிவின்படி முன்னதாகச் செலுத்த வேண்டிய வேறே யாதொரு செலவும் நீங்கலாக, ஷை கைப்பற்று நிலத்தின் மேல் ஏற்படும் மற்ற செலவுகளைக்காட்டிலும் முன்னதாய்ச் செலுத்தவேண்டியதாகும்.

(2) அப்படிப்பட்ட யாதொரு நபர் அடைவதற்குச் சுதந்தரமுள்ளவராயிருக்கும் வேறே யாதொரு பரிகாரத்துக்கு இந்தப்பிரிவிலுள்ள எதனாலும் பாதகமுண்டாக மாட்டாது.

குறிப்புகள்.

எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்ட் (பூஸ்திதிகளைக் குறித்த சட்டம்)டின் 123-வது பிரிவின் பிரகாரம் ஒருவர் கைப்பற்றிலுள்ள நிலத்தை அதற்காக செலுத்த வேண்டிய கிஸ்தியை செலுத்தாததினால் ஏலம் போவதற்காக ஏல நடவடிக்கைகள் நடக்குங்காலத்தில் அந்த ஏலத்தை நடத்தவொட்டாமலிருப்பதற்காக அந்த பூமியில் பாத்தியதை பெற்ற ஒருவர் கலெக்டரிடமாவது அல்லது அந்த நிலத்தை ஏலம் போடுபவரிடமாவது பணத்தைச் செலுத்திவிடும் பக்ஷத்தில் அந்த தொகையானது அந்த சொத்தின் பேரில் ஒரு முதற் பொறுப்பாக கவனிக்கப்படும் என்று உள்ளது. அதாவது அதே நிலவிஷயமாக ஏதாவது ரெண்ட் பாக்கியிருந்தாலொழிய அல்லது ஷை 128-வது பிரிவின் கீழ் வேறே ஒரு சார்ஜ் ஏற்பட்டிருந்தாலொழிய அந்த

தொகைக்கு முதல் முதலாவதாக ஜவாப் சொல்லிவிட்டுதான் வேறொரு தொகை அல்லது பொறுப்புக்கு உத்தரம் சொல்லவேண்டும் என்று அர்த்தமாகும். இன்னும் அந்த பிரிவில் அத்தகைய தொகைக்கு வட்டியும் உண்டு என்று சொல்லப்பட்டுள்ளது. ஆனால் இந்த பிரிவானது ஒரு சொத்தின் சகபாகஸ்தர்களுக்கு பிரயோகப்படுமா என்பது மிகவும் முக்கியமான ஒரு கேள்வியாக ஒரு கேஸில் கிளம்பினது. அதாவது, ஒரு நிலத்தை கைப்பற்றில் வைத்துக்கொண்டிருக்கிற சகபாகஸ்தர்களுக்குள் ஒருவர் அந்த நிலத்துக்காக ரெண்ட் பாக்கி சேர்ப்பிக்க வேண்டியிருந்து அதை செலுத்தாததினால் ஒரு டிக்கிரி செய்யப்பட்டது. அந்த டிக்கிரியை அமுல் நடத்தி வாதி தம்மை அரஸ்டு செய்வாரோ என்று பயந்து அந்த தொகையை செலுத்தி விட்டார். பிறகு அவர் தன்னுடைய பாகாசாரம் தமக்கென்று சேரவேண்டிய தொகைக்காக மற்றொருவர் பேரில் தாவா செய்ததில் அந்த தாவாவில் அவர் தாம் பிரதிவாதிக்காகவும் சேர்ந்து செலுத்தின தொகைக்காக அந்த சொத்துகளின் பேரில் ஒரு முதற்பொறுப்பு ஏற்படும்படி கேட்கலாமா, அதாவது அவர் பணம் செலுத்தின காலத்தில் அந்த சொத்தானது எவ்விதமான தகாதாக்களுக்கு உட்பட்டிருந்த போதிலும் தன்னுடைய தொகைக்காக ஒரு முதற்பொறுப்பு ஏற்படவேண்டுமென்று கேட்கலாமா என்று ஒரு கேள்வி வந்தது. இந்த சந்தர்ப்பங்களில் ஹைக்கோர்ட்டார் அவர்கள், சென்னை எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டின், 5, 128 இப்பிரிவுகளையும் டிரான்ஸ்பர் ஆப் பிராபர்ட்டி ஆக்டின் 82, 100 இப்பிரிவுகளையும் கவனித்து அம்மாதிரி யாதொரு முதற் பொறுப்பும் ஏற்படாது என்று தீர்மானித்துள்ளனர். அகில இந்தியா லா ஜர்னல் பத்திரிகை 3-வது வால்யூம் 267-வது பக்கம்.

இந்தப் பிரிவானது யாதொரு கைப்பற்று நிலம் ஏலத்துக்குக் கொண்டுவரப்பட்ட பிறகு அதை தவிர்ப்பதற்காக நிலத்தில் அக்கறையுள்ளவர் பணம் செலுத்தும் சந்தர்ப்பங்களில் மாத்திரம் பிரயோகமாகுமே யொழிய மற்ற சந்தர்ப்பங்களில் பிரயோகமாகாது. உதாரணமாக ஒருவர் தனது சகபாகஸ்தர் செலுத்த வேண்டிய தொகைக்காக பயமுறுத்தப்பட்டதின் பேரில் தொகையை செலுத்தி

விட்டு அதன் பேரில் இந்தப்பிரிவின் கீழ் சார்ஜ் கொண்டாடுவதற்கில்லை. 51 Mad. 632.

*ரயத்துக்காகச் செலுத்தப்பட்ட தொகையை குத்தகைத்தொகையிலிருந்து கழித்துக்கொள்ள பாயக்காரி அல்லது கீழ்ப் பாயக்காரிக்குள்ள பாத்தியதை.*

**129.** பாக்கிதாராயுள்ள ஒரு ரயத்தின் கைப்பற்று நிலத்தையாகிலும் அதன் பாகத்தையாகிலும் விற்கப்போகிறதாகப் பிரசித்தஞ் செய்திருந்து, விற்பனையினால் பாதிக்கப்படக்கூடிய பாத்தியதையுடையவராய் மேற்படி நிலத்தைச் சேர்ந்த யாதொரு பாயக்காரியோ கீழ்ப்பாயக்காரியோ மேற்படி விற்பனையைத் தடுக்கும் பொருட்டு 122-வது பிரிவின்படி கட்டவேண்டிய தொகையைக் கலெக்டரிடத்திலாயினும் விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தரிடத்திலாயினும் செலுத்தினால், அவர் தமக்குச் சட்டப்படி யேற்பட்டிருக்கும் வேறே யாதொரு பரிகாரத்தோடுகூட, அப்படி செலுத்தின தொகை முழுவதையுமாவது அதில் யாதொரு பாகத்தையாவது தமக்கடுத்து மேற்பட்டுள்ள நிலக்காரருக்குத் தாம் செலுத்தவேண்டிய யாதொரு குத்தகைத் தொகையிலிருந்து கழித்துக் கொள்ளலாம்; அவ்விதமாகவே இந்த நிலக்காரர் மேலே கண்டபடி கழிக்கப்பட்ட தொகையைத் தமக்கு அடுத்து மேற்பட்டுள்ள நிலக்காரருக்குத் தாம் செலுத்தவேண்டிய யாதொரு குத்தகைத் தொகையிலிருந்து கழித்துக்கொள்ளலாம்; பாக்கிதாராயிருக்கிற நிலக்காரருக்குக் கீழுள்ள ஒவ்வொரு நிலக்காரரும் இந்தப்படியே செய்துகொள்ளலாம்.

**130.** விட்டுவிடப்பட்டது.

### கிரயத்தொகையைக் கட்டிவைப்பதன்மேல் விற்பனையை ரத்து செய்யவேண்டுமென்ற விண்ணப்பம் செய்துகொள்வது.

**131.** (1) யாதொரு ரயத்தின் கைப்பற்று நிலத்தையாவது அதன் பாகத்தையாவது அதற்குச்சேரவேண்டிய பாக்கிக்காக விற்கும்போது, பாக்கிதாரராயுள்ள ரயத்தாகிலும் விற்பனையினால் பாதிக்கப்பட்ட பாத்தியதையை அல்லது சுதந்தரத்தை அந்த நிலத்தில் அடைந்திருக்கும் யாதொரு நபராகிலும்—

(a) கவர்ன்மெண்டாருக்குச் செலுத்தும் பொருட்டு 127-வது பிரிவைச்சேர்ந்த (1) குறிப்பிட்ட உட்பிரிவில் கண்ட (a) அடையாளமிட்ட பகுதியின்படி தாருக்காக கழித்துக் கொள்ளப்பட்ட தொகையையும்,

(b) நிலத்துக்குடையவருக்குச் செலுத்தும்பொருட்டு எந்தத்தொகையை வசூலிப்பதற்காக விற்பனைக்கு உத்தரவு கொடுக்கப்பட்டதோ அந்தத் தொகையாக விற்பனையைப் பற்றிய பிரசித்த பத்திரிகையில் கண்டுள்ள தொகையும், நிலத்துக்குடையவர் கிரயதாரராயிருந்தால், 127-வது பிரிவைச்சேர்ந்த (1) குறிப்பிட்ட உட்பிரிவில் கண்ட (b) அடையாளமிட்ட பகுதியின்படி தாருக்காக அவரால் செலுத்தப்பட்ட தொகை உட்பட கைப்பற்று நிலத்தை விற்பனைக்குக்கொண்டுவந்த விஷயத்தில் மேற்படி நிலத்துக்குடையவருக்குப் பிற்பாடு ஏதாவது செலவு பிடித்திருந்தால் அதுவும் சேர்ந்து ஏற்படுகிற தொகையிலிருந்து, விற்பனையைப் பற்றிய பிரசித்த பத்திரிகையின் தேதிக்குப் பிறகு மேற்படி நிலத்துக்குடையவர் பெற்றிருக்கக்கூடிய யாதொரு தொகையைக் கழித்து மீதி நிற்கும் தொகையையும்,

(c) கிரயதாரருக்குச் செலுத்தும்பொருட்டு கிரயத் தொகையில் நூற்றுக்கு ஐந்து விகிதத்திற்குச் சரியான ஒரு தொகையையும்

கலெக்டரிடத்தில் கட்டிவைப்பதன்மேல் விற்ப னையை ரத்து செய்யவேண்டுமென்று கலெக்டருக்கு விண் ணப்பம் செய்துகொள்ளலாம்.

(2) மேலேகண்டபடி (பணம்) கட்டப்பட்டால் கலெக்டரானவர் விற்பனையை ரத்து செய்தும் கிரயத் தொகையையும் அதில் நூற்றுக்கு ஐந்து விகிதத்துக்குச் சரியாயுள்ள ஒரு தொகையையும் கிரயதாரருக்குத் திருப்பிச் செலுத்தும்படி கட்டளையிட்டும் உத்தரவு பிறப்பிக்கவேண் டும்;

ஆனால் நிலத்துக்குடையவர் கிரயதாரராயிருந்தால் கிரயத்தொகையில் நூற்றுக்கு ஐந்து விகிதத்துக்குச் சரியா யுள்ள ஒரு தொகையையும் 120-A பிரிவைச் சேர்ந்த (2)குறிப்பிட்ட உட்பிரிவின்படி அவரால் எதிர்கட்டப்படும் தொகையைக் கழித்துக்கொண்ட பிறகு கிரயத் தொகையில் மீதியாயுள்ள தொகையையும் மாத்திரமே கிரயதாரர் என் னும் ஹோதாவில் மேற்படி நிலத்துக்குடையவருக்குத் திருப்பிச் செலுத்தவேண்டுமென்று கட்டளையிடவேண்டும்.

### குறிப்புகள்.

இந்தப் பிரிவானது 1934-ம் வருஷத்திய திருத்த சட்டத்தி னால் திருத்தியமைக்கப்பட்டது. மேலே 127-வது பிரிவில் பெண்டேஜ் விஷயத்தைப்பற்றி புதியதாக ஏற்படுத்தப்பட்டதை அனுசரித்து இந்தப் பிரிவிலும் பெண்டேஜைப்பற்றி சொல்லப் பட்டது.

இப்பிரிவில் 'கட்டிவைப்பது' என்பதில் ஒரு சப்டிரஷரி அல் லது சஜானாவில் பணம் செலுத்துவதையும் அடங்கும். அப்படி

பணம் செலுத்தப்பட்டதாக செலானைக் காட்டினாலே போது மானது. ஏலத்தை ரத்து செய்து விடுவதற்கு அது ஹேதுவாகும். 32 I. C. 891.

ஒரு கேஸில் ஏலம் நடந்த பிறகு அதை ரத்து செய்வதற்கான கடைசி தினத்தில் டிபுடி கலெக்டர் ஊரில் இராததினால் மறுதினம் கட்டும்படி நேர்ந்தது. அது சரியான டிபாஸிட்டாகுமா என்று கேள்வி வந்ததில், அதை கோர்ட்டார் அங்கீகரிக்கலாம் என்று தீர்மானம் செய்திருக்கின்றனர் தீர்மானம். 42 Mad 310.

டிவிஷனல் ஆபிஸர் அல்லது டிபுடி கலெக்டரிடம் பணத்தை செலுத்தகாட்டினாலும் அவர் கட்டாயம் தொகையை வாங்கிக்கொள்ள வேண்டியதுதான். டிரஷரியில் கட்டவேண்டும் என்று அவர் வற்புறுத்துவதற்கில்லை. தீர்மானப்பிரமாணம் 37 I. C. 378.

ஸிவில் புரோஸிஜர் கோட் என்னும் சட்டத்தின் கீழ் நடந்த ஏலத்தை ரத்து செய்வதற்கு முன் மொத்த பணமும் அதாவது ஏல தொகையும் பௌண்டேஜ் தொகையும் விக்கிரயம் பெற்றவர் அயல் நபராக இருந்தால் அவருக்காக விக்கிரய தொகையில் நூற்றுக்கு ஐந்து ரூபாய் வீதமும் செலுத்தவேண்டும். அப்படி செலுத்தாவிட்டால் மொத்த ஏலமும் ஸ்திரப்பட்டுவிடும். ஆனால் இந்தப்பிரிவின் கீழ் டிபாஸிட் செய்யவேண்டியதில் அவ்வளவு கடின நிபந்தனைகளை கோர்ட்டார் அனுசரிக்கவில்லை. டிபாஸிட் செய்யும் காலத்தில் இவ்வளவு தொகை செலுத்த வேண்டும் என்பதை யறிய முடியாமல் குறைவானதோர் தொகை செலுத்தி விட்டு பிறகு மிகுதி தொகையை செலுத்தினாலும் இப்பிரிவின் கீழ் ஏலம் ரத்து செய்வதற்காக ஒரு உத்திரவைப் பெறலாம் என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது 35 I C. 153.

இப்பிரிவின் கீழ் டிபாஸிட் செய்யப்பட்ட பிறகு ஏலம் ரத்து செய்யப்படுவதற்கு முன் ஏலம் எடுத்தவருக்கு நோட்டிஸ் தரப்பட வேண்டுமா என்பது ஒரு முக்கிய கேள்வியாகும். இந்தப் பிரிவானது திருத்தப்பட்டதில் ஸிவில் புரோஸிஜர் கோட்டில் சொல்லப்பட்டிருக்கிற நிபந்தனைகள் ஏலத்தை ரத்து செய்வதில் பிரயோக

மாகும் என்பது எடுத்து விடப்பட்டு அதைப் பற்றியே ஒன்றும் சொல்லப்படாமலே இப்பிரிவு சேர்க்கப்பட்டது. திருத்த சட்டமானது ஏற்படுவதற்கு முன் சில கேஸுகளில் ஏலம் எடுத்தவருக்கு நோட்டீஸ் தேவை யென்றும் சில கேஸுகளில் நோட்டீஸ் அவ்வளவு முக்கியமானதல்லவென்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கின்றன. இப்போது அதைப்பற்றி ஒன்றுமே தெரிவிக்கப்படாமலிருப்பதை கவனிக்குமிடத்து நோட்டீஸ் தேவையில்லையென்றே ஏற்படும்.

ஏலமானது மோசமாக நடந்திருக்குமானால் ஏலத்தை ரத்து செய்வதற்கு ஸிவில் கோர்ட்டில் பிராது தாக்கல் செய்யக்கூடிய உரிமையானது இப்பிரிவினால் எடுத்து விடப்படவில்லை. அவ்வுரிமை எப்பொழுதும் உண்டு. 26 M. L. J. 36.

இந்தப் பிரிவின் கீழ் செய்யப்பட்ட ஒரு மனுவை அல்லது விண்ணப்பத்தை ரெவின்யு கோர்ட்டானது அங்கீகாரம் செய்யாமல் தள்ளுபடி செய்து விட்ட பிறகு, ஏலமே செல்லாது என்று ஸிவில் கோர்ட்டில் தாவா செய்யலாமா? இந்தக் கேள்வியானது மஹாலிங்க நாயகர் vs. வெள்ளைய்ய நாயகர் 51 M L J. 559 என்னும் கேஸில் கிளம்பி அப்படி தாவா செய்யலாம் என்றும் ஸிவில் புரோஸிஜர் கோட் என்றும் சட்டத்தினுடைய நிபந்தனைகள் இதற்குப்பிரயோகமாகாது என்றும் தீர்மானிக்கப்பட்டது.

ஒரு கேஸில் ஒரு ரயத்தினுடைய கைப்பற்று நிலமானது 111-வது பிரிவின் கீழ் ரெண்ட் பாக்கிக்காக ஏலம் போடப்பட்டது. அதை வாதி ஏலத்தில் எடுத்துக் கொண்டார். அந்த ஏலத்தை ரத்து செய்வதற்காக எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டின் 131-வது பிரிவின் கீழ் யாதொரு மனுவும் தாக்கல் செய்யப்படவில்லை. அப்படியிருந்த போதிலும நிலத்துக்குடையவர் மனு செய்ததின் பேரில் கலெக்டர் ஏலம் நடந்ததில் அநேக தவறுதல்கள் இருந்தன வென்றும் அதனால் நிலத்துக்குடையவருக்கு நஷ்டம் ஏற்பட்டது என்றும் கூறி ஏலத்தை ரத்து செய்து விட்டார். அதன் பேரில் வாதியானவர் கலெக்டருடைய உத்திரவானது செல்லாதென்றும் அது அவருடைய அதிகாரவரம்பு கடந்து செய்யப்பட்டதால் தன்னை பாதிக்காது என்றும் கூறி அவ்விதமாக ஒரு ஸ்தாபிதம் பெறுவ

நற்கு ஸிவில் கோர்ட்டில் தாவா செய்தார். கீழ்க் கோர்ட்டானது அந்த தாவாவை தள்ளுகடை செய்தனர். அதற்குமேல் ஹைகோர்ட்டில் அப்பீல் செய்யப்பட்டதில், ஹைகோர்ட்டார் அவர்கள் ஸிவில் புரோஸீஜர் கோட் ஆர்டர் 21 ரூல் 90 ரெவின்யூ கோர்ட்டினுடைய விக்கிரயங்களுக்குப் பிரயோகப்படாது என்றும் ஏலத்தை ரத்து செய்வதற்கு 131-வது பிரிவின் கீழ் ரயத்து ஒருவர்தான் மனு செய்யலாமே யொழிய வேறே ஒருவரும் செய்வதற்கில்லை யென்றும் கலெக்டருடைய உத்திரவானது அதிகார வரம்பு கடந்து நடந்திருப்பதால் அதை ரத்து செய்ய ஸிவில் கோர்ட்டில் தாவா செய்யப்படலாம் என்றும் தீர்மானம் செய்தனர். 41 Mad. 851—37 M. L. J. 706.

குத்தகைத் தொகை பாக்கிக்கான டிக்ரிகளை நிறைவேற்றுவதற்கு இந்த அத்தியாயம் பிரயோகப்படுவது.

**132**. இந்த அத்தியாயத்திற்கண்ட நிபந்தனைகள் குத்தகைத்தொகை பாக்கிக்கான யாதொரு டிக்ரியை ஒரு ரெவின்யூ கோர்ட்டார் நிறைவேற்றுவதற்கு எவ்வளவுமட்டில் பிரயோகப்படக்கூடுமோ அவ்வளவு மட்டில் பிரயோகப்படும்.

டிக்ரியை நிறைவேற்றுகிற கலெக்டர் (தொகை) செலுத்த பாக்கிதாரருக்கு அவகாசம் கொடுக்கலாமென்பது.

**133**. (a) இந்த ஆக்டின்படி யாதொரு வியாஜ்ஜியத்திலே பாக்கிக்காகக் கொடுக்கப்பட்ட டிக்கிரியை நிறைவேற்றுகையிலாவது (b) இந்த அத்தியாயத்திற்கண்ட நிபந்தனைகளின்படி யாருடைய கைப்பற்று நிலம் விற்கப்படப்போகிறதோ அந்த பாக்கிதாரர் விண்ணப்பஞ்செய்து கொள்வதன்மேலாவது கலெக்டரானவர் - மேற்படி கைப்பற்று நிலத்தையாகிலும் அதன் பாகத்தையாகிலும் விற்பனை செய்வதற்காக உத்தரவு பிறப்பிப்பதற்கு முன்னும், கடன் தொகை-செலவுகள் வட்டி இவைகளுக்காக மேற்படி கலெக்

டருக்குத் திருப்தியுண்டாகும்படி பாக்கிதாரர் ஜாமீன் கொடுப்பதன்மேலும் பாக்கியாயிருக்கிற தொகையை இவ்வளவுகாலத்துக்குள் செலுத்த வேண்டுமென்று பாக்கிதாரருக்கு அவகாசம் கொடுக்கலாம்; ஆனால், அந்தப்படி ஏற்படுத்திக் கொடுக்கப்படுகிற யாதொரு காலவரையறையாயினும் காலவரையறைகளின் மொத்தமாயினும் பிரதேச கவர்ன்மெண்டார் பொதுவான அல்லது பிரத்தியேகமான உத்தரவு மூலமாக இரண்டு மாதத்தைவிட அதிக காலம் ஏற்படுத்திக்கொடுத்தாலன்றி மற்றப்படி இரண்டு மாதத்துக்கு மேற்படக்கூடாது.

*இந்த அத்தியாயத்திற்கண்ட நிபந்தனைகளின்*
*பிரயோகத்தை அதிகப்படுத்துவது.*

**134.** அசையும்பொருளை ஜப்திபண்ணி விற்பனை செய்வதன் மூலமாய் யாதொரு ரயத்தினிடமிருந்து குத்தகைத் தொகையை வசூல் செய்வதற்காக இந்த அத்தியாயத்திற்கண்ட நிபந்தனைகள்—

(1) யாதொரு நிலத்துக்குடையவரும் பூஸ்திதியிலுள்ள சொந்த நிலத்தைச் சேர்ந்த யாதொரு பாயக்காரியும் தங்களுக்குள் பட்டா முச்சிலிக்கா பரிவர்த்தனஞ் செய்து கொண்டிருந்தால், அந்தப் பாயக்காரியிடமிருந்து நிலத்துக்குடையவர் குத்தகைத்தொகை வசூல் பண்ணுவதற்கும்,

(2) கவர்ன்மெண்டாரோடு செய்துகொண்ட ரயத்வாரி பைசலேற்பாட்டுக்குட்பட்டிருக்கிற அல்லது நேராய்க் கவர்ன்மெண்டாருக்கு நிலத்தீர்வை செலுத்துவதற்கு எவ்விதமாகவாகிலும் உட்பட்டிருக்கிற யாதொரு நிலச்சுவான்தாராவது சொத்துவ பாத்தியதையாய் நிலத்தை வைத்துக்கொண்டிருப்பவராக ரெஜிஸ்டராயுள்ள வேறே யாதொரு

களாவது செலுத்தப்படவேண்டிய குத்தகைத் தொகை யைக் கண்டெழுதியுள்ள உடன்படிக்கையை எந்தப் பாயக் காரியினிடமிருந்து பெற்றிருக்கிறாரோ அந்தப் பாயக்காரியி னிடமிருந்து குத்தகைத்தொகை வசூல் பண்ணுவதற்கும்,

எவ்வளவுமட்டில் பிரயோகப்படக்கூடுமோ அவ்வ ளவுமட்டில் பிரயோகப்படும்.

கலெக்டருக்குமுன் வியாஜ்ஜியம் தொடர்ந்து யாதொரு ரயத்தினிடமிருந்து குத்தகைத் தொகையை வசூல் செய் வதைக்குறித்து இந்த அத்தியாயத்தில் கண்ட நிபந்தனைகள் செலுத்தப்படத்தக்க குத்தகைத் தொகை குறிப்பிடப்பட் டிருக்கும் எழுத்து மூலமான யாதொரு ஒப்பந்தத்தின்படி எந்த கிராமத்தில் ரயத்தானவர் ரயத்து என்னும் ஹோதாவில் நிலத்தைக் கைப்பற்றில் வைத்திருக்கிறாரோ அதே கிராமத் தில் யாதொரு மரமாவது மரங்களாவது எந்த நிலத்தின் மேல் இருக்கின்றனவோ அந்த நிலத்தினின்றும் பிரத்தி யேகமாய் அப்படிப்பட்ட மரம் அல்லது மரங்களைக் கைப் பற்றில் வைத்திருக்கும் யாதொரு ரயத்தினிடமிருந்து நிலத் துக்குடையவர் குத்தகைத் தொகை வசூல் செய்வதற்குக் கூடியவரையில் பிரயோகப்படும்.

குறிப்புகள்.

இந்தப் பிரிவின் 3-வது பாராவானது 1934-ம் வருஷத்திய திருத்த சட்டத்தினால் அமைக்கப்பட்டது.

## 7-ம் அத்தியாயம்.

### அதிகப்படியாய்ச் செலுத்தப்பட்ட தொகைகளை வசூல் செய்வது

இந்த அத்தியாயம் பழைய 7-வது அத்தியாயத்தின் ஒரு பாக மாக இருந்தது. இப்போது இது இரண்டு பிரிவுகள் உள்ள ஒரு அத்தியாயமாய் விட்டது.

குத்தகைத் தொகையுடன் எந்த தொகையும் செலுத்தப் படுவதை வாங்கக்கூடாதென்பது.

**135.** யாதொரு நிலத்துக்குடையவர் சட்டப்படி செலுத்தப்படத்தக்க குத்தகைத் தொகையுடன்கூட எதை யும் எந்தப் பெயரிட்டாவது எந்த சாக்கிட்டாவது தம் முடைய ரயத்துகள் என்னும் ஹோதாவில் அவர்களிடமிரு ந்து வாங்கவாவது பெற்றுக்கொள்ளவாவது பலாத்காரமாய் வசூலிக்கவாவது அர்ஹதையுள்ளவராகமாட்டார். அந்தப் படி அதிகமாய்ச் செலுத்துவதைப்பற்றிய சகல ஒப்பந்தங் களும் நிர்ப்பந்தங்களும் செலாவணியாகமாட்டா.

மேலே கண்டபடி செலுத்தப்பட்ட தொகையையும் அபராதத் தொகைகளையும் வசூல் செய்வது.

**136.** யாதொரு ரயத்தினிடமிருந்து ரயத்து என் னும் ஹோதாவில் நிலத்துக்குடையவர் சட்டப்படி செலுத் தப்படத்தக்க குத்தகைத் தொகையுடன்கூட எதையாகிலும் வாங்கியிருந்தாலும் பெற்றுக்கொண்டிருந்தாலும் பலாத்கார மாய் வசூலித்திருந்தாலும், அந்தப்படி வாங்கப்பட்டிருக் கும் அல்லது பெற்றுக்கொள்ளப்பட்டிருக்கும் அல்லது பலாத்காரமாய் வசூல் செய்யப்பட்டிருக்கும் தொகை அல் லது யாதொன்றின மதிப்பையும் எதுவாகிலும் பலாத்கார மாய் வசூல் செய்யப்பட்டிருந்தால் நூறு ரூபாய்க்கு அதி கப்படாமலாவது மேற்படி தொகை அல்லது மதிப்பின இரட்டிப்பானது நூறு ரூபாய்க்கு அதிகப்படுகிறபட்சத் தில் அந்தத் தொகை அல்லது மதிப்பின் இரட்டிப்புக்கு அதிகப்படாமலாவது கலெக்டருக்குத் தகுதியாகத் தோற் றுகிற யாதொரு தொகையையுங்கூட அபராதமாக கலெக்ட ரிடத்தில் வியாஜ்ஜியம் தொடர்ந்து அதன் மூலமாய் வசூல் செய்துகொள்ள மேலேகண்ட ஒவ்வொரு ரயத்துக்கும் உரி மையுண்டு.

## குறிப்புகள்.

இப்பிரிவானது 1934-ம் வருஷத்திய திருத்த சட்டத்தினால் திருத்தியமைக்கப்பட்டது. ரயத்தானவர் தனது இஷ்டமாக ரென்ட் தவிர வேறே எதையாவது கொடுத்தாலும் அதைப்பெறுவது சட்ட விரோதமாகும் என்பதை விளக்குவதற்காக 'பெற்றுக்கொள்ளவாவது' என்னும் பதங்கள் சேர்க்கப்பட்டன.

செஸ்ஸுகள் விதிக்கப்படுவதில் அவை ஆதியில் என்ன காரணத்துக்காக விதிக்கப்பட்டனவோ அந்த காரணம் இருந்து கொண்டிருந்தாலொழிய செஸ்ஸுகளை விதித்து வாங்குவதற்கில்லை. செஸ்ஸுகளுக்காக பிரதிபலன் இருந்ததாக ஜமீன்தார் காட்ட வேண்டும். 30 I. C. 166.

சங்கரநாமி மாமூல் என்பது ஒரு ரென்டினுடைய பாகமல்ல. 28 M. L. J. 75.

# 8-ம் அத்தியாயம்.

## நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான கட்டுவேலைகள்.

இந்த அத்தியாயத்தில் 136-A பிரிவு முதல் 144 வரையிலுமுள்ள பிரிவுகள் அடங்கியுள்ளன. இந்த அத்தியாயமானது 1934-ம் வருஷத்திய திருத்த சட்டத்தினால் முற்றிலும் மாற்றியமைக்கப்பட்டது. இதில் உள்ள பிரிவுகள் அனைத்தும் திருத்தி எழுதப்பட்டு பல விஷயங்கள் தெளிவாக காணப்பட்டுள்ளன.

முக்கிய திருத்தங்கள் பின்வருமாறு:—

(1) நிலத்துக்குடையவர், ரயத்து ஆகிய இருவர்களும் ஒரு குறிப்பிட்ட ஏரியின் கீழ் அல்லது நீர்ப்பாசன ஆதாரத்தின் கீழ் உள்ள ஆயக்கட்டு அதாவது நீர்ப்பாய்ச்சி பயிரிடக்கூடிய நிலங்கள் எவ்வளவு என்பதை நிர்ணயம் செய்ய கலெக்டரிடம் மனு செய்யலாம்.

(2) ஆயக்கட்டை அதிகப்படுத்துவதற்கு நிலத்துக்குடையவர் மனு செய்யலாம். ஆயக்கட்டை குறைத்து சில நிலங்களை நிவர்த்

லை செய்து அவைகளை புஞ்சை நிலங்களாக்கவேண்டு' மென்று ரயத்தும் கலெக்டரிடம் மனு செய்யலாம். அதன் பேரில் கலெக்டர் விசாரணை நடத்த வேண்டும்.

(3) அப்படி மனு செய்யப்பட்டதின் பேரில் கலெக்டர் சில சந்தர்ப்பங்களை கவனித்துதான் உத்தரவு செய்ய வேண்டும். சேர்ந்தாப்போல் ஆறு வருஷகாலமாக யாதொரு நிலம் நீர்ப்பாய்ச்சப்பட முடியாமல் இருந்தால்தான் அதை புஞ்சை நிலமாக்கலாம்.

(4) இது விஷயமாய் வியில் கோர்ட்டுகள் விசாரிப்பதற் கில்லை.

(5) சில குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் கவர்ன்மெண்டே மேற் கொண்டு ரயத்துகள் டிபாஸிட் செய்வதின் பேரில் கட்டுவேலை களைச் செய்யலாம்.

(6) ரிபேருக்காக நிலத்துக்குடையவர் பணம் செலுத்தவேண்டி யிருந்தால் அதை தவணைகளாக செலுத்தும்படி உத்திரவிடுவதற்கு கலெக்டருக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டது.

(7) உத்திரவு பிரகாரம் ரிபேர்கள் செய்யப்படாமலிருந்தால் ரெண்டை குறைப்பதற்கு ரயத்துகள் மனு செய்யலாம். (141-வது பிரிவு)

**136-A.** இந்த அத்தியாயத்திலே—

'ஆயக்கட்டு.'

(1) நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான யாதொரு கட்டுவேலை யின் 'ஆயக்கட்டு' என்பது - அந்த நீர்ப்பாய்ச்சல் சம்பந்த மான கட்டுவேலையிலிருந்து தண்ணீர் பாய்ச்சப்படுவதற்கு அர்ஹதையுள்ள சகல நிலங்களும் என்று அர்த்தமாகும்;

'நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான பெரிய கட்டுவேலை.'

(2) 'நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான பெரிய (major) கட்டுவேலை' என்பது - 200 ஏகரா விஸ்தீர்ணமோ 200 ஏக ராவுக்கு மேற்பட்ட விஸ்தீர்ணமோவுள்ள ஆயக்கட்டை

யுடைய நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான யாதொரு கட்டுவேலை யென்றும், 136-B பிரிவின்படி டிஸ்டிரிக்ட் கலெக்டரால் விளம்பரம் பிரசுரிக்கப்பெறும் நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான வேறே யாதொரு கட்டுவேலையென்றும் அர்த்தமாகும்; மேலும்,

'நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான சிறிய கட்டுவேலை.'

(3) 'நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான சிறிய (minor) கட்டுவேலை' என்பது - நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான யாதொரு பெரிய கட்டுவேலையாயிராத நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான யாதொரு கட்டுவேலை யென்று அர்த்தமாகும்.

சில கட்டுவேலைகளை நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான பெரிய கட்டுவேலைகளென்று விளம்பரம் பிரசுரிப்பது.

**136-B.** டிஸ்டிரிக்ட் கலெக்டரானவர்-டிஸ்டிரிக்ட் கெஜெட்டில் விளம்பரம் பிரசுரித்து அதன் மூலமாக, நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான யாதொரு கட்டுவேலையின் ஆயக்கட்டு 200 ஏகராவுக்குக் குறைவாயிருந்த போதிலும் பாதகமில்லாமலே,—

(a) ஷை கட்டுவேலையிலிருந்து தண்ணீர் தப்பித்துக் கொண்டு போவதனாலாவது மேல்வழிந்துப்போவதனாலாவது யாதொரு இருப்புப்பாதைக்குத் தீங்கு நேரிடக்கூடுமென்று தோற்றும்படியான இடத்தில் அந்தக்கட்டுவேலை இருக்கிறதென்னும் ஹேதுவின் மேலாகிலும்,

(b) வேறே யாதொரு விசேஷ காரணத்தினாலாகிலும், நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான ஷை கட்டுவேலையானது இந்த அத்தியாயத்தின் காரியங்களுக்காக நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான பெரிய கட்டுவேலையென்றாயினும் அதன் பாகமென்றாயினும் கருதப்படவேண்டுமென்று நிர்ணயிக்கலாம்.

இந்தப் பிரிவின்படி எந்த ஹேது அல்லது காரணத்தை கொண்டு ஒவ்வொரு விஷயத்திலும் தீர்மானிக்கப்படுகிறதோ அந்த ஹேது அல்லது காரணத்தை ஷை விளம்பரத்தில் குறிப்பிடவேண்டும்.

*யாருக்கு விண்ணப்பங்கள் செய்து கொள்ளவேண்டுமென்பது.*

**136-C.** இந்த அத்தியாயத்தின்படி செய்துகொள்ளப்படும் விண்ணப்பங்களை—

(a) நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான யாதொரு பெரிய கட்டுவேலையின் விஷயத்திலே டிஸ்டிரிக்ட் கலெக்டருக்கும்;

(b) நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான யாதொரு சிறிய கட்டுவேலையின் விஷயத்திலே ரெவின்யு டிவிஷன் ஆபிஸருக்கும் செய்துகொள்ளவேண்டும்.

*விண்ணப்பம் செய்து கொள்வதன்மேல் விசாரணை.*

**136-D.** இந்த அத்தியாயத்தின்படி எந்த உத்தியோகஸ்தருக்கு விண்ணப்பம் செய்து கொள்ளப்படுகிறதோ அவர் அந்த விண்ணப்பத்தைக்குறித்துத் தாமே விசாரிக்கலாம், அல்லது தமக்குக் கீழ்ப்பட்டவராய் டெப்புடி தாசில்தாரின் அந்தஸ்துக்குக் குறையாத அந்தஸ்துள்ள யாதொரு உத்தியோகஸ்தரை அந்த விசாரணை நடத்தும்படி நியமிக்கலாம். விசாரணை நடத்தும் உத்தியோகஸ்தரானவர் விசாரணை நடக்கும் தேதியையும் காலத்தையும் இடத்தையும் நிஷ்கரிஷை செய்து, பிரஸ்தாப விண்ணப்பத்துக்கு ஒரு நகலையும் கேட்டுக்கொள்ளப்பட்டபடி ஏன் உத்திரவு பிறப்பிக்கக்கூடாதோ அதற்குக் காரணம் காட்டும்படி ஒரு நோட்டீஸையும் பிரதிவாதி அல்லது பிரதிவாதிகளுக்குச் சேர்ப்பிக்கும்படிச் செய்யவேண்டும். மேலும், ஷை நோட்டீஸை நீர் பாய்ச்சப்படும் நிலம் இருக்கிற கிராமம் அல்லது கிராமங்க

களில் ஒட்டவேண்டியதுமல்லாமல், நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான கட்டுவேலையின் ஆயக்கட்டில் நிலங்கள் வைத்துக்கொண்டிருக்கும் ரயத்துகளுக்குத் தெரியும்படியாக நிர்ணயிக்கப்பட்ட விதமாய் பிரசித்தம் செய்யவும் வேண்டும். ஷெடி நோடீஸில் குறிப்பிட்ட தேதியிலாவது விசாரணையைத் தள்ளிவைக்கக்கூடிய வேறே யாதொரு தேதியிலாவது, விசாரணை செய்யும் உத்தியோகஸ்தரானவர்-விண்ணப்பதாரர் அல்லது விண்ணப்பதாரர்களும் பிரதிவாதி அல்லது பிரதிவாதிகளும் பற்றுள்ள ரயத்துகள் எவர்களாயினும் ஹாஜராயிருந்தால் அவர்களும் சொல்வதைக்கேட்கவேண்டியதுமல்லாமல் சாட்சியமும் எடுத்துக்கொள்ளலாம்; மேலும், அவர் தமக்கு யுக்தமாகத்தோற்றுகிறபடி பின்னும் விசாரணை நடத்தலாம். ஷெடி விசாரணையானது எந்த உத்தியோகஸ்தருக்கு விண்ணப்பம் செய்துகொள்ளப்படுகிறதோ அவரல்லாத வேறே யாதொரு உத்தியோகஸ்தரால் செய்யப்பட்டால், அவர்-அதைக்குறித்து எந்த உத்தியோகஸ்தருக்கு விண்ணப்பம் செய்து கொள்ளப்படுகிறதோ அவருக்கு ரிப்போர்ட் செய்ய வேண்டியதுமல்லாமல், விசாரணையைக்குறித்த தஸ்தவேஜுகளை அவருக்கு அனுப்பவும் வேண்டும்; அல்லாமலும், எந்த உத்தியோகஸ்தருக்கு விண்ணப்பம் செய்துகொள்ளப்படுகிறதோ அவர் மேற்படி ரிபோர்ட்டைக்குறித்து ஆலோசனை செய்த பிறகும் கட்சிக்காரர்களுக்கு ஆட்சேபனைகள் எவையேனும் இருந்தால் அவைகளைக் கேட்ட பிறகும் தம்முடைய உத்திரவைப் பிறப்பிக்கவேண்டும்.

ஆயக்கட்டை நிர்ணயிப்பது.

**137.** எந்த நிலத்துக்குடையவரின் பூஸ்திதியில் நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான யாதொரு கட்டுவேலை இருக்கிறதோ அந்த நிலத்துக்குடையவராவது, நீர்ப்பாய்ச்சல் சம்

பந்தமான மேற்படி கட்டுவேலையிலிருந்து தண்ணீர் பாய்ச்சப்படத்தக்க நிலத்தைக் கைப்பற்றில் வைத்துக்கொண்டிருக்கும் யாதொரு ரயந்து அல்லது ரயத்துகளாவது - எந்த நிலங்கள் நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான மேற்படி கட்டுவேலையின் ஆயக்கட்டில் அடங்குகின்றனவென்று அல்லது சேர்க்கப்படவேண்டுமென்று நிர்ணயித்து உத்தரவு பிறப்பிக்கும்படி விண்ணப்பம் செய்து கொள்ளலாம். 136-D பிரிவின்படி விசாரணை அல்லது ரிபோர்ட் செய்யப்படுவதன்மேல், எந்த உத்தியோகஸ்தருக்கு விண்ணப்பம் செய்து கொள்ளப்படுகிறதோ அவர்—

(a) எந்த நிலங்கள் நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான மேபடி கட்டுவேலையின் ஆயக்கட்டில் அடங்குகின்றனவென்று அல்லது சேர்க்கப்படவேண்டுமென்று நிர்ணயித்தும்,

(b) அப்படிப்பட்ட எவையேனும் நிலங்கள் 'நீர்ப்பாய்ச்சல் பெறுபவை' என்றாவது 'தோட்டக்கால்' என்றாவது ஏற்கெனவே தரம் பிரிக்கப்பட்டிராவிட்டால் அவைகளை அந்தப்படி தரம் பிரித்தும்,

(c) மேலே கண்டபடி தரம் பிரிக்கப்பட்ட நிலங்களுக்காகச் செலுத்தப்படவேண்டிய குத்தகைத்தொகை விகித்தை நிர்ணயித்தும்.

உத்தரவு பிறப்பிக்கவேண்டும்.

ஆயக்கட்டை விரிவாக்குவதற்கு அனுமதி கொடுப்பது.

**137**-A. யாதொரு பூஸ்திதியிலுள்ள நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான யாதொரு கட்டுவேலையின் ஆயக்கட்டானது 137-வது பிரிவின்படி பிறப்பிக்கப்பட்ட உத்தரவினாலாகிலும் 11-ம் அத்தியாயத்தின்படி பிரசித்தம் செய்யப்பட்ட ரெகார்ட் ஆவ்ரைட்ஸ் என்னும் உரிமை தஸ்தா

வேனிலாகிலும் நிர்ணயிக்கப்பட்டிருந்தால், அந்த பூஸ்திதி யின் நிலத்துக்குடையவரானவர் தாம் செய்து கொள்ளும் விண்ணப்பத்தில் சொல்லியிருக்கும் நிலம் அல்லது நிலங் களை அந்த ஆயக்கட்டில் சேர்த்து அதை விரிவாக்குவதற்கு அனுமதி கொடுக்கும்படி விண்ணப்பம் செய்து கொள்ள லாம். 136-D பிரிவின்படி விசாரணை அல்லது ரிபோர்ட் செய்யப்படுவதன்மேல் எந்த உத்தியோகஸ்தருக்கு விண்ண ப்பம் செய்து கொள்ளப்படுகிறதோ அவர்—

(a) மேற்படி ஆயக்கட்டில் ஏற்கனவே சேர்க்கப்பட் டிருக்கும் நிலங்களுக்கு வழக்கமாய் நீர் பாய்ச்சுவதுபோல் நீர் பாய்ச்ச முடியாதபடி பிரதிகூலமாய் பாதக மேற்படா மல், விண்ணப்பத்தில் சொல்லியிருக்கும் எந்த நிலங்களை ஆயக்கட்டில் சேர்த்துக்கொள்ளக் கூடுமென்று தமக்குத் தோற்றுகிறதோ அந்த நிலங்களைச் சேர்த்துக்கொண்டு ஆயக்கட்டை விரிவாக்குவதற்கு அனுமதி கொடுத்தும்,

(b) (a) அடையாளமிட்ட பகுதியின்படி ஆயக் கட்டில் புதிதாய்ச் சேர்க்கப்பட்டிருக்கும் நிலங்களை நீர் பாய்ச்சப்பெறுபவை என்றாவது 'தோட்டக்கால்' என்றா வது மீண்டும் தரம் பிரித்தும்,

(c) மேலே கண்டபடி மீண்டும் தரம் பிரிக்கப்பட்ட நிலங்களுக்காக செலுத்தப்படவேண்டிய குத்தகைத்தொகை வீதத்தை நிர்ணயித்தும்,

உத்தரவு பிறப்பிக்கலாம்.

அனுமதியில்லாமல் ஆயக்கட்டை விரிவாக்க
கூடாதென்று தடுப்பது.

**137**-B. யாதொரு பூஸ்திதியிலுள்ள நீர்ப்பாய்ச் சல் சம்பந்தமான கட்டுவேலையின் ஆயக்கட்டானது 137-வது பிரிவின்படி பிறப்பிக்கப்பட்ட உத்திரவினாலாவது 11-ம்

அத்தியாயத்தின்படி பிரசித்தம் செய்யப்பட்ட ரெகார்ட் அவ் ரைட்ஸ் என்னும் உரிமை தஸ்தவேஜிலாவது நிர்ண யிக்கப்பட்டிருந்தால், நிலத்துக்குடையவரானவர் 137A-பிரிவின்படிக்கான யாதொரு உத்திரவை அனுசரித்தன்றி மற்றப்படி ஷை ஆயக்கட்டை விரிவாக்க அர்ஹதையுள்ளவ ராகமாட்டார்.

நீர் பாய்ச்சப்படும் நிலத்தையாவது தோட்டக்காலையாவது நீர்ப்பாய்ச்சப்படாத நிலமென்று மீண்டும் தரம் பிரிப்பது.

**137-C.** நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான யாதொரு கட்டுவேலையின் ஆயக்கட்டில் நீர்ப்பாய்ச்சப்படும் நிலமாக வாவது தோட்டக்காலாகவாவது யாதொரு நிலத்தை நிலத் துக்குடையவருக்குக் கீழ்பட்டு வைத்துக்கொண்டிருக்கும் யாதொரு ரயத்தானவர் - தாம் விண்ணப்பம் செய்து கொள் ளும் தேதிக்கு அடுத்து முன்பாக தொடர்ச்சியாய் ஆறு வரு ஷத்துக்குக் குறையாத ஒரு கால அளவுக்கு, நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான ஷை கட்டுவேலையிலிருந்து அந்த நிலத்துக்கு நீர் பாய்ச்ச முடியாமலிருக்கிறதென்னும் ஹேதுவின்மேல் அந்த நிலத்தை நீர் பாய்ச்சப்படாத நிலமென்று மீண்டும் தரம் பிரிப்பதற்காக உத்திரவு பிறப்பிக்கும்படி விண்ணப் செய்துகொள்ளலாம். 136.D பிரிவின்படி விசாரணை அல் லது ரிபோர்ட் செய்யப்படுவதன்மேல், விண்ணப்பம் செய்து கொள்ளும் தேதிக்கு அடுத்து முன்பாக தொடர்ச்சியாய் ஆறு வருஷத்துக்குக்குறையாத ஒரு கால அளவுக்கு, ஷை நிலம் நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான எந்த கட்டுவேலையின் ஆயக்கட்டில் சேர்க்கப்பட்டிருக்கிறதோ அந்தக் கட்டுவேலை யிலிருந்து ஷை நிலத்துக்காவது அதன் யாதொரு பாகத்துக் காவது தண்ணீர் பாய்ச்ச முடியாமலிருக்கிறதென்று எந்த உத்தியோகஸ்தருக்கு விண்ணப்பம் செய்துகொள்ளப்படு

கிறதோ அந்த உத்தியோகஸ்தருக்குத் தோற்றுமானல், அவர் மேடி நிலம் அல்லது பாகத்தை நீர் பாய்ச்சப்படாத தென்று மீண்டும் தரம் பிரித்தும், மேலே கண்டபடி மீண் டும் தரம் பிரிக்கப்பட்ட நிலம் அல்லது பாகத்துக்காக செலு த்தப்படவேண்டிய குத்தகைத்தொகை வீதத்தை நிர்ணயித் தும் உத்தரவு பிறப்பிக்கலாம்.

*மீண்டும் தரம் பிரிக்கப்பட்ட நிலங்களுக்குக் குத்தகைத் தொகை வீதத்தை நிர்ணயிப்பது.*

**137-D.** (1) 137-வது பிரிவைச்சேர்ந்த (c) குறிப் பிட்ட பகுதியின்படியாவது 137-A பிரிவைச் சேர்ந்த (c) குறிப்பிட்ட பகுதியின்படியாவது 137-C பிரிவின்படியா வது குத்தகைத்தொகை வீதத்தை நிர்ணயிக்கையில், எந்த உத்தியோகஸ்தருக்கு விண்ணப்பம் செய்து கொள்ளப்படு கிறதோ அந்த உத்தியோகஸ்தர் - அக்கம்பக்கத்தில் அதே அனுகூலங்களுடன் கூடிய அதே மாதிரியான நிலங்கள் எவையேனும் இருந்தால் அவைகளுக்கு விதிக்கப்பட்டுவரும் குத்தகைத்தொகை வீதத்தைக் கிரமமாய்க் கவனிக்கவேண் டும்.

(2) (1) அடையாளமிட்ட உட்பிரிவில் குறிப்பிடப் பட்டிருக்கும் நிபந்தனைகளில் எதன்படியாகிலும் குத்தகைத் தொகை வீதங்களை நிர்ணயிக்க மேல்படி உத்தியோகஸ்த ருக்குள்ள அதிகாரத்துக்கு, 3-ம், 11-ம் அத்தியாயங்களில் கண்டதெதனுலும் பாதகம் உண்டாவதாகக் கருதப்பட மாட்டாது.

*நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான கட்டுவேலையின் மராமத்துக்காக விண்ணப்பம் செய்துகொள்வது.*

**138.** ஒரு நிலத்துக்குடையவருக்குக் கீழ்ப்பட்டு நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான யாதொரு கட்டுவேலையின் ஆயக் கட்டில் நிலம் வைத்துக்கொண்டு,

(a) அந்த ஆயக்கட்டின் குத்தகைத் தொகையில் நாலிலொரு பங்குக்குக் குறையாமல் செலுத்திவருகிற, அல்லது

(b) அந்த ஆயக்கட்டின் விஸ்தீர்ணத்தில் நாலிலொரு பங்குக்குக் குறையாமல் வைத்துக்கொண்டிருக்கிற அல்லது

(c) நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான யாதொரு பெரிய கட்டுவேலையின் விஷயத்தில் இருநூறு ரூபாய்க்கும் நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான யாதொரு சிறிய கட்டுவேலையின் விஷயத்தில் நூறு ரூபாய்க்கும் மேற்படாமல் ஜாமீனாகக் கேட்கப்படக் கூடிய தொகையை டிபாஸிட்டாகக் கட்டுகிற யாதொரு ரயத்தாவது ரயத்துகளாவது - நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான கட்டுவேலையானது அதை நம்பியிருக்கும் நிலங்களுக்குத் தண்ணீர் பாய்ச்சுவதற்கு முக்கியாம்சத்தில் பிரதிகூலம் ஏற்படும்படியான அளவுக்குக் கிலமான ஸ்திதியில் இருக்கிற பட்சத்திலும், தாம் அல்லது தாங்கள் விண்ணப்பம் செய்து கொண்டதன்மேல் நிலத்துக்குடையவர் அவசியமான மராமத்துகள் செய்ய மறுத்திருக்கிற பட்சத்திலும் அல்லது அசட்டை பண்ணியிருக்கிற பட்சத்திலும், அந்த கட்டுவேலையை மராமத்து செய்வதற்காக உத்தரவு பிறப்பிக்கும்படி விண்ணப்பம் செய்து கொள்ளலாம். எந்த விஷயங்களை ஆதாரமாகக்கொண்டு விண்ணப்பதாரர் அல்லது விண்ணப்பதாரர்கள் தாவா செய்கிறார்களோ அந்த விஷயங்களையும் நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான ஷை கட்டுவேலையிலுள்ள குறைவுகளின் பொதுவான தன்மையையும் போதுமானமட்டில் விவரமாக விண்ணப்பத்தில் கண்டெழுதவேண்டும். இந்தப் பிரிவின்படி விண்ணப்பம் தாக்கல் செய்ய உத்தேசிக்கும் யாதொரு ரயத்து அல்லது ரயத்துகளும், அந்த ரயத்து அல்லது ரயத்துகளிடமிருந்து அதிகாரம் பெற்றிருக்கும் யாதொரு நபர் அல்லது நபர்களும் ஷை விஷயங்களையும் ஷை

குறைவுகளின் பொதுவான தன்மையையும் கண்டெழுதுவது சாத்தியமாயிருக்கும் பொருட்டு, அவர் அல்லது அவர்கள் சம்பந்தப்பட்ட நீர்ப்பாய்ச்சல் கட்டுவேலையைத்தாராளமாகப் போய் பார்க்கக்கூடியவர்களாயிருக்கவேண்டும்.

விவரணம்.—மராமத்துகள் என்பதில் வருவாய்க்கால்களிலிருந்தும் பங்கிடு செய்யும் கால்களிலிருந்தும் குப்பை முதலியவற்றை வருஷவாரியில் அப்புறப்படுத்துவதைப் போன்ற சொற்ப வேலைகளோ சட்டப்படியாகிலும் மாமூல்படியாகிலும் ரயத்துகள் செய்து முடிக்கக் கடமைப்பட்டிருக்கும் சில்லறை மராமத்துகளோ அடங்கமாட்டா.

குறிப்புகள்.

இந்தப் பிரிவின் கீழ் கலெக்டர் செய்த உத்திரவின் பேரில் அப்பீலானது ரெவின்யு போர்டுக்குத்தான் செய்யப்படவேண்டுமேயொழிய டிஸ்டிரிக்ட் போர்டுக்கல்ல 61 M. L. J. 434.

மேலே கண்டபடி விண்ணப்பம் செய்து கொள்ளப்படுவதன்மேல் விசாரணை செய்து உத்தரவு பிறப்பிப்பது.

**139** (1) (a) 136–D பிரிவின்படி விசாரணை செய்வதன்மேலாவது ரிபோர்ட் செய்யப்படுவதன்மேலாவது—

(i) நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான கட்டுவேலையானது அதை நம்பியிருக்கும் நிலங்களுக்குத் தண்ணீர் பாய்ச்சுவதற்கு முக்கியாம்சத்தில் பிரதிகூலம் ஏற்படும்படியான அளவுக்குக் கிலமான ஸ்திதியில் இருக்கிறதென்றும்,

(ii) ரயத்துகள் அக்கிரமமான காரியங்களைச் செய்ததனால் மாத்திரமே அல்லது சட்டப்படியாயினும் மாமூல்படியாயினும் ரயத்துகள் செய்து முடிக்கக்கடமைப்பட்டிருக்கும் சொற்ப வேலைகளையோ சில்லறை மராமத்துகளையோ

செய்யாமல் விட்டுவிட்டதனால் மாத்திரமே மேற்படி கிலமான ஸ்திதி ஏற்பட்டிருக்கவில்லையென்றும்,

எந்த உத்தியோகஸ்தருக்கு விண்ணப்பம் செய்து கொள்ளப் படுகிறதோ அந்த உத்தியோகஸ்தர் தெரிந்து திருப்தியடைந்தால் அவர் நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான ஷை கட்டுவேலையானது மீண்டும் திறமையாக வேலை செய்யும்படிச் செய்வதற்கு அவசியமான வேலைகளையும் அவைகளுக்கு உத்தேசமாய்ப் பிடிக்கக்கூடிய செலவையும் குறிப்பிட்டும் குறித்த ஒரு காலத்துக்குள் ஷை வேலைகளைச் செய்துமுடிக்கும்படி நிலத்துக்குடையவருக்குக் கட்டளையிட்டும் உத்தரவு பிறப்பிக்கலாம்; ஷை உத்தியோகஸ்தர் அந்தக் காலத்தை அப்போதைக்கப்போது அதிகப்படுத்தலாம். காலத்தைக் குறிப்பிட்டோ அதை அதிகப்படுத்தியோ ஒரு உத்தரவைப் பிறப்பிக்கையில், ஷை உத்தியோகஸ்தரானவர் விண்ணப்பம் செய்துகொண்ட ரயத்து அல்லது ரயத்துகள் தெரிவிக்கும் எவையேனும் விஷயங்களைக் குறித்து ஆலோசனை செய்ய வேண்டியதுமல்லாமல் ஷை கட்டுவேலைகளுக்குப் பிடிக்கும் செலவையும் மேற்படி நிலத்துக்குடையவர் செய்து முடிக்க வேண்டுமென்று மேற்படி உத்தியோகஸ்தராவது வேறே யாதொரு உத்தியோகஸ்தராவது உத்தரவு செய்த அல்லது மேற்படி நிலத்துக்குடையவர் தாமாகவே செய்ய ஏற்றுக்கொண்ட வேறே எவையேனும் கட்டுவேலைகள் இருந்தால் அவைகளுக்குப் பிடிக்கும் செலவையும் மேலேகண்ட காலத்துக்குள் தாங்கும் சக்தி மேற்படி நிலத்துக்குடையவரின் பூஸ்திதிக்கு இருக்கிறதா என்பதைக்குறித்து கிரமமாய்க் கவனிக்கவும் வேண்டும்.

(b) மேலேகண்டபடி விசாரணை செய்வதன்மேலாவது ரிபோர்ட் செய்யப்படுவதன்மேலாவது—

(i) நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான மேற்படி கட்டு வேலையானது அதை நம்பியிருக்கும் நிலங்களுக்குத் தண்ணீர் பாய்ச்சுவதற்கு முக்கியாம்சத்தில் பிரதிகூலம் ஏற்படும்படியான அளவுக்குக் கிலமான ஸ்திதியில் இருக்கவில்லையென்றாகிலும்,

(ii) ரயத்துகள் அக்கிரமமான காரியங்களைச் செய்ததனால் மாத்திரமே அல்லது சட்டப்படியாயினும் மாமூல்படியாயினும் ரயத்துகள் செய்து முடிக்கக் கடமைப்பட்டிருக்கும் சொற்ப வேலைகளையோ சில்லறை மராமத்துகளையோ செய்யாமல் விட்டுவிட்டதனால் மாத்திரமே மேற்படி கிலமான ஸ்திதி ஏற்பட்டிருக்கிறதென்றாகிலும்,

எந்த உத்தியோகஸ்தருக்கு விண்ணப்பம் செய்துகொள்ளப்படுகிறதோ அந்த உத்தியோகஸ்தர் தெரிந்து திருப்தியடைந்தால், அவர் அந்த விண்ணப்பத்தைத் தள்ளிவிடவேண்டும்.

(2) (a) மேற்படி விண்ணப்ப சம்பந்தமாய் விண்ணப்பதாரருக்காவது விண்ணப்பதாரர்களுக்காவது நிலத்துக்குடையவருக்காவது பிடித்த செலவை, எந்த உத்தியோகஸ்தருக்கு விண்ணப்பம் செய்து கொள்ளப்படுகிறதோ அந்த உத்தியோகஸ்தர் தமக்கு யுக்தமாய்த் தோற்றுகிறபடி நிஷ்கரிஷை செய்யவேண்டும்; மேலும், மேற்படி செலவை யார் செலுத்தவேண்டுமென்பதையும் எந்த அளவுக்குச் செலுத்தவேண்டுமென்பதையும் நிச்சயிக்க மேற்படி உத்தியோகஸ்தருக்கு முழு அதிகாரம் உண்டு:

ஆனால் செலவாகச் செலுத்தப்படவேண்டுமென்று தீர்ப்பளிக்கப்படும் தொகை நியாயமானதாய் இருக்கவேண்டும்; மேலும் நிலத்துக்குடையவர் செலுத்தவேண்டுமென்று

தீர்மானிக்கப்படும் தொகையானது நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான யாதொரு பெரிய கட்டுவேலையின் விஷயத்தில் இருநூறு ரூபாய்க்கும் நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான யாதொரு சிறிய கட்டுவேலையின் விஷயத்தில் நூறு ரூபாய்க்கும் எந்த சந்தர்ப்பத்திலும் மேற்படக்கூடாது.

(b) 138-வது பிரிவின்படி ஜாமீன் தொகை ஏதாகிலும் கட்டப்பட்டிருந்தால், மேலேகண்ட உத்தியோகஸ்தரானவர் (a) அடையாளமிட்ட பகுதியின்படி நிலத்துக்குடையவர் செலவைச் செலுத்தவேண்டுமென்று தீர்ப்பளித்தால் அவர் — மேற்படி ஜாமீன் தொகையிலிருந்து அந்த செலவைத் செலுத்தவேண்டும்; மேலும், மேற்படி விண்ணப்பம் அற்பத்தனமானதென்று மேற்படி உத்தியோகஸ்தர் தெரிந்து திருப்தியடைந்தால் அவர் மேற்படி தொகையில் மிகுதி ஏதாகிலும் இருந்தால் அது முழுவதுமோ சிறிது மட்டிலோ கவர்ன்மெண்டாருக்குப் பறிமுதலாகுமென்றுங் கூட நிர்ணயிக்கலாம்.

(3) நிலத்துக்குடையவர் கட்டுவேலைகளைச் செய்து முடிக்க மறுத்தாலும் (1) குறிப்பிட்ட உட்பிரிவைச்சேர்ந்த (a) அடையாளமிட்ட பகுதியின்படி பிறப்பிக்கப்படும் உத்தரவில் குறிப்பிட்டு அப்போதைக்கப்போது அந்தப் பகுதியின்படி அதிகப்படுத்தப்பட்டபடியுள்ள காலத்துக்குள் கட்டுவேலைகளைச் செய்து முடிக்கத் தவறிப்போனாலும் உத்தேசமாய்ப் பிடிக்கக்கூடிய செலவுத் தொகையை இது விஷயமாய்க் குறிப்பிடப்படும் காலத்துக்குள் அவர் கட்டவேண்டுமென்று மேற்படி உத்தரவில் நிர்ணயித்திருக்க வேண்டும். அந்தப்படி குறிப்பிடப்பட்ட காலத்துக்குள்ளாவது பின்னும் அனுமதிக்கப்படக்கூடிய காலத்துக்குள்ளா

வது நிலத்துக்குடையவர் டிபாஸிட் கட்டத் தவறிப்போய் விட்டால், உத்தரவு பிறப்பிக்கும் உத்தியோகஸ்தரானவர் அது நிலவரி பாக்கியாயிருந்தால் எப்படியோ அப்படியே அதை நிலத்துக்குடையவரிடமிருந்து வசூல் செய்ய வேண்டும்.

(4) உத்தேசமாய்ப் பிடிக்கக்கூடிய செலவு மேலே கண்டபடி கட்டப்படுவதன்மேலாவது வசூல் செய்யப்படுவதன் மேலாவது, மேற்படி உத்தியோகஸ்தரானவர் தாம் கட்டளையிடக்கூடிய நபர்களைக்கொண்டும் விதமாகவும் கூடிய சீக்கிரத்தில் மேற்படி கட்டுவேலைகளைச் செய்து முடிப்பித்து, அந்த வேலைகளுக்குப் பிடிக்கும் செலவை மேலே கண்டபடி கட்டப்பட்ட அல்லது வசூல் செய்யப்பட்ட தொகையிலிருந்து கொடுக்கவேண்டும்.

(5) மேலே கண்டபடி நிலத்துக்குடையவரால் கட்டப்பட்ட அல்லது அவரிடமிருந்து வசூல் செய்யப்பட்ட உத்தேசமாய்ப் பிடிக்கக்கூடிய செலவுத் தொகையானது மேற்படி வேலைகளைச் செய்து முடிப்பதற்குப் போதாமலிருப்பதாகத் தெரியவந்தால், மேற்படி உத்தியோகஸ்தரானவர் இது காரியத்துக்காகப் பின்னும் அவசியமாயிருக்கக்கூடிய தொகையைக் குறிப்பிட்ட ஒரு காலத்துக்குள் கட்டும்படி நிலத்துக்குடையவருக்கு உத்தரவு செய்யலாம்; நிலத்துக்குடையவர் அந்தத் தொகையைக் கட்டத் தவறிப்போனால் அது நிலவரி பாக்கியாயிருந்தால் எப்படியோ அப்படி மேற்படி உத்தியோகஸ்தர் அதை வசூல் செய்யவேண்டும்; மேலும், மேற்படி உத்தியோகஸ்தர் அந்தப்படி கட்டப்பட்ட அல்லது வசூல் செய்யப்பட்ட தொகையை மேற்படி வேலைகளின் செலவைக் கொடுப்பதற்காக உபயோகிக்க வேண்டும்.

(6) இந்தப் பிரிவின்படி நிலத்துக்குடையவரால் கட்டப்பட்ட அல்லது அவரிடமிருந்து வசூல் செய்யப் பட்ட தொகையானது மேற்படி வேலைகளுக்குப் பிடித்த செலவைக்காட்டிலும் அதிகமாயிருந்தால் அந்தப்படி அதிக மாயிருக்கும் தொகையை அவருக்குத் திருப்பிக்கொடுத்து விட வேண்டும்.

விவரணம்.—இந்தப் பிரிவின் காரியங்களுக்காக, எவையேனும் வேலைகளுக்குப் பிடிக்கும் செலவில் அந்த வேலைகள் பூர்த்தியான பிறகு அவைகளைப் பார்வையிடுவ தற்குச் செலவு ஏதேனும் பிடித்தால் அந்தச் செலவும் அடங்கும்.

*தசபந்தம் இனாம்தாரரின் பொறுப்பு.*

**140.** (1) நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான கட்டுவேலை யை நல்ல நிலைமையில் வைத்துப் பராமரித்துவரத் தவறிப் போன குற்றமானது நிலையான பைசலேற்பாட்டுக்கு முன் ஜாரி செய்யப்பட்டு பிரிடிஷ் கவர்ன்மெண்டாரால் ஜோடி மாத் திரம் செலுத்தவேண்டியதென்று ஏற்பாடு செய்யப்படாமல் ஊர்ஜிதம் செய்யப்பட்டிருக்கும் தசபந்தம் இனாம் பூமியைக் கைப்பற்றில் வைத்திருப்பவரைச் சேர்ந்ததாயிருந்தால், நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான அந்தக் கட்டுவேலையிலிருந்து தண்ணீர் பாயும் பூஸ்திதியைக் கைப்பற்றில் வைத்திருப்ப வருக்கு, 139-வது பிரிவைச் சேர்ந்த (1) குறிப்பிட்ட உட் பிரிவில் கண்ட (a) அடையாளமிட்ட பகுதியின்படி பிறப் பிக்கப்படும் உத்தரவில் குறிப்பிட்டிருக்கும் வேலைகளைச் செய்துமுடிக்கும்படியோ அல்லது அவைகளைச் செய்து முடிப்பதற்குப் பிடிக்கும் செலவைச் செலுத்தும்படியோ அந்த தசபந்தம் இனாம் கைப்பற்றுதாரரைக் கேட்க உரிமை

புண்டு; மேலும், அவ்விரண்டு காரியங்களில் எதையும் அவர் செய்யத் தவறிப்போனால், ஷை பூஸ்திதியைக் கைப்பற்றில் வைத்திருப்பவர் - உத்தரவில் கட்டளையிட்டிருக்கிற பிரகாரம் ஷை வேலைகளைச் செய்துமுடித்து, அதற்காகப் பிடித்த செலவைக் கலெக்டருக்கு முன் விபாஜ்ஜியம் தொடருவது மூலமாக ஷை தசபந்தம் இனும்தாரரிடமிருந்து வசூல் செய்யலாம். டிக்ரியில் கண்ட தொகை குத்தகைத் தொகை பாக்கியாயிருந்தால் எப்படியோ அப்படியே அதை வசூல் செய்யலாம்.

(2) சரியான காரணத்துக்காக மேல்படி இனும் நிலத்தை மீண்டும் எடுத்துக்கொள்ள மேல்படி பூஸ்திதியைக் கைப்பற்றில் வைத்திருப்பவருக்குள்ள உரிமைக்கு (1) குறிப்பிட்ட உட்பிரிவில் கண்டதெதனாலும் பாதகம் ஏற்படுவதாகக் கருதப்படமாட்டாது.

மராமத்து சம்பந்தமான வேலைகள் பூர்த்தியாகாமல் இருக்கையில், குத்தகை தொகையைச் சிறிதுகாலத்துக்குக் குறைப்பது.

**141.** 139-வது பிரிவைச் சேர்ந்த (1) குறிப்பிட்ட உட்பிரிவில் கண்ட (a) அடையாளமிட்ட பகுதியின்படி உத்தரவு பிறப்பிக்கும் காலத்திலாவது அதற்குப் பிறகு எப்போதாவது, மேல்படி உத்தரவைப்பிறப்பிக்கும் உத்தியோகஸ்தரானவர்-நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான எந்தக் கட்டுவேலை சம்பந்தமாய் மேல்படி உத்தரவு பிறப்பிக்கப்படுகிறதோ அந்தக் கட்டுவேலையின் ஆயக்கட்டிலிருக்கும் நிலத்தைக் கைப்பற்றில் வைத்திருக்கும் யாதொரு ரயத்தாகிலும் ரயத்துகளாகிலும் விண்ணப்பம் செய்துகொள்வதன் மேல், மேல்படி உத்தரவில் குறிப்பிட்டிருக்கும் வேலைகள் முடிக்கப்பட்டாகிற வரையில் தமக்கு நியாயமானதும் தரு

மமானதென்று தோற்றுகிற பிரகாரம் குத்தகைத் தொகையைச சிறிது காலநதுக்குக் குறைக்கும்படி கட்டளையிடலாம்.

*சிறிதுமட்டில் ஒரு பூஸ்திதிக்கும் சிறிதுமட்டில் கவர்ன்மெண்ட் நிலத்துக்கும உபயோகப்படுகிற நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான கட்டுவேலைகள்.*

**142.** (1) நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான கட்டுவேலையானது சிறிதுமட்டில் ஒரு பூஸ்திதிக்கும் சிறிதுமட்டில் கவர்ன்மெண்ட் நிலத்துக்கும் உபயோகப்படுகிற விஷயத்திலே, மேற்கண்ட மராமத்தைத் தவறாமல் எப்போதும் டிஸ்டிரிக்ட் கலெக்டர் செய்து முடிக்கவேண்டும்; மேலும் நிலத்துக்குடையவருக்கு நோடிஸ் கொடுத்து, மராமத்து செய்வதற்காக எவ்வளவு செலவு பிடிக்கிறதென்று சொல்லப்படுகிறதோ அதைப் பரிசோதிப்பதற்கும் அது விஷயமாய் அவருக்கு ஏதாகிலும் ஆட்சேபனை இருந்தால் அதைக் கொண்டுவருவதற்கும் அந்த நோடிஸ் மூலமாக அவருக்குச் சமயம் ஏற்படுத்திக்கொடுத்த பிறகு, பிடித்த செலவுகளை கவர்ன்மெண்டாருக்குச் சொந்தமாய் மேல்படி கட்டுவேலையிலிருந்து நீர்பாய்ச்சப் பெறுவதற்கு பாத்தியதையுள்ளதென்று ரெஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கும் நில விஸ்தீர்ணத்துக்கும் நிலத்துக்குடையவருக்குச் சொந்தமாய் மேல்படி கட்டுவேலையிலிருந்து பிரத்தியேகமான கட்டணமில்லாமல் நீர் பாய்ச்சிக்கொள்வதற்கு அவர் சுதந்தரமுள்ளவராயிருக்கும் நில விஸ்தீர்ணத்துக்குமுள்ள சங்கியாபரிமாணப்படி கவர்ன்மெண்டாரும் நிலத்துக்குடையவரும் பங்கிட்டுக் கொள்ள வேண்டும். நிலத்துக்குடையவரிடமிருந்து சேரவேண்டிய பாகமானது நிலத் தீர்வை பாக்கியைப்போல் வசூல் செய்யப்படத்தக்கதாகும்.

(2) கவர்ன்மென்டாரைச் சேர்ந்தவைகளாய், கவர்ன் மென்டார் பராமரித்துவரக் கடமைப்பட்டிருக்கும் எந்தக் கட்டுவேலைகளிலிருந்து கட்டணமில்லாமல் ஜலசர்ப்பரா பெற்றுக்கொள்ள நிலத்துக்குடையவருக்குச் சுதந்தரம் இருக்கிறதோ அந்தக் கட்டுவேலைகளுக்கு (1) குறிப்பிட்ட உட்பிரிவிலுள்ள தெதுவும் பிரயோகப்படமாட்டாது.

(3) இந்தப் பிரிவின்படி டிஸ்டிரிக்ட் கலெக்டர் பிறப்பிக்கும் உத்திரவின் விஷயத்திலே யாதொரு நிலத்துக்குடையவர் அதிருப்தியடைந்தால், அவர் அடியிற்கண்ட ஹேதுக்கள் இரண்டில் எதைக்கொண்டாகிலும் அந்த உத்தரவை ரத்து செய்யவேண்டுமென்றோ திருத்தவேண்டுமென்றோ ஸிவில் கோர்ட்டில் வியாஜ்ஜியம தொடரலாம்:—

(a) சம்பந்தப்பட்ட நீர்ப்பாய்ச்சல் கட்டுவேலையை மராமத்து செய்ய அவர் கடமைப்பட்டிருக்கவில்லையென்பது;

(b) செலவில் எந்த பாகத்தை (1) குறிப்பிட்ட உட்பிரிவின்படி அவர் செலுத்த உட்பட்டவராயிருக்கிறாரோ அது தப்பாய்க் கணக்கிடப்பட்டிருக்கிறதென்பது.

மேல்படி உத்தரவானது ரத்து செய்யப்பட்டாலும் திருத்தப்பட்டாலும், கோர்ட்டார் அக்கிரமமாய் வசூல் செய்யப்பட்டிருப்பதாகக் காணப்படும் யாதொரு தொகையை வாபஸ் செய்யும்படி கட்டளையிடவேண்டும்

*நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான கட்டுவேலைகள் ஒன்றுக்கு மேற்பட்ட பூஸ்திதிகளுக்கு உபயோகப்படுவது.*

**143.** (1) இந்த அத்தியாயத்தில் கண்ட நிபந்தனைகள் ஒன்றுக்கு மேற்பட்ட பூஸ்திதிகளுக்கு உபயோகப்படும் யாதொரு நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான கட்டுவேலைக்குக் கூடுமானமட்டில் பிரயோகப்படும்.

(2) நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான யாதொரு கட்டுவேலை யானது ஒன்றுக்கு மேற்பட்ட பூஸ்திதிகளுக்கு உபயோகப் படுகிற விஷயத்திலே, பிரதேச கவர்ன்மெண்டார்—

(a) அனுசரிக்க வேண்டிய நடவடிக்கை முறையைக் குறித்து ஒழுங்கேற்படுத்துவதற்காகவும்,

(b) சம்பந்தப்பட்ட நிலத்துக்குடையவர்கள், ரயத்துகள் ஆகிய இவர்களின் உரிமைகளையும் பொறுப்புகளையும் நிர்ண யித்து அவைகளைச் சரிக்கட்டுவதற்காகவும்,

(c) மராமத்துகளைச் செய்து முடிப்பதற்காகப் பிடித்த செலவை வசூல் செய்வதைக்குறித்து நிபந்தனை ஏற்படுத்து வதற்காகவும்

விதிகள் செய்யலாம்.

*ஸிவில் கோர்ட்டின் அதிகார வரம்புக்குத் தடை.*

**144.** இந்த அத்தியாயத்தின்படி யாதொரு டிஸ் ட்ரிக்ட் கலெக்டராவது ரெவினியு டிவிஷன் ஆபிஸராவது நடத்தின நடவடிக்கைகள் விஷயமாய் எந்த ஸிவில் கோர்ட் டாரும் இன்ஜங்க்ஷன் என்னும் தடை உத்திரவு பிறப்பிக் கவுங்கூடாது, 142-வது பிரிவில் நிபந்தனை கண்டபடிக் கன்றி மற்றப்படி யாதொரு வியாஜ்ஜியத்தை ஏற்றுக்கொள் ளவுங் கூடாது.

## 9-ம் அத்தியாயம்.

## கைப்பற்று நிலங்களையும் பூஸ்திதிகளையும் உட்பிரிவினை செய்வதும் ட்ரான்ஸ்பர் பண்ணுவதும்.

இந்த அத்தியாயமானது ரயத்துகளுக்கு மிகவும் முக்கியமான ஒரு அத்தியாயம். ரயத்துகளின் கைப்பற்று நிலங்கள் டிரான்ஸ்பர் செய்யப்படும் பக்ஷத்தில் அதைப்பற்றி உடனே நிலத்துக்குடைய வருக்கு தெரிவிக்கப்படுவது மிகவும் அவசியமானதாகும். அப்படி

தெரிவிக்கப்படாமலும் புதிய ரயத்துகள் பட்டாதாரராக அங்கீகரிக்கப்படாமலும் பழைய பட்டாதார் பேரில் டிக்கிரி நடந்து சொத்துக்கள் ஏலம்போடப்பட்டுவருகின்றன. அவைகளை கூடியவரையிலும் நிவர்த்தித்து சரியான ரயத்துக்கு சரியான்படி நோடிஸ் சேருவதற்கும் டிரான்ஸ்பர் அங்கீகரிக்கப்படுவதற்கும் இந்த அத்தியாயத்தில் உள்ள அம்சங்கள் அனுசரிக்கப்படவேண்டும்.

கைப்பற்று நிலமாவது கைப்பற்று நிலத்தின் பாகமாவது
ட்ரான்ஸ்பர் செய்யப்படுவதையாகிலும் மற்
றொருவரைச் சேர்ந்துபோவதையாகிலும்
அங்கீகரிப்பது.

**145.** (1) யாதொரு கைப்பற்று நிலமாவது அதன் யாதொரு பாகமாவது ட்ரான்ஸ்பர் செய்யப்படும் ஒவ்வொரு சமயத்திலும் அல்லது சட்டப்பிரயோக காரணமாக அது மற்றொருவரைச் சேர்ந்துபோகும் ஒவ்வொரு சமயத்திலும் நிலத்துக்குடையவர் இந்தப் பிரிவில்கண்ட நிபந்தனைகளுக்குட்பட்டு அந்தப்படி டிரான்ஸ்பர் செய்யப்படுவதையாகிலும் மற்றொருவரைச் சேர்ந்து போவதையாகிலும் அங்கீகரிக்கவும் இதில் பின்னால் நிபந்தனை கண்டிருக்கிற பிரகாரம் புதிதாய் ஒப்பந்தம் அல்லது ஒப்பந்தங்கள் செய்து கொள்ளவும் கடமைப்பட்டவராவார்.

(2) யாதொரு கைப்பற்று நிலமாவது அதன் யாதொரு பாகமாவது ரயத்தின் செய்கையால் ட்ரான்ஸ்பர் செய்யப்பட்டால் நிலத்துக்குடையவர் ட்ரான்ஸ்பர் செய்தவரிடமிருந்தும் ட்ரான்ஸ்பர் செய்யப்பட்டவரிடமிருந்தும் அதைக்குறித்து எழுத்து மூலமாய் நோடிஸ் பெற்றுக்கொள்வதன்மேல் அந்த ட்ரான்ஸ்பரை அங்கீகரிக்க வேண்டும்.

யாதொரு கைப்பற்று நிலத்தையாவது அதன் யாதொரு பாகத்தையாவது ட்ரான்ஸ்பர் செய்வதைக்

குறித்த யாதொரு தஸ்தவேஜை ரெஜிஸ்டர் செய்வதற்காகக் கொடுத்துக்கொள்ளும் யாதொரு நபர் ட்ரான்ஸ்பர் செய்தவரும் ட்ரான்ஸ்பர் செய்யப்பெற்றவரும் கையெழுத்து போட்டிருப்பதும் நிலத்துக்குடையவருக்கு விலாசம் எழுதியிருப்பதும் ட்ரான்ஸ்பரை அங்கீகரிக்கும்படி கேட்டிருப்பதுமாகிய எழுத்து மூலமான நோடிஸ் ஒன்றை மேற்படி தஸ்தவேஜுடன்கூட கொடுத்துக்கொள்ள வேண்டும்; மேலும், அவர் மேற்படி நோடிஸை நிலத்துக்குடையவருக்கு அனுப்புவதற்காகப் பிரதேச கவர்ன்மெண்டார் நிர்ணயிக்கக்கூடிய கட்டணத்தை ரெஜிஸ்டர் செய்யும் உத்தியோகஸ்தரிடத்தில் செலுத்தவும் வேண்டும். மேலேகண்ட நோடிஸ் வரப்பெற்றுக்கொள்வதன்மேல் நிலத்துக்குடையவர் அந்த டிரான்ஸ்பரை அங்கீகரிக்கவேண்டும்.

(3) யாதொரு கைப்பற்று நிலத்தையாவது அதன் யாதொரு பாகத்தையாவது ட்ரான்ஸ்பர் செய்திருக்கும் விஷயத்தைக் குறித்தும் அந்தப்படி ட்ரான்ஸ்பர் செய்திருப்பது சட்ட சம்மதமாகுமென்பதைக் குறித்தும் யாதொரு ஸிவில் அல்லது ரெவினியு கோர்ட்டாருக்குமுன் நடத்தப்படுவதாய் மேற்படி ட்ரான்ஸ்பர் செய்தவரும் ட்ரான்ஸ்பர் செய்யப்பெற்றவரும் கட்சிக்காரர்களாயிருக்கிற யாதொரு நடவடிக்கையில் கட்டுப்படுத்தும் தீர்மானம் ஒன்று செய்யப்பட்டிருக்கிற விஷயத்திலே நிலத்துக்குடையவர் ஷை நடவடிக்கையில் செய்யப்பட்ட தீர்ப்புக்காயினும் பிறப்பிக்கப்பட்ட டிக்ரிக்காயினும் உத்தரவுக்காயினும் ஸெர்டிபை செய்யப்பட்ட நகல் ஒன்று கொண்டுவந்து காட்டப்படுவதன்மேல் மேலேகண்ட ட்ரான்ஸ்பரை அங்கீகரிக்க கடமைப்பட்டவராவார்.

(4) யாதொரு ஸிவில் கோர்ட்டின் டிக்ரி அல்லது உத்தரவை அனுசரித்தாவது குத்தகைத்தொகை பாக்கிக்காகவாகிலும் கவர்ன்மெண்டாருக்குச் சேரவேண்டிய தீர்வை பாக்கிக்காகவாகிலும் கவர்ன்மெண்டாருக்குச் சேரவேண்டிய தீர்வை பாக்கியைப்போலாயினும் குத்தகைத்தொகை பாக்கியைப்போலாயினும் வசூலிக்கத்தக்க யாதொரு டிமாண்டுக்காகவாகிலும் நடத்தப்பட்ட விற்பனையினாலாவது யாதொரு கைப்பற்று நிலமோ அதன் யாதொரு பாகமோ ட்ரான்ஸ்பர் செய்யப்பட்டால் நிலத்துக்குடையவர் அந்த ட்ரான்ஸ்பரை உறுதிப்படுத்துவதற்கான டிக்ரி அல்லது உத்தரவுக்கு ஸெர்டிபை செய்யப்பட்ட நகல் ஒன்று கொண்டுவந்து காட்டப்படுவதன்மேலாவது யாதொரு கோர்ட்டாருடைய அல்லது சர்க்கார் உத்தியோகஸ்தருடைய உத்தரவின்படி நடத்தப்படும் விற்பனை மூலமாய் ட்ரான்ஸ்பர் செய்யப்படுகிற விஷயங்களில் விக்கிரய ஸெர்டிபிகேட்டாகிலும் ஸெர்டிபை செய்யப்பட்ட அதன் நகலாகிலும் கொண்டுவந்து காட்டப்படுவதன்மேலாவது அந்த ட்ரான்ஸ்பரை அங்கீகரிக்க வேண்டும்.

(5) யாதொரு கைப்பற்று நிலமாவது அதன் யாதொரு பாகமாவது சட்டப் பிரயோக காரணமாக மற்றொருவரைச் சேர்ந்துபோகிற விஷயத்திலே நிலத்துக்குடையவரானவர் எந்த நபருக்கு மேற்படி கைப்பற்று நிலம் சேர்ந்துபோயிருக்கிறதோ அந்த நபரிடமிருந்து அதைக் குறித்து எழுத்து மூலமாய் நோடிஸ் பெற்றுக்கொள்வதன் மேல் அந்தப்படி சேர்ந்து போயிருப்பதை அங்கீகரிக்க வேண்டும்.

(6) (a) ட்ரான்ஸ்பர் செய்தவராவது ட்ரான்ஸ்பர் செய்யப்பெற்றவராவது அந்த ட்ரான்ஸ்பர் அங்கீகரிக்கப்

படிவதற்காக நிலத்துக்குடையவருக்கு விண்ணப்பம் செய்துகொள்வதில் ஒருவர் மற்றொருவருடன் சேர்ந்துக் கொள்ளத் தவறிப்போனால், ஷை ட்ரான்ஸ்பர் செய்தவராகிலும் ட்ரான்ஸ்பர் செய்யப் பெற்றவராகிலும், ஷை கைப்பற்று நிலமோ அதன் யாதொரு பாகமோ எந்த நபர் அல்லது நபர்களுக்குச் சேர்ந்துபோயிருக்கிறதென்னும் விஷயமாய் யாதொரு விவாதம் ஏற்பட்டால், ஷை கைப்பற்று நிலம் அல்லது பாகம் தமக்குச் சேர்ந்துவிட்டதென்று தாவா செய்யும் எந்த நபராகிலும் சந்தர்ப்பத்துக்கேற்றபடி மேற்படி ட்ரான்பரையாயினும் மேலே கண்டபடி சேர்ந்து போயிருப்பதையாயினும் ரெஜிஸ்டர் செய்து உத்தாவு பிறப்பிக்கும்படி கலெக்டருக்கு விண்ணப்பம் செய்து கொள்ளலாம்.

(b) கலெக்டரானவர் ட்ரான்ஸ்பர் செய்தவருக்காவது ட்ரான்ஸ்பர் செய்யப்பெற்றவருக்காவது பற்றுள்ள வேறே நபர்களுக்காவது நோடிஸ் கொடுத்த பிறகும், ட்ரான்ஸ்பர் செய்த விஷயத்தைக்குறித்தும் ட்ரான்ஸ்பர் செய்தது சட்டசம்மதமாகுமாவென்பதைக் குறித்துமாகிலும் எந்த நபர் அல்லது நபர்களுக்கு மேற்படி கைப்பற்று நிலம் அல்லது பாகம் சேர்ந்து போயிருக்கிறதென்னும் விஷயத்தைக் குறித்தாகிலும் தமக்குத் தகுதியாகத்தோற்றும் விசாரணை செய்த பிறகும், சந்தர்ப்பத்துக்கேற்றபடி மேற்படி ட்ரான்ஸ்பரையாயினும் மேலேகண்டபடிச் சேர்ந்துபோயிருப்பதையாயினும் ரெஜிஸ்டர் செய்து உத்தாவு பிறப்பிக்கலாம். அப்படிப்பட்ட உத்தாவுக்கு ரெஜிஸ்டர் செய்யப்பட்ட நகல் ஒன்று கொண்டுவந்து காட்டப்படுவதன்மேல் நிலத்துக்குடையவர் அந்த ட்ரான்ஸ்பரையாவது அந்தப்படி சேர்ந்து போயிருப்பதையாவது அங்கீகரிக்கக் கடமைப்பட்டவராவார்.

(c) யாதொரு ட்ரான்ஸ்பரை உறுதிப்படுத்துவதற்காவது, ரத்து செய்வதற்காவது சட்டப்பிரயோக காரணமாக மற்றொருவரைச் சேர்ந்துபோயிருப்பதை அனுசரித்துச் செய்யப்படும் யாதொரு தாவாவை அமுலுக்குக் கொண்டு வருவதற்காவது ஸிவில் கோர்ட்டில் வியாஜ்ஜியம் தொடருவதற்கு இந்த உட்பிரிவில் கண்டதெதனாலும் தடை ஏற்படமாட்டாது.

(7) இந்தப் பிரிவில்கண்ட முந்திய நிபந்தனைகளின்படி யாதொரு கைப்பற்று நிலமாவது அதன் பாகமாவது ட்ரான்ஸ்பர் செய்யப்பட்டதையாகிலும் அது மற்றொருவரைச் சேர்ந்து போனதையாகிலும் நிலத்துக்குடையவர், அங்கீகரித்திருந்தால்—

(i) கைப்பற்று நிலம் முழுவதும் ட்ரான்ஸ்பர் செய்யப்பட்டிருக்கிற அல்லது மற்றொருவரைச் சேர்ந்துபோயிருக்கிற விஷயத்திலே, நிலத்துக்குடையவர் - ட்ரான்ஸ்பர் செய்யப்பெற்றவருடனாவது எந்த நபருக்குக் கைப்பற்று நிலம் சேர்ந்துபோகிறதோ அந்த நபருடனாவது பிரத்தியேகமாய் ஒப்பந்தம் செய்துகொள்ளக் கடமைப்பட்டவராவார்; அல்லது, மேலே கண்டபடி ட்ரான்ஸ்பர் செய்யப்பெற்றவர்கள் அல்லது மேற்படி நபர்கள் ஒருவருக்கு மேற்பட்டிருந்தால் அப்படிப்பட்ட ட்ரான்ஸ்பர் செய்யப்பெற்றவர்கள் அல்லது நபர்களுடன் கூட்டாய் ஒப்பந்தம் செய்துகொள்ளக் கடமைப்பட்டவராவார்.

(ii) கைப்பற்று நிலத்தின் யாதொரு பாகம் மேலே கண்டபடி ட்ரான்ஸ்பர் செய்யப்பட்டிருந்து அல்லது மற்றொருவரைச் சேர்ந்துபோயிருந்து, அந்த பாகம் அளந்து எல்லை ஏற்படுத்தி வரையறுக்கப்படாதிருக்கிற விஷயத்

திலே, நிலத்துக்குடையவர் - ட்ரான்ஸ்பர் செய்தவருடனும் ட்ரான்ஸ்பர் செய்யப் பெற்றவருடனும் இதர கூட்டுப்பங்குக்காரர்கள் எவர்களேனும் இருந்தால் அவர்களுடனுமாவது எந்த நபர் அல்லது நபர்களுக்கு மேற்படி கைப்பற்று நிலத்தின் பாகம் சேர்ந்துபோகிறதோ அந்த நபர் அல்லது நபர்களுடனும் இதர கூட்டுப்பங்குக்காரர்கள் எவர்களேனும் இருந்தால் அவர்களுடனுமாவது கூட்டாய் ஒப்பந்தம் செய்துகொள்ளக்கடமைப்பட்டவராவார்;

ஆனால் ட்ரான்ஸ்பர் செய்தவருக்கு மேற்படி கைப்பற்று நிலத்தில் இனி எவ்வித பாத்தியதையும் இல்லாமல் போய்விட்டால் அவருடைய பெயரை அவர் சம்மதத்துடன் மேற்படி ஒப்பந்தத்தில் சேர்க்காமல் விட்டுவிடலாம்;

(iii) கைப்பற்று நிலத்தின் யாதொரு பாகம் மேலேகண்டபடி ட்ரான்ஸ்பர் செய்யப்பட்டிருந்து அல்லது மற்றொருவரைச் சேர்ந்துபோயிருந்து அந்த பாகம் அளந்து எல்லை ஏற்படுத்தி வரையறுக்கப்பட்டிருக்கிற விஷயத்திலே நிலத்துக்குடையவர் (பிரிவினையினால் ஏற்பட்ட) உட் பகுதிகளைக் கைப்பற்றில் வைத்திருப்பவர்களுடன் தனித்தனியாய் ஒப்பந்தங்கள் செய்துகொள்ளக் கடமைப்பட்டவராவார்;

ஆனால், மேற்படி உட்பகுதிகளில் ஒவ்வொன்றும் அது விஷயமாய்ப் பிரதேச கவர்ன்மெண்டாரால் செய்யப்பட்ட விதிகளை அனுசரித்திருந்தாலன்றி மற்றப்படி, நிலத்துக்குடையவர் மேலேக்கண்டபடி ஒப்பந்தங்கள் செய்துகொள்ளக் கடமைப்பட்டவராகமாட்டார்.

(8) (7) குறிப்பிட்ட உட்பிரிவைச் சேர்ந்த (iii) அடையாளமிட்ட பகுதியுடன் சேர்ந்திருக்கும் விலக்கு

நிபந்தனையின்கீழ் வரும் யாதொரு விஷயத்திலே நிலத்துக் குடையவர் (பிரிவினையினால் ஏற்பட்ட) உட்பகுதிகளைக் கைப்பற்றில் வைத்திருப்பவர்களோடு தனித்தனியாய் ஒப்பந்தங்கள் செய்து கொள்ளாவிட்டால், அவர் அவர்களோடு கூட்டாய் ஒப்பந்தம் செய்து கொள்ளக் கடமைப்பட்டவராவார்.

(9) நிலத்துக்குடையவர் (7) குறிப்பிட்ட உட்பிரிவைச் சேர்ந்த (iii) அடையாளமிட்ட பகுதியில் குறிப்பிட்டிருக்கும் உட்பகுதிகளுக்குள் குத்தகைத் தொகையை முதன்முதல் பங்கிடு செய்யவேண்டும்.

ஆறுமாத காலத்துக்கு மேற்பட்டு குத்தகைத் தொகைகளைப் பங்கீடு செய்யாமல் தாமதம் செய்யப்பட்டாலும் அந்தப்படி பங்கிடு செய்திருப்பதைச் சம்பந்தப்பட்ட கட்சிக்காரர்களில் எவராகிலும் ஒப்புக்கொள்ளாவிட்டாலும், கலெக்டரானவர் அப்படிப்பட்ட யாதொரு கட்சிக்காரர் விண்ணப்பம் செய்துகொள்வதன்மேல், குத்தகைத் தொகையைப் பங்கிடு செய்யவேண்டும்; மேலும், அக்கப்படி பங்கிடு செய்திருப்பதானது நிலத்துக்குடையவரையும் சம்பந்தப்பட்ட இதர சகல கட்சிக்காரர்களையும் கட்டுப்படுத்தக் கூடியதாகும்.

(10) யாதொரு கைப்பற்று நிலம் ட்ரான்ஸ்பர் செய்யப்படுவதனாலாவது அந்தப்படி ட்ரான்ஸ்பர் செய்யப்பட்டிருப்பதை நிலத்துக்குடையவர் அங்கீகரிப்பதனாலாவது அந்தக் கைப்பற்று நிலம் அல்லது அதில் அடங்கியிருக்கும் நிலங்கள் அந்தப்படி ட்ரான்ஸ்பர் செய்யப்பட்ட தேதிக்கு முன் அவைகள் விஷயமாய் பாக்கியாயிருந்து சேர்ந்து வந்திருக்கும் குத்தகைத் தொகைக்காக மேற்படி கைப்பற்று நிலம் அல்லது அதில் அடங்கியிருக்கும் நிலங்களின்மேல்

ஏற்பட்டுள்ள பொறுப்புக்காகிலும் அந்த குத்தகைத்தொகை விஷயமாய் அதற்கு அல்லது அவைகளுக்குள்ள உத்தரவாதத்துக்காகிலும் எந்த விதத்திலும் பாதகம் உண்டாகமாட்டாது.

(11) யாதொரு கைப்பற்று நிலத்தைக் கூட்டுப்பங்குக்காரர்களுக்குள் பாகம் பிரிப்பதானது ட்ரான்ஸ்பராயிருந்தால் எப்படியோ அப்படியே இந்தப் பிரிவில் கண்ட நிபந்தனைகள் அந்த பாகப்பிரிவினைக்குப் பிரயோகப்படும்.

குறிப்புகள்.

பழைய 145-வது பிரிவும் 146-வது பிரிவும் 1934-ம் வருஷத்திய திருத்தத்தினல் முற்றிலும் மாற்றப்பட்டு 145-வது பிரிவு என்று ஒரே பிரிவாக அமைக்கப்பட்டது. இதில் விவரமாக பலவிதமான பராதீனங்கள், டிக்ரிகள் இவைகளையொட்டி உரிமைகள் நிலஸ்வான்தாரரால் அங்கீகரிக்கப்பட வேண்டுமென்று கூறப்பட்டுள்ளது.

ஒரு நபர் தாம் ரயத்தாக அங்கீகரிக்கப்பட்டு 112-வது பிரிவின் கீழ் அல்லது அதைப்போன்ற இதர பிரிவுகளின் கீழ் நிலஸ்வான்தாரர் எடுத்துக்கொள்ளும் நடவடிக்கைகளில் ஆக்ஷேபிக்க வேண்டுமானல் அவர் இந்தப் பிரிவின்கீழ் உள்ள நடவடிக்கைகளை முன்னே கைக்கொண்ட பிறகு தான் ரயத்து என்று அங்கீகரிக்கப்படுவதற்கு ஹேது உண்டாகும். அப்படியொன்றும் செய்யாமல் ஸிவில் கோர்ட்டில் நில விஸ்தீர்ண விஷயமாய் தனக்கு பரிஹாரம் கிடைக்க வேண்டும் என்று தாவா செய்வது சட்ட சம்மதமாகாது. 1932. M. W. N. 1093.

ஒரு கைப்பற்று நிலமானது பல பராதீனங்களுக்குட்பட்டிருந்தால் கடைசியாகப் பராதீனம் பெற்றவர் இந்தப்பிரிவின் கீழ் பரிஹாரம் தேடிக்கொள்ள முடியாது என்று சொல்வதற்கில்லை. ஆனல் அப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் பராதீனம் செய்தவர்கள் பராதீனம் பெற்றவர்கள் ஆகிய எல்லா நபர்களும் ஒன்று சேர்ந்து பனு கொடு

க்க வேண்டும். வெங்கடராமய்யா vs. பித்தாபுரம் மஹாராஜா 67. M. L. J. 407. இவ்விஷயம புதிய திருத்தப்பட்ட பிரிவிலும் நன்கு விளக்கப்பட்டது.

ஒரு கைப்பற்று நிலமானது பாகங்களாக விற்பனை செய்யப்பட்டால் அந்த பாகங்களை பிரித்துக்கொடுக்கும் கடமை அல்லது உரிமையானது நிலத்துக்குடையவருடையது. அவர் நியாயமாயும் பக்ஷபாதமில்லாமலும் அந்த பாகத்துக்குரிய ரெண்டை நிர்மாணம் செய்யவேண்டும். அவர் செய்யாவிட்டால் ரயத்தானவர் 55-வது பிரிவின் கீழ் சரியான பட்டா தேவையென்று தாவா செய்து பரிஹாரம் பெறலாம். வெங்கடராமய்யா vs. பித்தாபுரம் மஹாராஜா 67. M. L. J. 407.

டிரான்ஸ்பா பெற்றவர் 145-வது பிரிவின் கீழ் தன்னுடைய ட்ரான்ஸ்பரை அங்கீகாரம் செய்வதற்காக நடவடிக்கை எடுத்துக் கொண்டாலொழிய நிலஸ்வான்தாரர் அவரை ரயத்தாக ஏற்றுக் கொள்ள அவசியமில்லை யென்று 143. I. C. 741. என்னும் கேஸில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. ஆனல் அதற்காக எவ்வளவு முன் னெச்சரிக்கையான நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட வேண்டுமோ அவைகளனைத்தும் புதிய பிரிவில் சொல்லப்பட்டிருக்கின்றன.

ஒரு ரயத்து தாம் டிரான்ஸ்பர் செய்து விட்டதைப்பற்றி நிலத்துக்குடையவருக்கு நோடிஸ் கொடுத்து விட்டால் அவர் அதன் பிறகு ரெண்டுக்காக பத்தப்படவேண்டிய அவசியமில்லை யென்று 27. M. L. J. 397. என்னும் கேஸில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

**146**. விட்டுவிடப்பட்டது.

நோடிஸ் கொடுப்பதற்கு முன்னே, ட்ரான்ஸ்பர் செய்வதற்கு அல்லது கூட்டுப்பகுதிக்காரருக்கு விரோதமாக ஏற்பட்ட நடவடிக்கைகள் ட்ரான்ஸ்பர் செய்யப்பெற்றவருக்கு அல்லது கூட்டுப்பங்குக்காரருக்கு விரோதமாகச் செலாவணியாகுமென்பது.

**147**. (1) (a) 145-வது பிரிவைச் சேர்ந்த (2) குறிப்பிட்ட உட்பிரிவின்படி. நோடிஸ் கொடுப்பதற்கு முன்பாவது,

(b) அந்த பிரிவைச் சேர்ந்த (3) குறிப்பிட்ட உட்பிரிவின்படி தீர்ப்புக்காகிலும் டிக்ரிக்காகிலும் உத்தரவுக்காகிலும் ஸெர்டிபை செய்யப்பட்ட நகலைக் கொண்டுவந்து காட்டுவதற்கு முன்பாவது,

(c) அந்த பிரிவைச் சேர்ந்த (4) குறிப்பிட்ட உட்பிரிவின்படி டிக்ரி அல்லது உத்தரவுக்கு ஸெர்டிபை செய்யப்பட்ட நகலையாயினும் விக்கிரய ஸெர்டிபிகேட் அல்லது அதற்கு ஸெர்டிபை செய்யப்பட்ட நகலையாயினும் கொண்டு வந்து காட்டுவதற்கு முன்பாவது,

(d) அந்த பிரிவைச் சேர்ந்த (6) குறிப்பிட்ட உட்பிரிவின்படி உத்தரவுக்கு ஸெர்டிபை செய்யப்பட்ட நகல் ஒன்றைக் கொண்டுவந்து காட்டுவதற்கு முன்பாவது,

ட்ரான்ஸ்பர் செய்வதற்கு அல்லது கூட்டுப்பங்குக்காரர்களுக்கு விரோதமாக இந்த ஆக்டின்படி ஆரம்பிக்கப்பட்ட அல்லது செய்து முடிக்கப்பட்ட எல்லாக்காரியங்களும் நடவடிக்கைகளும்-அப்படிப்பட்ட காரியங்களும் நடவடிக்கைகளும் எதற்காகப் பாக்கி சேரவேண்டுமோ அந்த நிலத்தையும், அதில் பயிராய்க் கொண்டிருக்கும் மாசூல்களையும், அதிலிருந்து சேகரிக்கப்பட்ட விளைபொருள்களையும் பாதிக்கிறமட்டிலே அல்லது பாதிக்கிறதாகப் பொருள் படுகிறமட்டிலே, ட்ரான்ஸ்பர் செய்யப்பெற்றவருக்கு அல்லது கூட்டுப்பங்குக்காரருக்கே விரோதமாக அப்படிப்பட்ட காரியங்களும் நடவடிக்கைகளும் ஆரம்பிக்கப்பட்டு அல்லது நடத்தப்பட்டு அவரே பாக்கிதாரராயிருந்தாலெப்படியோ அப்படியே அவருக்கு விரோதமாகச் செலாவணியாவதோடுகூட பிரயோசனப்படத்தக்கவைகளுமாகும்.

(2) 145-வது பிரிவின்படி கொடுக்கவேண்டிய நோட்டீஸை 78-வது பிரிவைச்சேர்ந்த (2) குறிப்பிட்ட உட்பிரிவில் நிபந்தனை கண்டிருக்கிறவிதமாக சேர்ப்பிக்கலாம்.

(3) மேலேகண்டபடி எழுத்து மூலமான நோட்டீஸ் கொடுக்கப்படுகிற வரையிலாகிலும் சந்தர்ப்பத்துக்கேற்றபடி (1) குறிப்பிட்ட உட்பிரிவில் கண்ட (b) (c) (d) அடையாளமிட்ட பகுதிகளில் குறிப்பிட்டிருக்கும் தஸ்தாவேஜு கொண்டுவந்து காட்டப்படுகிறவரையிலாகிலும் ட்ரான்ஸ்பர் செய்தவராவது கூட்டுப்பங்குக்காரராவது ட்ரான்ஸ்பர் அல்லது பிரிவினை செய்த காரணத்தினால் மாத்திரமே, ஒரு ரயத்தாக அவருக்கு ஏற்பட்டிருக்கிற பொறுப்புகளில் எதற்காவது உட்பட்டவராகாமற் போகமாட்டார்.

குறிப்புகள்.

ஒரு ரயத்து மற்றொருவருக்கு தனது கைப்பற்று நிலத்தை ட்ரான்ஸ்பர் செய்தார். ஆனால், அவராவது ட்ரான்ஸ்பர் பெற்றவராவது நிலத்துக்குடையவருக்கு (அதாவது ஜமீன்தாருக்கு) தெரிவிக்கவில்லை. இவர்கள் நியாயமாய் தெரிவித்திருக்கவேண்டும். அப்படி யொன்றும் தெரிவிக்காததினால் நிலம் விஷயமாய் 42-வது பிரிவின் கீழ் நடவடிக்கைகளை தொடங்கின காலத்தில் நிலஸ்வான்தாரர் எவர் பேரில் பட்டாயிருந்ததோ அவருக்கு மாத்திரம் நோட்டீஸ் கொடுத்து நில விஸ்தீரணம் அதிகமாயிருப்பதால் ரெண்ட் அதிகப்படுத்தப்படவேணுமென்று கலெக்டரிடம் விண்ணப்பம் செய்து கொண்டார். நிலத்தை பராதீனம் செய்துகொண்டவர் வாஸ்தவத்தில் சொத்தை பெற்றிருந்தபோதிலும் அவர் இந்த நடவடிக்கைகளில் பார்ட்டியாக சேர்க்கப்படவில்லை. நிலத்தை பராதீனம் செய்தவர் தமக்கு யாதொரு அக்கறையும் இல்லையென்று சும்மாகவே இருந்ததில் மனு ஒருதலைப்பக்ஷமாக தீர்மானிக்கப்பட்டு ரெண்ட் உயர்த்தப்பட்டது. பிறகு அதிகப்படுத்தின ரெண்ட் விகிதம் பெறுவதற்கு நிலத்துக்குடையவர் தாவா செய்தார். இந்த தாவாவில் பராதீனம் செய்தவர் பராதீனம் பெற்றவர் இரண்டு பேர்களையும் பார்ட்டிகளாகச் சேர்த்

தார். பராதீனம் பெற்றவர் தாம் முந்தின நடவடிக்கைகளில் பார்ட்டியாக சேர்க்கப்படவில்லையாதலால் அவை தம்மை பாதிக்காது என்றும் ரெண்டை அதிகப்படுத்தினது செல்லாது என்றும் வாதம் செய்வதற்கு தமக்கு உரிமையுண்டென்று கூறினர். இம்மாதிரி வாதிக்கலாமா என்ற கேள்வி வந்ததில் 147-வது பிரிவானது அதற்கு ஒரு தடையாகும் என்றும் அவர் முந்தின நடவடிக்கைகளுக்கு கட்டுபட வேண்டும் என்றும் தீர்மானிக்கப்பட்டது. 147-வது பிரிவானது 42-வது பிரிவின் கீழ் எடுக்கப்பட்ட நடவடிக்கைகளுக்கும் பிரயோகமாகும் என்றும் தீர்மானிப்பட்டது சுப்பாரெட்டி vs. வெங்கட சுப்பா ரெட்டி 55. M L. J. 72.

*நிலத்துக்குடையவரும் ட்ரான்ஸ்பர் செய்யப்பெற்றவர் அல்லது கூட்டுப்பங்குக்காரரும் ட்ரான்ஸ்பரைக் குறித்து அல்லது பாகம் பிரித்துக்கொள்வதைக் குறித்து நோடிஸ்.*

**148.** யாதொரு நிலத்துக்குடையவர் தம்முடைய பூஸ்திதி அல்லது நிலம் முழுவதையுமோ அதில் ஒரு பாகத்தையோ ட்ரான்ஸ்பர் செய்தாலும், கூட்டுப்பங்குக்காரர்களுக்குள் யாதொரு பூஸ்திதியாவது நிலமாவது பாகம் பிரிக்கப்பட்டாலும் சந்தர்ப்பத்துக்கேற்றபடி மேற்படி நிலத்துக்குடையவரும் ட்ரான்ஸ்பர் செய்யப்பெற்றவர் அல்லது கூட்டுப்பங்குக்காரரும் - ஜில்லா கெஜட்டிற் பிரசுரம் செய்வதும் இன்னும் பிரதேச கவர்ன்மெண்டார் விதி யேற்படுத்தி எப்படி கட்டளையிடுவார்களோ அப்படிப்பட்ட வேறே விதமாகவும், சந்தர்ப்பத்துக்கேற்றபடி ட்ரான்ஸ்பர் செய்யப்பட்ட அல்லது பாகித்துக்கொள்ளப்பட்ட நிலத்தை அனுபோகத்திலுடைய ராயத்துகளுக்கு மேற்படி ட்ரான்ஸ்பர் அல்லது பாகுபாட்டைக்குறித்து நோடிஸ் கொடுக்க வேண்டும்; அப்படிப்பட்ட நோடிஸ் கொடுத்தாலன்றி மற்றப்படிக்கும் கொடுக்கிறவரையிலும், மேலேகண்டபடி ட்ரான்ஸ்பரான பிறகு அல்லது பாகித்துக் கொள்ளப்பட்ட பிறகு

சேரவேண்டியிருந்து அப்படிப்பட்ட ட்ரான்ஸ்பர் அல்லது பாகுபாட்டைக்குறித்த நோடிஸ் ரயத்துக்குக் கொடுக்கப் பட்டதற்கு முன்னே மேல்படி நிலத்துக்குடையவரிடத்தில் செலுத்திவிட்ட யாதொரு குத்தகைத் தொகை விஷயமாய் ட்ரான்ஸ்பர் செய்யப் பெற்றவருக்காயினும் கூட்டுப்பங்குக்காரருக்காயினும் எந்த ரயத்தும் ஜவாப் தாரியாகமாட்டார்; மேலும், அப்படிப்பட்ட நோடிஸ் கொடுக்கப்பெறாத ரயத்துகளில் எவராவது மேற்படி நிலத்துக் குடையவர்மேல் நடத்தின நடவடிக்கைகளெல்லாம்-ட்ரான்ஸ்பர் செய்யப்பெற்றவர் அல்லது கூட்டுப்பங்குக்காரர் மேலேயே முதலில் நடத்தப்பட்டிருந்தாலெப்படியோ அப்படியே அவருக்கு விரோதமாய்ச் செலாவணியாவதோடுங்கூட அவரைக்கட்டுப்படுத்தக் கூடியனவைகளுமாகும்.

## 10-அத்தியாயம்.

### ராஜிநாமாகொடுப்பதும் (நிலத்தைவிட்டு) அப்புறப் படுத்துவதும் (இஜெக்ட்மெண்டும்.)

*ரயத்து கைப்பற்று நிலத்துக்கு ராஜிநாமா கொடுப்பது.*

**149.** (1) ஒவ்வொரு ரயத்தும்-யாதொரு ரெவின்யு வருஷத்தின் முடிவிலிருந்து ஊர்ஜ்ஜிதத்துக்கு வரும்படியாய், ஒரு ரெவின்யு புலத்தைக்காட்டிலும் குறைவாயிராத தம்முடைய கைப்பற்று நிலத்துக்காகிலும் அதன் யாதொரு பாகத்துக்காகிலும் தம்மால் கையெழுத்திடப்பட்ட எழுதிய நோட்டீஸ் மூலமாய் ராஜிநாமா கொடுத்துவிடலாம்; ஆனால், ராஜிநாமா கொடுக்கப்பட்ட பாகமானது போக்கு வரவு வசதியமைந்ததாயிருக்க வேண்டும்; மேலும், (ராஜிநாமா கொடுக்காமல்) வைத்துக் கொள்ளப்படும் பாகத்துக்குச்

செலுத்தவேண்டிய குத்தகைத்தொகையை - ரயத்து விண்ணப்பம் செய்துக்கொள்வதன்மேல் கலெக்டரால் புனராலோசனை செய்யப்படுவதற்குட்பட்டு, நிலத்துக்குடையவர் பகுத்துக் கொடுக்கவேண்டும். (ராஜிநாமா கொடுக்காமல்) வைத்துக்கொள்ளப்படும் பாகத்தைப் புதிய கைப்பற்று நிலமாகப் பாவிக்கவேண்டியதோடுங்கூட, எந்த வருஷத்தில் ராஜிநாமாவைப்பற்றி நோடிஸ் கொடுக்கப்படுகிறதோ அந்த வருஷத்துக்கு அடுத்துவரும் ரெவின்யு வருஷத்துக்காக ஷை பாகத்தின் சம்பந்தமாய் புதிய பட்டா முச்சிலிக்கா பரிவர்த்தனம் செய்துகொள்ளவும் வேண்டும்.

(2) அந்தப்படி தம் கைப்பற்று நிலத்துக்கோ அதன் பாகத்துக்கோ ராஜிநாமா கொடுக்கிற யாதொரு ரயத்து-ராஜிநாமா கொடுக்க தாம் உத்தேசித்திருப்பதைக்குறித்து ஏப்ரல் மாதம் முதல்தேதியன்றைக்காயினும் அதற்கு முன்னதாகவாயினும் நிலத்துக்குடையவருக்கு நோடிஸ் கொடுத்தாலன்றி மற்றப்படி, ஷை நிலத்துக்குடையவர் கலெக்டரிடத்தில் வியாஜ்ஜியம் செய்துக்கொள்ளும் பட்சத்திலே, அப்படி ராஜிநாமா கொடுக்கும் தேதிக்கு அடுத்து வருகிற ரெவின்யு வருஷத்தில் அந்தக்கைப்பற்று நிலத்தின் அல்லது அதன் பாகத்தின் விஷயத்திலே உண்டாகக்கூடிய யாதொரு குத்தகைத்தொகை நஷ்டத்தை நிலத்துக்குடையவருக்குக் கட்டிக்கொடுக்க உட்பட்டவராவார்.

நோடிஸ் சேர்ப்பிப்பதற்காக ரெவின்யு ஆபீஸரிடத்தில் விண்ணப்பஞ்செய்துக்கொள்வது.

**150.** (1) 149-வது பிரிவைச்சேர்ந்த (2) குறிப்பிட்ட உட்பிரிவின்படி யாதொரு நோடிஸைப் பெற்றுக் கொள்ள மாட்டேனென்று நிலத்துக்குடையவர் நிராகரித்தால் ரயத்து கலெக்டரிடத்தில் ஏப்ரல் மாதம் பதினைந்தாம்

தேதிக்கு மேற்படாமல் விண்ணப்பஞ் செய்துகொள்ளலாம்; அதன்மேல் அந்த கலெக்டர் அப்படிப்பட்ட நிலத்துக்குடையவருக்கு அந்த கோடீஸைச்சேர்ப்பிக்க வேண்டும்; சேர்ப்பிப்பதற்குப்பிடிக்கும் செலவை ரயத்து கொடுக்கவேண்டும்.

(2) அப்படிப்பட்ட ஒவ்வொரு கோடீஸும் எப்போது முதலில் கொடுப்பதற்காகக் காட்டப்பட்டதோ அப்போது பெற்றுக்கொள்ளப்பட்டதாக எண்ணப்படும்.

(நிலத்தைவிட்டு) அப்புறப்படுத்துவதற்கான வியாஜ்ஜியம்.

**151.** யாதொரு ரயத்து - விவசாய காரியங்களின் சம்பந்தமாகத் தம் கைப்பற்று நிலத்துக்குள்ள மதிப்பை விசேஷமாய்க் கெடுத்து அந்த நிலத்தை முக்கியமான அம்சங்களில் அப்படிப்பட்ட காரியங்களுக்குத் தகுதியற்றதாக்கிவிட்டாரென்னும் ஹேதுவைக்கொண்டுதான் அந்த ரயத்தை டி கைப்பற்று நிலத்திலிருந்து அப்புறப்படுத்த வேண்டுமென்று நிலத்துக்குடையவர் கலெக்டரிடத்தில் வியாஜ்ஜியம் செய்துக்கொள்ளலாம்.

(2) இந்தப்பிரிவில் என்னசொல்லியிருந்த போதிலும் பாதகமில்லாமலே,யாதொரு நிலத்துக்குடையவர்-(நிலத்தை விட்டு) அப்புறப்படுத்துவதோடுங்கூட அல்லது அதற்குப் பர்த்தியாக பிரதிபலனுக்காகவாகிலும், பிரதிபலன் சகிதமாகவோ அது இல்லாமலோ, யாதொரு இன்ஜங்க்ஷனென்னும் உத்தரவுக்காகவாகிலும், சேதப்பட்டதை அல்லது வீண்போனதைச் சரிபடுத்திக்கொடுக்க வேண்டுமென்றாகிலும், கலெக்டரிடத்தில் வியாஜ்ஜியம் தொடரலாம்.

குறிப்புகள்.

இப்பிரிவின் கீழ் தாவா செய்யும் உரிமையானது எப்பொழுது கிளம்புமென்றால் கைப்பற்று நிலமானது யோக்தத்தில் பயிர் செய

யப்படுவதற்கு லாயக்கற்றதாக செய்யப்பட்ட சந்தர்ப்பங்களில்தான் இசையும் 39 Mad. 373.

ஒரு ஜமீன்தார் தன்னுடைய ரயத்தின் கைப்பற்றிலுள்ள நிலத்தின் அடி பூமியில் உள்ள உலோகங்களும் கற்களும் தன்னுடையது என்று ஸ்தாபிதம் பெறுவதற்கும் தன்னுடைய பூமியிலிருந்து இனி தன்னுடைய உத்திரவில்லாமல் கற்களை வெட்டக்கூடாதென்று ஒரு சாஸ்வத இன்ஜஙஷன் (தடை உத்திரவு) பெறுவதற்கும் தன்னுடைய உத்திரவில்லாமல் கற்களை வெட்டி எடுத்துக்கொண்டு போனதற்காக டாமேஜ் தொகை பெறுவதற்கும் ஒரு சிவில் கோர்ட்டில் தாவா செய்யலாமா, அத்தகைய கேஸை சிவில் கோர்ட்டார் பிடித்து விசாரிக்கலாமா என்பது கேள்வி. சென்னை எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டின் 151-வது பிரிவின் கீழாவது அல்லது வேறே எந்தப் பிரிவின் கீழாவது அத்தகைய தாவா செய்வதற்கு யாதொரு தடையும் கிடையாதாதலால் அதை சிவில் கோர்ட்டில் தாக்கல் செய்யலாம் என்றே சென்னை ஹைக்கோர்ட்டார் தீர்மானித்திருக்கின்றனர்.

சென்னை எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டின் 11-வது பிரிவில் ஒரு ரயத்து தன்னுடைய கைப்பற்றில் உள்ள நிலத்தை அதன் மதிப்பு குறையும்படி செய்யாமல் எவ்விதமாகவாவது உபயோகப்படுத்தலாம் என்றுள்ளது. நிலம் என்பது அதன் சாதாரண அர்த்தத்தில் மொத்த பூமி என்று தான் நாம் கொள்ளவேண்டும். அதாவது மேற் பூமியிலிருந்து அடியில் ஜலம் உள்ள வரையிலும் இருக்கும் பூமி பாகம் என்று அர்த்தமாகும்: கற்பாறையானது மணல் அல்லது மணணைப்போலவே நிலத்தைச் சேர்ந்ததாகவே கவனிக்கப்படும். ஆனால் ஒரு நிலத்திலிருந்து வெட்டி எடுக்காமல் வெறும் கற்கள் அல்லது பெரும்பாறைகளை மாத்திரம் அகற்றிக் கொண்டுபோவது தாவா செய்வதற்கு இடங்கொடுக்காது. அந்த நிலத்தில் நிலச்சரி முதலிய வியாபாரத்திற்கு உதவும்படியான வஸ்துக்களைக் கொண்டு போனால் ஒழிய நிலஸ்வான்தாரர் கற்களைப்பற்றி மாத்திரம் தாவா செய்வதற்கில்லை.

கற்களை வெட்டினதற்காக தாவா செய்யும்படி இருந்தாலும் உத்திரவில்லாமல் கற்களை வெட்டினதற்காக லைசென்ஸ் கட்டணமாக

ஒரு தொகையைப் பெறலாமே யொழிய வெட்டி யெடுக்கப்பட்டவைகளின் விலையைக் கேட்பதற்கில்லை. அகில இந்தியா ஜர்னல் பத்திரிகை. 3-வது வால்யம் கேஸுகளின் குறிப்புகள் 80-வது பக்கம்.

இந்த பிரிவின்கீழ் நிலஸ்வான்தாரருக்கு கிடைக்ககூடிய சுவாதீனம் என்பது ஒப்புக்காக சுவாதீனமல்ல. பிரத்தியக்ஷ சுவாதீனமாகும். ஆகையால் தமக்கு பாதிபாகம் கிடைக்க வேண்டு மென்றுமென்றும் அல்லது தமக்கு ஜாயிண்ட் சுவாதீனம் வேண்டுமென்றும் கூறி இப்பிரிவின் கீழ் பரிஹாரம் கேட்பதற்கு இடமில்லை. 26 M. L. J. 435.

ஒரு ரயத்தானவர் தன்னுடைய செய்கைகளினால் கைப்பற்று நிலத்தை விவசாயத்திற்கு லாயக்கில்லாமல் செய்து விட்டாரா இல்லையா என்பது ஒரே சட்ட அம்சமல்ல. அது சங்கதியைப் பொருத்தின அம்சமாகும். அதைப்பற்றி கீழ்க்கோர்ட்டுகளினுடைய தீர்மானம் முடிவானதாகும். ஹைக்கோர்ட்டுகள் விசாரிப்பதற்கில்லை. 17 M. L. J. 351.

ஒரு நிலமானது வீடு கட்டுவதற்கான மனைகளாக பகுக்கப்பட்டால் அதனால் விவசாய காரியங்களுக்கு பங்கம் ஏற்பட்டதாகவே கருதப்படும். ராஜா வாஸிரெட்டி vs. காமேஸ்வர சோமயாஜுலு 50. M L. J. 97.

இதே கேஸானது சென்னை ஹைக்கோர்ட்டில் ஒரு லெட்டர்ஸ் பேடெண்ட் அப்பீலில் வந்தது. அது நாராயணராவ் vs. ராஜா வாஸிரெட்டி 54 M. L. J. 621 என்னும் கேஸ். அதில் 151-வது பிரிவின் பிரயோகத்தைப்பற்றி கூறுகையில் ஹைக்கோர்ட்டு ஜட்ஜுகள் பின்வருமாறு கூறியுள்ளனர் :—யாதொரு நிலத்தில் எதனெனவே கெடுதி நடந்து அதன் பேரில் ரயத்தை அப்புறப்படுத்துவதற்காக நடவடிக்கைகள் எடுக்கும் சந்தர்ப்பங்களைதான் இது குறிக்கும். இனி கட்டிடம் கட்டப் போவதினால் நஷ்டம் ஏற்படக்கூடும் என்று முன் ஜாக்கிரதையாக இருப்பதற்கல்ல. 2 ஏகரா விஸ்தீரணமுள்ள ஒரு நிலத்தில 2 செண்ட் விஸ்தீரணத்தில் ஒரு வீடு கட்டி

அதற்கு ஒரு ஏகரா விஸ்தீரணம் காம்பௌண்ட் கட்டினால் மொத்தமும் விவசாயத்திற்கு லாயக்கற்றதாகவே கருதப்படும். அதற்காக 151-வது பிரிவின் கீழ் பரிஹாரம் தேடலாம்.

*சேதம் சரிப்படுத்தக்கூடியதாயிருக்கிற அல்லது பணரூபமான பிரதிபலன் போதுமான பரிகாரமாயிருக்கிற சந்தர்ப்பத்திலே டிக்ரி.*

**152.** முந்திய பிரிவின்படிக்கான யாதொரு வியாஜ்ஜியத்திலே யாதொரு ரயத்தானவர் (நிலத்தை விட்டு) அப்புறப்படுத்தப்படுவதற்குள்ளாயிருப்பதாகத் தெரிந்தும், கைப்பற்று நிலத்துக்கு நேரிட்ட சேதம் சரிப்படுத்தக்கூடியதாயிருக்கிறதென்றாவது பணரூபமான பிரதிபலன் போதுமான பரிகாரமாயிருக்குமென்றாவது காணப்படுகிற பட்சத்திலே, டிக்கிரி தேதி முதல் ஒரு மாதத்துக்குள்ளாவாகிலும், கலெக்டர் காரணங்களைக் கண்டெழுதிவைத்து இன்னும் எவ்வளவு காலங்கொடுக்கிறாரோ அதற்குள்ளாகவாகிலும், டி ரயத்து அந்த சேதத்தைச் சரிப்படுத்தாமலோ அல்லது கலெக்டரால் நிர்ணயிக்கப்பட்டு டிக்ரியில் கண்டெழுதியிருக்கிற தொகையைப் பிரதிபலனைச் செலுத்தாமலோ இருந்தால், அவரை அப்புறப்படுத்தவேண்டுமென்று மேல்படி டிக்ரியில் ஏற்பாடு பண்ணவேண்டும்.

**153**, விட்டு விடப்பட்டது.

**154.** விட்டு விடப்பட்டது.

*பயிரின் விஷயத்திலும் விதைப்பதற்காக தயார் செய்யப்பட்ட நிலத்தின் விஷயத்திலும் (நிலத்தைவிட்டு) அப்புறப்படுத்தப்பட்ட ரயத்துக்குள்ள சுதந்தரம்.*

**155.** கைப்பற்று நிலத்தினின்றும் அப்புறப்படுத்தப்பட்ட ஒவ்வொரு ரயத்தின் விஷயத்திலும் அடியிற்கண்ட விதிகள் பிரயோகப்படத்தக்கவைகளாகும் :—

(1) ரயத்து (நிலத்தைவிட்டு) அப்புறப்படுத்தப்பட்ட தேதிக்கு முன்னமே, அவர் கைப்பற்று நிலத்திலடங்கி யிருக்கிற யாதொரு நிலத்திலே விதை விதைத்திருந்தாலும் நடவு நட்டிருந்தாலும் நிலத்துக்குடையவருக்கிஷ்டமிருந்தால், அந்த நிலத்தின் ஸ்வாதீனத்தை வைத்துக் கொண்டேயிருந்து அந்தப்பயிரை காப்பாற்றுங் காரியத்துக்காகவும் மாமூல் அறுவடை செய்யுங்காரியத்துக்காகவும் அந்த நிலத்தை உபயோகித்துக்கொள்ளவாவது, அந்த நிலத்தைத் தயார் செய்து விதைத்ததற்காகவும் நடவு நட்டுப் பயிரை காப்பாற்றி வந்ததற்காகவும் அந்த ரயத்துக்குப் பிடித்திருக்கும் கஷ்டத்துக்கும் செலவுக்கும் ஏற்படும் உத்தேசமதிப்பை அதற்கு நியாயமான வட்டி சகிதமாக நிலத்துக்குடையவரிடத்திலிருந்து பெற்றுக் கொள்ளவாவது அந்த ரயத்துக்குச் சுதந்தரமுண்டு.

(2) ரயத்து அப்புறப்படுத்தப்பட்ட தேதிக்கு முன்னமே, அவர் தம்முடைய கைப்பற்று நிலத்திலடங்கியுள்ள யாதொரு நிலத்தை விதை விதைப்பதற்காகத் தயார் செய்திருந்தும் அந்த நிலத்திலே அவர் விதை விதைக்காமலாவது நடவு நடாமலாவதிருந்தால், நிலத்தை அந்தப்படி தயார் செய்ததற்காக அவருக்குப் பிடித்திருக்கும் கஷ்டத்துக்கும் செலவுக்கும் ஏற்படும் உத்தேச மதிப்பை அதற்கு நியாயமான வட்டி சகிதமாக நிலத்துக்குடையவரிடத்திலிருந்து பெற்றுக்கொள்ள அந்த ரயத்துக்குச் சுதந்தர முண்டு;

ஆனால், ரயத்தை அப்புறப்படுத்துவதற்கான நடவடிக்கைகளை நிலத்துக்குடையவர் நடந்த ஆரம்பித்த பிறகு ரயத்து பிரதேச வழக்கத்துக்கு விரோதமாக யாதொரு நிலத்தில் சாகுபடி செய்திருந்தாலும், அந்த நிலத்தை

(சாகுபடிக்காகத்) தயார் செய்திருந்தாலும், இந்தப் பிரிவின் படி. மேடி நிலத்தின் ஸ்வாதீனத்தை வைத்துக்கொண்டிருக்கவோ அதன் விஷயமாய் யாதொரு தொகையைப் பெறவோ அந்த ரயத்துக்குச் சுதந்தரமில்லை

மேலும், அப்புறப்படுத்தப்படுகிற காலத்திலே நிலத்துக்குடையவருக்கு ரயத்து ஏதாவது குத்தகைத்தொகை செலுத்த வேண்டியதாயிருந்தால அதை இந்தப் பிரிவின்படி ரயத்துக்குச் செலுத்தத்தக்க எந்தத் தொகைக்காகிலும் எதிர்க்கட்டலாம்.

முந்திய பிரிவின்படி நிலத்தை அனுபோகத்தில் வைத்துக் கொண்டிருப்பதற்காக ரயத்து தொகை செலுத்துவது.

**156.** அடுத்து முந்திய பிரிவைச்சேர்ந்த (1) குறிப்பிட்ட பகுதியிற்கண்ட காரியத்துக்காக யாதொரு நிலத்தை ஸ்வாதீனத்தில் வைத்துக்கொண்டேயிருக்க நிலத்துக்குடையவர் அந்தப்பகுதியின்படி யாதொரு ரயத்துக்கு அனுமதி கொடுக்க இஷ்டப்பட்டால், எவ்வளவு காலத்துக்கு மேல்படி நிலத்தை ஸ்வாதீனத்தில் வைத்துக்கொண்டிருக்க ரயத்து அனுமதி பெறுகிறாரோ அந்தக்காலத்திலே அந்த நிலத்தை உபயோகித்துக்கொள்வதற்காகவும் அனுபோகத்தில் வைத்துக்கொண்டிருப்பதற்காகவும், ரயத்து தாம் என்ன விதத்தின்படி நிலத்தைக் கைப்பற்றில் வைத்திருந்தாரோ அந்த விதத்தின்படி நிலத்துக்குடையவருக்குக் குத்தகைத் தொகை செலுத்த வேண்டும்,

**157.** விட்டுவிடப்பட்டது.

பாயக்காரிகளை நீக்கிவிடுவதும் அக்கிரமமாக நுழையும் நபர்களை (நிலத்தைவிட்டு) அப்புறப்படுத்துவதும்.

கலெக்டர் பிறப்பிக்கும் வாரண்டின் மேல் பாயக்காரியை நீக்கி விடுவது.

**158.** ஒரு பூஸ்திதியிலுள்ள சொந்த நிலத்தைச் சேர்ந்த யாதொரு பாயக்காரியிடத்திலிருந்து ஒரு வெவி

ளிய வருஷக்கடைசியில் பாக்கி வரவேண்டியிருந்து அந்தப் பாக்கியைத் தீர்ப்பதற்குப்போதுமான ஜப்தி செய்யத்தக்க சொத்து வளவின் மேலில்லாவிட்டால், நிலத்துக்குடைய வரோ அதிகாரம் பெற்ற அவருடைய ஏஜெண்டோ மேல்படி வளவில் தாம் பிரவேசித்து அதை ஸ்வாதீனப்படுத்திக் கொள்ளத் தமக்கதிகாரங் கொடுப்பதற்கான வாரண்டுக்காகக் கலெக்டரிடத்தில் விண்ணப்பஞ் செய்து கொள்ளலாம். அப்படிப்பட்ட வாரண்டுக்காக விண்ணப்பஞ் செய்து கொள்ளும் நபருடைய எழுத்து மூலமான ஸ்டேட்மென்டை ஹாஜர்ப்படுத்துவதன்மேல் மேல்படி வாரண்டைக் கொடுக்க வேண்டும்; பாக்கிதாரருடைய பெயரையும், வளவின் விவரத்தையும் விஸ்தீர்ணத்தையும், பாக்கிக்காகவும் வட்டிக்காகவும் ஜப்திசெலவு ஏதாவதிருந்தால் அதற்காகவும் சேர வேண்டியதொகை இவ்வளவென்பதையும், பாக்கி செலுத்தியிருக்கவேண்டியதான தேதியையும், மேல்படி வளவின்மேல் போதுமான ஜப்திசெய்யத்தக்க சொத்து இல்லையென்பதற்கு உறுதிமொழியையும் மேலேசொன்ன ஸ்டேட்மென்டில் கண்டெழுதவேண்டும். எந்த ஆபிஸிலிருந்து மேல்படி வாரண்ட் பிறப்பிக்கப்படுகிறதோ அந்த ஆபீஸில் அப்படிப்பட்ட ஸ்டேட்மென்டைத் தாக்கல் செய்ய வேண்டும்.

வாரன்டில் கண்டிருக்க வேணடிய விஷயங்கள்,

**159**. அந்த வாரன்டில் - பாக்கிதாரருடைய பெயரையும், சேரவேண்டிய மொத்த தொகையையும், வளவின் விவரத்தையும் விஸ்தீர்ணத்தையும் காணவேண்டும்; மேலும் பதினைந்து தினத்துக்குள்ளாகத் தொகை செலுத்தப்படாவிட்டால் பாக்கிதாரர் (வளவின்) ஸ்வாதீனத்தைவிட்டு நீக்கப்படுவாரென்றும் அதில் கண்டிருக்கவேண்டும். இந்தப்

பிரிவிற் சொல்லியிருக்கிற பதினைந்துநாள் காலவரையறையைக் கலெக்டரானவர் விசேஷ காரணங்களைக்கொண்டு அதிகப்படுத்தலாம்.

வாரன்டை நிறைவேற்றுவது.

**160.** அந்த வாரன்டை ஒரு போலீஸ் உத்தியோகஸ்தரிடத்தில் ஒப்பிக்கவேண்டும்; அவர் - 78 - வது பிரிவைச் சேர்ந்த (2) குறிப்பிட்ட உட்பிரிவிற் சொல்லியிருக்கிற விதமாக அதைச் சேர்ப்பிக்கவேண்டும். (வாரன்ட்) சேர்ப்பித்தது முதல் பதினைந்து தினத்துக்குள்ளாகவோ அடுத்த முந்திய பிரிவின்படி கலெக்டர் அதிகப்படுத்தின காலவரையறைக்குள்ளாகவோ மேல்படி வாரன்டிற்கண்ட தொகை செலுத்தப்படாமலிருந்து அந்த வாரன்டை ரத்து செய்யவேண்டுமென்று பாக்கிதாரர் கலெக்டருக்கு விண்ணப்பம் எதுவும் செய்து கொள்ளாதிருக்கிற பட்சத்திலே, அல்லது அப்படிப்பட்ட விண்ணப்பம் பாக்கிதாரருக்கு விரோதமாய்த் தீர்ப்பு செய்யப்பட்டிருக்கிற பட்சத்திலே மேல்படி போலீஸ் உத்தியோகஸ்தரானவர் நிலத்துக்குடையவரை (வளவின்) ஸ்வாதீனப்படுத்தவேண்டும்.

பாயக்காரி பாத்தியதை முடிவானது.

**161.** அடுத்த முந்திய பிரிவின்படி ஸ்வாதீனம் ஒப்பிக்கப்பட்ட பிறகு பாக்கிதாரர் - மேல்படி நடவடிக்கைகளை ரத்து செய்து தமக்கு மறுபடியும் ஸ்வாதீனங் கொடுக்கும்படி உத்தரவாக வேண்டுமென்று, அப்படி ஸ்வாதீனம் ஒப்பிக்கப்பட்ட தேதியிலிருந்து மூன்று மாதகாலத்துக்குள் ஸிவில கோர்ட்டில் வியாஜ்ஜியம் தாக்கல் செய்யலாம்; அப்படி வியாஜ்ஜியம் தாக்கல் செய்யப்பட்டால் அந்த வியாஜ்ஜியத்தின் முடிவுக்குட்பட்டு மேல்படி வளவில் பாக்கிதார

ருக்குள்ள பாத்தியதையும் சுதந்தரமும் அற்றுப்போய் முடிவாய்விடும்.

*நிவாரணே செய்வதற்கான பகுதி.*

**162.** 158, 161-வது பிரிவுகளிற்கண்ட தெதவும் எந்த நிலத்தில் பாயக்காரிக்கு விற்கத்தக்க பாத்தியதை இருக்கிறதோ அப்படிப்பட்ட யாதொரு நிலத்துக்குப் பிரயோகப்படமாட்டாது.

*ரயத்தி நிலத்தை அனுமதியில்லாமல் அனுபோகத்தில் வைத்துக்கொண்டிருப்பதற்காக செலுக்கத்தக்க குத்தகைத்தொகை வீதங்களும் நஷ்ட ஈடுகளும்.*

**163.** யாதொரு நபர் ரயத்தி நிலத்தை விவசாய சம்பந்தமான காரியங்களுக்காக அனுமதியில்லாமல் அனுபோகத்தில் வைத்திருந்து, அந்தப்படி அனுபோகத்தில் வைத்திருக்கும் காலத்தில் அது எந்த ரயத்தின் கைப்பற்றிலும் இராதிருந்தால், அவர் ஒவ்வொரு பெஸலி வருஷத்துக்குமாவது அதன் ஒவ்வொரு பாகத்துக்குமாவது அந்த நிலத்துக்காக நிஷ்கரிஷை செய்யப்பட்டிருக்கும் குத்தகைத் தொகையையாகிலும், குத்தகைத் தொகை எதுவும் நிஷ்கரிஷை செய்யப்பட்டிராத பட்சத்திலே, விண்ணப்பம் செய்து கொள்ளப்படுவதன்மேல் நியாயமானதென்றும் தருமமானதென்றும் கலெக்டரால் தீர்மானிக்கப்படக்கூடிய தொகையையாகிலும் செலுத்துவதற்கு உட்பட்டவராவார்.

மேலும், அவர் அனுமதி பெறாமல் அனுபோகத்தில் வைத்திருந்ததற்கு நஷ்ட ஈடாக, மேலேகண்டபடி நிஷ்கரிஷை செய்யப்பட்டிருக்கும் அல்லது தீர்மானிக்கப்பட்டிருக்கும் ஒரு வருஷ குத்தகைத் தொகைக்கு மேற்படாமல் விண்ணப்பம் செய்துகொள்ளப்படுவதன்மேல் கலெக்டரால்

தீர்மானிக்கப்படக்கூடிய ஒரு தொகையையும் செலுத்து வதற்கு உட்பட்டவராவார்; அல்லாமலும், இந்தப் பிரிவின் படி பாக்கியாயிருக்கும் சகல தொகைகளும் குத்தகைத் தொகை பாக்கியாயிருந்தால் எப்படியோ அப்படியே அவை களை நிலத்துக்குடையவர் வசூல் செய்யலாம்.

துராகிருதமாக நுழைகிற நபரை (நிலத்தை விட்டு) அப்புறப் படுத்துவது.

**163**-A (1) (a) யாதொரு நபர் ஒரு பூஸ்திதியி லுள்ள ரயத்தி நிலத்தைப் பாரம்பரை பாத்தியதை மூலமாக வாவது சட்ட சம்மதமான ட்ரான்ஸ்பர் மூலமாக வாவ தன்றி மற்றப்படி அனுபோகத்தில் வைத்திருந்து, நிலத் துக்குடையவரால் ரயத்தென்று அங்கீகரிக்கப்பட்டிராவிட் டாலும், 6-வது பிரிவைச் சேர்ந்த (1) குறிப்பிட்ட உட்பிரி வுடன் சேர்க்கப்பட்டிருக்கும் (3) அடையாளமிட்ட விவ ரணத்தில் கண்ட நிபந்தனைகளின்படி ரயத்தென்று அங்கீ கரிக்கப்பட்டிருப்பதாகக் கருதப்படாவிட்டாலும், அவர் சிவில் கோர்ட்டில் தொடரப்படும் வியாஜ்ஜிய மூலமாய், துராகிருதமாக நுழைந்தவராக அப்புறப்படுத்தப்படுவதற்கு உள்ளாவார்.

(b) அந்த வியாஜ்ஜியத்தை, அனுபோகம் ஆரம்பமான தேதியிலிருந்து பன்னிரண்டு வருஷங்களுக்குள் தொடர வேண்டும்.

(c) ஷை வியாஜ்ஜியத்தில் பிரதிவாதியாயிருக்கும் நபர் ஷை வியாஜ்ஜியம் தொடரப்பட்ட பிறகு, 3-வது பிரிவைச் சேர்ந்த (15) குறிப்பிட்ட பகுதியுடன் சேர்க்கப்பட்டிருக் கும் விவரணத்தை அனுசரித்து தாம் ரயத்தின் அந்தஸ்த் தை அடைந்திருப்பதாக வாதிக்கக்கூடாது.

(2) இந்தப் பிரிவின்படி (நிலத்தை விட்டு) அப்புறப் படுத்துவதற்காகத் தொடரப்படும் யாதொரு வியாஜ்ஜியத் திலே, 163-வது பிரிவின் பிரகாரம் நிஷ்கரிஷை செய்யப் பட்ட வீதங்களின்படியாவது, அப்படிப்பட்ட வீதங்கள் எவையும் ஏற்பட்டிராவிட்டால், 163-வது பிரிவில் கண்ட நிபந்தனையை அனுசரித்துக் கோர்ட்டார் நிச்சயிக்கும் வீதங் களின்படியாவது இடைக்கால வரும்படியையும் அனுமதி யின்றி அனுபோகத்தில் வைத்திருந்ததற்காக நஷ்ட ஈட் டையும் பெறவும் நிலத்துக்குடையவருக்கு உரிமையுண்டு :

ஆனால், எந்த வருஷத்துக்காகிலும் நிலத்துக்குடைய வர் குத்தகைத்தொகை பெற்றுக்கொண்டிருந்தால், அவர் அந்த வருஷத்தில் அனுமதியில்லாமல் (நிலம்) அனுபோகத் தில் வைத்துக்கொள்ளப்பட்டிருந்ததற்காகப் பின்னும் யா தொரு நஷ்ட ஈடு பெற அர்ஹதையுள்ளவராகமாட்டார்.

குறிப்புகள்.

163-வது பிரிவானது பழைய 45-வது பிரிவேயாகும். 163-A பிரிவானது பழைய 163-வது பிரிவாகும். இவ்விரண்டு பிரிவுகளும 1934-ம் வருஷத்திய திருத்த சட்டத்தினால் பூரணமாக திருத்தி யமைக்கப்பட்டன 1934-ம் வருஷத்திய மாறுதல்களைக் கவ னிப்போம்.

பிரகிருதம் உள்ள 163-வது பிரிவானது இரண்டு பாகமாக உள்ளது. முதல் பாகம் ஒரு கைப்பற்று நிலத்தில் அக்கிரமமாய் பிரவேசிப்பவர் ரென்ட் செலுத்தவேண்டியதை இவ்வளவு என்று நிர்ணயிப்பதைப்பற்றி கூறுகிறது. இரண்டாவது பாகம் ஷை ரென்ட் மாத்திரமல்லாமல் உத்திரவில்லாமல் பிரவேசித்ததற்காக டாமேஜ் (அல்லது பிரதி பலன்) பெறுவதைப்பற்றி கூறுகிறது. முதல் பாக த்தின் கீழ் பரிஹாரம் பெறவேண்டுமானால் அதாவது ரென்ட் இவ்வளவென்று நிர்ணயம் செய்யவேண்டுமானால் நிலத்தில் பிரவே சித்தது முதல் ஒரு வருஷத்திற்குள் பரிஹாரத்தை தேடிக்கொள்ள

வேண்டும் என்று பழைய சட்டப்பிரகாரம் நிபந்தனை இருந்தது. இன்னும் அப்படித் தேடிக்கொள்ளாவிட்டால் ஸிவில் கோர்ட்டில் தான் அக்கிரமமாய் பிரவேசித்தவரை அப்புறப்படுத்துவதற்கு தாவா செய்யவேண்டும் என்றும் தீர்மானம் ஏற்பட்டிருந்தது. வெங்கடாத்ரி. அப்பாராவ் vs. சக்ரபாணிராவ் 38 L. W. 214. ஆனால் இப்பொழுது ஷை முதல் பாகப்பிரகாரம் ரெண்ட் பெறுவதற்காக கால தவணையை குறிப்பிடப்படாமல் ஏற்கெனவே இருந்ததும் 1934-ம் வருஷத்திய திருத்தத்தினால் எடுபட்டுவிட்டது. ஆனால் 2-வது பாகத்தின் கீழ் டாமேஜ் பெறுவதற்கு செய்யக்கூடிய காலமானது நிர்ணயிக்கப்பட்டது. அதாவது அதற்காக செய்யக்கூடிய விண்ணப்பத்தை எந்த ரெவின்யு வருஷத்தில் அக்கிரமப்பிரவேசம் செய்யப்பட்டதோ அந்த வருஷம் முடிந்தது முதல் ஒரு வருஷத்திற்குள் செய்யவேண்டும்.

163-வது பிரிவின் கீழ் செய்யப்படக்கூடிய விண்ணப்பம் கலெக்டர் முன்பாக செய்யப்படவேண்டும். அதற்கு மேலே கூறிய படி தவணையுண்டு. 163A வது பிரிவின் கீழ் செய்யப்படக்கூடிய தாவா ஸிவில் கோர்ட்டில். அதற்கு 12 வருஷ தவணையுண்டு.

ஆனால் 163A-வது பிரிவின்படி மத்திய கால வரும்படியும் டாமேஜும் பெறுவதற்காக செய்யப்படக்கூடிய தாவாவுக்கு லிமிடேஷன் கால அளவு எப்படி ? லிமிடேஷன் சட்டப் பிரகாரம் 3 வருஷமா. அல்லது இப்பிரிவில் தாவாவுக்கு உள்ளபடியே 12 வருஷமா, இது விஷயம் விசிதமாக விளங்கவில்லை. ஷெட்யூலிலும் யாதொரு அம்சமும் இல்லை.

ரயத்தி நிலத்தில் பிரவேசித்தவரை ரயத்தாக அங்கீகரித்து ரெண்ட பெற்றுவிட்டால் 163-A பிரிவின் கீழ் அவரை அப்புறப்படுத்துவதற்கு ஸிவில் கோர்ட்டில் தாவா செய்வதற்கில்லை.

163-A பிரிவின் கீழ் யாதொரு தாவா செய்யப்படுமானால் அதே நிலத்தின் விஷயமாய் முந்தி 56-வது பிரிவின் கீழ் பட்டாபெறுவதற்காக செய்யப்பட்டிருந்த ஒரு தாவாவில் ஏற்பட்ட தீர்மானம் ஒரு தடையாக (அதாவது ரிஸ் ஜுடிகேடாவாக) இருக்காது 43 Mad. 859.

163-வது பிரிவாவது 163A-வது பிரிவாவது ஏற்கெனவே ஒரு குத்தகை ஏற்பாட்டின் பேரில் நிலத்தில் பிரவேசித்திருந்து தவணை கடந்த பிறகும் அந்த நிலத்தை சுவாதீனம் பெற்றுவரும் ஒரு நபர் விஷயமாய் பிரயோகமாகாது 29 M. L. J. 184.

## 11-அத்தியாயம்.

## ஸர்வே செய்வதும், உரிமைதஸ்தவேஜு ஏற்படுத்துவதும், குத்தகைத்தொகைகளைப் பைசல் செய்வதும்.

*ஸர்வே செய்யும்படிக்கும் உரிமை தஸ்தவேஜு ஏற்படுத்தும்படிக்கும் உத்தரவு செய்ய பிரதேச கவர்ன்மெண்டாருக்குள்ள அதிகாரம்.*

**164.** (1) பிரதேச கவர்ன்மெண்டார் ஒரு பூஸ்திதியின் விஷயமாகவாவது ஒரு பூஸ்திதியைச்சேர்ந்த பாகத்தின் விஷயமாகவாவது ஒரு கலெக்டர் ஸர்வே செய்ய வேண்டுமென்றும், உரிமைகளைப்பற்றிய தஸ்தவேஜு தயார் செய்யவேண்டுமென்றும் அடியிற் கண்ட விஷயங்களில் கட்டளையிட்டு உத்தரவு செய்யலாம். அந்த விஷயங்களாவன :—

(a) (i) நிலத்துக்குடையவராகிலும் நயத்துகளாகிலும்

(ii) நிலத்துக்குடையவர்கள் மொத்தத்தில் எத்தனை பேர் இருக்கிறார்களோ அதில் பாதிக்குக் குறையாதவர்களாகிலும்,

(iii) பூஸ்திதியிலாவது பூஸ்திதியின் பாகத்திலாவது முறையே நிலத்துக்குடையவருக்கோ நிலத்துக்குடையவர்களில் ஒரு தொகையாருக்கோ இருக்கிற பாத்தியதையாயினும் பாத்தியதைகளின் மொத்தமாயினும் மதிப்பிலே அந்த

பூஸ்திதி அல்லது பாகத்திலுள்ள சகல நிலத்துக்குடையவர்களின் மொத்த பங்குகளில் பாதிக்குக் குறைவாயிராவிட்டால், அந்த நிலத்துக்குடையவராகிலும் தொகையாராகிலும்,

(iv) ரயத்துகள் மொத்தத்தில் எத்தனைபேர் இருக்கிறார்களோ அதில் நாலிலொரு பங்குக்குறையாதவர்களாகிலும்,

செலவுகளைச் செலுத்துவதன் பொருட்டுப் பிரதேச கவர்ன்மெண்டார் கட்டளையிடுகிற தொகையை டிபாஸிட் செய்து அல்லது அந்தத்தொகைக்காக ஜாமீன் கொடுத்து, மேலே சண்ட உத்தரவுக்காக விண்ணப்பஞ் செய்துகொள்வது :

(b) ஒரு பூஸ்திதியையாவது அதன் பாகத்தையாவது சேர்ந்த நிலத்துக்குடையவரோ பொதுவாய் ரயத்துகளோ தமக்கு அல்லது தங்களுக்குச் சட்டப்படிக்குண்டான பாத்தியதைகளை நிலத்துக்குடையவர் அல்லது ரயத்துகள் என்னும் முறைமையில் அனுபவிப்பதைப் பாதுகார்க்கும்பொருட்டு அப்படிப்பட்ட ஒரு தஸ்தவேஜைத் தயார் செய்வது அவசியமென்று பிரதேச கவர்ன்மெண்டார் எண்ணுவது, அல்லது அப்படிப்பட்ட தஸ்தவேஜைத் தயார் செய்வதனால், பொதுவாய் ரயத்துகளுக்கும் அவர்களைச்சேர்ந்த நிலத்துக்குடையவருக்கும் தற்காலத்தில் ஏற்பட்டிருக்கிற அல்லது இனிமேலுண்டாகக் கூடிய ஒரு பிரமாதமான விவாதமானது முடிவடையக்கூடியதாகுமென்றோ தடுக்கப்படக்கூடியதாகுமென்றோ பிரதேச கவர்ன்மெண்டார் எண்ணுவது ; அல்லது,

(c) அந்த பூஸ்திதியானது கவர்ன்மென்டாருடைய நிர்வாகத்திலாகிலும் கோர்ட் ஆவ் வார்ட்ஸாருடைய மேல்விசாரணையின் கீழாகிலும் இருக்கிற பூஸ்திதியாயிருப்பது ;

(2) இந்தப் பிரிவின்படிக்கான உத்தரவை ஸர்க்கார் கெஜெட்டில் பிரசுரம் செய்வது-அந்த உத்திரவு கிரமமாய்ச் செய்யப்பட்டிருக்கிறதென்பதற்கு முடிவான சாட்சியமாகும்.

(3) ஸர்வேயையும் எல்லைகளையுங் குறித்த சென்னப் பட்டணம் 1923-ம் வருஷத்து ஆக்டின்படி ஸர்வே செய்ய வேண்டும் ; மேலும், பிரதேச கவர்ன்மென்டாரால் நிர்ணயிக்கப்படும் விதிகளை அனுசரித்து உரிமை தஸ்தவேஜு தயார் செய்யவேண்டும் ; அல்லாமலும், பிரதேச கவர்ன்மென்டார் கட்டளையிடுகிற பட்சத்திலே—

(a) (i) தண்ணீர் ஏரியிலிருந்து கிடைப்பதாயிருந்தாலுஞ்சரி கிணற்றிலிருந்து கிடைப்பதாயிருந்தாலுஞ்சரி சர்ப்பரா கிடைக்கும் வேறே யாதொரு ஜலாதாரத்திலிருந்து கிடைப்பதாயிருந்தாலுஞ்சரி, அதை ரயத்துகள் விவசாய சம்பந்தமான காரியங்களுக்காக உபயோகித்துக்கொள்வது விஷயமாகவும்,

(ii) ஒவ்வொரு ரயத்தும் கைப்பற்றில் வைத்திருக்கும் நிலத்தைப் பயிரிடுவதற்காகத் தண்ணீர் சர்ப்பரா செய்வதற்கு உபயோகமான கட்டுவேலைகள் அப்படிப்பட்ட நிலத்தின் எல்லைகளுக்குள்ளே இருந்தாலுஞ்சரி இராவிட்டாலுஞ்சரி, அந்த கட்டுவேலைகளை மராமத்து செய்து பராமரித்து வருவது விஷயமாகவும்.

ஒவ்வொரு ரயத்துக்கும் நிலத்துக்குடையவருக்கும் உள்ள சகல சுதந்திரங்களையும் கடமைகளையும்பற்றிய தஸ்தவேஜும்

(b) பூஸ்திதியைச் சேர்ந்த காம்பு நிலத்தில் சட்டப்படியாவது மாமூல்படியாவது ரயத்துகளுக்கு ஏற்பட்டிருக்கக்கூடிய எவையேனும் விசேஷ சுதந்தரங்களைப்பற்றிய தஸ்தவேஜும்

மேற்படி உரிமை தஸ்தவேஜில் அடங்கியிருக்கலாம்.

(4) ஸர்வே செய்யப்பட்டிருக்கும் யாதொரு கிராமத்துக்காவது அதிலுள்ள விஸ்தீர்ணத்துக்காவது சம்பந்தப்பட்ட ஸர்வே நக்ஷா, ஸர்வே செய்யப்பட்ட நிலத்தின் ரெஜிஸ்டர், புல அளவுக்காகிதங்கள் ஆகிய இவைகளுக்கு ஸெர்டிபை செய்யப்பட்ட நகல்களை அந்த கிராமத்தின் கர்ணத்துக்குச் சவதரிக்கவேண்டும்; மேலும், அந்த நகல்கள் மேற்படி கிராமத்தைச்சேர்ந்த ரயத்துகள் பார்வையிடுவதற்குக் கிடைக்கக்கூடியவைகளாயிருக்கவேண்டும்.

விவரணம்.—ஏற்கனவே ஸர்வே செய்யப்பட்ட யாதொரு பூஸ்திதியின் விஷயத்தில், அந்த பூஸ்திதியாவது அதன் யாதொரு பாகமாவது இந்தப் பிரிவின்படி உரிமை தஸ்தவேஜு தயார் செய்வதற்காக எடுத்துக்கொள்ளப்பட்டால், உரிமை தஸ்தவேஜு தயார் செய்வதற்காக எவ்வளவு மட்டில் அவசியமோ அவ்வளவுமட்டில் மாத்திரமே இந்தப் பிரிவின்படி ஸர்வே செய்யலாம்.

குறிப்புகள்.

ரயத்துகள் செய்து கொள்ளும் மனுவின் பேரில் ரிகார்டு ஆவ் ரைட்ஸ் என்னும் உரிமை தஸதாவேஜானது தயார் செய்யப்படுமானல் ஏற்படும் செலவில் ஒரு பாகத்தை நிலத்துக்குடையர் பரிக்கும்படி கவர்ன்மெண்டார் உத்திரவிடலாம். ரயத்துகள் ஏற்கெனவே

தொகைகளை டிபாஸிட் செய்திருந்தால், பிறகு நிலத்துக்குடைய வரிடமிருந்து வசூலிக்கப்படும் தொகையிலிருந்து அதைப் பெறலாம். 1930 M. W. N. 814

11-வது அத்தியாயத்தின் கீழ் நடக்கும் நடவடிக்கைகள் நிர்வாக அதிகார ஹோதாவில் ரிவின்யூ அதிகாரிகளால் நடத்தப்பட்ட போதிலும் அவை நியாயஸ்தல தீர்மானங்களைப்போல் உள்ளதால் ஹைகோர்ட்டானது தகுதியான சந்தர்ப்பங்களில் ரிவின்யூ போர்ட்டார் செய்த உத்திரவை மாற்றுவதற்கு ரிட் ஆப் சர்ஷியோரரி (writ of certiorari) என்னும் உத்திரவு பிறப்பிக்கலாம்- மந்தாஸா ஜமீன்தார் vs. மந்தாஸா ரயத்துகள் 65 M. L. J 423.

எழுதிவைக்க வேண்டிய விவரங்கள்.

**165.** அடுத்த முந்திய பிரிவின்படி உத்தரவு செய்யும்போது, இன்ன விவரங்களை எழுதிவைக்கவேண்டுமென்று அந்த உத்தரவில் காணவேண்டும்; மேலும், அவைகளில் - மற்ற விவரங்களில்லாமலாகிலும், மற்ற விவரங்களுடன்கூடவாகிலும், அடியிற்கண்டவைகளெல்லாம் அல்லது அவைகளில் சில அடங்கியிருக்கவேண்டும். அவையாவன :—

(a) பூஸ்திதியிலாவது அதன் பாகத்திலாவது ஒவ்வொரு நிலத்துக்குடையவரின் பெயரும் ஒவ்வொரு ரயத்தைச்சேர்ந்த நிலத்துக்குடையவரின் பெயரும்;

(b) ரயத்தின் பெயர் அல்லது ரயத்தில்லாத விஷயத்திலே அனுபோகதாரருடைய பெயர்;

(c) ரயத்து வைத்துக்கொண்டிருக்கிற நிலம் கிராம ஸர்வே மாப்பில் (படத்தில்) காட்டியிருக்கிறபடி எங்கேயிருக்கிறதென்பதும், அதன் விஸ்தீரணமும், எல்லைகளில் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்டவையும்;

(d) நிலமானது நீர்ப்பாய்ச்சப்பெறும் நிலமா நீர்ப்பாய்ச்சப்பெறாத நிலமா அல்லது தோட்டக்கால் நிலமா என்பதும் நீர்ப்பாய்ச்சப்பெறும் நிலமாயிருக்கிற பக்ஷத்திலே ஒரு போகம் விளையும் நிலமா இருபோகம் விளையும் நிலமா என்பதும்;

(e) தஸ்தாவேஜு தயார் செய்யப்படுங்காலத்திலே, சட்டப்படி செலுத்தத்தக்க குத்தகைத் தொகையும் 30-வது பிரிவைச்சேர்ந்த (i) குறிப்பிட்ட பகுதியிற்கண்ட (a) அடையாளமிட்ட விலக்கினாலுண்டாகக் கூடிய பிரயோசனத்தையுடைய ரயத்துக்குச் சுதந்தரமிருக்கிறதா என்பதும்;

(f) குத்தகைத்தொகை எவ்விதமாக நிஷ்கரிஷை செய்யப்பட்டிருக்கிறதென்பது, எனவே, யாதொரு டிக்ரியின்படி நிஷ்கரிஷை செய்யப்பட்டிருக்கிறதா, இந்த ஆக்டின்படி நிஷ்கரிஷை செய்யப்பட்டிருக்கிறதா, அல்லது வேறே விதமாய் நிஷ்கரிஷை செய்யப்பட்டிருக்கிறதா என்பது;

(g) கைப்பற்று நிலத்தின் சம்பந்தமாகச் சட்டப்படி உண்டாகும் எவையேனும் பாத்தியதைகள்;

(h) குத்தகைத் தொகையானது சிறிது சிறிதாக அதிகமாகிற குத்தகைத்தொகையாயிருக்கிற விஷயத்திலே, அது இன்னகாலத்திற்கொருதரம் அதிகமாகிறதென்பதும் (ஒவ்வொரு தரமும்) இன்ன அளவுக்கு அதிகமாகிறதென்பதும்;

(i) நிலமானது குத்தகைத்தொகையில்லாமல் வைத்துக் கொண்டிருப்பதாகப் பாத்தியதை கொண்டாடப்படும் பட்சத்திலே, அந்தக்குத்தகைத்தொகை வாஸ்தவத்தில் செலுத்தப்படுகிறதா இல்லையா என்பதும்; குத்தகைத் தொகை செலுத்தப்படாத விஷயத்திலே அப்படிப்பட்ட குத்தகை

கைத் தொகை செலுத்தாமலே அந்த நிலத்தை வைத்துக் கொண்டிருக்க அனுபோகதாரருக்குச் சுதந்தரமிருக்கிறதா என்பதும், அப்படி சுதந்தரமிருக்கும் பட்சத்தில் எந்த அதிகாரத்தினால் சுதந்தரமிருக்கிறதென்பதும்; ஷை நிலமானது குத்தகைத் தொகை செலுத்துவதற்குட்பட்டிருக்கும் பட்சத்திலே, செலுத்தத்தக்க குத்தகைத்தொகையும்;

(j) 164-வது பிரிவைச் சேர்ந்த (3) குறிப்பிட்ட உட்பிரிவின்படி உத்தரவு செய்யப்பட்டிருக்கிற நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான பாத்தியதைகளைப்பற்றிய தஸ்தவேஜும் அதே உட்பிரிவின்படி உத்திரவு செய்யப்பட்டிருக்கிற காம்பு நிலத்திலுள்ள விசேஷ சுதந்தரங்களைப்பற்றிய தஸ்தவேஜும்.

பிரதம தஸ்தவேஜைப்பிரசுரம் செய்வதும் அதற்குண்டான ஆட்சேபனைகளை வரப்பெற்றுக்கொள்வதும்.

**166.** (1) கலெக்டர் தமக்கு யுக்தமாகத்தோற்றுகிற விசாரணை செய்த பிறகு பூஸ்திதிக்காவது அதன் பாகத்துக்காவது ஒரு பிரதம தஸ்தவேஜைப் பூர்த்தி செய்திருந்தால், அவர் அதன் மசோதாவை நிர்ணயிக்கப்பட்டிருக்கிற விதமாகவும் நிர்ணயிக்கப்பட்டிருக்கிற காலத்துக்கும் பிரசுரம் செய்வதுடன், அந்த மசோதாவிலுள்ள யாதொரு பதிவைப்பற்றியாகிலும் அதனின்றும் யாதொரு அம்சம் விட்டுவிடப்பட்டிருப்பதைப்பற்றியாகிலும் மேலே கண்டபடி பிரசுரித்திருக்கிற காலத்தில் கொண்டுவரப்படும் யாதொரு ஆட்சேபணையை வரப்பெற்றுக்கொண்டு அதைக் குறித்து ஆலோசனை செய்யவும் வேண்டும்.

முடிவான தஸ்தவேஜைப் பிரசுரம் செய்வது.

2) அப்படிப்பட்ட ஆட்சேபனைகளைப் பிரதேச கவர்ன்மெண்டார் நிர்ணயிக்கும் விதிகளின் பிரகாரம் ஆலோசித்துப்

பைசல் செய்வதன்மேல், கலெக்டர் அந்த தஸ்தவேஜை முடிவாக ஏற்படுத்தி, நிர்ணயிக்கப்பட்டிருக்கிற விதமாக அதை அவ்விடத்திலே பிரசுரம் செய்விக்கவேண்டும்; இந்த அத்தியாயத்தின்படி அந்த தஸ்தவேஜு கிரமமாய் ஏற்படுத்தப்பட்டதென்பதற்கு மேலே கண்டபடி பிரசுரஞ்செய்வதே முடிவான சாட்சியாகும்.

(2-A) கலெக்டரானவர் - முடிவான தஸ்தவேஜுடன் கூட, 168-வது பிரிவைச்சேர்ந்த (1) குறிப்பிட்ட உட்பிரிவின்படி குத்தகைத்தொகையைப் பைசல் செய்வதற்காக எந்த நபருக்கு எந்தத் தேதியில் அல்லது எந்தத்தேதிக்கு முன்பாக விண்ணப்பங்கள் செய்துகொள்ளவேண்டுமென்று பிரதேச கவர்ன்மெண்டார் கட்டளையிடுகிறார்களோ அந்த நபரின் பெயர் அல்லது உத்தியோகப் பெயரையும் அந்தத் தேதியையும் பிரசுரம் செய்விக்கவேண்டும்.

இந்த உட்பிரிவின்படி பிரதேச கவர்ன்மெண்டாரால் நிஷ்கரிஷை செய்யப்படும் யாதொரு தேதியானது முடிவான தஸ்தவேஜு பிரசுரிக்கப்பட்ட தேதியிலிருந்து ஆறு மாதங்களுக்கு முற்பட்டதாயிருக்கக்கூடாது.

(2-B) எந்த கிராமத்துக்கு அல்லது அதற்குள் இருக்கும் எந்த விஸ்தீரணத்துக்கு முடிவான உரிமை தஸ்தவேஜு தயார் செய்யப்பட்டிருக்கிறதோ அப்படிப்பட்ட யாதொரு கிராமத்துக்காவது விஸ்தீர்ணத்துக்காவது சம்பந்தப்பட்ட ஷை உரிமை தஸ்தவேஜுக்கு, ஸர்டிபை செய்யப்பட்ட ஒரு நகலையும், இந்த அத்தியாயத்தில் கண்ட நிபந்தனைகளின் பிரகாரம் அந்த தஸ்தவேஜில் செய்யப்பட்ட சகல திருத்தங்களுக்கும் ஒரு நகலையும் ஷை கிராமத்தின் கர்ணத்துக்குச் சவதரிக்கவேண்டும்; மேலும், அந்த நகல்கள் ஷை கிராமத்

தைச் சேர்ந்த ரயத்துகள் பார்வையிடுவதற்குக் கிடைக்கக் கூடியவைகளாயிருக்கவேண்டும்;

(3) பூஸ்திதியின் வெவ்வேறு பாகங்களின் சம்பந்தமாய் மசோதாவாகவோ முடிவாகவோ தனித்தனியான தஸ்தவேஜுகளை இந்தப்பிரிவின்படி பிரசுரஞ் செய்வதோடுகூட தனித்தனியான தேதிகளையும் நிஷ்கரிஷை செய்யலாம்.

*உரிமை தஸ்தவேஜு முடிவாகப்பிரசுரிக்கப்பட்டதைப்பற்றியும் அது சரியாயிருப்பதைப்பற்றியும் இன்ன விதமாய்க் கொள்ளவேண்டுமென்பது.*

**167.** (1) இந்த அத்தியாயத்தின்படி தயார்செய்து பிரசுரிக்கப்பட்டிருக்கிற ஒரு உரிமை தஸ்தவேஜாவது கிரமமாய் ஸெர்டிபை செய்யப்பட்டுள்ள அதன் நகலாவது அதனின்றும் எடுக்கப்பட்ட எக்ஸ்ட்ராக்டாவது யாதொரு வியாஜ்ஜியத்திலாகிலும் வேறே விவகாரத்திலாகிலும் கொண்டு வந்து காட்டப்படுகிற பட்சத்திலே, அது முடிவாகப் பிரசுரிக்கப்படவில்லையென்று வெளிப்படையாய் மறுக்கப்பட்டாலன்றி மற்றப்படி, அது அப்படி பிரசுரிக்கப்பட்டிருப்பதாகவே கொள்ளப்படும்; மேலும், இந்த அத்தியாயத்தின்படி உரிமை தஸ்தவேஜானது முடிவாகப் பிரசுரம் செய்யப்பட்டிருக்கிறதென்று கண்டு கலெக்டராவது உரிமை தஸ்தவேஜு சம்பந்தப்படுகிற பூஸ்திதியாகிலும் அதன் பாகமாகிலும் முழுவதுமோ அல்லது சிறிதுமட்டிலோ எந்த டிஸ்ட்ரிக்டிலிருக்கிறதோ அந்த டிஸ்ட்ரிக்டின் டிஸ்ட்ரிக்ட் கலெக்டராவது கையெழுத்து செய்து கொடுத்திருக்கும் ஸெர்டிபிகேட்டானது அப்படி பிரசுரம் செய்யப்பட்டதற்கு முடிவான சாட்சியமாகும்.

(2) யாதொரு பூஸ்திதியாகிலும் பூஸ்திதியின் யாதொரு பாகத்திலாகிலும் அடங்கியிருக்கிற ஒவ்வொரு

கிராமத்துக்காகவும் உரிமை தஸ்தவேஜு முடிவாகப் பிரசுரிக்கப்பட்டிருக்கிறதென்று ஷை பூஸ்திதியின் விஷயத்திலாவது பாகத்தின் விஷயத்திலாவது பிரதேச கவர்ன்மெண்டார் விளம்பர மூலமாய் நிர்ணயம் செய்யலாம்; அந்த விளம்பரமானது மேலேகண்டபடி பிரசுரிக்கப்பட்டிருக்கிறதென்பதற்கு முடிவான சாட்சியமாகும்.

(3) அந்தப்படி பிரசுரிக்கப்பட்ட யாதொரு உரிமை தஸ்தவேஜிலிருக்கிற பிரதி பதிவும் - அந்தப் பதிவில் கண்டெழுதப்பட்டிருக்கிற சங்கதிக்குச் சாட்சியமாவதோடுங்கூட, அது (ஷை பதிவு) சரியல்லவென்று ருஜு செய்யப்படுகிறவரையிலே, அது சரியாயிருப்பதாகவே கொள்ளவும் வேண்டும்.

## குறிப்புகள்.

இப்பிரிவில் 3-வது உட்பிரிவில் உள்ளபதங்களை கவனிக்குமிடத்து, ரிகார்டு ஆப் ரைட்ஸ் என்னும் தஸ்தாவேஜுகளில் உள்ள பதிவானது முடிவானதாகிவிடுமோ அதை ஸிவில் கோர்ட்டுகளில் தாக்கினொழிய மற்றபடி எதிர்ப்பதற்கில்லையா என்னும் கேள்வி செல்லமய்யா vs. வெங்கடகுமார மஹீபதி 1930 A. I. R. Mad. 1 என்னும் கேஸில் கிளம்பினதில் ஜஸ்டிஸ் அனந்தகிருஷ்ணய்யர் அவர்கள், அந்தப் பிரிவில் வெறும் அனுமானத்தைப்பற்றி சொல்லப்பட்டிருக்கிறதே யொழிய ஒரு பதிவில் உள்ளது சரியானதல்லவென்று ஒரு கேஸில் எதிர் ஆக்ஷேபணையாக ருசு செய்வதை அது தடை செய்யாது என்று தீர்மானித்திருக்கிறார்.

பண்ணை நிலங்கள் என்பது நிலத்துக்குடையவருடைய சொந்த நிலமாகும். யாதொரு நிலமானது பண்ணையா அல்லது ரயத்தி நிலமா என்பதைப்பற்றி கேள்வி கிளம்புமானால் அது பண்ணை நிலம் என்று காட்டுவதற்காக தஸ்தாவேஜுகள் அல்லது பத்திரங்கள் ஏதாவது இருக்கும் பக்ஷத்தில் அதை 55-வது பிரிவின் கீழ் கோர்ட்டார் கட்டாயம் கவனிக்கவேண்டும். இது மிகவும் முக்கிய

மானது. ரயத்துகள் ஒரு குத்தகை ஏற்பாட்டின் பேரில் நிலங்கள் ஜமீன்தாருடைய பண்ணை நிலங்களென்று தங்களுக்கு விடப்பட்டு தாங்கள் அனுகூலமான ஒரு விகிதமாக குத்தகை செலுத்திவருவதாகவும் அதற்கு தஸ்தாவேஜூகளும் உண்டு என்றும் கூறும் பக்ஷத்தில் அது விஷயமாய் கலெக்டரும் ரெவின்யு போர்டும் கட்டாயம் கவனித்து தீரவேண்டும். நிலங்கள் பண்ணை நிலங்களாயிருந்தால் அவைகளுக்கு ரிகார்ட் ஆப் ரைட்ஸ் என்னும் நடவடிக்கைகள் கிடையாது. அவை 11-வது அத்தியாயத்தின் கோட்பாடுகளிலிருந்து நிவர்த்திக்கப்பட்டதாகும். ரெவின்யூ போர்டானது இவ்விஷயத்தை கவனியாமல் விட்டுவிட்டால் அது தனது அதிகாரத்தை செலுத்தத் தவறினதாகவே ஏற்படும். ஆகையால் ஹைகோர்ட்டார் அதன் தீர்ப்பை ரத்து செய்வதற்கு அதிகாரம் பெற்றவர்களாயிருப்பார்கள். மந்தாஸா ஜமீன்தாரிணி vs. மந்தாஸா ரயத்துகள் 65 M. L. J. 423.

குத்தகைத்தொகைகளைப் பைசல் செய்வது

**168** (1) யாதொரு கிராமத்தின் விஷயமாய் அல்லது எந்த விஸ்தீர்ணத்திற்காக உரிமை தஸ்தாவேஜு பிரசித்தம் செய்யப்பட்டிருக்கிறதோ அப்படிப்பட்ட யாதொரு விஸ்தீர்ணம் ஒரு கிராமத்துக்கு குறைவாயிருந்தால் அந்த விஸ்தீரணத்தின் விஷயமாய் 166-வது பிரிவைச்சேர்ந்த (2 A) குறிப்பிட்ட உட்பிரிவின்படி நிஷ்கரிஷை செய்யப்பட்ட தேதியன்றைக்காவது அதற்கு முன்பாவது பிரதேச கவர்ன்மெண்டார் தங்களுக்கு உசிதமாக தோற்றுகிற பக்ஷத்திலே பின்னும் ஏதாவது கால அளவு கொடுப்பது தகுதியாயிருக்குமென்று அப்போதைக்கப்போது அபிப்பிராயப்பட்டு அந்தப்படியே கொடுத்திருந்தால் அப்படிப்பட்ட கால அளவுக்குள்ளாவது, நிலத்துக்குடையவராகிலும் ரயத்துகளாகிலும் குத்தகைத்தொகை பைசல் செய்யவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்துகொண்டால் கலெக்டர் பிரதேச

கவர்ன்மென்டார் கட்டளையிடுகிற பட்சத்திலே அந்த கிரா மத்திலாவது விஸ்தீரணத்திலாவது உள்ள நியாயமானதும் தருமமானதுமான குத்தகைத்தொகையைப் பைசல் செய்ய வேண்டும்; ஆனால், ரயத்துகள் விண்ணப்பஞ் செய்துகொள் ளுகிற விஷயத்திலே, அந்த கிராமத்திலாவது விஸ்தீரணத்தி லாவது உள்ள கைப்பற்று நிலங்களின் மொத்த விஸ்தீரணத் திலே அதமம் எட்டிலொரு பாகத்தைக் கைப்பற்றில் வைத் திருப்பவர்கள் விண்ணப்பஞ் செய்துகொள்ளவேண்டும்.

(1-A) (1) குறிப்பிட்ட உட்பிரிவில் என்ன சொல்லி யிருந்தபோதிலும் பாதகமில்லாமலே, பிரதேச கவர்ன்மென் டார் - எந்த கிராமம் அல்லது விஸ்தீர்ணத்துக்காக 166-வது பிரிவின்படி முடிவான உரிமை தஸ்தவேஜு பிரத்தியேக மாய்ப் பிரசித்தம் செய்யப்பட்டிருக்கிறதோ அந்த கிராமத்தி லாவது விஸ்தீர்ணத்திலாவது இருக்கும் நிலத்தின் விஷயமாய் நியாயமானதும் தருமமானதுமான குத்தகைத்தொகையைப் பைசல் செய்யும்படி எப்போதாகிலும் கலெக்டருக்குக் கட் டளையிடலாம்.

விவரணம்.—யாதொரு நிலத்துக்குடையவர் தம்மு டைய பூஸ்திதியோ அதன் பாகமோ அங்காமியாகக் குத்த கைக்கு விடப்பட்டிருந்தும் பாதகமில்லாமலே, குத்தகைத் தொகை பைசல் செய்யவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்து கொள்ளலாம்.

(2) இந்தப் பிரிவின்படி குத்தகைத்தொகை பைசல் செய்யும்போது, கலெக்டரானவர் அப்போதிருக்கிற குத்த கைத்தொகை நியாயமானதாகவும் தருமமானதாகவுமிருக்க வில்லை என்று ருஜு செய்யப்படுகிறவரையிலே அது நியாய மானதாகவும் தருமமானதாகவும் இருப்பதாகவே கொள்ள வேண்டியதோடுகூட ரயத்தால் செலுத்தப்படத்தக்க குத்த

கைத்தொகை விதங்களை நிஷ்கரிஷை செய்வதன் விஷயமாக இந்த ஆக்டிற்கண்ட நிபந்தனைகளைக் கவனிக்கவும் வேண்டும்.

(3) இந்தப் பிரிவின்படி நேரிடுகிற யாதொரு விஷயத்திலே கலெக்டர் தமக்கு நியாயமானதாகவும் தருமமானதாகவும் தோற்றுகிற குத்தகைத்தொகையையாவது குத்தகைத் தொகை விதத்தையாவது உபயகட்சிக்காரர்களிடத்திலும் பிரேரேபிக்கலாம்; அப்படி பிரேரேபிக்கப்படும் குத்தகைத் தொகையை அவர்கள் வாய்மொழி மூலமாகவாவது எழுத்து மூலமாகவாவது ஒத்துக்கொள்ளுகிற பட்சத்திலே, அதை நியாயமானதாகவும் தருமமானதாகவுமிருக்கிற குத்தகைத்தொகையென்று எழுதிவைக்கலாம்; மேலும் அது இந்த ஆக்டின்படி கிரமமாய்ப் பைசல் செய்யப்பட்டிருப்பதாகக் கொள்ளவும் வேண்டும்.

(4) ஷெடி கட்சிக்காரர்கள் தங்களுக்குள்ளே ராஜி செய்து கொண்டாவது வேறே விதமாகவாவது குத்தகைத் தொகையின் சம்பந்தமாக ஏகோபித்துப் போகிற பட்சத்திலே அவர்கள் ஏகோபித்து ஏற்படுத்திக்கொண்ட தொகை நியாயமானதாகவும் தருமமானதாகவும் இருக்கிறது என்று கலெக்டர் பார்த்துத் திருப்தியடையவேண்டும்; அவர் அப்படி திருபதியடைந்தால், மேலே கண்டபடி ஏற்படுத்திக் கொள்ளப்பட்ட தொகை நியாயமானதாகவும் தருமமான தாகவும் இருக்கிற குத்தகைத்தொகையென்று எழுதி வைக்க வேண்டும்; மேலேகண்ட பிரகாரம் அவர் திருப்தியடையாவிட்டால் அவ்வாறு எழுதிவைக்கக்கூடாது. அவர் அப்படி திருப்தியடையாத பட்சத்திலே, (2) (3) குறிப்பிட்ட உட்பிரிவுகளில் நிபந்தனை கண்டிருக்கிற பிரகாரம் நியாயமானதும் தருமமானதுமான ஒரு குத்தகைத்தொகையைத்தாமே பைசல் செய்யவேண்டும்.

*பைசல் ரெகார்டைப் பிரதமத்தில் பிரசுரஞ்*
*செய்வதும் திருத்துவதும்.*

**169.** (1) 168-வது பிரிவின்படி பைசல்செய்து முடிவாயிருந்தால் கலெக்டர் நிலத்துக்குடையவர் பெயரை யும் ரயத்தின் பெயரையும் கைப்பற்று நிலத்தின் விஸ்தீர்ணத்தையும் பிரதேச கவர்ன்மெண்டார் கட்டளையிடுகிற இதர விவரங்களையும் அந்தக் கைப்பற்று நிலத்துக்காகப் பைசல் செய்தேற்படுத்தப்பட்ட குத்தகைத்தொகையையும் கண்டு மேற்படி பைசலைப்பற்றி ஒரு ரெகார்ட் தயார் செய்வித்து அதற்கு ஒரு பிரதியை நிர்ணயிக்கப்பட்டிருக்கிற விதமாகவும் நிர்ணயிக்கப்பட்டிருக்கிற காலத்துக்கும் பிரசுரஞ் செய்விக்கவேண்டும்; மேலும், மேற்படி ரெவினியு ஆபிஸர் அப்படிப்பட்ட ரெகார்டிலுள்ள யாதொரு பதிவைப்பற்றியாகிலும் அந்த ரெகார்டிலிருந்து யாதொரு விஷயம் விட்டு விடப்பட்டிருக்கிறதென்பதைப்பற்றியாகிலும் மேலே கண்டபடி பிரசுரஞ் செய்திருக்கிற காலத்தில் கொண்டுவரப்படும் எவையேனும் ஆட்சேபனைகளை வரப்பெற்றுக்கொண்டு அவைகளைக்குறித்து ஆலோசனை செய்வதோடுங்கூட அவைகளைக்குறித்துப் பிரதேச கவர்ன்மெண்டார் ஏற்படுத்துகிற விதிகளின்படி தீர்மானஞ்செய்யவும் வேண்டும்.

(2) மேற்படி கலெக்டரானவர் பைசல் ரெகார்டை 170-வது பிரிவின்படி ஊர்ஜ்ஜிதப்படுத்துவதற்கான அதிகாரிக்கு அனுப்புவதற்குமுன் எப்போதாவது தாமாகவே யாகிலும் பிரதிகூலமாய்ப் பாதிக்கப்பட்டிருக்கிற யாதொரு நபர் விண்ணப்பஞ்செய்துகொள்ளுவதன் மேலாகிலும் டிை ரெகார்டில் பதிவு செய்யப்பட்டிருக்கிற யாதொரு குத்தகைத் தொகையைத் திருத்தலாம்.

ஆனால், சம்பந்தப்பட்ட நபர்கள் ஹாஜராகி இந்த விஷயத்தில் அவர்கள் சொல்லிக்கொள்ளவேண்டியதைச் சொல்லிக்கொள்வதற்காக அவர்களுக்கு நியாயமான நோடிஸ் கொடுத்தாகிறவரையில் அப்படிப்பட்ட எந்தப்பதிவையும் திருத்தக்கூடாது.

பைசல் ரெகார்டை முடிவாகத் திருத்துவதும் அதை உரிமை தஸ்தவேஜில் சேர்த்தெழுதுவதும்.

**170.** (1) 169-வது பிரிவின்படி சகல ஆட்சேபனைகளைக்குறித்தும் தீர்மானஞ்செய்தாயிருந்தால், கலெக்டர் தம்முடைய பிரேரேபணைகளுக்குண்டான ஹேதுக்கள் கண்டெழுதியுள்ள பூர்த்தியான ஒரு ஸ்டேட்மென்டுடனும் தாம் (எவையேனும்) ஆட்சேபனைகள் வரப்பெற்றுக்கொண்டிருக்கிற பட்சத்திலே அவைகளுக்கு ஒரு சங்கிரகத்துடனும் பைசல் ரெகார்டை, ஊர்ஜிதப்படுத்துவதற்காகப் பிரதேச கவர்ன்மென்டாரால் நியமிக்கப்படும் அதிகாரிக்கு அனுப்பவேண்டும்.

(2) ஊர்ஜிதஞ்செய்யும் உத்தியோகஸ்தர் - பைசலேற்பாட்டைத் திருத்தியாவது திருத்தாமலாவது அதற்கு அனுமதிகொடுக்கலாம் அல்லது புனராலோசனைக்காக அதைத் திரும்பவும் அனுப்பலாம்: 169-வது பிரிவின்படி யாதொரு ஆக்ஷேபனை செய்யப்படுவதன்மேல் கலெக்டரால் பிறப்பிக்கப்பட்ட எந்த உத்திரவையாகிலும் திருத்த ஊர்ஜிதம் செய்யும் உத்தியோகஸ்தருக்கு அதிகாரமுண்டு.

ஆனால், சம்பந்தப்பட்ட நபர்கள் ஹாஜராகி இந்த விஷயத்தில் அவர்கள் சொல்லிக்கொள்ள வேண்டியதைக் சொல்லிக்கொள்ளுவதற்காக அவர்களுக்கு நியாயமான நோடிஸ் கொடுத்தாகிற வரையில் யாதொரு பதிவைத் திருத்தவுங்

கூடாது, பதிவு செய்ய விட்டுப்போனதைச் சேர்க்கவுங் கூடாது.

(3) ஊர்ஜ்ஜிதஞ்செய்யும் உத்தியோகஸ்தர் வபசல் ரெகார்டுக்கு அனுமதி கொடுத்தபிறகு, அந்த ரெகார்டை 166-வது பிரிவைச்சேர்ந்த (2) குறிப்பிட்ட உட்பிரிவின்படி பிரசுரிக்கப்பட்டிருக்கிற உரிமை தஸ்தவேஜில் சேர்த்தெழுதவேண்டும்; மேலும், இவ்விதம் திருத்தப்பட்டிருக்கிற உரிமை தஸ்தவேஜை நிர்ணயிக்கப்பட்ட மாதிரியாக முடிவாய் மீண்டும் பிரசுரஞ் செய்யவேண்டும்; அப்படி பிரசுரிப்பதானது அந்த தஸ்தவேஜு கிரமமாய்த் தயார் செய்யப்பட்டதென்பதற்கு முடிவான சாட்சியமாகும்.

மேலான ரெவினியு உத்தியோகஸ்தரிடத்தில் அப்பீல் செய்துகொள்வது.

**171.** 170-வது பிரிவைச் சேர்ந்த (3) குறிப்பிட்ட உட்பிரிவின்படி உரிமை தஸ்தவேஜு முடிவாய் மறுபடியும் பிரசுரிக்கப்பட்ட தேதியிலிருந்து மூன்று மாதங்களுக்குள்ளாக அப்பீல் கொடுத்துக் கொள்ளுவதாயிருக்கிற பட்சத்திலே, 169-வது பிரிவின்படி செய்யப்பட்ட யாதொரு ஆட்சேபணையின்மேல் ஒரு கலெக்டரால் பிறப்பிக்கப்பட்ட உத்தரவில் 170-வது பிரிவைச் சேர்ந்த (2) குறிப்பிட்ட உட்பிரிவின்படி ஊர்ஜ்ஜிதம் செய்யும் உத்தியோகஸ்தரால் திருத்தம் ஏதாகிலும் செய்யப்பட்டால் அந்தத் திருத்தம் சகிதமாக அப்படிப்பட்ட ஒவ்வொரு உத்திரவின் மேலும் அப்பீல் செய்துகொள்ளலாகும்; மேலும், அப்படிப்பட்ட அப்பீலைப் பிரதேச கவர்ன்மெண்டார் விதி மூலமாய் நிர்ணயிக்கக்கூடிய மேலான ரெவினியு உத்தியோகஸ்தரிடத்திலாவது இது விஷயமாய்ப் பிரதேச கவர்ன்மெண்டார் பிரத்தியேகமாக அதிகா

ரம் கொடுக்கும் உத்தியோகஸ்தரிடத்திலாவது செய்துகொள்ளவேண்டும்.

*ரெவினியு போர்டார் புனராலோசனை செய்து திருத்துவது.*

**172.** ரெவினியு போர்டார் - யாதொரு விஷயத்தில் விண்ணப்பம் செய்து கொள்ளப்படுவதன்மேலாவது தாங்களாகவேயாவது, 166-வது பிரிவைச் சேர்ந்த (2) குறிப்பிட்ட உட்பிரிவின்படி யாதொரு உரிமை தஸ்தவேஜு முடிவாய்ப் பிரசுரிக்கப்பட்ட தேதியிலிருந்து இரண்டு வருஷத்துக்குள் எப்போதாகிலும், 168-வது பிரிவின்படி குத்தகைத் தொகை பைசல் செய்யப்பட்டிருந்தால் 170-வது பிரிவைச் சேர்ந்த (3) குறிப்பிட்ட உட்பிரிவின்படி அந்த தஸ்தவேஜு மறுபடியும் பிரசுரிக்கப்பட்ட தேதியிலிருந்து இரண்டு வருஷத்துக்குள் எப்போதாகிலும் ஷெ உரிமை தஸ்தவேஜையோ அல்லது அந்த தஸ்தவேஜின் யாதொரு பாகத்தையோ புனராலோசனை செய்து திருத்தும்படி கட்டளையிடலாம்; ஆயினும், 173-வது பிரிவின்படி யாதொரு ஸிவில் கோர்ட்டாரால் பிறப்பிக்கப்பட்டிருக்கும் எந்த உத்தரவுக்கும் மேலேகண்டபடி கட்டளையிடுவதனால் பாதகம் உண்டாகக்கூடாது:

ஆனால், சம்பந்தப்பட்ட கட்சிக்காரர்கள் ஹாஜராகி இது விஷயத்தில் 'தாங்கள் சொல்லிக்கொள்ள வேண்டியதைச் சொல்லிக்கொள்வதற்காக அவர்களுக்கு நியாயமான அவகாசம் கொடுத்தாகிற வரையில், மேலே கண்டபடி கட்டளையிடக்கூடாது.

விவரணம்.—இந்தப் பிரிவில் 'ரெவினியு போர்டார்' என்பது - அந்த போர்டைச் சேர்ந்த ஒரு மெம்பர் 171-வது பிரிவின்படி செய்து கொள்ளப்பட்ட அப்பீலை ஏற்கெனவே

விசாரித்திருக்கிற பட்சத்தில் மொத்த பேர்டார் என்று அர்த்தமாகும்.

இன்னபடிக்கானுல் பைசல் ரெகார்டிலுள்ள பதிவுகள் ஸிவில் வியாஜ்ஜிய மூலமாய் ஆட்சேபிக்கப்படுவதற்குள்ளாகு மென்பது.

**173.** (1) 168 முதல் 171 வரையிலுள்ள பிரிவுகளின்படி தயார் செய்யப்பட்டதும் 170-வது பிரிவைச் சேர்ந்த (3) குறிப்பிட்ட உட்பிரிவின்படி முடிவாய்ப் பிரசுரிக்கப்பட்ட உரிமை தஸ்தவேஜில் சேர்த்தெழுதப்பட்டதுமான பைசல் ரெகார்டிலுள்ள யாதொரு பதிவினுலாவது குத்தகைத்தொகையைப் பைசல் செய்யத் தவறிப்போய் விட்டதனுலாவது பிரதிகூலமாய்ப் பாதிக்கப்பட்டிருக்கிற யாதொரு நபர் தாம் கோரும் பரிஹாரத்திற்காக ஸிவில் கோர்ட்டாரிடத்தில் வியாஜ்ஜியங்கொண்டு வரலாம்.

(2) அப்படிப்பட்ட வியாஜ்ஜியத்தை 170-வது பிரிவைச் சேர்ந்த (3) குறிப்பிட்ட உட்பிரிவின்படி உரிமை தஸ்தாவேஜு முடிவாய்ப் பிரசுரஞ் செய்யப்பட்ட தேதியிலிருந்து ஆறு மாதகாலத்துக்குள்ளாகவாவது கலெக்டரிடம் 171-வது பிரிவின்படி அப்பீல் செய்துகொள்ளப்பட்டிருந்தால் அந்த அப்பீல் பைசல் செய்யப்பட்ட தேதியிலிருந்து ஆறுமாத காலத்துக்குள்ளாகவாவது கொண்டு வர வேண்டும்.

(3) அடியிற்கண்ட ஹேதுக்களில் எதையேனும் தவிர வேறே ஹேதுவினுலல்லாமல் அப்படிப்பட்ட வியாஜ்ஜியத்தைக் கொண்டு வரலாம். அந்த ஹேதுக்கள் எவையென்றால் :—

(a) நிலத்துக்குடையவருக்கும் சயத்துக்கு மு ள் ள சம்பந்தம் இருந்துகொண்டிருக்கிறது அல்லது இல்லாமலிருக்கிறது என்பது ;

(b) நிலமானது குத்தகைத்தொகை செலுத்துவதற்குட்பட்டதல்லவென்பது ;

(c) நிலமானது யாதொரு குத்தகைத் தொகையுமில்லாமலே வைத்துக்கொள்ளப்பட்டிருப்பதாக உரிமை தஸ்தவேஜில் பதிவுசெய்யப்பட்டிருந்தபோதிலும் அது குத்தகைத்தொகை செலுத்துவதற்குட்பட்டதென்பது ;

(d) 165—வது பிரிவைச் சேர்ந்த (d), (e), (j) குறிப்பிட்ட பகுதிகளின்படி செய்யப்பட்டிருக்கிற யாதொரு பதிவில் பிழையிருக்கிறதென்பது;

(e) அனுகூலமான விதப்படி கைப்பற்றில் வைத்துக் கொண்டிருப்பதைக்குறித்த விசேஷ திட்டங்கள் பிசகாய் எழுதிவைக்கப்பட்டிருக்கின்றன என்பது அல்லது எழுதாமல் விட்டு விடப்பட்டிருக்கின்றனவென்பது.

(f) பைசலான குத்தகைத்தொகை 177—வது பிரிவிற் கண்ட நிபந்தனைகளின்படி எந்தத் தேதியிலிருந்து அமுலுக்கு வரவேண்டுமோ அந்தத் தேதியை கலெக்டர் பிசகாய் நிஷ்கரிஷை செய்திருக்கிறாரென்பது.

அப்படிப்பட்ட யாதொரு வியாஜ்ஜியத்திலே ஆலோசனை சபையிலுள்ள இந்தியா ஸ்டேட் ஸெகெரெட்டேரியவர்களைப் பிரதிவாதியாக்கக்கூடாது.

(4) ஷை கோர்ட்டார் தாங்கள் பிறப்பித்த டிக்ரியைப்பற்றி டிஸ்டிரிக்ட் கலெக்டருக்கு தெரிவிக்க வேண்டும்.

171-வது 173-வது பிரிவுகளின் படிக்கான தீர்மானங்களின் குறிப்பை உரிமை தஸ்தவேஜிலே பதிவுசெய்வது.

**174.** 171-வது பிரிவின்படிக்கான அப்பீலின்மேல் செய்யப்படும் சகல தீர்மானங்களைப்பற்றியும், ஸிவில் கோர்ட்டாரால் பிறப்பிக்கப்பட்டு 173-வது பிரிவைச்சேர்ந்த (4) குறிப்பிட்ட உட்பிரிவின்படி டிஸ்டிரிக்ட் கலெக்டருக்குத் தெரிவித்திருக்கிற சகல டிக்ரிகளைப்பற்றியும் ஒரு குறிப்பை 170-வது பிரிவின்படி எந்த உரிமை தஸ்தவேஜில் பைசல் செகார்ட் சேர்த்தெழுதப்பட்டிருக்கிறதோ அந்த உரிமை தஸ்தவேஜில் எழுதிவைக்கவேண்டும்; அந்தக் குறிப்பை ஷை தஸ்தவேஜைச் சேர்ந்த பாகமாக எண்ணவேண்டும்.

எழுத்துப் பிழைகளையும் தற்செயலாய் நேரிடும் பிழைகளையும் திருத்துவது.

**175.** பிரதேச கவர்ன்மெண்டாரிடமிருந்து இது விஷயமாகப் பிரத்தியேகமாய் அதிகாரம் பெற்றிருக்கும் யாதொரு கலெக்டரானவர் - விண்ணப்பம் செய்துகொள்ளப்படுவதன் மேலாவது தாமாகவேயாவது, யாதொரு உரிமை தஸ்தவேஜில் இருக்கும் எழுத்துப்பிழையையாவது கணக்கு சம்பந்தமான பிழையையாகிலும் தற்செயலாய் எவ்விதமாகவேனும் தவறிப் போனதனாலாவது விட்டுப் போயிருப்பதனாலாவது அந்த தஸ்தவேஜில் ஏற்படும் யாதொரு தப்பிதத்தையாகிலும் திருத்தலாம்:

ஆனால், சம்பந்தப்பட்ட கட்சிக்காரர்கள் ஹாஜராகி இதுவிஷயத்தில் தாங்கள் சொல்லிக்கொள்ளவேண்டிய

தைச் சொல்லிக்கொள்வதற்காக அவர்களுக்கு நியாயமான அவகாசம் கொடுத்தாகிற வரையில், மேலேகண்ட திருத்தம் எதுவும் செய்யக்கூடாது.

குறிப்புகள்.

*கைப்பிசகுகளை அல்லது கணக்குப் பிழைகளை திருத்த வேண்டுமானால் பழைய பிரிவு பிரகாரம் 12 மாதங்களுக்குள் செய்யவேண்டு என்றிருந்தது. அதை புதிய திருத்தத்தினால் எடுத்து விட்டனர்.*

168 முதல் 170 வரையிலுள்ள பிரிவுகளின்படி பைசல் செய்யப்பட்ட குத்தகைத் தொகைகள் சரியானவையென்று கொள்வது.

**176.** 171 முதல் 175 வரையிலுள்ள பிரிவுகளில் கண்ட நிபந்தனைகளுக்குட்பட்டு, 168 முதல் 170 வரையிலுள்ள பிரிவுகளின்படி பைசல் செய்து 170-வது பிரிவைச் சேர்ந்த (3) குறிப்பிட்ட உட்பிரிவின்படி முடிவாய்ப் பிரசுரிக்கப்பட்ட உரிமை தஸ்தவேஜில் பதிவு செய்யப்பட்டிருக்கும் சகல குத்தகைத்தொகைகளும் - இந்த ஆக்டின் தாற்பரியப்படி சரியாய்ப் பைசல் செய்யப்பட்டிருக்கின்றனவென்றும் நியாயமானதும் தருமமானதுமாகவுள்ள குத்தகைத்தொகைகளென்றும் கருதப்படும்.

*குத்தகைத்தொகை பைசல் எந்தக்கால முதல் செலாவணியாக வேண்டுமோ அந்தக் காலமும், (குத்தகைத் தொகை) அதிகப்படுத்துவதற்குக் காலவரையறையும்.*

**177.** யாதொரு குத்தகைத்தொகை இந்த அத்தியாயத்தின்படி பைசல்செய்யப்படுகிறபோது, அந்தப் பைசலேற்பாடானது - 170-வது பிரிவைச் சேர்ந்த (2) குறிப்பிட்ட உட்பிரிவின்படி ஊர்ஜிதம் செய்யும் உத்தியோகஸ்தர் அனுமதிகொடுக்கும் தேதிக்குப் பிறகு அடுத்து வருகிற வினிய வருஷ ஆரம்பமுதல் செலாவணியாகும்; மேலும்,

30-வது பிரிவைச்சேர்ந்த (ii) (iii) குறிப்பிட்ட பகுதிகளிற் கண்ட காரணமாகவாவது கைப்பற்று நிலத்தின் விஸ்தீர்ணத்தின் பின்னால் உண்டான மாறுதல் காரணமாகவாவது அல்லாமல் மற்றப்படி பைசல்செய்த ஷை குத்தகைத்தொகையை மேலேகண்ட காலத்துக்குப்பிறகு இருபதுவருஷம் வரையில் அதிகப்படுத்தவும்கூடாது; அந்தக் கைப்பற்று நிலத்தின் விஸ்தீர்ணத்தில் உண்டான மாறுதல் காரணமாகவாவது 38-வது பிரிவைச்சேர்ந்த (1) குறிப்பிட்ட உட்பிரிவிலுள்ள (a) (b) அடையாளமிட்ட பகுதிகளிற்கண்ட காரணமாகவாவது அல்லாமல் மற்றப்படி அந்தக் குத்தகைத்தொகையை ஷை காலவரையறைக்குள்ளாகக் குறைக்கவுங் கூடாது.

ஆனால், ஒரே ரெவினியு வருஷத்தில் ஒரே கிராமத்திலுள்ள சகல கைப்பற்று நிலங்களின் விஷயமாகவும், அல்லது எந்த விஸ்தீர்ணத்தின் விஷயமாய்ப் பைசலேற்பாடு செய்யப்படுகிறதோ அந்த விஸ்தீர்ணம் ஒரு கிராமத்தைவிடக் குறைவாயிருந்தால், அந்த விஸ்தீர்ணத்திலுள்ள சகல கைப்பற்று நிலங்களின் விஷயமாகவும் ஷை பைசலேற்பாடு செலாணியாகும்:

மேலும், 171, 172, 173 அல்லது 175-வது பிரிவின்படி உத்தரவு செய்யப்படுகிற பிரகாரம் குத்தகைத்தொகையை அதிகப்படுத்துவதற்கோ அல்லது குறைப்பதற்கோ இந்தப் பிரிவில் கண்டெதுவும் பிரயோகப்படுவதாகக் கருதக் கூடாது.

உரிமை தஸ்தவேஜு தயார் செய்யும் காலத்திலே நடவடிக்கைகளை நிறுத்தி வைப்பது.

**178.** (1) 168-வது பிரிவின்படி ஒரு விண்ணப்பம் செய்யப்பட்டிருக்கிறபோது, 170-வது பிரிவைச்சேர்ந்த

(3) குறிப்பிட்ட உட்பிரிவின்படி உரிமை தஸ்தவேஜு முடிவாய் பிரசுரித்தாகிறவரையில் யாதொரு ஸிவில் அல்லது ரெவினியு கோர்ட்டாரிடத்தில் 30, 38, 40-வது பிரிவுகளின் பிரகாரம் யாதொரு வியாஜ்ஜியம் கொண்டுவரவுங்கூடாது விண்ணப்பம் செய்துகொள்ளவும் கூடாது; யாதொரு நடவடிக்கை நடத்தவுங்கூடாது அல்லது ஏற்கெனவே ஏதாவது வியாஜ்ஜியம் விண்ணப்பம் அல்லது நடவடிக்கை கொண்டு வரப்பட்டாவது செய்து கொள்ளப்பட்டாவது நடத்தப்பட்டாவதிருந்தால் அதைப்பற்றி மேல்நடவடிக்கை நடத்தவுங்கூடாது.

(2) உரிமை தஸ்தவேஜைத் தயார் செய்ய கட்டளையிட்டு 164-வது பிரிவின்படி ஒரு உத்தரவு செய்திருக்கிறபோது, அந்த உரிமை தஸ்தவேஜு எந்த விஸ்தீர்ணத்துக்குச் சம்பந்தப்படுகிறதோ அந்த விஸ்தீர்ணத்தின் குத்தகைத் தொகையை மாற்றுவதற்கான யாதொரு வியாஜ்ஜியம் அல்லது விண்ணப்பத்தை எந்த ஸிவில் அல்லது ரெவினியு கோர்ட்டாரும் அப்படிப்பட்ட உரிமை தஸ்தவேஜு முடிவாய்ப் பிரசுரிக்கப்பட்டாகிற வரையில் வரப்பெற்றுக்கொள்ளவாவது அதைக் குறித்து நடவடிக்கை நடத்தவாவது கூடாது.

உரிமை தஸ்தவேஜுக்குச் சம்பந்தப்பட்டவைகளாயுள்ள
குத்தகைத்தொகையல்லாத வேறே விஷயங்களிலே
ஸிவில் கோர்ட்டாரின் அதிகார வரம்பு.

**179.** இந்த அத்தியாயத்தின்படி உரிமை தஸ்தவேஜைத் தயார் செய்யக் கட்டளையிடுகிற யாதொரு உத்தரவையோ அதன் யாதொரு பாகத்தையோ உண்டாக்குவது, பிரசுரிப்பது, அதில் கையெழுத்து செய்வது அல்லது அத்தாட்சிக்கையெழுத்து போடுவதைக்குறித்தாவது அப்படிப்பட்ட யாதொரு தஸ்தவேஜைக்குறித்தாவது, 173-வது

பிரிவில் நிபந்தனை கண்டிருக்கிறபடிக்கன்றி மற்றப்படி, 168 முதல் 172 வரையிலுள்ள பிரிவுகளின் பிரகாரம் பைசல் செய்யப்பட்டிருக்கிற குத்தகைத் தொகையைப் பற்றிய அப்படிப்பட்ட ஒரு தஸ்தவேஜிலிருக்கும் யாதொரு பதிவை மாற்றுவதைக் குறித்தாவது எந்த ஸிவில் கோர்ட்டாரிடத்திலும் வியாஜ்ஜியம் கொண்டுவரக்கூடாது.

ஆனால், யாதொரு நபர்—164-வது பிரிவைச் சேர்ந்த (1) குறிப்பிட்ட உட்பிரிவின்படி பிறந்த உத்தரவையனுசரித்துத் தயார் செய்யப்பட்ட உரிமை தஸ்தவேஜிலுள்ளதும் பாத்தியதைக்குச் சம்பந்தப்பட்டதுமான யாதொரு பதிவைக்குறித்தாவது அந்த பாத்தியதைக்குச் சம்பந்தப்பட்ட விஷயம் ஷை தஸ்தவேஜில் எழுதாமல் விடப்பட்டிருப்பதைக் குறித்தாவது அதிருப்தியடைந்தால், அவர் தம்முடைய பாத்தியதையை நிர்ணயிப்பதற்காக 1877-ம் வருஷத்து ஸ்பெஸிபிக் ரிலீப் ஆக்ட் என்னும் குறித்த பரிகார ஆக்ட் 6-ம் அத்தியாயத்தின்படி வியாஜ்ஜியம் கொண்டு வரலாம்.

செலவுகளை பங்கிடு செய்வது

**180.** (1) யாதொரு பூஸ்திதியிலாவது அதன் யாதொரு பாகத்திலாவது இந்த அத்தியாயத்திற்கண்ட நிபந்தனைகளில் எதையாவது அமுலுக்குக் கொண்டுவருவதற்காகப் பிடிக்கும் செலவையாகிலும் பிரதேச கவர்ன்மென்டார் கட்டளையிடுகிறபடி அந்தச் செலவின் ஒரு பாகத்தையாகிலும், அந்த பூஸ்திதி அல்லது அதன் பாகத்திலுள்ள ரயத்துகளும் நிலத்துக்குடையவரும், அந்த பூஸ்திதிக்குள்ளாக யாதொரு நிலம் அனுகூலமான ஷரத்துகளின்படி வைத்துக்கொள்ளப்பட்டிருந்து உரிமை தஸ்தவேஜில் அடங்கியிருக்கிற பட்சத்திலே அந்த நிலத்தைக் கைப்பற்றில் வைத்துக்கொண்டிருக்கிறவர்களும், பிரதேச கவர்ன்மென்

டாரால் சந்தர்ப்பங்களையெல்லாம் கவனித்து நிர்ணயிக்கப் படுகிற சங்கியா பரிமாணங்களின்படி கொடுக்க வேண்டும்; அந்தச் செலவுத் தொகையில் அப்படி யாதொரு நபர் செலு த்தவேண்டிய பாகத்தை நிலத்தீர்வையாக எண்ண வேண்டி யதுமல்லாமல், அது நிலத்தீர்வை பாக்கியாயிருந்தாலெப்படி யோ அப்படியே சந்தர்ப்பத்துக்கேற்றபடி 1864-ம் வருஷத் திய சென்னப்பட்டணத்து ஸர்க்கார் தீர்வை வசூல் ஆக்டின் நிபந்தனைகளின்படிக்காவது 1867-ம் வருஷத்திய சென்னை இராஜதானிப்பட்டணத்து நிலவரியைக்குறித்த (திருத்து வதற்கான) ஆக்டின்படிக்காவது வசூல் செய்யலாம்.

(2) நிலத்துக்குடையவர்களுக்கும் ரயத்துகளுக்கும் கொடுப்பதற்காக இந்த அத்தியாயத்தின்படி தயார் செய்யப் பட்ட உரிமை தஸ்தவேஜு ஸர்வே (மாப்புகள்) படங்கள் இவைகளின் பிரதிகளைத் தயார் செய்வதற்காகப் பிடிக்கும் செலவை, இந்த அத்தியாயத்திற்கண்ட நிபந்தனைகளை நிறை வேற்றுவதில் பிடிக்கும் செலவின் பாகமாகக் கொள்ளவேண் டும்.

## 12-ம் அத்தியாயம்.

### நிலத்துக்குடையவரின் சொந்த நிலம்.

*சொந்த நிலத்தை ரயத்தி நிலமாக மாற்றிக்கொள்வது.*

**181.** சொந்த நிலத்தை ரயத்தி நிலமாக மாற்றிக் கொள்ளவும் அந்தப்படி மாற்றிக்கொள்ளப்பட்ட நிலத்தில் அனுபோகபாத்தியதை ஏற்படுத்திக் கொடுக்கவும் நிலத் துக்குடையவருக்குச் சுதந்தரம் உண்டு.

182 முதல் 185 வரையிலுள்ள பிரிவுகள் இனாம்களல்லாத இதர பூஸ்திதிகளுக்கும் பிரயோகப்படவேண்டுமென்பதும், 185-A, 185-B, பிரிவுகள் இனாம்களுக்கு பிரயோகப்பட வேண்டுமென்பதும்.

**181-A.** 182 முதல் 185 வரையிலுள்ள பிரிவு களில் கண்ட நிபந்தனைகள் - 3-வது பிரிவைச் சேர்ந்த (2)

குறிப்பிட்ட பகுதியில் கண்ட (a) (b) (c) அல்லது (e) அடையாளமிட்ட உட்பகுதிகளின் தாற்பரியப்படியுள்ள பூஸ்திதிகளின் விஷயத்தில் பிரயோகப்படும்; மேலும், 185-A, 185-B பிரிவுகளில் கண்ட நிபந்தனைகள் 3-வது பிரிவைச் சேர்ந்த (2) குறிப்பிட்ட பகுதியில் கண்ட (b) அடையாளமிட்ட உட்பகுதியின் தாற்பரியப்படியுள்ள பூஸ்திதிகளின் விஷயத்தில் பிரயோகப்படும்.

*நிலத்துக்குடையவரின் சொந்த நிலத்தை ஸர்வே செய்யும்படிக்கும் அதற்குத் தஸ்தவேஜூ ஏற்படுத்தும்படிக்கும் உத்தரவு செய்ய அதிகாரம்.*

**182.** பிரதேச கவர்ன்மென்டார் குறித்த ஒரு பிரதேச விஸ்தீர்ணத்திலே நிலத்துக்குடையவரின் சொந்த நிலங்களாக இருக்கிற சகல நிலங்களையும் ஸர்வே செய்யும்படிக்கும் அவைகளுக்குத் தஸ்தவேஜூ ஏற்படுத்தும்படிக்கும் கலெக்டருக்கு கட்டளையிட்டு உத்தரவு செய்யலாம்.

இந்தப் பிரிவின்படி செய்யப்பட்ட உத்தரவை எந்த ஸிவில் கோர்ட்டிலாவது ரெவினியு கோர்ட்டிலாவது ஆட்சேபிக்கக்கூடாது.

*நிலத்துக்குடையவர் அல்லது (நிலத்தை) அனுபவிப்பவர் விண்ணப்பஞ்செய்து கொள்வதன்மேல் சொந்த நிலத்துக்குத் தஸ்தவேஜூ ஏற்படுத்த அதிகாரம்.*

**183.** (1) நிலத்துக்குடையவரின் சொந்த நிலமென்று சொல்லப்படுகிற யாதொரு நிலத்தின் விஷயத்திலே, அவராவது அதை அனுபவித்துவரும் யாதொரு நபராவது விண்ணப்பஞ்செய்து கொள்வதன் மேலும், செலவுக்காக வேண்டியிருக்கும் தொகையை டிபாஸிட்டாகக் கட்டுவதன் மேலும், கலெக்டரானவர் இது விஷயமாய்ப் பிரதேச கவர்மென்டாரால் செய்யப்பட்ட விதிகளுக்குட்

பட்டு, பிரஸ்தாப நிலமானது நிலத்துக்குடையவரின் சொந்த நிலமா அல்லது அல்லவா என்பதைக் கண்டறிந்து தஸ்தவேஜு ஏற்படுத்தலாம்.

(2) யாதொரு உடன்படிக்கையிலாவது ராஜியிலாவது என்ன சொல்லியிருந்த போதிலும் பாதகமில்லாமலே, யாதொரு நிலமானது நிலத்துக்குடையவரின் சொந்த நிலமென்று திருப்திகரமாயிருக்கிற சாட்சிய மூலமாக ருஜு செய்யப்பட்டாலன்றி மற்றப்படி, அந்த நிலத்தை நிலத்துக்குடையவரின் சொந்த நிலமென்று கலெக்டர் எழுதி வைக்கக் கூடாது.

*சொந்த நிலத்துக்கு இன்னவிதமாகத் தஸ்தவேஜு ஏற்படுத்த வேண்டுமென்பது.*

**184.** கலெக்டர் 182-வது பிரிவின்படிக்காவது 183-வது பிரிவின்படிக்காவது பிரவர்த்திக்கும் போது 166, 167, 179, 180-வது பிரிவுகளிற்கண்ட நிபந்தனைகள் கூடிய வரையில் பிரயோகப்படும்.

*நிலத்துக்குடையவரின் சொந்த நிலமென்று தீர்மானிப்பதற்கான விதிகள்.*

**185.** யாதொரு வியாஜ்ஜியம் அல்லது கடவடிக்கையிலே யாதொரு நிலம் நிலத்துக்குடையவரின் சொந்த நிலமா என்னும் விஷயத்தைத் நிர்மானிக்க அவசியம் நேரிடுகிறபோது, அவ்வவ்விடத்திய வழக்கத்தையும், அந்த நிலம் 1898ம் வருஷம் ஜனவரி 1வ-க்கு முன்னமே சொந்த நிலமென்று குறிப்பிட்டுக் குத்தகைக்கு விடப்பட்டதா என்னும் விஷயத்தையும், கொண்டுவரப்படக்கூடிய வேறு யாதொரு சாட்சியத்தையும் கவனிக்கவேண்டும்; ஆனால்,

அந்த நிலம் சொந்த நிலம்தானென்று ருஜு செய்யப்படுகிற வரையிலே, அதைச் சொந்த நிலமாயிராததாகவே பாவிக்க வேண்டும்.

*இனும் கிராமங்களில் நிலத்துக்குடையவர்களுக்குள் சொந்த நிலத்தைப்பற்றிய ரெகார்ட்.*

**185**-A. (1) 3-வது பிரிவைச் சேர்ந்த (2) குறிப்பிட்ட பகுதியில் கண்ட (b) அடையாளமிட்ட உட்பகுதியின் தாற்பரியப்படியுள்ள யாதொரு பூஸ்திதியின் நிலத்துக்குடையவர் - பூஸ்திதிகளிலுள்ள நிலத்தைப்பற்றிய சென்னபட்டணம் 1934-ம் வருஷத்து (இரண்டாவது திருத்த) ஆக்ட் வழங்கத் தொடங்கும் தேதியிலிருந்து இரண்டு வருஷத்துக்குள், தம்முடைய பூஸ்திதியிலுள்ள குறிப்பிட்ட யாதொரு நிலம் 3-வது பிரிவைச் சேர்ந்த (10) குறிப்பிட்ட பகுதியில் கண்ட (b) அடையாளமிட்ட உட்பகுதியின் (i) முதல் (iv) வரையிலுள்ள பாராக்களில் அர்த்தம் சொல்லப்பட்டபடி தம்முடைய சொந்த நிலமென்று கண்டு ஒரு உத்தரவு பிறப்பிக்கும்படி கலெக்டருக்கு விண்ணப்பம் செய்து கொள்ளலாம். நிலத்துக்குடையவர் நிலத்தைச் சேர்ந்த பாயக்காரி அல்லது பாயக்காரிகள் (எவர்களேனும் இருந்தால்) அவர்களுடைய பெயர்களையும் மேல்விலாசங்களையும், நிர்ணயிக்கப்படக்கூடிய இதர விவரங்களையும் தம்முடைய விண்ணப்பத்தில் கண்டெழுத வேண்டும்.

(2) அப்படிப்பட்ட விண்ணப்பம் வரப்பெற்றுக் கொள்வதன்மேல், கலெக்டரானவர் - அதற்கு ஒரு நகலையும் விசாரணை நடக்கும் தேதியைக் குறித்த நோடிஸையும் பிரஸ்தாப தாலூகாவில் வழங்கும் சுதேச பாஷையில் அந்த தாலூக்கா ஆபிஸில் ஒட்டும்படிக் கட்டளையிட வேண்டியதுமல்லாமல், அதில் கண்டிருக்கும் விஷயங்களைப் பிரஸ்தாப

கிராமத்தில் தண்டோரா போட்டுப் பிரசித்தம் செய்விக்கவும் வேண்டும். மேலும், அவர் - ஷை விண்ணப்பத்துக்கும் நோடிஸுக்கும் நகல் ஒன்றைக் கிராமச் சாவடியிலாவது கிராமச்சாவடி ஏதுவும் இராவிட்டால் அந்த கிராமத்தில் எல்லார்க்கும் நன்றாய்த் தெரியும்படியான ஒரு இடத்திலாவது ஒட்டவேண்டியதுமல்லாமல், ஷை விண்ணப்பத்துக்கும் நோடிஸுக்கும் நகல் ஒன்றை சந்தர்ப்பத்துக்கேற்றபடி சம்பந்தப்பட்ட பாயக்காரிக்காகிலும் பாயக்காரிகள் ஒவ்வொருவருக்குமாகிலும் தபால் மூலமாய் அனுப்பவும் வேண்டும். - ஷை விண்ணப்பத்துக்கும் நோடிஸுக்கும் நகல் ஒன்றைப் பிரஸ்தாப ஜில்லா கெஜட்டில் பிரசித்தம் செய்யவும் வேண்டும்.

(3) அந்த கிராமத்திலுள்ள யாதொரு பாயக்காரியானவர் கலெக்டருக்கு விண்ணப்பம் செய்துகொள்வதன் மேல் (1) குறிப்பிட்ட உட்பிரிவின்படி நிலத்துக்குடையவர் செய்துகொண்ட விண்ணப்பத்துக்கு ஒரு நகலைக் கட்டணமில்லாமல் பெற்றுக்கொள்ள அர்ஹதை யுள்ளவராவார்.

(4) கலெக்டரானவர் - விண்ணப்பத்தைக் குறித்து விசாரணை செய்யும் தேதியைப்பற்றி விண்ணப்பதாரருக்குக் கூட நோடிஸ் கொடுக்க வேண்டும்.

(5) ஷை தேதியிலாவது பிறபட்டு எந்தத் தேதிக்கு விசாரணை தள்ளிவைக்கப்படக்கூடுமோ அந்தத் தேதியிலாவது ஹாஜராகும் கட்சிக்காரர்களையும் இதர நபர்களையும் விசாரணை செய்த பிறகு, கலெக்டரானவர்—

(a) விண்ணப்பத்தில் குறிப்பிட்டிருக்கும் நிலமாகிலும் அதன் யாதொரு பாகமாகிலும் 3-வது பிரிவைச்சேர்ந்த (10) குறிப்பிட்ட பகுதியில்கண்ட (b) அடையாளமிட்ட

உட்பகுதியின் (i) முதல் (iv) வரையிலுள்ள பாராக்களில் குறிப்பிட்டிருக்கும் வகைகளில் எதையாவது சேர்ந்திருக்கிறதென்று தாம் தெரிந்து திருப்தியடைந்தால், ஷை நிலமாயினும் பாகமாயினும் சொந்த நிலமென்று நிர்ணயித்தும் பிரஸ்தாப தாலூகாவிலுள்ள நிலத்துக்குடையவர்களின் சொந்த நிலத்தைப்பற்றிய ரெகார்டில் ஷை நிலத்தை அல்லது பாகத்தைச் சேர்க்கும்படி கட்டளையிட்டும் உத்தரவு பிறப்பிக்கவேண்டும் ; அல்லது,

(b) அந்தப்படி தாம் திருப்தியடையாவிட்டால் ஷை விண்ணப்பத்தைத் தள்ளிவிட்டு உத்தரவு பிறப்பிக்க வேண்டும்.

விவரணம் I.—யாதொரு நிலம் சொந்த நிலமென்று ருஜு செய்யும் பொறுப்பு நிலத்துக்குடையவரைச் சேர்ந்ததாகும்.

விவரணம் II.—யாதொரு பாயக்காரிக்கு அனுபோக பாத்தியதை இல்லையென்றாவது அவருடைய அனுபோக பாத்தியதை எந்த விதமாகவோ வரையறுக்கப்பட்டிருக்கிறதென்றாவது அதன் விஷயமாய் நிர்ப்பந்தம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறதென்றாவது கண்டுள்ள அல்லது குறிப்பாய்ப் பொருள்படும் யாதொரு சொற்றொடர் 1918-ம் வருஷ ஜூலை 1-ம் தேதியிலாவது அதற்குப் பிறகாவது எழுதிக்கொடுக்கப்பட்ட அல்லது வெளியிடப்பட்ட ஒரு குத்தகைப் பத்திரத்திலாகிலும் பட்டாவிலாகிலும் இதைப் போன்ற வேறே எந்தப் பத்திரத்திலாகிலும் இருந்தால், அது பாயக்காரி பாத்தியதை ஆரம்பமான காலத்திலே சம்பந்தப்பட்ட நிலத்தில் நிலத்துக்குடையவருக்குக் குடிவாரபாத்தியதை இருந்தது என்பதை எண்பிக்கும் காரியத்துக்காக சாட்சியமாய் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது.

விவரணம் III.—1918-ம் வருஷம் ஜூலை மீ 1-ம் தேதிக்கு முந்தி எழுதிக் கொடுக்கப்பட்ட அல்லது வெளியிடப்பட்ட யாதொரு பட்டா அல்லது அதைப்போன்ற யாதொரு தஸ்தாவேஜில் உள்ள யாதொரு சொற்றொடரானது ஒன்றே மாத்திரம் பாயக்காரி பாத்தியதை ஆரம்பமான காலத்திலே சம்பந்தப்பட்ட நிலத்தில் நிலத்துக்குடையவருக்கு குடிவார பாத்தியதை இருந்தது என்பதை எண்பிக்கும் காரியங்களுக்காக போதுமானதாகாது.

(6) (5) குறிப்பிட்ட உட்பிரிவின்படி கலெக்டர் பிறப்பிக்கும் உத்தரவின்மேல் டிஸ்டிரிக்ட் கலெக்டருக்கு அப்பீல் செய்து கொள்ளப்பட்டிராவிட்டால் அந்த உத்தரவும் டிஸ்ட்ரிக்ட் கலெக்டர் பிறப்பிக்கும் உத்தரவின்மேல் இனாம் கமிஷனருக்கு அப்பீல் செய்து கொள்ளப்பட்டிராவிட்டால் அந்த உத்தரவும், இனாம் கமிஷனர் பிறப்பிக்கும் உத்தரவும் (8) குறிப்பிட்ட உட்பிரிவில் கண்ட நிபந்தனைகளுக்குட்பட்டு முடிவானவைகளாகும்; மேலும், எந்த நியாயஸ்தலத்திலும் அவை ஆட்சேபிக்கப்படுவதற்கு உள்ளாகமாட்டா.

(7) (a) (5) குறிப்பிட்ட உட்பிரிவைச் சேர்ந்த (a) அடையாளமிட்ட பகுதியின்படி கலெக்டர் பிறப்பித்து, அப்பீல் செய்துகொள்ளப்படுவதன்மேல் டிஸ்டிரிக்ட் கலெக்டரும் இனாம் கமிஷனரும் எவைகளேனும் உத்தரவுகள் பிறப்பித்திருந்தால் அவைகளால் திருத்தப்பட்டபடிக்குள்ள உத்தரவுகளை அனுசரித்து நிலத்துக்குடையவர்களின் சொந்த நிலத்தைப்பற்றிய ரெகார்டைத் தயார் செய்யவேண்டும்.

(b) அந்த ரெகார்டை நிர்ணயிக்கப்பட்ட விதமாய்ப் பிரசித்தம் செய்யவேண்டும்.

(8) (a) (7) குறிப்பிட்ட உட்பிரிவின்படி தயாரித்துப் பிரசித்தம் செய்யப்பட்ட நிலத்துக்குடையவர்களின் சொந்த நிலத்தைப்பற்றிய ரெகார்டில் யாதொரு நிலத்தைச் சேர்த்திருப்பதைக்குறித்த எந்தப் பதிவினாலாகிலும் துன்பமடைந்திருக்கும் யாதொரு நபர்—

(i) (1) குறிப்பிட்ட உட்பிரிவின்படி செய்துகொள்ளப்பட்ட விண்ணப்பத்துக்காவது அதற்குச் சம்பந்தப்பட்ட யாதொரு அப்பீல் அல்லது இரண்டாவது அப்பீலுக்காவது தாம் அல்லது தமக்கு முன் அந்த பாத்தியதையைப் பெற்றிருந்த நபர் சம்பந்தப்பட்டிருக்கவில்லையென்னும் ஹேதுவின் மேலும், பிரமாதமான நியாய பங்கம் ஏற்படாதபடி தடுக்க வேண்டுமானால், மேற்படி பதிவை விட்டுவிடுவது, திருத்துவது அல்லது மாற்றுவது அவசியமென்னும் ஹேதுவின் மேலும், கலெக்டருக்கு, அல்லது

(ii) கலெக்டருக்குச் செய்துகொள்ளப்பட்ட விண்ணப்பத்தைக் குறித்த நோடிஸ் அல்லது டிஸ்ட்ரிக்ட் கலெக்டருக்குச் செய்துகொள்ளப்பட்ட அப்பீலைக்குறித்த நோடிஸ் அல்லது இனும் கமிஷனருக்குச் செய்துகொள்ளப்பட்ட இரண்டாவது அப்பீலைக்குறித்த நோடிஸ் விண்ணப்பதாரருக்குச் சேர்ப்பிக்கப்படவில்லை, அல்லது மேற்படி விண்ணப்பம், அப்பீல் அல்லது இரண்டாவது அப்பீல் விசாரணைக்கு வந்தபோது விண்ணப்பதாரர் போதுமான காரணத்தினால் ஹாஜராகமுடியாதபடி தடுக்கப்பட்டார் என்னும் ஹேதுவின் மேலும் பிரமாதமான நியாயபங்கம் ஏற்படாத

படி தடுக்க வேண்டுமானல் மேலே கண்டபடி பதிவை விட்டுவிடுவது, திருத்துவது அல்லது மாற்றுவது அவசியமென்னும் ஹேதுவின்மே லும், சந்தர்ப்பத்துக்கேற்றபடி கலெக்டருக்கு, அல்லது டிஸ்டிரிக்ட் கலெக்டருக்கு அல்லது இனும் கமிஷனருக்கு.

மேலே கண்டபடி பதிவை விட்டுவிடுவதற்காக, திருத்துவதற்காக அல்லது மாற்றுவதற்காக விண்ணப்பம் செய்து கொள்ளலாம்.

(b) அப்படிப்பட்ட விண்ணப்பம் வரப்பெற்றுக்கொள்வதன்மேல், சந்தர்ப்பத்துக்கேற்றபடி கலெக்டராவது இனும் கமிஷனராவது - விண்ணப்பதாரர் ஹாஜராகி தாம் சொல்லிக்கொள்ளவேண்டியதைச் சொல்லிக்கொள்ள அவருக்கு அவகாசம் ஏற்படுத்திக்கொடுத்த பிறகு—

(i) சம்பந்தப்பட்ட நிலத்துக்குடையவர் அல்லது நிலத்துக்குடையவர்களுக்கு நோடிஸ் அனுப்பாமலே விண்ணப்பத்தைத் தள்ளிவிடலாம்; அல்லது,

(ii) விண்ணப்பத்தைக்குறித்து விசாரணை செய்வதற்காக ஒரு தினத்தை நிஷ்கர்ஷை செய்து, அதைப்பற்றி விண்ணப்பதாரருக்கு அல்லது சம்பந்தப்பட்ட நிலத்துக்குடையவருக்கு அல்லது நிலத்துக்குடையவர்கள் ஒவ்வொருவருக்கும், கலெக்டர், டிஸ்டிரிக்ட் கலெக்டர் அல்லது இனும் கம்மிஷனர் அவசியமென்று கருதக்கூடிய இதர நபர்களுக்கும் நோடிஸ் அனுப்பலாம்.

(c) (b) குறிப்பிட்ட பகுதியைச் சேர்ந்த (ii) அடையாளமிட்ட உட்பகுதியில் குறிப்பிட்டிருக்கும் விசாரணை நடக்கும் தேதியிலாவது பிறபட்டு எந்தத் தேதிக்கு விசாரணை தள்ளிவைக்கப்படக் கூடுமோ அந்தத் தேதியிலாவது ஹாஜராகும் கட்சிக்காரர்களையும். இதர நபர்களையும் விசாரணை செய்த பிறகு, சந்தர்ப்பத்துக்கேற்றபடி கலெக்டராவது டிஸ்ட்ரிக்ட் கலெக்டராவது இனாம் கம்மிஷனராவது—

(i) ஷை பதிவை முழுவதுமோ சிறிது மட்டிலோ விட்டுவிடவேண்டுமென்றாகிலும், தமக்குத்தகுதியாகத் தோற்றக்கூடிய எந்த விதமாகவேனும் அதைத் திருத்தவேண்டுமென்றாகிலும் கட்டளையிட்டு உத்தரவு பிறப்பிக்கவேண்டும்; அல்லது,

(ii) அந்த விண்ணப்பத்தைத் தள்ளிவிட்டு உத்தரவு பிறப்பிக்கவேண்டும்.

இந்தப்பகுதியின்படி யாதொரு பதிவு விட்டுவிடப்பட்டாலும் திருத்தப்பட்டாலும் மாற்றப்பட்டாலும் அந்தப்படி விட்டுவிடப்பட்டிருப்பது, திருத்தப்பட்டிருப்பது அல்லது மாற்றப்பட்டிருப்பதைக் குறித்து நிர்ணயிக்கப்பட்ட விதமாகப் பிரசித்தம் செய்யவேண்டும்.

(9) (7) குறிப்பிட்ட உட்பிரிவின்படி தயாரித்துப்பிரசித்தம் செய்து (8) குறிப்பிட்ட உட்பிரிவின்படி உத்தரவுகள் எவையேனும் பிறப்பிக்கப்பட்டிருந்தால் அவைகளை அனுசரித்து மாற்றப்பட்டப்படிக்குள்ள நிலத்துக்குடையவர்களின் சொந்த நிலத்தைப் பற்றிய ரெகார்டானது—

(a) ஷெடி ரெகார்டில் சேர்க்கப்பட்டிருக்கும் நிலமானது பூஸ்திதிகளிலுள்ள நிலத்தைப்பற்றிய சென்னைப் பட்டணம் 1934-ம் வருஷத்து (இரண்டாவது திருத்த) ஆக்ட் வழங்கத் தொடங்கும் தேதியன்று நிலத்துக்குடையவர்களின் சொந்த நிலமாயிருந்ததென்பதற்கும்,

(b) ஷெடி ரெகார்டில் சேர்க்கப்படாத யாதொரு நிலம் இந்த ஆக்டின் தாற்பரியப்படி நிலத்துக்குடையவர்களின் சொந்த நிலமல்லவென்பதற்கும்

முடிவான ருஜுவாகும்.

குறிப்புகள்.

இந்தப் பிரிவானது 1934-ம் வருஷத்திய இரண்டாவது திருத்த சட்டமாக நடந்தேறப்பட்டு 1935-ம் வருஷம் மார்ச்சுமாதம் கவர்னர் அவர்களால் சட்டமாக அங்கீகரிக்கப்பட்ட இனாம்தார் திருத்த சட்டத்தினால் புதியதாக ஏற்படுத்தப்பட்டது. இனாம் கிராமங்களிலுள்ள நிலங்கள் விஷயமாயும் சர்வே செய்வதற்கும ரிகார்டு தஸ்தவேஜுகள் ஏற்படுத்துவதற்கும் நியந்தனைகள் செய்யப்பட்டிருக்கின்றன.

இனாம் கிராமங்களில் உள்ள நிலம் சொந்த நிலமல்லவென்று நிச்சயமாய்க்கொள்வது.

**185-B.** யாதொரு வியாஜ்ஜியத்திலாவது நடவடிக்கையிலாவது எந்த நிலமாகிலும் நிலத்துக்குடையவரின் சொந்த நிலமாவென்று தீர்மானிப்பது அவசியமாய் விட்டிருக்கிற பட்சத்திலே, இதற்கு விரோதமாய் ருஜு செய்யப்படுகிறவரையில அந்த நிலம் சொந்த நிலமல்லவென்று நிச்சயமாய்க்கொள்ளவேண்டும்.

குறிப்புகள்.

இந்தப் பிரிவானது 1934-ம் வருஷத்திய இரண்டாவது திருத்த சட்டமாக நடந்தேறப்பட்டு 1935-ம் வருஷம் மார்ச்சுமாதம் கவர்

னர் அவர்களால் சட்டமாக அங்கீகரிக்கப்பட்ட இனும்தார் திருத்த சட்டத்தினால் புதியதாக ஏற்படுத்தப்பட்டது. இனும் கிராமங்களிலுள்ள நிலங்கள் விஷயமாயும் சர்வே செய்வதற்கும் ரிகார்டு தஸ்தவேஜுகள் ஏற்படுத்துவதற்கும் நிபந்தனைகள் செய்யப்பட்டிருக்கின்றன.

## 13-ம் அத்தியாயம்.

### கட்டிடங் கட்டுவதற்காகவும் வேறே காரியங்களுக்காகவும் நிலத்துக்குடையவர் நிலமெடுத்துக் கொள்வது.

*கட்டிடம் கட்டுவதற்காகவும் வேறே காரியங்களுக்காகவும் நிலத்துக்குடையவர் நிலமெடுத்துக்கொள்வது.*

**186.** (1) (a) நிலத்துக்குடையவர் விண்ணப்பம் செய்துகொள்வதன்மேல், சந்தர்ப்பத்துக்கேற்றபடி ரயத்து அல்லது இனும்தாருக்கு நோடிஸ் கொடுத்த பிறகும், தமக்குத் தகுதியாக தோற்றுகிறபடி விசாரணை செய்த பிறகும், யாதொரு நிலத்தைக் கட்டிடம் கட்டுவதற்கான மனையாக உபயோகிப்பது உட்பட, அந்த நிலம் யாதொரு கைப்பற்று நிலத்தின் பாகமாயிருந்தால் அந்தக்கைப்பற்று நிலத்தின் நன்மைக்காவது பூஸ்திதியின் நன்மைக்காவது நியாயமானதாகவும் போதுமானதாகவுமுள்ள ஏதோ ஒரு காரியத்துக்காகவாகிலும், மத சம்பந்தமான - வித்தியா சம்பந்தமான - சமூக சம்பந்தமான - அல்லது தருமார்த்தமான யாதொரு காரியத்துக்காகவாகிலும், சுரங்கங்கள் வெட்டி வேலை செய்வதற்காகவாகிலும், யாதொரு ஏரியின் அல்லது வருவாய்க் கால்கள் - கழிவுத்தண்ணீர்க்கால்கள் - மிகுதித் தண்ணீர் பாயும் கால்கள் அல்லது நீர்ப்பாய்ச்சல் கால்களின் காரியத்துக்காகவாகிலும் நிலத்துக்குடையவருடைய பூஸ்திதியின் எல்லைகளுக்குள் யாதொரு ரயத்து அல்லது இனும்தாரின் அனுபோகத்திலிருக்கும் ஷெடி நிலத்தை எடுத்துக்கொள்ள

நிலத்துக்குடையவர் விரும்புவதாக டிஸ்ட்ரிக்ட் கலெக்டர் தெரிந்து திருப்தியடைந்தால், அவர்—அந்த நிலத்தைக் குறிப்பிட்டும், எந்த காரியத்துக்காக அதை நிலத்துக்குடையவர் எடுத்துக்கொள்ள விரும்புகிறாரோ அது நியாயமானதும் போதுமானது மென்று கண்டும் நிலத்துக்குடையவருக்கு ஒரு ஸெர்டிபிகேட் கொடுக்கலாம்.

யாதொரு நிலமானது எந்தக்காரியத்துக்காக நிலத்துக்குடையவருக்கு வேண்டியிருக்கிறதோ அந்தக்காரியம் நியாயமானதும் போதுமானதும் என்பதைக் குறித்து டிஸ்ட்ரிக்ட் கலெக்டர் கொடுக்கும் ஸெர்டிபிகேட்டானது முடிவானதாயிருப்பதுமல்லாமல், அதை எந்த ஸிவில் கோர்ட்டிலும் ஆட்சேபிக்கவுங்கூடாது;

(b) பிரதேச கவர்ன்மெண்டார் - நிலத்துக்குடையவர் விண்ணப்பம் செய்து கொள்வதன் மேலும், எந்த நிலத்தின் விஷயமாகவாவது (a) குறிப்பிட்ட பகுதியின்படி டிஸ்ட்ரிக்ட் கலெக்டரின் ஸெர்டிபிகேட்டை அவர் கொண்டுவந்து காட்டுவதன்மேலும், மேலே கண்டபடி நிலமெடுத்துக்கொள்வதற்காக இவ்வளவு பிடிக்குமென்று டிஸ்ட்ரிக்ட் கலெக்டரால் மதிப்பிடப்பட்ட உத்தேசமான செலவை அவர் டிபாஸிட் செய்வதற்கும் இது விஷயமாய்ப் பிரதேச கவர்ன்மெண்டார் பொதுவான அல்லது பிரத்தியேகமான உத்தரவு மூலமாய் நிர்ணயிக்கக்கூடிய இதர திட்டங்களை அவர் பூர்த்தி செய்வதற்கும் உட்பட்டு, '1894-ம் வருஷத்து நிலமெடுத்துக் கொள்வதற்கான ஆக்டின்படி நிலத்தில் ரயத்து அல்லது இனாம்தாரருக்குள்ள பாத்தியதையை அடைவதற்குத் தக்கபடி ஏற்பாடு செய்யவேண்டுமென்று டிஸ்ட்ரிக்ட் கலெக்டருக்குக் கட்டளையிடலாம். அதன்மேல், அந்த ஆக்டில்கண்ட நிபந்தனைகள் - அந்த பாத்தியதையானது ஷை ஆக்டின் தாற்

பரியப்படி நிலமாயிருந்தால் எப்படியோ அப்படியும், ஷெடி ஆக்ட் 7-வது பிரிவின்படி அந்த நிலத்தை எடுத்துக்கொள்வதற்காக தக்கபடி ஏற்பாடு செய்ய வேண்டுமென்று பிரதேச கவர்ன்மென்டார் டிஸ்ட்ரிக்ட் கலெக்டருக்குக் கட்டளையிட்டிருந்தால் எப்படியோ அப்படியும், (2) அடையாளமிட்ட உட்பிரிவில் குறிப்பிட்டிருக்கும் திருத்தத்துக்குட்பட்டுப் பிரயோகப்படும்.

மேலேகண்டபடி பாத்தியதை அடைந்ததற்குச் சம்பந்தப்பட்ட சகல பட்டுபடிகளும் உட்பட அதற்குப்பிடித்த செலவானது டிபாஸிட் செய்யப்பட்ட தொகைக்கு அதிகமாயிருந்தால், நிலத்துக்குடையவர் அந்த அதிகப்படியான தொகையைச் செலுத்தவேண்டும்; மேலும், மேற்படி செலவு டிபாஸிட் செய்யப்பட்ட தொகைக்கு குறைவாயிருந்தால், மிகுதியாயிருக்கும் தொகை நிலத்துக்குடையவருக்கு வாபஸ் செய்துவிடப்படும். பாத்தியதையை அடைந்ததற்குப்பிடித்த முழு செலவையும் நிலத்துக்குடையவர் செலுத்துவதன் மேல், அடையப்பட்ட பாத்தியதையானது அவருக்கு ட்ரான்ஸ்பர் செய்யப்படும்.

(2) சுரங்கங்கள் வெட்டி வேலை செய்வதற்காக நிலம் எடுத்துக்கொள்ளப்பட்டிருந்து, மயத்துக்காவது இனாம்தாருக்காவது கனிஜ வஸ்துக்களில் யாதொரு பாத்தியதை இருக்கிறபட்சத்தில், அவருக்குக் கொடுக்கும்படி தீர்மானிக்கப்பட்ட பிரதிபலன் தொகையில் அந்த பாத்தியதையின் பொருட்டுக் கொடுக்கப்படும் பிரதிபலனும் அடங்கும்.

குறிப்புகள்.

இந்தப் பிரிவானது 1934-ம் வருஷத்திய திருத்த சட்டத்தினால் முற்றிலும் மாற்றியமைக்கப்பட்டது. பழைய பிரிவின் பிரகாரம் எந்த காரியங்களுக்கு யாதொரு நிலம் தேவையாயிருந்ததோ

அந்த காரியம் மதசம்பந்தமான அல்லது தரும சம்பந்தமான அல்லது கல்வி சம்பந்தமான காரியம்தானு என்பதை நிர்ணயிப்பது ஸிவில் கோர்ட்டினுடைய அதிகார வரம்பின் கீழ் கிடக்கது. இப்பொழுது அது விஷயமாய் டிஸ்டிரிக்ட் கலெக்டர் விசாரணை செய்து சர்ட்டிபிகேட் தந்தால் போதுமானது. தொகை இவ்வளவு என்பதை மாத்திரம் நிர்ணயிக்கவேண்டியது ஸிவில் கோர்ட்டினுடைய கடமையாகும்.

## 14-வது அத்தியாயம்.

### ஒப்பந்தம்.

*ஒப்பந்தத்தைப்பற்றிய நிர்ப்பந்தங்கள்.*

**187.** (1) இந்த ஆக்ட் ஜாரியாவதற்கு முன்பாவது ஜாரியானதற்குப் பிறகாவது நிலத்துக்குடையவரும் ரயத்தும் செய்துகொண்ட யாதொரு ஒப்பந்தத்திலுள்ளதெதனாலும்,—

(a) இந்த ஆக்டிற்கண்ட நிபந்தனைகளின்படி சீர்திருத்தங்கள் செய்ய மேற்படி ரயத்துக்குள்ள பாத்தியதையானது எடுபட்டு போகவுமாட்டாது, அதற்கு வரையறை ஏற்படவுமாட்டாது;

(b) 11-வது பிரிவில் நிபந்தனை ஏற்படுத்தியிருக்கிறபடி நிலத்தை உபயோகித்துக்கொள்ள யாதொரு ரயத்துக்குள்ள பாத்தியதையானது எடுபட்டுப்போகவுமாட்டாது, அதற்கு வரையறை ஏற்படவுமாட்டாது;

(c) 38-வது பிரிவைச்சேர்ந்த (1) குறிப்பிட்ட உட்பிரிவிலே (a) (b) அடையாளமிட்ட பகுதிகளாலும், 32—வது பிரிவைச்சேர்ந்த (3) குறிப்பிட்ட உட்பிரிவிலாகிலும் கண்ட ஹேதுக்களின் மேலாவது, நிஷ்கரிஷையான ஒரு காலவரையறைக்காக 1908-ம்வருஷம் ஜனவரிமீ முதல் தேதிக்கு முன்னே ஏற்பட்டு இன்னும் செலாவணியாய்க்கொண்டிருக்

கிற யாதொரு குத்தகை விஷயத்தவிர மற்ற விஷயங்களில் 38-வது பிரிவைச்சேர்ந்த (1) குறிப்பிட்ட உட்பிரிவிலே (c) அடையாளமிட்ட பகுதியிற்கண்ட ஹேதுவின் மேலாவது குத்தகைத்தொகையைக் குறைக்கும்படியாக வியாஜ்ஜியங் கொண்டுவரவோ விண்ணப்பம் செய்துகொள்ளவோ ஒரு ரயத்துக்குள்ள பாத்தியதையானது எடுபட்டுப்போகமாட் டாது ;

(d) 42-வது பிரிவிற்கண்ட நிபந்தனைகளின் பிரகாரம் குத்தகைத் தொகையை மாற்றும்படி விண்ணப்பஞ்செய்து கொள்வதற்கு ஒரு ரயத்துக்குள்ள பாத்தியதை எடுபட்டுப் போகமாட்டாது ;

(e) 40-வது பிரிவின்படி குத்தகைத்தொகையை (பண மாக)மாற்றிக்கொள்வதற்கு விண்ணப்பம் செய்துக்கொள்ள ஒரு நிலத்துக்குடையவர் அல்லது ரயத்துக்குள்ள பாத்திய தையானது எடுபட்டுப்போகமாட்டாது ;

(f) 149-வது பிரிவின்படி தம்முடைய கைப்பற்று நிலத்துக்கு ராஜிநாமா கொடுத்துவிட ஒரு அனுபோக ரயத் துக்குள்ள பாத்தியதையானது எடுபட்டுப்போகமாட்டாது ; அல்லது,

(g) இந்த ஆக்டிற்கண்ட நிபந்தனைகளின்படிக்கன்றி மற்றப்படி ஒரு ரயத்தை (நிலத்தைவிட்டு) அப்புறப்படுத்த ஒரு நிலத்துக்குடையவருக்குப் பாத்தியதை உண்டாகமாட் டாது.

(2) இந்த ஆக்ட் ஜாரி செய்யப்பட்ட பிறகு நிலத்துக் குடையவரும் ரயத்தும் செய்துகொள்ளும் யாதொரு ஒப்பந் தத்திலுள்ளதெதனுலும், செலுத்தத்தக்க வட்டி சம்பந்தமாக வுள்ள 61-வது பிரிவிற்கண்ட நிபந்தனைகளுக்குப்பாதகமுண் டாகமாட்டாது.

குறிப்புகள்.

ஒரு ரயத்து தன்னுடைய கைப்பற்று பாத்தியதையையே விட்டுவிடுவதாக தனது நிலத்துக்குடையவருடன் காண்ட்ராக்ட் செய்து கொண்டாலும் அது செலாவணியாகாது. முச்சலிக்காவில் அம்மாதிரி ஷரத்து இருந்தாலும் அதை செல்லுபடியாக்குவதற்கில்லை. ராயலிங்க முதலி vs. ராமசாமி அய்யர் 1929 A I. R. Mad. 529.

**188.** விட்டுவிடப்பட்டது.

## 15-ம் அத்தியாயம்.

### அதிகாரமும் நடவடிக்கையும்.

இந்த அத்தியாயத்தில் அதிகார வரம்பைப்பற்றியும் கோர்ட்டுகளில் விவஹாரம் நடக்கும் பக்ஷத்தில் அவைகளில் அனுசரிக்க வேண்டிய முறைமையைப்பற்றியும் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த அத்தியாயமும் முக்கியமானதோர் அத்தியாயமாகும்.

வியாஜ்ஜியங்களும் விண்ணப்பங்களும்.

**189.** (1) ஷெட்யூலைச் சேர்ந்த A. B பாகங்களில் குறிப்பிட்டிருக்கும் தன்மையுள்ள வியாஜ்ஜியங்கள் அல்லது விண்ணப்பங்களை விசாரணை செய்யும் யாதொரு டிஸ்ட்ரிக்ட் கலெக்டர் அல்லது கலெக்டரும், அவைகள் விஷயமாய் அப்பீல் அதிகாரத்தையாவது புனர் விமரிசை அதிகாரத்தையாவது செலுத்தும் ரெவினியு போர்டார் இனும் கமிஷனர் அல்லது டிஸ்ட்ரிக்ட் கலெக்டரும் - ஒரு ரெவின்யு கோர்ட்டாக இருந்து அப்படிப்பட்ட வியாஜ்ஜியங்களையாகிலும் விண்ணப்பங்களையாகிலும் விசாரித்துத் தீர்மானிக்கவாயினும் அப்படிப்பட்ட அதிகாரத்தைச்செலுத்தவாயினும் வேண்டும்.

எந்த ஸிவில் கோர்ட்டாரும் தங்களுடைய அசல் விசாரணை அதிகாரம் செலுத்துகையிலே, எந்த விவாதம் அல்லது

விஷயத்தின் சம்பந்தமாய் மேலே கண்ட யாதொரு வியாஜ்ஜியம் கொண்டுவரக்கூடுமோ அல்லது விண்ணப்பம் செய்துக் கொள்ளக்கூடுமோ அந்த விவாதம் அல்லது விஷயத்தை விசாரிக்கக்கூடாது.

அப்பீல்கள்.

(2) (1) அடையாளமிட்ட உட்பிரிவில் குறிக்கப்பட்டிருக்கும் வியாஜ்ஜியங்களிலும் விண்ணப்பங்களிலும் பிறப்பிக்கப்படும் டிக்ரிகளும் உத்தரவுகளும் ஷெட்யூலைச் சேர்ந்த A, B பாகங்களிலே ஆறாவது களத்தில் சொல்லியிருக்கிறபடி அப்பீல் செய்து கொள்ளப்படுவதற்கு உட்பட்டவைகளாகும்,

(3) ரெவினியு கோர்ட்டாருடைய அதிகார வரம்புக்குள்ளேயே பிரத்தியேகமாய் அடங்கியிருக்கிற யாதொரு விஷயத்தைக் குறித்து இந்த ஆக்டின்படி யாதொரு வியாஜ்ஜியத்திலாவது நடவடிக்கையிலாவது ஒரு ரெவினியு கோர்ட்டாராலாகிலும் அப்பீல் கோர்ட்டாராலாகிலும் புனர் விசாரணை செய்யும் அதிகாரியாலாகிலும் செய்யப்பட்ட தீர்மானமானது - அந்த வியாஜ்ஜியம் அல்லது நடவடிக்கையைச் சேர்ந்த கட்சிக்காரர்களுக்கும் அவர்கள் மூலமாகப் பாத்தியதை கொண்டாடுகிற நபர்களுக்கும் அதே விவாத விஷயத்தைக்குறித்து ஒரு ஸிவில் கோர்ட்டில் நடத்தப்படும் யாதொரு வியாஜ்ஜியம் அல்லது நடவடிக்கையிலே அவர்களைக் கட்டுப்படுத்தும்.

(4) யாதொரு ஸிவில் கோர்ட்டின் அதிகார வரம்புக்குட்பட்ட எந்த விஷயத்தைக்குறித்தாயினும் அந்தக் கோர்ட்டார் செய்யும் தீர்மானமானது அதற்குச் சம்பந்தப்பட்ட கட்சிக்காரர்களையும், எந்த ரெவினியு கோர்ட்டில் அல்லது அப்பீல் விசாரணை அதிகாரியிடத்தில் அல்லது புனர்விசா

ரிசை செய்யும் அதிகாரியிடத்தில் மேற்படி கட்சிக்காரர்களு க்குள் அந்த விஷயம் விவாதத்தில் இருக்கக்கூடுமோ அந்த ரெவினியு கோர்ட்டாருக்கு முன்பாகவாகிலும் அப்பீல் விசாரணை அதிகாரிக்கு முன்பாகவாகிலும் புனர்விமரிசை செய்யும் அதிகாரிக்கு முன்பாகவாகிலும் நடக்கும் யாதொரு வியாஜ்ஜியத்தில் அல்லது நடவடிக்கையில் அந்தக் கட்சிக் காரர்களுக்கு உட்பட்டு தாவா செய்யும் நபர்களையும் கட்டுப் படுத்தும்.

## குறிப்புகள்.

இவ்வாக்டின் பின்னால் காணப்பட்டுள்ள A. B. ஷெட்யூல் களில் தாவாக்களைப்பற்றியும் அவை யார் முன்பாக செய்யப்பட வேண்டும் என்றும் அவைகளுக்குள்ள காலதவணை யென்னவென் றும் சொல்லப்பட்டுள்ளது. அந்த ஷெட்யூல்களில் சொல்லப் பட்டிருக்கும் தாவாக்களை ஸிவில் கோர்ட்டில் செய்யப்படுவதற் கில்லை. ஆனால் அவைகளில் சொல்லப்படாத இதர விஷயங் களைப்பற்றியும் சொத்து பாத்தியதைகள் மோசவிதமான நடவடிக் கைகள் இவைகளைப்பற்றியும் ஸிவில் கோர்ட்டுகளில் பரிஹாரம் தேடுவதை இந்தப் பிரிவானது தடை செய்யாது. உதாரணமாக ஒரு ஏலமானது சட்ட விரோதமாக நடந்திருப்பதால் அது செலா வணியற்றது என்று தீர்மானம் பெறுவதற்கு தாவா, ஏலமானது மோசமாக நடந்ததென்றும அதை ரத்து செய்ய வேண்டுமென்றும தாவா, கலெக்டரானவர் ஏலத்தை சரியான காரணமின்றி ரத்து செய்தது செல்லாது என தீர்ப்பு பெற தாவா, தனக்கு மேல்வாரம பெற பாத்தியதை யுண்டு என்று தீர்ப்பு பெறுவதற்கு தாவா, மரங் களை அக்கிரமாய் வெட்டிக்கொண்டு போனதற்காக டாமேஜ் பெற தாவா. ஆகிய இத்தகைய தாவாக்கள் ஸிவில் கோர்ட்டில் செய்யப் படலாம்.

ரெவின்யு கோர்ட்டுகள் முன்பாக தாவா செய்யப்படுங்கால், அவைகள் தங்கள் முன்பாக கிளம்பும் சகல பிரச்னைகளையும் தீர விசாரித்து தீர்வேண்டும். 39 M. L. J. 309.

ஒரு சொத்து பாத்தியதை விஷயமாய் ரெவினியு கோர்ட்டானது ரென்ட் தாவாவில் தீர்மானித்த போதிலும் அதுவே முடிவானதாக ஏற்பட்டு விடாது. ரென்ட் தாவாக்களில் ரெவினியு கோர்ட்டுகள் சொத்து எவருக்குச் சொந்தம் என்பதைப்பற்றி ஒருவாறு தீர்மானிக்கவேண்டியிருப்பினும் அவை செய்யும் தீர்மானம் ஸிவில் கோர்ட்டுகளைப் பந்தப்படுத்தும் என்று சொல்வதற்கில்லை. சொத்துகளின் உரிமை அல்லது பாத்தியதைகளைப்பற்றி ஸிவில் கோர்ட்டுகள் தான் முடிவாக தீர்மானிக்க வேண்டும். ரென்டைப்பற்றி மாத்திரம் ரெவின்யு கோர்ட்டினுடைய தீர்மானம் முடிவானதாகும். ஆனால் சொத்தைப்பற்றின வரையில் அதன் தீர்மானம் முடிவானதல்ல. அகில இந்தியா லா ஜர்னல் 6-வது வால்யூம் 139-வது பக்கம் 67 M. L. J. 268.

ஒரு ரயத்தை அப்புறப்படுத்துவதற்கு நிலத்துக்குடையவர் செய்யும் தாவா ரெவின்யு கோர்ட்டில்தான் செய்யப்படவேண்டும். ஸிவில் கோர்ட்டில் அல்ல 33. M. L. J. 757.

சாதாரணமாக வியாஜ்ஜியம் தாக்கல் செய்யப்படுவதில், ஸிவில் கோர்ட்டில் சகல வியாஜ்ஜியங்களும் தாக்கல் செய்யப்படலாம் என்பதே சட்டவகையான அனுமானமாகும். யாதொரு குறிப்பிட்ட தாவாவானது 189-வது பிரிவின் கீழ் ஸிவில்கோர்ட்டில் விசாரிக்கப்படுவதற்கில்லை யென்று பிரதிவாதி கூறுவாராகில் அவரே அதை ருசு செய்யவேண்டும் 41. M. L. J. 512.

யாதொரு ரென்ட் தாவாவில் ராஜி நடந்து பிரதிவாதிகள் ஒரு மொத்தமாக தொகையை செலுத்துவதாக ஒப்புக்கொண்டு அதன் பேரில் தாவா வாபீஸ் செய்யப்படுமானல், பிறகு அப்படி ஒப்புக் கொண்ட தொகையை ரயத்துகள் செலுத்தாததின் பேரில் நிலத்துக்குடையவர் தாவா செய்வாராகில் அத்தகைய தாவா ஸிவில் கோர்ட்டில் செய்யப்படலாம் A. I. R. 1929 Mad. 504.

எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டின் பிரகாரம் உள்ள ஒரு "பூஸ்திதி" யில் ரயத்தி நிலத்தில ஒரு நபர் சவுக்கு மரங்களை வைத்து பயிரிட்டு வந்தால் அவர் அந்த நிலத்தை விவசாய காரியங்களுக்காக வைத்துக் கொண்டிருப்பதாக கருதப்படமாட்டார். ஆகையால், அவரை அப்

புறப்படுத்துவதற்கும் டாமேஜ் தொகை பெறுவதற்கும் நிலத்துக்குடையவர் செய்யும் தாவா ஸிவில் கோர்ட்டில் செய்யப்படலாம். 189-வது பிரிவின்படி ரெவின்யு கோர்ட்டில் தாக்கல் செய்யப்படுவதற்கில்லை. சிருங்கேரிமடம் ஸ்வாமி vs துரைசாமி நாயுடு 61. M. L. J. 648.

யாதொரு தாவா ஸிவில் கோர்ட்டில் தாக்கல் செய்யப்பட்டு அதை அந்த கோர்ட்டானது ரிவின்யு கோர்ட்டில் தாக்கல் செய்யும்படி திருப்பிவிட்டால் ரிவின்யு கோர்ட்டானது அதைக் கட்டாயம் பிடித்து விசாரிக்க வேண்டும் அதை மறுபடியும் திருப்புவதற்கில்லை. 42. I C. 483.

இந்தப் பிரிவின் 3-வது உட்பிரிவானது ரீஸ்ஜுடிகேடா (Res Judicata) அதாவது முன் தீர்மானிக்கப்பட்ட விஷயம் என்னும் நியாயத்தைப்பற்றி கூறுவதாகும். இது ஸிவில் புரொஸிஜர் கோட் என்னும் விவஹார முறைச் சட்டத்தின் 11-வது பிரிவில் என்ன சொல்லப்பட்டுள்ளதோ அதை விட விரிவானதோர் நியாயத்தை எடுத்துக்கூறவில்லையென்று தீர்மானங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

இரண்டாவது அப்பீல்கள்.

**190.** 15-வது அல்லது 25-வது பிரிவின்படிக்கான அல்லது 32-வது பிரிவைச்சேர்ந்த (3) குறிப்பிட்ட உட்பிரிவின்படிக்கான அல்லது 40-வது பிரிவின் படிக்கான அல்லது 42-வது பிரிவைச சேர்ந்த (2) குறிப்பிட்ட உட்பிரிவின்படிக்கான விண்ணப்பத்தின் விஷயத்தில் டிஸ்ட்ரிக்ட் கலெக்டர் அப்பீலிலே ஜாரிசெய்யும் உத்தரவின்மேல் ரெவின்யு போர்டாரிடத்தில் இரண்டாவது அப்பீல் செய்து கொள்ளலாம்.

185-A பிரிவைச் சேர்ந்த (1) குறிப்பிட்ட உட்பிரிவின்படியாவது (8) குறிப்பிட்ட உட்பிரிவின்படியாவது கலெக்டருக்குச் செய்துகொள்ளப்படும் யாதொரு விண்ணப்

பத்தின் விஷயத்திலே அப்பீலில் டிஸ்ட்ரிக்ட் கலெக்டர் பிறப்பிக்கும் உத்தரவின்பேரில் இனும் கமிஷனருக்கு இரண்டாவது அப்பீல் செய்து கொள்ளலாம்.

குறிப்புகள்.

இப்பிரிவில் 1934-ம் வருஷத்திய திருத்த சட்டத்தினல் 25, 32, (3) 42, (2) முதலிய பிரிவுகளின் கீழ் செய்யப்படும் உத்திரவுகளுக்கும் அப்பீல் உண்டு என்று ஏற்படுத்தப்பட்டது.

189, 190-வது பிரிவின்படிக்கான அப்பீல்களுக்குக் கால நிர்ணயம்.

**191**. 189, 190-வது பிரிவுகளின்படி செய்யப்படும் யாதொரு அப்பீலுக்காக நிர்ணயிக்கப்பட்ட காலவரையறையானது எதன்மேல் அப்பீல் செய்யப்படுகிறதோ அந்த உத்தரவு அல்லது டிக்கிரியின் தேதி முதல் தொடங்கி, அடியிற்கண்டபடி இருக்க வேண்டும். அதாவது :—

(a) டிஸ்ட்ரிக்ட் கோர்ட்டாரிடத்திலாவது டிஸ்ட்ரிக்ட் கலெக்டரிடத்திலாவது அப்பீல் செய்துக்கொள்ளவேண்டியபோது—முப்பது நாள் ;

(b) ரெவின்யு போர்டாரிடத்திலாவது கமிஷனரிடத்திலாவது அப்பீல் செய்துகொள்ள வேண்டியபோது—அறுபதுநாள்.

ஆக்டின்படிக்கான நடவடிக்கைகளுக்கு 1908-ம்வருஷத்து ஸிவில் ப்ரோஸீஜர்கோட் பிரயோகப்படுவது.

**192**. (1) பிரதேச கவர்ன்மெண்டார் - 1908-ம் வருஷத்து ஸிவில் ப்ரோஸீஜர்கோடில் கண்ட எந்த நிபந்தனைகளாவது இந்த ஆக்டின்படி யாதொரு ஸிவில் அல்லது ரெவின்யு கோர்ட்டில் செய்துகொள்ளப்படும் வியாஜ்ஜியங்கள், விண்ணப்பங்கள், அப்பீல்கள் அல்லது இதர நடவடிக்கை

களுக்காகிலும், எவைகளேனும் குறித்தவகைகளைச் சேர்ந்த அப்படிப்பட்ட வியாஜ்ஜியங்கள், விண்ணப்பங்கள், அப்பீல்கள் அல்லது நடவடிக்கைகளுக்காகிலும் பிரயோகப்படமாட்டாவென்றாயினும், விதிகளில் குறிப்பிடப்பட்ட திருத்தங்களுக்கும் உடன்சேர்க்கையான நிபந்தனைகளுக்கும் உட்பட்டு அவைகளுக்குப் பிரயோகப்படுமென்றாயினும் நிர்ணயிப்பதற்காக இந்த ஆக்டுக்குப் பொருத்தமான விதிகளை அப்போதைக்கப்போது செய்யலாம்.

(2) அந்தப்படி செய்யப்படும் எவைகளேனும் விதிகளுக்குட்பட்டும் இந்த ஆக்டின் இதர நிபந்தனைகளுக்கும் அடியிற்கண்ட திருத்தங்களுக்கும் உடன்சேர்க்கையான நிபந்தனைகளுக்கும் உட்பட்டுங்கூட, 1908-ம் வருஷத்து ஸிவில் ப்ரோஸீஜர் கோடில் கண்ட நிபந்தனைகள் அப்படிப்பட்ட சகல வியாஜ்ஜியங்களுக்கும் விண்ணப்பங்களுக்கும் அப்பீல்களுக்கும் நடவடிக்கைகளுக்கும் பொருத்தமற்றவைகளாயிராத வரையில், மேற்படி நிபந்தனைகள் அப்படிப்பட்ட வியாஜ்ஜியங்கள் முதலியவைகளுக்குப் பிரயோகப்படும்:—

(a) (i) மேற்படி கோடைச்சேர்ந்த 7-வது அதிகாரத்தின் 1-வது விதியில் கண்ட விவரங்களுடன்கூட, எந்த நிலத்துக்கு வியாஜ்ஜியம் சம்பந்தப்படுகிறதோ அந்த நிலம் இருக்கும் கிராமத்தின் பெயரையும், அந்த நிலத்துக்குப் பெயர் ஏதாவதிருந்தால் அதையும், அந்த நிலத்தை அடையாளம் கண்டுபிடிப்பதற்குப் போதுமானபடி அதன் விவரத்தையும் ப்ளெய்ண்டில் (பிரியாதில்) குறிப்பிடவேண்டும்;

(ii) மேலும், எந்த விஸ்தீர்ணத்தில் உரிமை தஸ்தவேஜு தயார் செய்து பிரசுரிக்கப்பட்டிருக்கிறதோ அந்த விஸ்தீர்ணத்துக்குள் இருக்கும் நிலத்தின் விஷயமாய்ச் சேர வேண்டிய குத்தகைத் தொகையை வசூலிப்பதற்காக வியாஜ்

ஜியம் கொண்டுவரப்பட்டால், ஷை உரிமை தஸ்தவேஜின் படி கைப்பற்று நிலத்தின் குத்தகைத்தொகையைக் குறித்த ஒரு ஸ்டேட்மென்டையும் ப்ளெய்ன்டில் கண்டெழுதவேண்டும்:

ஆனால், கைப்பற்று நிலத்துக்குச் சம்பந்தப்பட்ட உரிமை தஸ்தவேஜின் நகலையாவது அதிலிருந்து எடுக்கப் பட்ட ஒரு எக்ஸ்ட்ராக்டையாவது கேட்பது கோர்ட்டாருக்கு எப்போதாகிலும் யுக்தமாகத் தோற்றுகிற பட்சத்திலே, வாதியானவர் அதைக்கொண்டுவந்து காட்டவேண்டும்; அல்லது அவசியமானால், கோர்ட்டார் கேட்டுக்கொள்வதன் மேல் கலெக்டரானவர் அந்த நகலையோ எக்ஸ்ட்ராக்டையோ சவதரிக்கவேண்டும்; அப்படி சவதரிப்பதன் பொருட்டு, பிரதேச கவர்ன்மென்டார் இந்த ஆக்டின்படி செய்யப்படும் விதி மூலமாய் நிர்ணயிக்கும் கட்டணத்தைக் கோர்ட்டார் சட்டளையிடுகிறபடி வாதியாவது பிரதிவாதியாவது செலுத்த வேண்டும்;

(iii) குத்தகைத்தொகை பாக்கிக்காக வியாஜ்ஜியம் கொண்டுவரப்பட்டால், வியாஜ்ஜியம் சம்பந்தப்படுகிற காலத்துக்குச் செலுத்தத்தக்கதாயிருக்கும் தவணைத் தொகைகளும், தொகை ஏதாவது வரப்பெற்றுக்கொள்ளப்பட்டிருந்தால் அதுவும், பாக்கியென்று தாவா செய்யப்படும் தொகையும் கண்ட கணக்கு ஜாபிதா ஒன்று ஷை ப்ளெய்ன்டில் அடங்கியிருக்கவேண்டும்.

(b) இந்த ஆக்டின்படி கொண்டுவரப்பட்ட யாதொரு வியாஜ்ஜியத்தில், சட்டப்படிக்கிருந்தாலுஞ்சரி எதிர்க்கடன் கொடுக்கவேண்டுமென்று எதிர்வழக்காடக்கூடாது.

(c) யாதொரு கோர்ட்டில் பைசலாகாமலிருக்கிற ஒரு வியாஜ்ஜியம், விண்ணப்பம் அல்லது நடவடிக்கை விஷ

மாய் யாதொரு குத்தகைத்தொகை ஜாபிதா அல்லது வசூல் அல்லது அளவு சம்பந்தமான தஸ்தவேஜுகளை நிலத்துக்குடையவர் அந்தக் கோர்ட்டில் கொண்டுவந்து காட்டியிருந்தால், ஷை தஸ்தவேஜுகளின் பிரதிகளையோ அல்லது அவைகளிலிருந்து எடுக்கப்பட்ட எக்ஸ்ட்ராக்டுகளையோ அவை சரியான பிரதிகள் அல்லது எக்ஸ்ட்ராக்டுகளென்று அந்தக்கோர்ட்டைச் சேர்ந்த கிரமமாய் அதிகாரம் கொடுக்கப்பெற்றிருக்கும் ஒரு உத்தியோகஸ்தர் ஸெர்டிபை செய்வதன்மேல், அந்தக் கோர்ட்டிலாவது வேறொரு கோர்ட்டிலாவது கொண்டுவரப்பட்ட வேறே யாதொரு வியாஜ்ஜியம், விண்ணப்பம் அல்லது நடவடிக்கையில், அசல் தஸ்தவேஜுகளைக்கொண்டுவந்து காட்டும்படி உத்தரவு செய்வது யுக்தமென்று மேற்படி பிரதிகள் அல்லது எக்ஸ்ட்ராக்டுகள் எந்தக்கோர்ட்டில் கொண்டுவந்து காட்டப்படுகின்றனவோ அந்தக் கோர்ட்டாருக்குத் தோற்றினாலன்றி மற்றப்படி, அசல் தஸ்தவேஜுகளுக்கு ருஜுவாக சாட்சியத்தில் ஏற்றுக்கொள்ளலாம்.

(d) ஷை கோட் 60-வது பிரிவின்படி ஜப்திக்காவது விற்பனைக்காவது உள்ளாகாத அம்சங்களுடன்கூட, 'விவசாயியால் சேர்த்துவைக்கப்பட்ட எரு' என்பதையும் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

(e) யாதொரு டிக்ரியை நிறைவேற்றும் பொருட்டு (பூமியிலிருந்து) வெட்டிப்பிரிக்கப்படாத மரம் - விளைந்து கொண்டிருக்கும் பயிர் - பூமியில் உண்டாகும் இதர விளை பொருள்களை அசையும்பொருள் விஷயத்தில் செய்கிற மாதிரியாகவே ஜப்தி செய்து விற்கலாம்; மேலும், ஜப்தி செய்யப்பட்ட சொத்தானது விளைந்துகொண்டிருக்கும் பயிராகவோ பூமியில் உண்டாகும் இதர விளை பொருள்களா

கலவோ இருக்கும் பட்சத்தில், அப்படிப்பட்ட பயிராவது விளை பொருள்களாவது குத்தகைத் தொகை பாக்கிக்காக ஜப்தி செய்யப்பட்டிருந்தால், அவைகளைப் பாதுகாப்பது அறுவடை செய்வது சேர்த்து வைப்பது ஆகிய இவற்றின் விஷயமாய் முறையே பயிரிடுபவருக்கும் ஜப்தி செய்பவருக்கும் 83-வது பிரிவின்படி என்ன பாத்தியதைகள் ஏற்பட்டிருக்குமோ அதே பாத்தியதைகள் தீர்ப்பான கடனாளிக்கும் டிக்ரி பெற்றவருக்கும் உண்டு.

(3) குத்தகைத் தொகையை வசூலிப்பதற்காவது ஜப்தியை அல்லது யாதொரு கைப்பற்று நிலத்தை விற்பனை செய்யும் பாத்தியதையை ஆட்சேபிப்பதற்காவது இந்த ஆக்டின்படி கொண்டுவரப்பட்ட ஒரு வியாஜ்ஜியம், செய்யப்பட்ட விண்ணப்பம் அல்லது நடவடிக்கையில் யாதொரு கட்சிக்காரர் தாவா செய்யப்பட்ட குத்தகைத் தொகை அல்லது அதன் ஒரு பாகம் செலுத்தப்படவேண்டியதென்று ஒப்புக்கொண்டபோதிலும், அது சந்தர்ப்பத்துக்கேற்றபடி வாதி அல்லது விண்ணப்பதாரருக்காகிலும் பிரதிவாதி அல்லது அப்பீல் பிரதிவாதிக்காகிலும் சேர வேண்டியதாயிராமல் யாதொரு மூன்றும் நபருக்குச் சேர வேண்டியதாயிருக்கிறதென்று வாதித்தாலும், இந்த ஆக்டில் கண்ட நிபந்தனைகளின்படி நடவடிக்கை நடத்தப்படவில்லையென்று வாதித்தாலும், கோர்ட்டார் - விசேஷ காரணங்கள் இருந்தாலன்றி மற்றப்படி, பாக்கியாயிருப்பதாக ஒப்புக்கொள்ளப்பட்ட தொகையையாயினும் அந்தத் தொகையில் கோர்ட்டார் கட்டளையிடக்கூடிய நியாயமான ஒரு பாகத்தையாயினும் மேற்படி கட்சிக்காரர் கோர்ட்டில் செலுத்தினாலொழிய, அந்த வாதத்தை ஏற்றுக்கொண்டு விசாரிக்க மறுத்துவிடவேவேண்டும்; மேலும், மேற்படி காரணங்களை எழுதி வைக்கவேண்டும்.

(4) அந்தப்படி தொகை செலுத்தப்பட்டிருந்து, குத்தகைத்தொகையானது ஒப்புக்கொள்ளப்பட்ட அளவுக்கு சந்தர்ப்பத்துக்கேற்றபடி வாதி அல்லது விண்ணப்பதாரருக்காவது பிரதிவாதி அல்லது அப்பீல் பிரதிவாதிக்காவது சேரவேண்டியதாயிராமல் யாதொரு மூன்றும் நபருக்குச் சேரவேண்டியதாயிருக்கிறதென்று வாதிக்கப்பட்டால், கோர்ட்டார் தொகை செலுத்தப்பட்டதைக் குறித்த நோடிஸை அந்த மூன்றும் நபருக்கு உடனே சேர்ப்பிக்கும்படிச் செய்யவேண்டும்.

நோடிஸ் வரப்பெற்றுக்கொண்டதிலிருந்து மூன்று மாதங்களுக்குள் ஷை மூன்றும் நபர் வாதி அல்லது விண்ணப்பதாரரின்மேலாவது பிரதிவாதி அல்லது அப்பீல் பிரதிவாதியின்மேலாவது ஸிவில் கோர்ட்டில் வியாஜ்ஜியம் கொண்டுவந்து அது மூலமாக தொகை செலுத்தப்படக்கூடாதென்று உத்தரவு பெற்றாலன்றி மற்றப்படி, டிபாஸிட்டில் இருக்கும் தொகையை சந்தர்ப்பத்துக்கேற்றபடி வாதி அல்லது விண்ணப்பதாரராகிலும் பிரதிவாதி அல்லது அப்பீல் பிரதிவாதியாகிலும் விண்ணப்பம் செய்து கொள்வதன்மேல் அவருக்குக் கொடுத்துவிடவேண்டும்.

இந்த உட்பிரிவின்படி சந்தர்ப்பத்துக்கேற்றபடி வாதி அல்லது விண்ணப்பதாரருக்காவது பிரதிவாதி அல்லது அப்பீல் பிரதிவாதிக்காவது கொடுக்கப்பட்ட எந்தத் தொகையையாகிலும் ஸிவில் கோர்ட்டில் வியாஜ்ஜியம் தொடர்ந்து அவரிடமிருந்து வசூலிக்க யாதொரு நபருக்குள்ள பாத்தியதைக்கு இந்த உட்பிரிவில் கண்டதெதுவும் பாதகம் உண்டாகமாட்டாது.

(5) குத்தகைத் தொகையை வசூலிப்பதற்காகவா வது ஜப்தியை அல்லது யாதொரு கைப்பற்று நிலத்தை விற்பனை செய்யும் பாத்தியதையை ஆட்சேபிப்பதற்காகவா வது இந்த ஆக்டின்படி கொண்டுவரப்பட்ட யாதொரு வியாஜ்ஜியம், செய்யப்பட்ட யாதொரு விண்ணப்பம் அல்லது நடவடிக்கையில் யாதொரு கட்சிக்காரர் குத்தகைத்தொகை சந்தர்ப்பத்துக்கேற்றபடி வாதி அல்லது விண்ணப்பதாரருக் காகிலும் பிரதிவாதி அல்லது அப்பீல் பிரதிவாதிக்காகிலும் சேரவேண்டியதாயிருக்கிறதென்று ஒப்புக்கொண்டிருக்கும் தாவா செய்யப்படும் தொகையானது சேரவேண்டிய தொ கையைக்காட்டிலும் அதிகமாயிருப்பதாக வாதித்தால் கோர் ட்டார் விசேஷ காரணங்கள் இருந்தாலன்றி மற்றப்படி, பாக்கியாயிருப்பதாக அந்தப்படி ஒப்புக்கொள்ளப்பட்ட தொகையையாயினும் அந்தத் தொகையில் கோர்ட்டார் கட் டளையிடக்கூடிய நியாயமான ஒரு பாகத்தையாயினும் ஷை கட்சிக்காரர் கோர்ட்டில் செலுத்தினுலொழிய, அந்த வாதத்தை ஏற்றுக்கொண்டு விசாரிக்க மறுத்துவிடவேண்டும்; மேலும் ஷை காரணங்களை எழுதி வைக்கவேண்டும்.

(6) நிலத்துக்குடையவருக்கும் ரயத்துக்கும் அந்த ஹோதாக்களில் ஏற்பட்ட யாதொரு வியாஜ்ஜியம் அல்லது விண்ணப்பம் முழுவதுமாவது சிறிதுமட்டிலாவது சட்டப் படிக்கான யாதொரு உடன்படிக்கை அல்லது ராஜி ஏற்பாட் டினுல் சரிப்படுத்தப்பட்டாலும், பிரதிவாதி அல்லது அப் பீல் பிரதிவாதியானவர் வியாஜ்ஜியம் அல்லது விண்ணப்பத் தில்கண்ட விஷயம் முழுவதுக்குமாகிலும் அதன் யாதொரு பாகத்துக்காகிலும் வாதிக்கு அல்லது விண்ணப்பதாருக் குத் திருப்திகரமாய் ஏற்பாடு செய்தாலும், கோர்ட்டார் அப்படிப்பட்ட உடன்படிக்கை அல்லது ராஜி ஏற்பாடு

அல்லது வேறே ஏற்பாடு டிகிரி வியாஜ்ஜியத்துக்காயினும் விண்ணப்பத்துக்காயினும் சம்பந்தப்படுகிறவரையில், அந்த உடன்படிக்கை முதலியவைகளை அனுசரித்து டிக்ரி அல்லது உத்தரவு பிறப்பிக்கலாம்; ஆனால், கோர்ட்டார் எந்தக் காரணங்களைப்பற்றியாகிலும் மேற்படி உடன்படிக்கை ராஜி ஏற்பாடு அல்லது வேறே ஏற்பாடு அநியாயமானதென்றும் அதர்மமானதென்றும் கருதுகிற பட்சத்திலே, அவர்கள் அந்தப்படி செய்ய மறுத்துவிடலாம்; மேலும், அந்தக்காரணங்களை எழுதிவைக்கவேண்டும்.

(7) சட்டப்படிக்கான யாதொரு உடன்படிக்கை, ராஜி ஏற்பாடு அல்லது வேறே ஏற்பாட்டை அனுசரித்துப் பிறப்பிக்கப்பட்ட யாதொரு டிக்ரி அல்லது உத்தரவானது அந்த உடன்படிக்கை ராஜி ஏற்பாடு அல்லது வேறே ஏற்பாட்டில் மேற்படி வியாஜ்ஜியம் அல்லது விண்ணப்ப விஷயத்தில் எவ்வளவைப்பற்றி சொல்லியிருக்கிறதோ அவ்வளவுக்கு அது சம்பந்தப்படுகிற வரையிலே முடிவானதாகும்.

### குறிப்புகள்.

இந்தப் பிரிவானது 1934-ம் வருஷத்திய திருத்த சட்டத்தினால் முற்றிலும் மாற்றியமைக்கப்பட்டது. பழைய 192, 194, 195, 196, பிரிவுகள் அனைத்தும் ஒருங்கு சேர்க்கப்பட்டு புதிய 192 பிரிவாக்கப்பட்டது.

இப்போது புதிய பிரிவினால் பொதுவாக இந்த சட்டத்தின் கீழ் செய்யப்படும் தாவாக்களுக்கு ஸிவில் புரோஸிஜர் கோட் என்னும் சட்டத்தில் கண்டுள்ள விவஹார நடவடிக்கை முறை பிரயோகமாகும் என்றும் சில தாவாக்கள் அல்லது விண்ணப்பங்களை நிவர்த்திப்பதற்கு லோகல் கவர்ன்மெண்டுக்கு அதிகாரம் உண்டு என்றும் ஏற்படுத்தப்பட்டது. அதைத்தவிர இப்பிரிவில் பின்னால் காணப்பட்டுள்ள இதர நடவடிக்கை முறைகளும் அனுசரிக்கப்படவேண்டும் என்றும் ஏற்படுத்தப்பட்டது.

தாவாக்களை கோர்ட்டில் தாக்கல் செய்வதில் டிபுடி கலெக்டர் ஆபீஸில் உள்ள ஹெட்குமஸ்தாக்களுக்கு பிராதை வாங்கிக்கொள்ள கலெக்டர் அதிகாரம் கொடுத்திருக்கிறாரா வென்பதை முன்னுடியாக கவனித்து பிறகு தாக்கல் செய்யவேண்டும். 38. Mad. 285.

205-வது பிரிவின் கீழ் ரெவின்யு போர்டானது கலெக்டருடைய தீர்ப்பு அல்லது உத்திரவை தருவித்து சரியான காரணம் இருக்குமாகில் அதை மாற்றலாம் (அதாவது ரிவிஷன் செய்யலாம்) என்றுள்ளது. அப்படி ரெவின்யு போர்டானது செய்த உத்திரவின் பேரில் ஹைகோர்ட்டுக்கு ரிவிஷன் மனு செய்யலாமா என்று ரகுநாதபத்ரோ vs. கோவிந்த பதரோ 55. M. L. J. 795. என்னும் பூரணபெஞ்சு கேஸில் கிளம்பினது. பூரண பெஞ்சு கோர்டார் அம்மாதிரி 205-வது பிரிவின் கீழ் ரெவின்யு போர்டு செய்த உத்திரவை மாற்றுவதற்கு ஹைகோர்ட்டுக்கு அதிகாரம் கிடையாதென்று தீர்மானித்திருக்கின்றனர்.

சிவில் புரோஸிஜர் கோட் ஆர்டர் 21-ரூல் 58 சென்னை எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டின்கீழ் நடத்தப்படும் தீர்ப்பு நிறைவேற்று நடவடிக்கைகளுக்கும் பிரயோகப்படுத்தலாம். ஷை ரூலின் கீழ் ஒரு ரிவினியு கோர்ட்டுக்கு (அதாவது எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டின் கீழ் நடவடிக்கை நடத்துகிற கோர்ட்டு) ஜப்தி மேல் ஆக்ஷேப மனு கொடுக்கலாம். அகில இந்தியா லா ஜர்னல் பத்திரிகை வால்யூம் 1 பக்கம் 100.

குத்தகைத் தொகையைப் பணமாக மாற்றிக்கொள்வதற்காவது அதிகப்படுத்துவதற்காவது குறைப்பதற்காவது செய்துக் கொள்ளப்படும் விண்ணப்பங்களில் ரயத்துகள் ஒன்று சேர்வது.

**193.** (1) குத்தகைத் தொகையைப் பணமாக மாற்றிக்கொள்வதற்காகவோ அதிகப்படுத்துவதற்காகவோ குறைப்பதற்காகவோ தொகுப்பாய்ப் பல ரயத்துகளுக்கு விரோதமாகவாவது அவர்களாலாவது விண்ணப்பம் செய்து கொள்ளப்படலாம்;

ஆனால், அப்படிப்பட்ட சகல ரயத்துகளும் ஒரே நிலத்துக்குடையவரைச் சேர்ந்த ரயத்துகளாயிருக்கவேண்டியதோடுகூட, எந்தக் கைப்பற்று நிலங்களின் விஷயமாய் விண்ணப்பம் செய்துகொள்ளப்படுகிறதோ அப்படிப்பட்ட சகல கைப்பற்று நிலங்களும் ஒரே கிராமத்தில் இருக்கவும் வேண்டும்; மேலும், சந்தர்ப்பத்துக்கேற்றபடி குத்தகைத் தொகையைப் பணமாக மாற்றுவதற்கான அல்லது அதிகப்படுத்துவதற்கான அல்லது குறைப்பதற்கான ஆதாரங்களும் ஒன்றாகவே இருக்கவேண்டும்.

மேலும், மேற்படி விண்ணப்பத்தைக் கூட்டாய்ச்சௌகரியமாக பைசல் செய்ய முடியாதென்று ரெவின்யு போர்டாருக்குத் தோற்றினால் அந்தக்கோர்ட்டார் முதல் விசாரணைக்கு முன்பு எப்போதாகிலும், தாங்களாகவேயாவது கட்சிக்காரர்களில் எவராகிலும் விண்ணப்பம் செய்துகொள்வதன்மேலாவது, கட்சிக்காரர்கள் ஒப்புக்கொள்ளும் பட்சத்தில் பின்னால் எந்த தசையிலாவது மேற்படி விண்ணப்பத்தைத் தனித்தனியாய் விசாரிக்கவேண்டுமென்று உத்தரவு பண்ணலாம், அல்லது அவசியமாகவோ யுக்தமாகவோ இருக்கக்கூடிய வேறே யாதொரு உத்தரவு பிறப்பிக்கலாம்.

(2) யாதொரு நபர் ஹாஜராகிச் சொல்லவேண்டியதைச் சொல்லிக் கொள்வதற்காக அவருக்குச் சமயம் வாய்ந்திருக்கிறதென்று கோர்ட்டார் தெரிந்து திருப்தியடைந்தாலன்றி மற்றப்படி, (1) குறிப்பிட்ட உட்பிரிவின்படி செய்துகொள்ளப்பட்ட யாதொரு விண்ணப்பத்திலே அந்த நபருடைய உரிமைக்கு பாதகம் உண்டாகும்படியாக உத்தரவு பிறப்பிக்கக்கூடாது.

(3) ரயத்துகளில் ஒவ்வொருவரும் அந்த உத்தரவினால் இவ்வளவுமட்டில் பாதிக்கப்படுகிறாரென்பதை அந்த உத்தரவில் குறிப்பிடவேண்டும்.

**194.** விட்டுவிடப்பட்டது.

**195.** விட்டுவிடப்பட்டது.

**196.** விட்டுவிடப்பட்டது.

*கோர்ட்டார் ரசீது கொடுக்கவேண்டுமென்பது.*

**197.** யாதொரு கட்சிக்காரர் 192-வது பிரிவைச் சேர்ந்த (3) குறிப்பிட்ட உட்பிரிவின்படியாவது (5) குறிப்பிட்ட உட்பிரிவின்படியாவது தொகை செலுத்தும் போதாகிலும் நிலத்துக்குடையவருக்காயினும் நிலத்துக்குடையவருக்கு உட்பட்டு தாவா செய்யும் நபருக்காயினும் தம்மிடமிருந்து சேர வேண்டியதாயிருக்கிற எந்தத் தொகையையாவது இந்த ஆக்டின்படிக்கான யாதொரு வியாஜ்ஜியம், விண்ணப்பம் அல்லது நடவடிக்கையிலே கோர்ட்டில் செலுத்தும் போதாகிலும், கோர்ட்டார் மேற்படி கட்சிக்காரருக்கு ரசீது கொடுக்கவேண்டும்; அப்படி கொடுக்கப்பட்ட ரசீதானது சந்தர்ப்பத்துக்கேற்றபடி, குத்தகைத்தொகையை பெற்றுக் கொள்ள சட்டப்படி பாத்தியதையுடைய நபராலாவது நிலத்துக்குடையவராலாவது நிலத்துக்குடையவருக்கு உட்பட்டு தாவா செய்யும் நபராலாவது கொடுக்கப்பட்டிருந்தால் எவ்விதமாகவும் எவ்வளவுக்கும் செலாவணியாகவேண்டுமோ அவ்விதமாகவும் அவ்வளவுக்கும் பூர்த்தியான ரசீதைப் போல் செலாவணியாகும்.

**198.** விட்டுவிடப்பட்டது.

**199.** விட்டுவிடப்பட்டது.

கட்சிக்காரர்களாயிருக்கக்கூடிய நிலத்துக்குடையவர்கள்.

**200.** (1) குத்தகைத்தொகையைப் பணமாக மாற்றிக்கொள்வதற்கான அல்லது அதிகப்படுத்துவதற்கான அல்லது குறைப்பதற்கான அல்லது விஸ்தீர்ணத்துக்குத் தக்கபடி குத்தகைத்தொகையை மாற்றுவதற்கான யாதொரு விண்ணப்பத்தை, சந்தர்ப்பத்துக்கேற்றபடி ஷை பூஸ்தியையாவது சம்பந்தப்பட்ட அதன் பாகத்தையாவது தம் சுவாதீனத்தில் வைத்துக்கொண்டிருக்கும் நிலத்துக்குடையவரே அல்லது அவருக்கு விரோதமாகவே செய்துகொள்ள வேண்டும் :

ஆனால்,—

(i) அப்படிப்பட்ட நிலத்துக்குடையவர் பூஸ்தியின் அல்லது சம்பந்தப்பட்ட அதன் பாகத்தின் சொந்தக்காரரல்லவென்று தோற்றினால், அந்த விண்ணப்பத்தைக்குறித்துச் சொந்தக்காரருக்கு விண்ணப்பதாரருடைய செலவில் ரெவினியு கோர்ட்டார் நோடிஸ் கொடுக்கவேண்டும் ; அந்த சொந்தக்காரர் ஷை விண்ணப்பத்தில் கட்சிக்காரராக்கப்பட வேண்டும் ; மேலும்,

(ii) அப்படிப்பட்ட நிலத்துக்குடையவர் பூஸ்திக்கு
அல்லது சம்பந்தப்பட்ட அதன் பாகத்துக்குச் சொந்தக்கார
ராயிராமலிருந்து, குத்தகைத் தொகையைப் பணமாக மாற்
றிக்கொடுக்கும்படி அல்லது அதிகப்படுத்தும்படி அல்லது
மாற்றும்படி விண்ணப்பம் செய்துக்கொள்ள இஷ்டப்படா
விட்டால், சொந்தக்காரர்-சுவாதீனத்தில் வைத்துக்கொண்டி
ருக்கும் நிலத்துக்குடையவரைக் கட்சிக்காரராக்கி அப்படிப்
பட்ட விண்ணப்பம் செய்துகொள்ளலாம்; ஆனால், அந்த
விண்ணப்பத்தில் ரெவினியு கோர்ட்டாரால் நிஷ்கரிஷை

செய்யப்படக்கூடிய யாதொரு குத்தகைத் தொகையானது அந்த பூஸ்திதியை அல்லது சம்பந்தப்பட்ட அதன் பாகத்தைத் தம் சுவாதீனத்தில் வைத்துக்கொண்டிருக்கச் சுதந்தரமுடையவராயிருக்கிற நிலத்துக்குடையவரிடத்தில் மாத்திரமே செலுத்தப்படத்தக்கதாகும்;

(2) 7-ம் அத்தியாயத்திற்கண்ட நடவடிக்கைகளை ஸ்வாதீனத்தில் வைத்துக்கொண்டிருக்கும் நிலத்துக்குடையவர் மேல் நடத்தவேண்டும்; ஆனால், அப்படிப்பட்ட நிலத்துக்குடையவர் சொந்தக்காரராயுமில்லாமலிருந்தால், அந்த நடவடிக்கைகள் சொந்தக்காரரை ஒரு கட்சிக்காரராக்கவேண்டும்.

(3) பூஸ்திதியைத் தற்காலத்திலே ஸ்வாதீனத்தில் வைத்துக்கொண்டிருக்கச் சுதந்தரமுடையவராயிருக்கும் நிலத்துக்குடையவர் அதன் சொந்தக்காரராயில்லாமலிருந்தால், அந்த நிலத்துக்குடையவராவது சொந்தக்காரராவது 164-வது, 168-வது அல்லது 186-வது பிரிவின்படி நிலத்துக்குடையவராக விண்ணப்பம் செய்துகொள்ளலாம்; ஆனால், அந்த விண்ணப்பத்தைக் குறித்து மற்றவருக்கு நோடிஸ் கொடுக்கவேண்டும்.

பணம் செலுத்துவதற்காக ரெவினியு கோர்ட்டாரால்
பிறப்பிக்கப்படும் டிக்ரி அல்லது உத்தரவை
ட்ரான்ஸ்பர் பண்ணுவது.

**201.** பணம் செலுத்துவது விஷயமாய் ரெவினியு கோர்ட்டார் பிறப்பித்திருக்கும் யாதொரு டிக்ரி அல்லது உத்தரவை ஸிவில் கோர்ட் அல்லாத வேறே எந்தக்கோர்ட்டுக்கும் நிறைவேற்றுவதற்காக ட்ரான்ஸ்பர் பண்ணக்கூடாது.

**202.** விட்டுவிடப்பட்டது.

உரிமை தஸ்தாவேஜிலுள்ள பதிவுகளைக் கோர்ட்டார் கவனிக்க வேண்டுமென்பது.

**203.** (1) யாதொரு பிரதேச விஸ்தீர்ணத்துக்காக உரிமை தஸ்தாவேஜானது தயார் செய்யப்பட்டு 166-வது பிரிவைச்சேர்ந்த (2) குறிப்பிட்ட உட்பிரிவின்படியாவது 170-வது பிரிவைச் சேர்ந்த (3) குறிப்பிட்ட உட்பிரிவின் படியாவது முடிவாகப் பிரசுரஞ் செய்யப்பட்டிருந்தால், நிலத்துக்குடையவராலும் ரயத்தாலும் அந்தந்த ஹோதாவிலே கொண்டுவரப்படும் சகல வியாஜ்ஜியங்களிலும், வாதியானவர் எந்த நிலத்தைக்குறித்து வியாஜ்ஜியங் கொண்டுவரப்படுகிறதோ அந்த நிலத்துக்குச் சம்பந்தப்பட்டதாய் உரிமை தஸ்தாவேஜிலுள்ள யாதொரு பதிவுக்கு ஸெர்டிபை செய்யப்பட்ட ஒரு பிரதியை ப்ளெய்ண்டுடன் சேர்க்கவேண்டும்; கோர்ட்டாருக்குப் போதுமானதாகத் தோற்றுகிற யாதொரு காரணத்தினால் அவர் அந்தப்படி செய்யத்தவறுகிற பட்சத்திலே, கோர்ட்டாரால் நிஷ்கரிஷை செய்யப்படும் ஒரு நியாயமான காலத்திற்குள் அப்படிப்பட்ட பிரதியை ஹாஜர்ப்படுத்த வேண்டும்.

(2) அப்படிப்பட்ட வியாஜ்ஜியங்களில் தீர்மானம் செய்கையிலே, கோர்ட்டார்-(1) குறிப்பிட்ட உட்பிரிவின்படி ஹாஜர்ப்படுத்தப்பட்ட பதிவுகள் தப்பானவைகளென்று ருஜு செய்யப்பட்டாலன்றி மற்றப்படி, அந்தப் பதிவுகளைக் கவனிக்கவேண்டும்; கோர்ட்டார் அந்தப் பதிவுகளுக்கு விரோதமாக டிக்ரி பிறப்பிக்கும்போது, அவர்கள் - அப்படி செய்வதற்காகத் தங்களுக்குள்ள காரணங்களை எழுதிவைக்க வேண்டும்.

(3) (1) குறிப்பிட்ட உட்பிரிவிற்கண்ட காரியத்துக்காக வேண்டியதாயிருக்கிற உரிமை தஸ்தாவேஜின் பதிவுகளுக்கு ஸெர்டிபை செய்யப்பட்ட பிரதிகள் கொடுப்பதற்காக யாதொரு கட்டணமும் விதித்து வாங்கக்கூடாது:—

(4) அப்படிப்பட்ட வியாஜ்ஜியங்களின் விஷயத்திலே, பின்வரும் பகுதியை 1908-ம் வருஷத்து ஸிவில் ப்ரோஸீஜர் கோடின் 7-வது அதிகாரத்திலகண்ட 11-வது விதியோடு குறிப்பிட்ட பகுதியாகச் சேர்த்திருப்பதாய்க் கொள்ளவேண்டும். அந்தப் பகுதியாவது:—

பூஸ்திதிகளிலுள்ள நிலத்தைப்பற்றிய சென்னைப் பட்டணம் 1908-ம் வருஷத்து ஆக்டின் 203-வது பிரிவு சம்பந்தப்படுகிற யாதொரு வியாஜ்ஜியத்தில், அந்தப் பிரிவிற் சொல்லியிருக்கிற ஸெர்டிபை செய்யப்பட்ட பிரதியானது ப்ளெய்ண்டுடன் சேர்க்கப்படாமலிருந்து, அதை ஹாஜர்ப் படுத்தும்படி வாதிக்குக் கோர்ட்டார் உத்தரவு செய்திருந்தும் அவர் கோர்ட்டாரால் ஏற்படுத்தப்பட்ட காலத்திற்குள் ஹாஜர் செய்யத் தவறிவிட்டாலும்.

*வேலையைப் பங்கிடவும் வியாஜ்ஜியங்களை விசாரணையினின்றும் எடுத்துவிடவும் ட்ரான்ஸ்பர் செய்யவும் டிஸ்டிரிக்ட் கலெக்டருக்கும் ரெவினியு போர்டாருக்குமுள்ள அதிகாரம்.*

**204.** (1) டிஸ்ட்ரிக்ட் கலெக்டர்-அந்த டிஸ்ட்ரிக்டிலுள்ள யாதொரு கலெக்டரால் இந்த ஆக்டின்படி விசாரிக்கப்படத்தக்க யாதொரு வேலையை எழுத்து மூலமான உத்தரவைக்கொண்டு தகுதியாகத்தோற்றுகிற விதமாய்ப் பங்கிடு செய்யலாம்; மேலும், அதேமாதிரியான உத்தரவைக் கொண்டு அவர் - அந்தக் கலெக்டரிடத்திலே பைசலாகாமலிருக்கிற எந்த வியாஜ்ஜியத்தையாவது (அவருடைய விசாரணையினின்றும்) எடுத்துவிட்டு, அதைத் தாமே பைசல்

செய்யலாம், அல்லது டிஸ்ட்ரிக்டிலிருக்கிற வேறே யாதொரு கலெக்டர் பைசல் செய்யும்படி, அந்த வியாஜ்ஜியத்தை எழுத்து மூலமான உத்தரவைக்கொண்டு அவருக்கு அனுப்பலாம்.

(2) ரெவினியு போர்டாரிடத்திலாவது இனும் கமிஷனரிடத்திலாவது சகல டிஸ்டிரிக்ட் கலெக்டர்கள் விஷயத்திலும், (1) குறிப்பிட்ட உட்பிரிவின்படி டிஸ்ட்ரிக்ட் கலெக்டர் யாதொரு உத்தரவு பிறப்பித்திருந்தும் பாதகமில்லாமலே, டிஸ்டிரிக்ட் கலெக்டருக்குக் கீழ்ப்பட்டுள்ள கலெக்டர்கள் விஷயத்திலும், மேலேகண்ட மாதிரியாகவே பங்கீடு செய்வதற்கான அதிகாரங்களையும் எடுத்து விடுவதற்கான அதிகாரங்களையும் அனுப்புவதற்கான அதிகாரங்களையும் உடையவர்களாவார்கள்.

*கலெக்டரின் நடவடிக்கைக் குறிப்புகளை வரவழைத்துப் புனராலோசனை செய்ய அதிகாரம்.

**205.** ரெவினியு போர்டார் அல்லது டிஸ்ட்ரிக்ட் கலெக்டர் - யாருடைய தீர்மானத்தின்மேல் அப்பீல் கிடையாதோ அந்த கலெக்டர் நடத்தும் நடவடிக்கையிலே, ஹெடி ஆபிஸர் தமக்குச் சட்டப்படி சங்கிரமிக்கிராத அதிகாரத்தைச் செலுத்தியிருப்பதாகத் தோற்றினாலும், சட்டப்படி சங்கிரமித்திருக்கிற அதிகாரத்தைச் செலுத்தத்தவறியிருக்கிறதாகத்தோற்றினாலும், தம்முடைய அதிகாரத்தைச் செலுத்திப் பிரவர்த்திக்கையில் தீர்மானத்தின் குணதோஷங்களைப் பாதிக்கும்படி சட்டத்தின் குறித்த யாதொரு நிபந்தனையை மீறி நடந்ததாகத்தோற்றி அதனால் பிரமாதமான நியாயபங்கம் நேரிட்டிருந்தாலும், அந்த நடவடிக்கைக்குச் சம்பந்தமான தஸ்தாவேஜை வரவழைக்கலாம்; மேலும், சந்தர்ப்பத்திற்கேற்றபடி ரெவினியு போர்டாரோ அல்லது

டிஸ்ட்ரிக்ட் கலெக்டரோ கட்சிக்காரர்கள் ஹாஜரானால் அவர்களை விசாரணை பண்ணின பிறகு, யுக்தமாகத் தோற்றுகிற உத்தரவைப் பிறப்பிக்கலாம்.

குறிப்புகள்.

இந்தப் பிரிவின் கீழ் உள்ள அதிகாரமானது மிகவும் குறுகியதோர் அதிகாரமாகும். கீழ் உத்தியோகஸ்தரானவர் தன்னுடைய கடமையைச் செலுத்தாமலிருந்தால் அல்லது அதிகார வரம்பு மீறினால் தான் இந்தப் பிரிவில் கொடுக்கப்பட்டிருக்கும் அதிகாரத்தைச் செலுத்தலாம். இந்தப் பிரிவின் கீழ் நடத்துவதில் அப்பீல்களைப் போல் கவனிப்பதற்கில்லை.

இந்தப் பிரிவானது எந்த சந்தர்ப்பங்களில் அப்பீல் என்பது கிடையாதோ அவைகளுக்குத்தான் பிரயோகமாகும். ஒரு கேஸில் முடிவான டிக்கிரி செய்யப்பட்டால் அதன் பேரில் அப்பீல் செய்யக் கூடுமாதலால் அதில் இடையில் செய்யும் உத்திரவுகளின் பேரில் இந்தப் பிரிவை யனுசரித்து ரிவிஷன் மனு கொடுத்துக்கொள்வதற்கில்லை. 35 M. L. J. 632.

3 (5) பிரிவின் கீழ் ஒரு பேரை நிலத்துக்குடையவர் என்று யாதொரு கலெக்டர் அங்கீகரிக்க மறுத்துவிட்டால் அதன் பேரில் ரெவின்யு போர்ட்டுக்கு இப்பிரிவின் கீழ் ஒரு ரிவிஷன் மனு செய்வதற்கில்லை. 40 I. C. 1007.

தீர்வையை உயர்த்துவதற்கு செய்யப்பட்ட மனுவை கலெக்டர் தள்ளுபடி செய்து அதன் பேரில் டிஸ்டிரிக்ட் கலெக்டருக்கு அப்பீல் செய்ததில் டிஸ்டிரிக்ட் கலெக்டர் அந்த அப்பீலை தள்ளுபடி செய்யும் பக்ஷத்தில் அதன் பேரில் ஹைக்கோர்ட்டுக்காவது அல்லது ரெவின்யு போர்டுக்காவது ரிவிஷன் மனு கொடுத்துக் கொள்ளலாம். 1925 M. W. N. 489.

ரெவின்யு போர்ட்டானது யாதொரு கேஸில் ரிவிஷன் செய்ததை ஹைக்கோர்ட்டார் எடுத்து விசாரிக்க அதிகாரமில்லை 55 M. L. J. 798.

ரெவினியு அல்லது ஜூடிஷியல் ஆபீஸருக்குக் கலெக்டருடைய அதிகாரங்களைக்கொடுக்க அதிகாரம்.

**206.** பிரதேச கவர்ன்மெண்டார், இந்த ஆக்டின்படி கொண்டுவரப்பட்ட சகல வகுப்பு அசல் வியாஜ்ஜியங்கள் அல்லது நடவடிக்கைகள் விஷயமாகவாவது அவைகளில் யாதொரு வகுப்பின் விஷயமாகவாவது கலெக்டருக்குண்டான சகல அதிகாரங்களையுமாகிலும் அவைகளிலெதையாகிலும் யாதொரு பிரதேச விஸ்தீர்ண சம்பந்தமாய் எந்த நபருக்காயினும் கொடுக்கலாம்; மேலும், அந்த அதிகாரங்களை மறுபடியும் வாங்கிக்கொள்ளலாம்; அல்லாமலும் அந்த நபர் அப்படி அதிகாரம் கொடுக்கப்பெற்றிராவிட்டால், அந்த வியாஜ்ஜியங்கள் அல்லது நடவடிக்கைகளை எந்த கலெக்டர் விசாரித்திருப்பாரோ அந்தக் கலெக்டர் செய்த தீர்மானங்களைப்போலவே, மேல்படி நபர் செய்யும் தீர்மானங்கள் அப்பீல் செய்யப்படுவதற்குள்ளாகும்.

உடன் சேர்க்கையாக டிஸ்டிரிக்ட் கலெக்டரை நியமிப்பது.

**207.** பிரதேச கவர்ன்மெண்டார் இந்த ஆக்டின்படி டிஸ்ட்ரிக்ட் கலெக்டருக்குண்டான அதிகாரங்கள் யாவற்றையுமாவது அவைகளிலெதையாவது செலுத்தும்படி டிஸ்டிரிக்ட் கலெக்டரோடுகூட ஒரு உத்தியோகஸ்தரை நியமிக்கலாம்.

ஷெட்யூலிற்கண்ட டிஸ்டிரிக்டுகளுக்கு டிஸ்ட்ரிக்ட் கலெக்டர்களும், கலெக்டர்களும்.

**208.** கஞ்சம் விசாகப்பட்டணத்தைச் சேர்ந்த ஷெட்யூலிற்கண்ட டிஸ்ட்ரிக்டுகளில் கவர்னரவர்களுடைய ஏஜெண்டும், கோதாவரியைச்சேர்ந்த ஷெட்யூலிற்கண்ட டிஸ்ட்ரிக்டுகளில் கவர்ன்மெண்ட் ஏஜெண்டும் இந்த ஆக்டின் காரியங்களுக்காக, டிஸ்ட்ரிக்ட் கலெக்டராவார்; அல்லாமலும்,

இந்த டிஸ்ட்ரிக்டுகளிலுள்ள அஸிஸ்டண்ட் ஏஜென்டுகள் அதே காரியங்களுக்காகக் கலெக்டராவார்கள்.

*வியாஜ்ஜியங்கள் அல்லது நடவடிக்கைகளைக் கொண்டுவர வேண்டிய அல்லது நடத்தவேண்டிய இடம்.*

**209.** (1) இந்த ஆக்டின்படி யாதொரு கலெக்டரால் பிடித்து விசாரிக்கப்படத்தக்க சகல வியாஜ்ஜியங்களையும் விண்ணப்பங்களையும் அல்லது நடவடிக்கைகளையும், எதன் சம்பந்தமாய் வியாஜ்ஜியம் கொண்டுவரப்படுகிறதோ அல்லது விண்ணப்பம் செய்துகொள்ளப்படுகிறதோ அல் நடவடிக்கை நடத்தப்படுகிறதோ அந்தக் கைப்பற்று நிலையாகிலும் அதன் யாதொரு பாகமாகிலும் இருக்கிற ரெவினியு டிவிஷனில் கொண்டுவரவேண்டும் அல்லது செய்துகொள்ள வேண்டும் அல்லது நடத்தவேண்டும்; மேலும்,

(2) டிஸ்ட்ரிக்ட் கலெக்டருடைய உத்தரவுக்குட்பட்டு, கலெக்டர் இந்த ஆக்டின்படி கொண்டுவரப்பட்ட வியாஜ்ஜியங்களையும் செய்து கொள்ளப்பட்ட விண்ணப்பங்களையும் நடத்தப்பட்ட நடவடிக்கைகளையும் பைசல் செய்வதற்காக அந்த டிஸ்ட்ரிக்டிலுள்ள எந்த இடத்திலாவது இருந்து விசாரணை செய்யலாம்.

## 16-வது அத்தியாயம்.

### கால நிர்ணயம்.

*வியாஜ்ஜியங்கள் முதலியவற்றிற்குக்கால நிர்ணயம்.*

**210.** அடுத்துவருகிற பிரிவிற்கண்ட நிபந்தனைகளுக்குட்பட்டு, இதனுடன் சேர்க்கப்பட்டிருக்கும் ஷெட்யூலிலே 191-வது பிரிவிலே நிர்ணயிக்கப்பட்ட காலவரையறை கழிந்த பிறகு கொண்டுவரப்பட்டாவது கொடுத்துக் கொள்ளப்பட்டாவது செய்து கொள்ளப்பட்டாவதுள்ள

பிரதி வியாஜ்ஜியத்தையும் அப்பீலையும் விண்ணப்பத்தையும் கால நிர்ணய தோஷம் உண்டாய்விட்டதென்று எதிர்வாதம் செய்யப்படாதிருந்தபோதிலும் தள்ளிவிடவேண்டும்.

1908-ம் வருஷத்திய இந்து தேசத்துக்கால நிர்ணயச் சட்டம் பிரயோகப்படுவது.

**211.** 1908-ம்வருஷத்திய இந்துதேசத்துக் கால நிர்ணயச்சட்டத்தை சேர்ந்த 6-வது, 7-வது, 8-வது, 9-வது, 19-வது, 20-வது, பிரிவுகள் தவிர அதன் மற்ற நிபந்தனைகள் - இந்த அத்தியாயத்தில் கண்ட நிபந்தனைகளுக்குட் பட்டு, 210-வது பிரிவில் சொல்லியிருக்கும் சகல வியாஜ்ஜியங்களுக்கும் அப்பீல்களுக்கும் விண்ணப்பங்களுக்கும் பிரயோகப்படும்.

## 17-வது அத்தியாயம்.

### உடன்சேர்க்கையானது.

தண்டனை.

மாகூலின் விஷயத்தில் சட்டத்துக்கு விரோதமாய்ப் பிரவர்த்திப்பது முதலியவைகளுக்குத் தண்டனை.

**212.** (1) யாதொரு நபர்—

(a) இந்த ஆக்டைச் சாக்கிட்டு யாதொரு சொத்தை மோசமாய் ஜப்தி செய்தாலும் விற்றாலும் அல்லது விற்கச் செய்தாலும்,

(b) இந்த ஆக்டின்படி கிரமமாய் ஜப்தி செய்வதைத் தடுத்தாலும், இந்த ஆக்டின்படி கிரமமாய் ஜப்திசெய்யப் பட்ட யாதொரு மாகூலைப் பலவந்தமாகவோ அல்லது திருட்டுத்தனமாகவோ அப்புறப்படுத்தினாலும், பாக்கிக்காக சொத்தை மோசடியாய் ஜப்தி செய்வதைத் தடுக்கும்பொருட்டு பாதீனஞ் செய்தாலும்,

(c) ஒரு கைப்பற்று நிலத்தின் யாதொரு மாகாணே அறுக்கவொட்டாமலோ, சேர்க்கவொட்டாமலோ, சேமித்து வைக்கவொட்டாமலோ, அப்புறப்படுத்தவொட்டாமலோ, அல்லது வேறே விதமாய் அதன் விஷயத்தில் பிரவர்த்திக்க வொட்டாமலோ ரயத்தினுடைய அனுமதி அல்லது சம்மதத்தைப்பெறுமல் மற்றப்படி சட்ட விரோதமாய் தடைப் படுத்தினுலும் தடைப்படுத்த எத்தனித்தாலும்,

(d) யாதொரு பூஸ்திதியிலுள்ள ரயத்தி நிலத்திலிருந்து 163-A. பிரிவின்படி அப்புறப்படுத்தப்பட்டிருந்து அந்த நிலத்தையோ அதன் யாதொரு பாகத்தையோ நிலத்துக்குடையவரின் சம்மதத்தைப்பெறுமல் அனுபவித்தாலும்,

(e) 17-A. பிரிவின்படி (நிலத்தில்) எவ்விதமாகவாகிலும் பிரவேசிப்பதை அல்லது அளப்பதை வேண்டுமென்றும் சட்ட சம்மதமான காரணம் இல்லாமலும் தடுத்தாலும்,

அவர்-இரண்டாவது க்ளாஸ் (வகுப்பு) மாஜிஸ்ட்ரேட்டின் அந்தஸ்துக்கு கீழ்ப்படாத அந்தஸ்திலுள்ள ஒரு மாஜிஸ்ட்ரேட்டினல் குற்றவாளியென்று தீர்மானிக்கப்படுவதன்மேல், ஐந்நூறு ரூபாய்க்கதிகப்படாமல் அபராதம் விதிக்கப்படுவதற்கு உள்ளாவார்.

(2) யாதொரு நபர் (1) குறிப்பிட்ட உட்பிரிவிற் கண்ட யாதொரு செய்கையைச் செய்வதற்கு உடந்தையாயிருந்தால், அவர் இந்தியன் பினல் கோடின் தாற்பரியப்படி ஒரு குற்றத்துக்கு உடைந்தையாயிருந்ததாக எண்ணப்படுவார்.

(3) யாதொரு நபர்-இந்த ஆக்டின் நிபந்தனைகளுக்கு விரோதமாய் ஸ்திரீகளிருக்கும் அறைகளில் பிரவேசித்தா

லும், குடியிருப்பு வீடுகளின் வெளிக்கதவுகளைப் பலவந்தமாய்த்திறந்தாலும், அவர் இந்தியன் பீனல் கோடின் தாற்பரியப்படி துராகிருதமாய் வீட்டில் நுழைவதென்னும் குற்றத்தைச் செய்தவராக எண்ணப்படுவார்.

குறிப்புகள்.

இந்த சட்டத்தில் குற்றங்களைப்பற்றின பிரிவு இது ஒன்றுதானாகும். இதில் (1)-வது உட்பிரிவில் (e) என்னும் வகுப்பு 1934-ம் வருஷத்திய திருத்தத்தினால் புதியதாக சேர்க்கப்பட்டது.

இந்தப் பிரிவில் சொல்லப்பட்ட குற்றமானது இந்தியன் பீனல் கோட் என்னும் கிரிமினல் சட்டத்தில் சொல்லப்பட்டிருக்கும் குற்றங்களை தவிர்க்கவில்லை. அதில் இல்லாத குற்றங்களைப்பற்றி தான் இப்பிரிவில் கூறப்பட்டுள்ளது. 38 Mad. 793

ஜப்தி என்றால் என்ன? யாதொரு சொத்து ஜப்திக்கு உட்பட்டது என்று சொன்னாலே போதுமா அல்லது அதன் சொந்தக்காரருடைய சுவாதீனத்திலிருந்து அது ஜப்தி செய்பவருடைய சுவாதீனத்திற்கு வந்துவிட வேண்டுமா? சத்யநாராயண மூர்த்தி vs. பின்னா ராமய்யா 51 M. L. J. 401 என்னும் கேஸில் ஜப்தி செய்யப்பட்ட சொத்தானது சொந்தக்காரருடைய சுவாதீனதத்தைவிட்டு அகன்ற பிறகு தான் ஜப்தி பூர்த்தியானதாகும் என்றும் அதற்கிடையில் எவ்விதமானதை நடந்தாலும் குற்றமாகாது என்றும் தீர்மானிக்கப்பட்டது. நாராயண ரெட்டி vs. த்வயதீனுச்சார் 48 M. L. J. 215 என்னும் கேஸில் இந்தப் பிரிவில் உள்ள "மாருல்" என்பதற்கு நிலத்தினுடைய அல்லது அதிலுள்ள மரங்களினுடைய மாகுல் என்று அர்த்தமாகுமேயொழிய ஆடுமாடுகள் இந்தப் பிரிவின்கீழ் வராது என்றும அவைகளை ஜப்தியினின்றும அகற்றிக்கொண்டுபோவது ஒரு குற்றமாகாது என்றும் தீர்மானிக்கப்பட்டது. ஜப்தி செய்யப்பட்ட ஆடுமாடுகளை மயத்து அகற்றிக்கொண்டு போனால் நிலத்தக்குடையவர் 90-வது பிரிவின் கீழ் பரிஹாரம் தேடவேண்டுமேயொழிய 212-வது பிரிவின் கீழ் பிராஸிக்யூஷன் செய்வதற்கில்லை.

இந்தப் பிரிவில் சொல்லப்பட்டிருக்கும் ஜப்தியானது நிலத்துக்குடையவர் யாதொரு தாவா செய்யாமலே எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டின் கீழ் ஜங்கம சொத்துக்களை ஜப்தி செய்வதற்குள்ள உரிமையைக் குறிக்கும். ஆகையால் அப்படி ஜப்தி செய்கையில் ஒரு நபர் நிலத்துக்குடையவர் ஹோதாவில் ரயத்துக்குச் சொந்தமான சொத்தை ஜப்தி செய்த சந்தர்ப்பங்களில் தான் பிரயோகமாகும். எஸ்டேட்ஸ்லாண்ட் ஆக்டின் 52-வது பிரிவானது ஜமீனிலுள்ள ரயத்துகளுக்குத்தான் பிரயோகமாகுமே யொழிய இதர நபர்களுக்கல்ல. ஆகையால் கைப்பற்று பாத்தியதை இராத (அதாவது ரயத்துகளல்லாத) சில நபர்கள் ஒரு இனும்தாரருக்கு ஒரு ரிஜிஸ்தராகாத முச்சலிக்கா எழுதிக் கொடுத்திருந்து அந்த முச்சலிக்கா பாக்கிக்காக இனும்தார் தமக்கு இந்த ஆக்டின் கீழ் உள்ள அதிகாரத்தைக் கொண்டு ஜப்தி செய்து அதை அந்த குடிகள் ஆக்ஷேபனை செய்தால் அது 212-வது பிரிவின் கீழ் ஒரு குற்றமாகாது. ஏனென்றால் அவர்கள் ரயத்துகளுமல்ல: குத்தகை முச்சிலிக்கையும் ரிஜிஸ்டராகாததினால் 134-வது பிரிவின் கீழும் ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டதாகவும் கருதப்படாது. 35 L. W. 849.

சென்னை எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டின் 78-வது பிரிவின் கீழ் ரெண்ட் பாக்கிக்காக ஒரு ரயத்தினுடைய நிலங்களை நில சுவான்தாரரே நேராக ஜப்தி செய்திருந்தார். ஜப்தி செய்யப்பட்ட பிறகு ஜப்தி சொத்துக்கள் அந்த கிராமத்தின் கிராம முனிசீப்பினுடைய ஸ்வாதீனத்தில் வைக்கப்பட்டிருந்தன. ரயத்தானவர், அந்த சொத்துக்களை கிராம முனிசீப்பினுடைய ஸ்வாதீனத்திலிருந்து அவர் ஆக்ஷேபனை செய்தும் கேளாமல் அகற்றிக் கொண்டுபோய் விட்டார்: ஆனால், அப்படி செய்யும்போது யாதொரு பலாத்காரமும் பிரயோகிக்கவில்லை. இந்தசந்தர்ப்பங்களில் நிலஸ்வான்தாரரானவர் ரயத்து மீது அந்த ரயத்து 212-வது பிரிவின் கீழ் ஒரு குற்றம் செய்ததாக மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் தாவா செய்ததில் கோர்ட்டு முன்பாக அடியில் கண்டவாறு ஒரு பிரச்னை கிளம்பியது: அதாவது அந்த மாஜிஸ்ட்ரேட் முன்பாக எதிரியானவர் திருட்டுத்தனமாகவாவது அல்லது பலாத்காரமாகவாவது ஜப்தி செய்யப்பட்ட சொத்துக்களை எடுத்துக்கொண்டு போனதாக ருசு ஏற்படாமலிருக்கையில், அவர்

குற்றவாளி என்று தீர்மானிக்கப்படலாமா வென்பது. இந்த கேஸ் விஷயமாக ஹைகோர்ட்டு முன்பாக செய்யப்பட்ட ஒரு ரிவிஷன் மனுவில் இதே பிரச்னையானது கிளம்பியதில் ஹைகோர்ட்டா ரவர்கள் பின்வருமாறு தீர்மானித்திருக்கின்றனர்.

சென்னை எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டின் 212-வது பிரிவின் கீழ் ஏற்படும் ஒரு குற்றச் செய்கையின் முக்கிய அம்சமென்ன வென்றால், அந்த சட்டத்தின் கீழ் ஜப்தி செய்யப்பட்டிருக்கும் சொத்தானது (1) திருட்டுத்தனமாகவாவது அல்லது (2) பலாத்கார மாகவாவது அகற்றப்பட்டதாக ருசு ஏற்படவேண்டும். அப்படி யாதொரு அம்சமாவது ருசுப்படுத்தப்படாமலிருக்கும் பக்ஷத்தில் எதிரி குற்றவாளி யென கவனிக்கப்படமாட்டார். அகில இந்தியா லா ஜர்னல் 2-ம் வால்யம் குறிப்புகள் 133-வது பக்கம்.

வியாஜ்ஜியங் கொண்டுவருவதற்கான பொதுவான பாத்தியதை.

நஷ்ட ஈட்டுக்காக வியாஜ்ஜியம் கொண்டுவருவதைப்பற்றிய பொதுவான பாத்தியதை.

**213.** (1) (a) இந்த ஆக்டைச்சாக்கிட்டு நடத்தப் பட்ட யாதொரு நடவடிக்கையினாலோ அல்லது (b) இந்த ஆக்டின் நிபந்தனைகளிலெதையாவது அசட்டை பண்ணின தனாலோ, மீறி நடந்ததனாலோ, யாதொரு நபர் தமக்கு துன் பம் நேரிட்டதென்று எண்ணினால், அவர் தமக்கு இஷ்டமி ருந்தால் கலெக்டரிடத்தில் நஷ்ட ஈட்டுக்காக வியாஜ்ஜியங் கொண்டுவந்து பரிகாரம் தேடிக்கொள்ளலாம்.

(2) ஸிவில் கோர்ட்டாருடைய அதிகார வரம்பிலிருந்து இந்த ஆக்டினால் எடுக்கப்பட்டிராத யாதொரு வியாஜ்ஜியத் திலே ஸிவில் கோர்ட்டில் நடவடிக்கை நடத்துவதற்கான எவ்வித பாத்தியதைக்கும் இந்தப் பிரிவினால் தடையுண்டா வதாக எண்ணக்கூடாது.

(3) ஆனால், எப்போதும் (1) குறிப்பிட்டஉட்பிரிவின்படி நஷ்ட ஈட்டுக்காக வியாஜ்ஜியம் கொண்டுவருகிற யாதொரு

நபர் அதே வியாஜ்ஜிய மூலத்தின் விஷயமாக ஸிவில் கோர்ட்டில் வியாஜ்ஜியம் தொடர சுதந்தரமுடையவராகமாட்டார்.

குறிப்புகள்.

இப்பிரிவின் நோக்கம் என்னவென்றால், இந்த சட்டத்தின்கீழ் உள்ள உரிமைகளையும் சௌகரியங்களையும் கைக்கொள்வதில் யாதொரு நபர் அக்கிரமமாய் பிரயோகம் செய்யும் பக்ஷத்தில் அதற்காக நஷ்ட ஈடு பெறுவதற்கு கலெக்டரிடம் சுருக்கு வகையாக பரிஹாரம் பெறுவதற்கு வசதி இருக்க வேண்டுமென்பது. ஆகையால் இந்தப் பிரிவின் கீழ் யாதொரு நபர் பரிஹாரம் அடையக்கூடுமானால் அவர் ஸிவில் கோர்ட்டில் அதே பரிஹாரத்தைத் தேடுவதற்கில்லை. அதற்கு 189-வது பிரிவானது ஒரு தடையாகும். A. I. R. 1931 Mad. 609. உதாரணமாக யாதொரு தொகை வாஸ்கவத்தில் நிலத்துக்குடையவருக்கு ரெண்ட் என்று சேரவேண்டியிராமலிருக்க அதைப்பெறுவதற்கு நிலத்துக்குடையவர் இந்த சட்டத்தில் சொல்லப்பட்டிருக்கும் சுருக்கு வகையான வழிகளை கைக்கொண்டிருந்தால் அத்தகைய சந்தர்ப்பங்களுக்கு இந்தப் பிரிவானது பிரயோகமாகும்.

இந்தப்பிரிவானது நிலத்துக்குடையவர் அந்த ஹோதாவில் எஸ்டேட்ஸ்லாண்டு ஆக்டின் கீழ் தமக்குள்ள பரிஹாரங்களில் எதையேனும் கைக்கொண்ட சந்தர்ப்பங்களில் தவிர மற்ற சந்தர்ப்பங்களில் பிரயோகமாகாது. உதாரணமாக 89 அல்லது 90-வது பிரிவின் கீழ் கலெக்டர் உத்திரவினால் பாதிக்கப்பட்ட நபர்கள் ஸிவில் கோர்ட்டுகளில் பரிஹாரம் தேடவேண்டுமேயொழிய கலெக்டர் முன்பாக டாமேஜ் பெறுவதற்கு தாவா செய்வதற்கில்லை. 29 M. L. J. 607 (பூரண பெஞ்சு கேஸ்.)

ரெண்ட் பாக்கி யென்று தவறாக வசூலிக்கப்பட்ட தொகையை பெறுவதற்காக செய்யப்படும் தாவா இந்தப் பிரிவின்கீழ் "டாமேஜ்" பெறுவதற்காக தாவாவாகும். அதைப்பெற ஸிவில் கோர்ட்டில் தாவா செய்வதற்கில்லை.

சென்னை எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டில் எம்யாதிரியாக ரெண்ட்டு பாக்கிகள் வசூலிக்கப்படவேண்டும் என்று சொல்லப்பட்டுள்ள

தோ அதை லக்ஷியம் செய்யாமல் அந்த நிபந்தனைகளை மீறி அக்கிரமமாய் வசூலிக்கப்பட்ட தொகையை வரப்படுத்துவதற்காக செய்யும் தாவாவானது, அதை எம்மாதிரியாக ஒருவர் பெயரிட்ட போதிலும் சென்னை எஸ்டேட்ஸ் லாண்டு ஆக்டின்கீழ் நஷ்டமாக தொகை வரப்படுத்த ஒரு தாவா வென்று கவனிக்கப்படுமாதலால் அந்த சட்டத்தின் 213-வது பிரிவின் பிரகாரம் அதை சிவில் கோர்ட்டில் தாக்கல் செய்வதற்கில்லை. ரெவின்யூகோர்ட்டாகிய கலெக்டரிடமே தாக்கல் செய்யவேணடும்.

ஒரு ரயத்தினுடைய நிலங்கள் ரெண்ட் ஏலத்தில் விக்கிரயம் செய்யப்பட்ட பிறகு அந்த ஏலத்தை ரத்து செய்வதற்காக நிலஸ்வான்தாரருக்கு நியாயமாக எவ்வளவு தொகை சேரவேண்டுமோ அதைவிட அதிகமான ஒரு தொகையை கோர்ட்டில் செலுத்தியிருக்கும் பக்ஷத்தில், அந்த அதிக தொகையை வரப்பெறுவதற்கான தாவா ரெவினியூ கோர்ட்டில் தான் தாக்கல் செய்யப்படவேணடும். சிவில் கோர்ட்டில் தாக்கல் செய்யப்படுவதற்கில்லை. அகில இந்தியா லா ஜர்னல் பத்திரிகை 3-வது வால்யூம் கேஸுகளின் குறிப்புகள் பக்கம் 24. ராம்ஜிதாஸ் vs. சைஞா ராவுத்தன் 61 M. L. J. 395.

டாமேஜ் பெறுவதற்கல்லாமல் வேறே விதமான பரிஹாரத்துக்காக தாவா செய்வதாயிருந்தால் அத்தகைய தாவா ஸிவில் கோர்ட்டில் செய்யப்படலாம். உதாரணமாக ஒரு ரெண்ட் விக்கிரயமானது மோசமாக நடந்ததென்று அதை ரத்து செய்வதற்கான தாவா ஸிவில் கோர்ட்டில் செய்யப்படலாம். 26 M. L. J. 36.

இந்தப் பிரிவின் கீழ் செய்யப்பட்ட தாவாவின் பேரில் டிக்கிரி நடந்து அதன் பேரில் அப்பீல் நடந்தால் அந்த அப்பீலின் பேரில் சென்னை ஹைகோர்ட்டுக்கு இரண்டாவது அப்பீல் உண்டா? உண்டு என்று 33 Mad. 655 என்னும் கேஸில் தீர்மானமாயுள்ளது.

மரங்களை வெட்டியெடுத்து போனதற்காக டாமேஜ் பெறுவதற்கு செய்யப்படும் தாவா இப்பிரிவின் கீழ் வராது. ஆகையால் அதை ரெவின்யு கோர்ட்டில் தாக்கல் செய்யப்படுவதற்கில்லை. 4 Law Weekly 245.

நிலத்துக்குடையவர்களின் ஏஜெண்டுகள்.

ஏஜெண்ட் மூலமாகப் பிரவர்த்திக்க நிலத்துக்குடைய வருக்குள்ள அதிகாரம்.

**214.** (1) யாதொரு நிலத்துக்குடையவர் ரெவினியு போர்டார், டிஸ்ட்ரிக்ட் கலெக்டர், கலெக்டர் அல்லது உத்தியோகஸ்தர் முன்பாக யாதொரு காரியம் நடத்தவோ ஹாஜராகவோ விண்ணப்பம் செய்து செய்துகொள்ளவோ இந்த ஆக்டின்படி வேண்டியிருந்தாலும் அதிகாரம் பெற்றிருந்தாலும் ஷை நிலத்துக்குடையவருடைய கையெழுத்து சகிதமாய் எழுத்து மூலமாக இது விஷயத்தில் அதிகாரம் கொடுக்கப்பெற்றுள்ள ஒரு ஏஜெண்டும் அவ்விதம் காரியம் நடத்தலாம், ஹாஜராகலாம், அல்லது விண்ணப்பம் செய்து கொள்ளலாம்.

(2) ஒரு நிலத்துக்குடையவருக்கு இந்த ஆக்டின்படி சேர்ப்பிக்க வேண்டியதாகவாகிலும் கொடுக்கவேண்டியதாகவாகிலுமுள்ள பிரதி நோடிஸும், அந்த நிலத்துக்குடையவருக்காக அந்த நோடிஸ் சேர்ப்பிக்கப்படுவதை அங்கீகரிக்கவோ அல்லது அதை வாப்பற்றிக்கொள்ளவோ மேலே கண்டபடி அதிகாரம்பெற்ற ஒரு ஏஜெண்டினிடத்தில் சேர்ப்பிக்கப்பட்டாலும் கொடுக்கப்பட்டாலும், அது அந்த நிலத்துக்குடையவரிடத்திலே நேராகச் சேர்ப்பிக்கப்பட்டாகிலும் கொடுக்கப் பட்டாகிலுமிருந்தாற்போலவே இந்த ஆக்டின் காரியங்களுக்காகச் செலாவணியாகவேண்டும்.

(3) ஒரு ஏஜெண்டை நியமிக்கிற அல்லது அவருக்கு அதிகாரம் கொடுக்கிற சாஸனம் நீங்கலாக, இந்த ஆக்டின்படி நிலத்துக்குடையவர் கையெழுத்துச் செய்யவேண்டியாவது வெரிபை பண்ணவேண்டியாவதிருக்கிற பிரதி தஸ்த

லேஜிலும், அவருடைய ஏஜெண்ட் இது விஷயத்தில் எழுத்துமூலமாய் அதிகாரம் பெற்றிருந்தால், அந்த ஏஜெண்ட் கையெழுத்து செய்யலாம் அல்லது வெரிபை பண்ணலாம்.

## ஆக்டின்படிக்கான விதிகள்.

*விதிகள் செய்ய பிரதேச கவர்ன்மெண்டாருக்குள்ள அதிகாரம்.*

**215.** பிரதேச கவர்ன்மெண்டார் - இந்த ஆக்டில் கண்ட நிபந்தனைகளை நிறைவேற்றும் காரியத்துக்காக விதிகளை முன்னதாய்ப் பிரசுரஞ்செய்து ஏற்படுத்தலாம்.

முக்கியமாகவும் முந்திய நிபந்தனையின் பொதுத்தன்மைக்குப் பாதகமில்லாமலும், பிரதேச கவர்ன்மெண்டார்—

(1) டிஸ்ட்ரிக்ட் கலெக்டர்களும் கலெக்டர்களும் இந்த ஆக்டினாலோ ஆக்டின்படியோ அவர்களுக்கு ஏற்பட்டிருக்கும் யாதொரு கடமையைச் செலுத்துகையில் இன்ன மாதிரி நடவடிக்கையை அனுசரிக்கவேண்டியதென்று ஒழுங்கேற்படுத்துவதற்காக விதிகள் செய்யலாம்; மேலும் அப்படிப்பட்ட விதிகளைக்கொண்டு அப்படிப்பட்ட யாதொரு ஆபிஸருக்கு—

(a) வியாஜ்ஜியங்களை விசாரணை செய்யும்போது ஒரு ஸிவில் கோர்ட்டார் செலுத்தும் யாதொரு அதிகாரத்தையும்,

(b) யாதொரு நிலத்தில் பிரவேசிப்பதற்கும் அதை ஸர்வே செய்து அதற்கு எல்லைகட்டி அதன் மாப் (படம்) ஒன்று தயார் செய்வதற்குமுள்ள அதிகாரத்தையும், ஸர்வேயையும் எல்லைகளையும் குறித்த சென்னப்பட்டணம் 1923-ம் ஹு ஆக்டின்படி யாதொரு உத்தியோகஸ்தர் செலுத்தத்தக்க யாதொரு அதிகாரத்தையும்,

(c) யாதொரு நிலத்திலுள்ள மண்ணின் வளப்பத்தை மதிப்பிடும் நோக்கத்துடன் அந்த நிலத்திலிருக்கும் பயிர்களை அறுத்துப்போரடிப்பதற்கும் மாகூலை எடைபோடுவதற்கும் அல்லது அளப்பதற்கும் அதிகாரத்தையும்,

கொடுக்கலாம் ; மேலும், பிரதேச கவர்ன்மென்டார்—

(2) இந்த ஆக்டின்படி பிறப்பிக்கவேண்டிய நோடிஸுகள் இன்ன நமூனைப்படி இருக்கவேண்டுமென்றுவது அவைகளை இன்ன விதமாகச் சேர்ப்பிக்கவேண்டுமென்றுவது இந்த ஆக்டிலாகிலும் வேறே யாதொரு ஆக்டிலாகிலும் நிர்ணயிக்கப்படாமலிருந்தால், அப்படிப்பட்ட நமூனைக்களையும் விதத்தையும் நிர்ணயித்தும்,

(3) இந்த ஆக்டின்படி செய்துகொள்ளப்படும் விண்ணப்பங்களிலே அனுசரிக்கவேண்டிய நடவடிக்கையைக்குறித்தும்,

(4) இந்த ஆக்டின் காரியங்களுக்காகச் செலுத்தவேண்டிய கட்டணங்கள், செலவுகள், (சார்ஜுகள்) படிகளைக் குறித்தும்,

(5) சமுதாய காரியங்களுக்காகப் பிரத்தியேகமாய் விடப்பட்டிருக்கும் களத்துமேடு - கால்நடைக் கொட்டில்-கிராம நத்தம் முதலிய நிலங்களையும் ஏரிகள் வருவாய்க்கால்கள், கழிவுத்தண்ணீர் கால்கள், மிகுதிதண்ணீர் பாயும்கால்கள், அல்லது நீர்ப்பாய்ச்சல் கால்கள், ஆகிய இவைகளின் அடித்தரை நிலத்தையும் கரைகளையும், உபயோகிப்பதற்காகவும்,

(6) யாதொரு பிரதேச விஸ்தீர்ணத்தில் எவற்றைப் பிரதான உணவுத்தானியங்களாக எண்ணவேண்டுமென்று

நிர்ணயிப்பதற்காகவும், விலேஜாபிதாக்களைத் தயார் செய்யும் உத்தியோகஸ்தர்களுக்கு உதவியாயிருப்பதற்காகவும்,

(7) ஜப்தி செய்யப்பட்ட பயிர்கள் அல்லது விளை பொருள்கள் சீக்கிரம் அழியுந்தன்மையுள்ளவைகளாயிருந்தால் அவைகளை விற்பனை செய்வதற்காகவும்,

(8) நிலங்களை ஸர்வே செய்து உரிமை தஸ்தவேஜையும் குத்தகைத்தொகை பைசல் ரெக்கார்டையும் தயார் செய்வதற்காகவும்,

(9) குத்தகைத்தொகை பைசலுக்குச் சம்பந்தமான பிரதம தஸ்தவேஜைப்பற்றிய ஆட்சேபணைகளைக்குறித்து ஒரு ரெவினியு ஆபிஸர் செய்த உத்தரவுகளின்மேல் எந்த மேலான ரெவினியு அதிகாரியிடம் அப்பீல் செய்துகொள்ளலாமென்பதை நிர்ணயித்தும்,

(10) இந்த ஆக்டின்படி பைசல் செய்யப்பட்ட வியாஜ்ஜியங்களையும் விண்ணப்பங்களையும் குறித்து எந்த நமூனாப்படி ரெஜிஸ்டர் வைத்திருக்கவேண்டுமென்பதை நிர்ணயித்தும்,

விதிகள் செய்யலாம்.



# ஷெட்யூல்.

(189-வது, 210-வது பிரிவுகளைப் பார்க்கவும்.)

## A பாகம்.—கலெக்டர் விசாரணை செய்யத்தக்க வியாஜ்ஜியங்கள்.

| வரிசைக்கிரமமான நெம்பர். | ஆக்டின் பிரிவு. | வியாஜ்ஜியங்களின் விவரம். | நிர்ணயிக்கப்பட்ட கால அளவு. | கால அளவு எப்போது முதல் செல்லத் தொடங்குமென்பது. | அப்பீல் செய்து கொள்வதானால், எந்த அதிகாரி அல்லது அதிகார சபைக்குச் செய்து கொள்ள வேணுமெனபது. |
|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) |
| 1 | 55 | பட்டா பெற்றுக் கொள்ள. | மூன்று மாதம். | கொடுக்கும்படி கேட்ட பிறகு மூன்று மாத காலம் கழிவாகும் தேதி. | டிஸ்ட்ரிக்ட் கோர்ட். |
| 2 | 56 | பட்டாவை அங்கீகரிக்கும்படி கட்டாயப்படுத்த. | மூன்று மாதம். | அங்கீகரிக்கத்தவறினதிலிருந்து ஒரு மாத காலம் கழிவாகும் தேதி. | டிஸ்ட்ரிக்ட் கோர்ட். |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 3 | 77 | குத்தகைத் தொகை பாக்கியை வசூல் செய்வதற்காக நிலத்துக்குடையவரால். | மூன்றுவருஷம் | எந்தத் தேதியில் பாக்கித் தொகை செலுத்தவேண்டியதாகிறதோ அந்தத் தேதி அல்லது குத்தகைத் தொகையை நிச்சயிக்கும் காரியத்துக்காக வியாஜ்ஜியம் அல்லது வேறே நடவடிக்கை நடத்தப்பட்டிருந்தால், எந்த டிக்ரி அல்லது உத்தரவினால் குத்தகைத் தொகை முடிவாக நிச்சயிக்கப்படுகிறதோ அந்த டிக்ரி அல்லது உத்தரவின் தேதி—இந்த இரண்டு தேதிகளில் எது பிந்தினதோ அது. | டிஸ்ட்ரிக்ட் கோர்ட். |
| 4 | 88 | ஜப்தி செய்யப்பட்ட சொத்தானது திருட்டுப்போனாலும் காணாமற்போனாலும் சேதப்பட்டாலும் அழிந்துபோனாலும் நஷ்டஈட்டுக்காக. | ஆறு மாதம். | சொத்தானது திருட்டுப்போன, காணாமற்போன, சேதப்பட்ட அல்லது அழிந்துபோன தேதி. | டிஸ்ட்ரிக்ட் கோர்ட். |
| 5 | 95(1), (2) | ஜப்தி செய்ததைக் குறித்து ஆட்சேபிக்க. | பதினைந்து நாள். | கேட்கப்பட்ட தொகையைச் செலுத்த வேண்டுமென்றாவது ஜப்தி செய்ததைக் குறித்து ஆட்சேபிக்க வியாஜ்ஜியம் தொடரவேண்டுமென்றாவது கண்டு நோடிஸ் சேர்ப்பிக்கப்பட்ட தேதி. | டிஸ்ட்ரிக்ட் கோர்ட். |

| வரிசைக்கிரமமான நெம்பர். | ஆக்ட்டின் பிரிவு. | வியாஜ்ஜியங்களின் விவரம். | நிர்ணயிக்கப்பட்ட கால அளவு. | கால அளவு எப்பொழுது முதல் செல்லத் தொடங்குமென்பது. | அப்பீல் செய்து கொள்வதானால், எந்த அதிகாரி அல்லது அதிகார சபைக்குச் செய்து கொள்ள வேண்டுமென்பது. |
|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) |
| 6 | 112 | கைப்பற்று நிலத்தை விற்பதற்குள்ள பாத்தியதையைக் குறித்து ஆட்சேபிக்க. | முப்பது நாள். | பாக்கித் தொகையைச் செலுத்த வேண்டுமென்றாவது விற்பதற்குள்ள பாத்தியதையைக் குறித்து ஆட்சேபித்து வியாஜ்ஜியம் தொடரவேண்டுமென்றாவது கண்டு எந்தத் தேதியில் பாக்கிதாரருக்கு நோடீஸ் சேர்ப்பிக்கப்படுகிறதோ அந்தத் தேதி. | டிஸ்ட்ரிக்ட் கோர்ட். |
| 7 | 127 (2)(c) | பிர்திய குத்தகைத்தொகையைச் செலுத்துதற்காக. | முப்பது நாள். | கைப்பற்று நிலம் விற்கப்பட்ட தேதி. | டிஸ்ட்ரிக்ட் கோர்ட். |
| 8 | 136 | சட்ட விரோதமாய்ச் செலுத்தப்பட்ட தொகைகளையும் பலாத்காரமாய் வாங்கப்பட்டிருக்கும் தொகைகள் விஷயமாய் விதிக்கப்படும் அபராதங்களையும் வசூல்செய்ய. | ஆறு மாதம். | தொகை செலுத்தின தேதி. | டிஸ்ட்ரிக்ட் கோர்ட். |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 9 | 140 | நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான யாதொரு கட்டு வேலைக்கு பாமத்து வேலைகள் செய்து முடிப்பதற்குப்பிடித்த செலவை யாதொரு தசபந்தம் இனும்தாரிடமிருந்து வசூல் செய்ய. | மூன்று வருஷம். | வேலைகள் செய்து முடிந்த தேதி. | டிஸ்ட்ரிக்ட் கோர்ட். |
| 10 | 149 | கைப்பற்று நிலத்துக்கு ராஜிநாமா கொடுக்கிற போது குத்தகைத் தொகையில் உண்டாகும் நஷ்டத்துக்கு ஈடு செய்யப்படுவதற்காக. | ஆறு மாதம். | எந்த ரெவினியு வருஷத்தில் ராஜிநாமா கொடுக்கப்படுகிறதோ அதற்கு அடுத்த ரெவினியு வருஷ ஆரம்பம். | டிஸ்ட்ரிக்ட் கோர்ட். |
| 11 | 151(1) | ரயத்தை நிலத்தை விட்டு அப்புறப்படுத்த. | இரண்டு வருஷம். | அப்புறப்படுத்தும் பாத்தியதை ஏற்பட்ட தேதி. | டிஸ்ட்ரிக்ட் கோர்ட். |
| 12 | 151(2) | பிரதிபலனுக்காக அல்லது இன்ஜங்ஷன் என்னும் தடை உத்தரவுக்காக அல்லது சேதப்பட்டதையாவது வீண்போனதையாவது சரிப்படுத்திக் கொடுப்பதற்காக. | இரண்டு வருஷம். | சேதப்படுத்தப்பட்ட அல்லது வீணாய்ப் போக ஆரம்பித்த காலம். | டிஸ்ட்ரிக்ட் கோர்ட். |

| வரிசைக்கிரமமான நெம்பர். | ஆக்டின் பிரிவு. | வியாஜ்ஜியங்களின் விவரம். | நிர்ணயிக்கப்பட்ட கால அளவு. | கால அளவு எப்பொழுது முதல் செல்லத் தொடங்குமென்பது. | அப்பீல் செய்து கொள்வதானால், எந்த அதிகாரி அல்லது அதிகார சபைக்குச் செய்து கொள்ள வேண்டுமென்பது. |
|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) |
| 13 | 213(1) | வேறே விதமாய் நிபந்தனை கண்டிராத வஷ்டங்களுக்காக. | மூன்று மாதம். | வியாஜ்ஜிய மூலம் உண்டான தேதி. | டிஸ்ட்ரிக்ட் கோர்ட். |

B பாகம்.—டிஸ்ட்ரிக்ட் கலெக்டர் அல்லது கலெக்டர் பைசல் செய்யவேண்டிய விண்ணப்பங்கள்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | 12(2) | நிலத்துக்குடையவருக்குச் சொந்தமான எந்த மரங்களை ரயத்து அடைந்திருக்கிறாரோ அந்த மரங்கள் விதையாய்ச் செலுத்தப்படத்தக்க பிரதிபலனை நிஷ்கர்ஷை செய்வதற்காக. | ஒன்றுமில்லை. | ஒன்றுமில்லை. | டிஸ்ட்ரிக்ட் கலெக்டர். |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2 | 15 | சீர்திருத்தம் செய்வதற்குள்ள பாத்தியதையைக் குறிக்காவது, குறிப்பிட்ட ஒரு வேலை சீர்திருத்தந்தானு அல்லது சீர்திருத்தமாகுமா என்பதைக் குறிக்காவது. | ஒன்றுமில்லை | ஒன்றுமில்லை. | டிஸ்ட்ரிக்ட் கலெக்டர். |
| 3 | 16 | சீர்திருத்தங்களை ரெஜிஸ்டர் செய்ய. | ஒன்றுமில்லை [16-வது பிரிவைச் சேர்ந்த (3) குறிப்பிட்ட உட்பிரிவுக்குட்பட்டு]. | ஒன்றுமில்லை [16-வது பிரிவைச் சேர்ந்த (3) குறிப்பிட்ட உட்பிரிவுக்குட்பட்டு]. | ரெஜிஸ்டர் செய்ய கிராகரித்ததன் மேல் டிஸ்ட்ரிக்ட் கலெக்டர். |
| 4 | 17 | சீர்திருத்தத்துக்குச் சம்பந்தப்பட்ட சாட்சியம் எழுதிவைப்பதற்காக. | ஒன்றுமில்லை. | ஒன்றுமில்லை. | சாட்சியம் எழுதிவைக்க கிராகரித்ததன் மேல்—டிஸ்ட்ரிக்ட் கலெக்டர். |
| 5 | 20 A (1) | யாதொரு சமுதாய நிலம் ஆதியில் எந்தக் காரியத்துக்காக உத்தேசிக்கப்பட்டதோ அந்தக் காரியத்துக்கு வேண்டியிருக்கவில்லையென்று நிர்ணயிப்பதற்காகவும், அதை வேறே எவை | ஒன்றுமில்லை. | ஒன்றுமில்லை. | பிரஸ்தாப நிலம் ஆதியில் எந்தக் காரியத்துக்காக உத்தேசிக்கப்பட்டதோ அந்தக் காரியத்துக்கு வேண்டியிருக்கவில்லையென்று நிர்ணயித்திருப்பதன் மேலாவது, அந்த நிலத்தை வேறே எந்த சமுதாய காரியத்துக்காகவாகிலும் உபயோகிக்கவேண்டுமென்று கட்டளை |

| வரிசைக்கிரமமான நெம்பர். | ஆக்டின் பிரிவு. | வியாஜ்ஜியங்களின் விவரம். | நிர்ணயிக்கப்பட்ட கால அளவு. | கால அளவு எப்பொழுது முதல் செல்லத் தொடங்குமென்பது. | அப்பீல் செய்து கொள்வதானால், எந்த அதிகாரி அல்லது அதிகார சபைக்குச் செய்து கொள்ள வேண்டுமென்பது. |
|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) |
| | | யேனும் சமுதாய காரியங்களுக்காக உபயோகிக்கவேண்டுமென்றாவது கவர்ன்மெண்ட் ரயத்துவாரி நிலமாகவாகிலும் நிலத்துக்குடையவரின் ரயத்தி நிலமாகவாகிலும் மாற்றவேண்டுமென்றாவது கட்டளையிடுவதற்காகவும். | | | யிட்டுப் பிறப்பிக்கப்பட்ட உத்தரவின் மேலாவது— ரெவினியு போர்டார். பிரஸ்தாப நிலத்தை கவர்ன்மெண்ட் ரயத்துவாரி நிலமாகவாவது நிலத்துக்குடையவரின் ரயத்தி நிலமாகவாவது மாற்றும்படி கட்டளையிட்டுப் பிறப்பிக்கப்பட்ட உத்தரவின் மேல்—டிஸ்ட்ரிக்ட் கோர்ட். |
| 6 | 25 | நியாயமானதும் தருமமானதுமான குத்தகைத் தொகையைப் பைசல் செய்வதற்காக. | ஒன்றுமில்லை. | ஒன்றுமில்லை | டிஸ்ட்ரிக்ட் கலெக்டர். |
| 7 | 30 | ரயத்து செலுத்தத்தக்க குத்தகைத் தொகையை அதிகப்படுத்துவதற்காக. | ஒன்றுமில்லை (37-வது, 41-வது, 177-வது பிரிவுகளுக்குட்பட்டு). | ஒன்றுமில்லை (37-வது, 41-வது, 177-வது பிரிவுகளுக்குட்பட்டு). | டிஸ்ட்ரிக்ட் கோர்ட். |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 8 | 32(2) | சீர்திருத்தத்தை ரெஜிஸ்டர் செய்வதற்காக நிலத்துக்குடையவர் விண்ணப்பம் செய்து கொள்வது. | ஒரு வருஷம். | சீர்திருத்தம் செய்து முடிந்த தேதி. | ரெஜிஸ்டர் செய்திருப்பதன் மேலாவது ரெஜிஸ்டர் செய்ய நிராகரித்ததன் மேலாவது டிஸ்ட்ரிக்ட் கலெக்டர். |
| 9 | 32(2) | 32-வது பிரிவைச் சேர்ந்த (2) குறிப்பிட்ட உட்பிரிவின்படி ரெஜிஸ்டர் செய்யப்பட்ட சீர்திருத்தம் காரணமாக அதிகப்படியாய் குத்தகைத் தொகை செலுத்துவதற்கான ஒப்பந்தத்தை அமுலுக்குக் கொண்டுவருவதற்காக நிலத்துக்குடையவர் விண்ணப்பம் செய்து கொள்வது. | ஒரு வருஷம். | ரெஜிஸ்டர் செய்த தேதி. | டிஸ்ட்ரிக்ட் கலெக்டர். |
| 10 | 32(3) | குத்தகைத் தொகையை அதிகப்படுத்தியிருப்பதைப் புனராலோசனை செய்து திருத்துவதற்காக. | ஒன்றுமில்லை. | ஒன்றுமில்லை. | டிஸ்ட்ரிக்ட் கலெக்டர். |
| 11 | 38 | குத்தகைத்தொகையைக் குறைப்பதற்காக. | ஒன்றுமில்லை (39-வது, 41-வது, 177-வது பிரிவுகளுக்குட்பட்டு). | ஒன்றுமில்லை (39-வது 41-வது, 177-வது பிரிவுகளுக்குட்பட்டு). | டிஸ்ட்ரிக்ட் கோர்ட். |

| வரிசைக்கிரமமான நெம்பர். | ஆக்டின் பிரிவு. | வியாஜ்ஜியங்களின் விவரம். | நிர்ணயிக்கப்பட்ட கால அளவு. | கால அளவு எப்பொழுது முதல் செல்லத் தொடங்குமென்பது. | அப்பீல் செய்து கொள்வதானால், எந்த அதிகாரி அல்லது அதிகார சபைக்குச் செய்து கொள்ள வேண்டுமென்பது. |
|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) |
| 12 | 40 | குத்தகைத்தொகையைப் பணமாக மாற்றிக்கொள்வதற்காக. | ஒன்றுமில்லை. | ஒன்றுமில்லை. | குத்தகைத் தொகையைப் பணமாக மாற்றிக் கொள்ளும் காலத்தில் மதிப்பு நிஷ்கரிஷை செய்யப்படுவதனால் ரொக்க தொகையாக இன்ன தொகை செலுத்தவேண்டுமென்று நிர்ணயிக்கப்படுகிறமட்டில் அந்தப்படி மதிப்பு நிஷ்கரிஷை செய்யப்படுவதன்மேல் — டிஸ்ட்ரிக்ட் கோர்ட். |
| 13 | 42(2) | வில் தீர்மானத்துக்குத் தகுந்தபடி குத்தகைத் தொகையை மாற்றுவதற்காக. | ஒன்றுமில்லை. | ஒன்றுமில்லை. | டிஸ்ட்ரிக்ட் கலெக்டர். |
| 14 | 54 | கலெக்டர் அல்லது வேறே உத்தியோகஸ்தரின் ஆபீஸில், பட்டாவை தாக்கல் செய்ய அனுமதி பெறுவதற்காக. | ஒரு வருஷம். | எந்த ரெவினியு வருஷத்துக்குப் பட்டா சம்பந்தப்படுகிறதோ அந்த ரெவினியு வருஷத்தின் ஆரம்பம். | டிஸ்ட்ரிக்ட் கலெக்டர், |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 15 | 65 | ரசீது கொடாதிருப்பதற்குப் பிரதிபலன் பெறுவதற்காக. | மூன்று மாதம். | தொகை செலுத்தின தேதி. | டிஸ்ட்ரிக்ட் கலெக்டர். |
| 16 | 68 | கலெக்டருடைய ஆபீஸில் குத்தகைத் தொகையை டிபாஸிட் செய்ய அனுமதி பெறுவதற்காக. | ஒன்றுமில்லை. | ஒன்றுமில்லை. | ஒன்றுமில்லை. |
| 17 | 71(3) | டிபாஸிட் செய்யப்பட்டிருக்கும் குத்தகைத் தொகையைத் திரும்பவும் செலுத்துவதற்காக. | ஒன்றுமில்லை. | ஒன்றுமில்லை. | ஒன்றுமில்லை. |
| 18 | 74 | மதிப்பேற்படுத்தவாவது பங்கிடவாவது உத்தியோகஸ்தரை நியமித்து அனுப்புவதற்காக. | ஒன்றுமில்லை. | ஒன்றுமில்லை. | ஒன்றுமில்லை. |
| 19 | 89 | ஜப்தி செய்யப்பட்ட சொத்தில் உரிமை அல்லது பாத்தியதை உள்ளவராயிருக்கும் மூன்றாம் நபரால். | விற்பனைத் தேதிக்கு முன் எந்தக் காலத்திலாகிலும். | ஒன்றுமில்லை. | ஒன்றுமில்லை. |

| வரிசைக்கிரமான நெம்பர். | ஆக்டின் பிரிவு. | வியாஜ்ஜியங்களின் விவரம். | நிர்ணயிக்கப்பட்ட கால அளவு. | கால அளவு எப்பொழுது முதல் செல்லத் தொடங்குமென்பது. | அப்பீல் செய்து கொள்வதானால், எந்த அதிகாரி அல்லது அதிகார சபைக்குச் செய்து கொள்ள வேண்டுமென்பது. |
|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) |
| 20 | 90. | ஜப்தி செய்வதைத் தடைப்படுத்தும் பொருட்டு மோசடியாய்ப் பராதீனம் பண்ணின சொத்தை ஒப்புவித்து விடுவதற்காக, அல்லது அந்த சொத்தின் மதிப்புத்தொகையைச் செலுத்துவதற்காக. | ஆறு மாதம். | பாக்கித் தொகை எந்தத் தேதியில் செலுத்தவேண்டியதாய் ஏற்பட்டதோ அந்தத் தேதி. | ஒன்றுமில்லை. |
| 21 | 90. | பலவந்தமாகவோ திருட்டுத்தனமாகவோ எடுத்துக் கொண்டு போகப்பட்ட ஜப்தி சொத்தைத் திருப்பிக்கொடுப்பதற்காக அல்லது அந்த சொத்தின் மதிப்புத் தொகையைச் செலுத்துவதற்காக. | முப்பது நாள். | ஜப்தி செய்யப்பட்ட சொத்து எந்தத் தேதியில் பலவந்தமாகவாகிலும் திருட்டுத்தனமாகவாகிலும் எடுத்துக்கொண்டு போகப்பட்டதோ அந்தத் தேதி. | ஒன்றுமில்லை. |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 22 | 102 | இரண்டாவது விற்பனையினால் ஏற்படும் விலைக்குறைவையும் செலவுகளையும் விலை செலுத்தத் தவறிப்போன இரயதாரரிடமிருந்து வசூலிப்பதற்கு கலெக்டரிடமிருந்து ஸெர்டிபிகேட் பெற. | மூன்று மாதம். | விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தருடைய ஸெர்டிபிகேட்டின் தேதி. | டிஸ்ட்ரிக்ட் கோர்ட். |
| 23 | 106(5) | செலவைத் தீர்மானிப்பதற்காக. | மூன்று மாதம். | விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தருடைய தீர்மானத்தின் தேதி. | ஒன்றுமில்லை. |
| 24 | 114 | விற்பனை செய்யும் பாத்தியதையை ஆட்சேபித்து வியாஜ்ஜியம் ஏதாவது தொடரப்பட்டிராவிட்டால், கைப்பற்று நிலத்தை விற்பனை செய்வதற்காக. | நாற்பத்தைந்து நாள். | 113-வது பிரிவின்படி நோடீஸ் சேர்ப்பித்ததைக்குறித்த சம்கதியைக் கலெக்டர் தபாலில் அனுப்பின தேதி. | ஒன்றுமில்லை. |
| 25 | 114 | விற்பனை செய்யும் பாத்தியதையை ஆட்சேபித்து வியாஜ்ஜியம் தொடரப்பட்டிருந்தால்கைப்பற்று நிலத்தை விற்பனை செய்வதற்காக. | முப்பது நாள். | வியாஜ்ஜியத்தை பைசல் செய்த அல்லது வாபஸ் வாங்கிக்கொண்ட தேதி. | ஒன்றுமில்லை. |

| வரிசைக்கிரமமான நெம்பர். | ஆக்டின் பிரிவு. | வியாஜ்ஜியங்களின் விவரம். | நிர்ணயிக்கப்பட்ட கால அளவு. | கால அளவு எப்பொழுது முதல் செல்லத் தொடங்குமென்பது. | அப்பீல் செய்து கொள்வதானல், எந்த அதிகாரி அல்லது அதிகார சபைக்குச் செய்து கொள்ள வேண்டுமென்பது. |
|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) |
| 26 | 123 | இரண்டாவது விற்பனையினால் ஏற்படும் விலைக்குறைவையும் செலவுகளையும் விலை செலுத்தத் தவறிப்போன இரயதாரிடமிருந்து வசூலிப்பதற்காகக் கலெக்டரிடமிருந்து ஸெர்டிபிகேட் பெற | மூன்று மாதம். | விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தருடைய ஸெர்டிபிகேட்டின் தேதி. | டிஸ்ட்ரிக்ட் கோர்ட். |
| 27 | 131 | கைப்பற்று நிலத்தின் விற்பனையை ரத்து செய்யும் பொருட்டு தொகையை டிபாஸிட் செய்வதற்காக. | நாற்பத்தைந்து நாள். | விற்பனை நடந்த தேதி. | ஒன்றுமில்லை. |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 28 | 131 | கைப்பற்று நிலத்தின் விற்பனையை ரத்து செய்ய. | விக்கிரய ஸெர்டிபிகேட் கொடுக்கப்படுவதற்கு முன். | ஒன்றுமில்லை. | ஒன்றுமில்லை. |
| 29 | 133 | செலுத்தவேண்டிய பாக்கியைச் செலுத்துவதற்குக காலம் ஏற்படுத்திக் கொடுப்பதற்காக. | 116-வது பிரிவின்படி விற்பனை நடத்த உத்தரவு பிறப்பிப்பதற்கு முன். | ஒன்றுமில்லை. | ஒன்றுமில்லை, |
| 30 | 137 | நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான யாதொரு கட்டுவேலையின் கீழிருக்கும் ஆயக்கட்டை நிர்ணயிப்பதற்காக. | ஒன்றுமில்லை. | ஒன்றுமில்லை. | |
| 31 | 137A | நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான யாதொரு கட்டுவேலையின் ஆயக்கட்டை விரிவாக்க அனுமதி கொடுப்பதற்காக. | ஒன்றுமில்லை. | ஒன்றுமில்லை, | ... |
| 32 | 137C | நீர்ப்பாய்ச்சப்பெறும் நிலத்தையாவது தோட்டக்காலையாவது நீர்பாய்ச்சப்படாத நிலமென்று மீணும் தரம் பிரிப்பதற்காக. | ஒன்றுமில்லை. | ஒன்றுமில்லை. | ... |

| வரிசைக்கிரமமான நெம்பர். | ஆக்டின் பிரிவு. | வியாஜ்ஜியங்களின் விவரம். | தீர்மானிக்கப் பட்ட கால அளவு. | கால அளவு எப்போது முதல் செல்லத் தொடங்கு மென்பது. | அப்பீல் செய்து கொள்வதானால், எந்த அதிகாரி அல்லது அதிகார சபைக்குச் செய்து கொள்ள வேண்டுமென்பது. |
| --- | --- | --- | --- | --- | --- |
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) |
| 33 | 138 | தீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான யாதொரு கட்டு வேலையை மராமத்து செய்வதற்கு உத்தரவு பெறுவதற்காக. | ஒன்றுமில்லை. | ஒன்றுமில்லை. | ... |
| 34 | 141 | குத்தகைத் தொகையைச் சிறிது காலத்துக்குக் குறைப்பதற்காக | ஒன்றுமில்லை. | ஒன்றுமில்லை. | ... |
| 35 | 143(1) | 30 முதல் 44 வரையிலுள்ள பாகங்களில் குறிப்பிட்டிருக்கும் மூர்த்திய பிரிவுகளில் ஏதேனொன்றாகிலும் இந்த உட்பிரிவை சேர்ந்து | இதற்குப் பொருத்தமான பிரிவின் விஷயத்தில் எப்படியோ அப்படியோ. | இதற்குப் பொருத்தமான பிரிவின் விஷயத்தில் எப்படியோ அப்படியே. | இதற்குப் பொருத்தமான பிரிவின் விஷயத்தில் எப்படியோ அப்படியே. |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | | விசித்து அதன்படி யாதொரு பரிகாரம் ஏற்படுத்திக் கொடுப்பதற்காக. | | | |
| 36 | ... | வேறே விதமாய் நிபந்தனை கண்டிராததாய் 8-ம் அத்தியாயத்தின்படி செய்துகொள்ளப்படும் யாதொரு விண்ணப்பம். | ஆறு மாதம். | கோரும் பரிகாரத்துக்குரிய பாத்தியதை ஏற்பட்ட தேதி. | ... |
| 37 | 145(9) | குத்தகைத் தொகையை நிலத்துக்குடையவர் பங்கீடு செய்திருப்பதை யாதொரு ரயத்து ஒப்புக்கொள்ளாவிட்டால், அந்த குத்தகைத் தொகையைப் பிரித்துக் கொடுக்கும்படியாக. | மூன்று மாதம். | பங்கீடு செய்து கொடுத்திருக்கும் விஷயம் ரயத்துக்குத் தெரிவிக்கப்பட்ட தேதி. | டிஸ்ட்ரிக்ட் கலெக்டர். |
| 38 | 145(9) | நிலத்துக்குடையவர் குத்தகைத் தொகையைப் பங்கீடு செய்துகொடுக்க ஆறு மாதத்துக்கு மேல் ஆலசியம் செய்திருந்தால், குத்தகைத் தொகையைப்பிரித்துக் கொடுக்கும்படியாக. | ஒன்றுமில்லை. | ஒன்றுமில்லை. | டிஸ்ட்ரிக்ட் கலெக்டர். |

| வரிசைக்கிரமமான நெம்பர். | ஆக்டின் பிரிவு. | வியாஜ்ஜியங்களின் விவரம். | நிர்ணயிக்கப்பட்ட கால அளவு. | கால அளவு எப்பொழுது முதல் செல்லத் தொடங்குமென்பது. | அப்பீல் செய்து கொள்வதானல், எந்த அதிகாரி அல்லது அதிகார சபைக்குச் செய்து கொள்ள வேண்டுமென்பது. |
|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) |
| 39 | 149(1) | நிலத்துக்குடையவரால் செய்து கொடுக்கப்பட்ட குத்தகைத் தொகைப் பிரிவினையைப் புனராலோசனை செய்து திருத்துவதற்காக. | ஆறு மாதம். | நிலத்துக்குடையவரின் தீர்மானம் ராயத்துக்குத் தெரிவிக்கப்பட்ட தேதி. | டிஸ்ட்ரிக்ட் கலெக்டர். |
| 40 | 158 | வளவில் பிரவேசித்து அதைச் சுவாதீனப்படுத்திக்கொள்ள வாரன்ட் பிறப்பிக்கும்படியாக. | மூன்று மாதம். | எந்த ரெவினியு வருஷத்துக்கு பாக்கி செலுத்த வேண்டியதாயிருந்ததோ அந்த ரெவினியு வருஷம் முடிவாகும் தேதி. | டிஸ்ட்ரிக்ட் கோர்ட். |
| 41 | 160 | நீக்கிவிடுவதற்குப் பிறப்பிக்கப்பட்ட வாரன்ட் ரத்து செய்ய. | பதினைந்து நாள் அல்லது 159-வது பிரிவின்படி கலெக்டர் | வாரன்ட் சேர்ப்பிக்கப்பட்ட தேதி. | டிஸ்ட்ரிக்ட் கலெக்டர். |

| | | | அதிகப்படியாக நிர்ணயிக்கப்பட்ட கால அளவு. | | |
|---|---|---|---|---|---|
| 42 | 163-1-வது பாரா. | நியாயமானதும் தருமமானதுமான குத்தகைத் தொகையை நிர்ணயிப்பதற்காக. | ஒன்றுமில்லை. | ஒன்றுமில்லை. | டிஸ்ட்ரிக்ட் கலெக்டர். |
| 43 | 163-2-வது பாரா. | அனுமதியில்லாமல் நிலத்தை அனுபோகத்தில் வைத்துக்கொண்டிருக்கும் நபர் நஷ்டஈடாகச் செலுத்தத்தக்க தொகையை நிர்ணயிப்பதற்காக. | ஒரு வருஷம். | எந்த ரெவினியு வருஷத்தில் அனுபோகத்தில் வைத்துக் கொள்ளப்பட்டதோ அந்த ரெவினியு வருஷத்தின் கடைசி. | டிஸ்ட்ரிக்ட் கலெக்டர். |
| 44 | 185-A (1) | யாதொரு இனம் கிராமத்திலுள்ள நிலமானது நிலத்துக்குடையவரின் சொந்த நிலமென்று நிர்ணயித்து உத்தரவு பிறப்பிக்கும்படியாக. | இரண்டு வருஷம். | பூஸ்திதிகளிலுள்ள நிலத்தைப் பற்றிய சென்னப்பட்டணம் 1934-ம் வருஷத்து (இரண்டாவது திருத்த) ஆக்ட் வழங்கத் தொடங்கும் தேதி. | டிஸ்ட்ரிக்ட் கலெக்டர். |
| 45 | 185-A (8) | 185-A பிரிவைச் சேர்ந்த (7) குறிப்பிட்ட | இரண்டு வருஷம். | 185-A பிரிவைச் சேர்ந்த (7) குறிப்பிட்ட உட்பிரிவின் பிர | கலெக்டருக்கு விண்ணப்பம் |

| வரிசைக்கிரமமான நெம்பர். | ஆக்டின் பிரிவு. | வியாஜ்ஜியங்களின் விவரம். | நிர்ணயிக்கப்பட்ட கால அளவு. | கால அளவு எப்போது முதல் செல்லத் தொடங்கு மென்பது. | அப்பீல் செய்து கொள்வதானல், எந்த அதிகாரி அல்லது அதிகார சபைக்குச் செய்து கொள்ள வேண்டுமென்பது. |
| --- | --- | --- | --- | --- | --- |
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) |
| | | உட்பிரிவின்படி பிரசித்தம் செய்யப்பட்ட நிலத்துக்குடையவர்களின் சொந்த நிலத்தைப்பற்றிய ரெகார்டில் கண்ட யாதொரு பதிவை விட்டுவிட வேண்டுமென்று, திருத்தவேண்டுமென்று அல்லது மாற்றவேண்டுமென்று உத்தரவு பிறப்பிக்கும்படியாக. | | காரம் டை ரெகார்டைப் பிரசித்தம் செய்யும் தேதி. | செய்துகொள்ளப்படும் விஷயத்தில்-டிஸ்ட்ரிக்ட் கலெக்டர். டிஸ்ட்ரிக்ட் கலெக்டருக்கு விண்ணப்பம் செய்து கொள்ளப்படும் விஷயத்தில் இனும் கம்மிஷனர். இனும் கம்மிஷனருக்கு விண்ணப்பம் செய்து கொள்ளப்படும் விஷயத்தில்-ஒன்றுமில்லை. |

# அகராதிக் குறிப்புகள்.

---

ச.



ட.



த.

ந.



ப.



ம.

முற்றிற்று.

ஆலில இந்தியா லா ஜர்னல் பிரஸ், திருவல்லிக்கேணி.